# இந்துமதம் எங்கே போகிறது?

அக்னிஹோத்ரம்

## ராமானுஜ தாத்தாச்சாரியர்





# இந்து



# மதம் எங்கே போகிறது?

அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார்,



வருஷம் - 1. ஒரு முறை நாரத முனிவர் கிருஷ்ணமூர்த்தியை நீர் அறுபதினாயிரம் கோபிகைகளுடன் கூடி இருக்கிறீரே எனக்கு ஒரு கன்னிகை தரலாகாதா என்று கேட்க,

அதற்குக் கண்ணன் நான் இல்லாப் பெண்ணை வரிக்க என் உடன்பட்டுத்தான் (60,000) வீடுகளிலும் பார்த்து, கண்ணன் இல்லா வீடு கிடைக்காததினால், கண்ணனிடம் வந்து அவர் திருமேனியில் மய்யல்கொண்டு, அவரை நோக்கி நான் தேவரீரிடம் பெண்ணாய் இருந் ரமிக்க எண்ணங் கொண்டேன் என்றனர்.

கண்ணன் யமுனையில் நாரதரை ஸ்நானஞ் செய்ய ஏவ, முனிவர் அவ்வகை செய்து ஒரு அழகுள்ள பெண்ணாயினர்.

இவளுடன் (நாரத முனிவர்) கண்ணன் அறுபது வருஷம் கிரீடித்து அறுபது குமாரரைப் பெற்றனர். அவர்கள் பெயர் பிரபவ முதல் அக்ஷய இறுதியானவர்களாம். இவர்கள் வருஷமாம் பதம் பெற்றனர்.

2. (6). பிரபவ, விபவ, சுக்கில, பிரமோதூத, பிரசோத்பத்தி, ஆங்கீரச, ஸ்ரீமுக, பவ, யுவ, தாது, ஈசுவர, வெகுதானிய, பிரமாதி, விக்ரம, விஷ்வ, சித்திரபானு, சுபானு, தாரண, பார்த்திப, விய இவ்விருபதும் உத்தம வருஷங்கள்.

சர்வஜித்த, சர்வதாரி, விரோதி, விகிர்தி, கர, நந்தன, விஜய, ஜய, மன்மத, துன்முகி, ஏவிளம்பி, விளம்பி, விகாரி, சார்வரி, பிலவ, சுபகிருது, சோபகிருது, குரோதி, விஸ்வாவசு, பராபவ இவ்விருபதும் மத்திம வருஷங்கள்,

பிலவங்க, கீலக, சவுமிய, சாதாரண, விரோதி கிருது, பரிதாபி, பிரமாதீச, ஆனந்த, இராக்ஷஸ, நள, பீங்கள, காளயுக்தி, சித்தார்த்தி, ரவுத்ரி, துன்மதி, துந்துபி, உருத்ரோத்காரி, இரத்தாக்ஷி, குரோதன், அக்ஷய
இவ்விருபதும் அதம வருடங்களாம்.

(ஆண் கடவுள் கிருஷ்ணனுக்கும் ஆண் முனிவர் நாரதருக்கும் பிற்ந்த அறுபது பிள்ளைகளின் பெயர் தான் இவை.)

(ஆதாரம்: அபிதான சிந்தாமணி பக்கம் 1392).

இன்று எம்மவர் மத்தியிலே காதல் திருமணம், பேச்சுத் திருமணம் என்று இரு வகையான திருமணங்கள் காணப்படுகின்றன. முன்னைய காலத்தில் தமிழர்கள் காதல் திருமணம் மட்டுமே செய்து வந்தார்கள். அதுவே தமிழர் பண்பாடாகவும் இருந்தது.
தமிழினத்திற்குள் ஆரியர்களால் வர்ணாச்சிரம தர்மத்தின் பெயரில் ஜாதிகள் திணிக்கப்பட்ட பொழுது, ஜாதியைக் காப்பதற்காக பேச்சுத் திருமணம் அறிமுகப்படுத்தப்பட்டது. அதற்குள் பார்ப்பனர்கள் எண்ணில் அடங்காத ஆபாசங்களையும் நுளைத்துவிட்டனர். இன்று வரை ஜாதியோடு, பேச்சுத் திருமணத்தையும் எமது தமிழர்கள் கைவிடாமல் கட்டிக் காத்து வருகிறார்கள். இதில் இடையிடையே காதல் திருமணம் சிறந்ததா? பேச்சுத் திருமணம் சிறந்ததா? என்று பட்டிமன்றமும் நடத்துவார்கள்.

இந்த பேச்சுத் திருமணத்தில் பொருத்தம் பார்ப்பது முக்கியமான ஒன்றாக இருக்கும். இதைப் போல ஒரு முட்டாள்தனமான விடயம் உலகத்தில் இருக்க முடியாது. இந்தப்



பொருத்தம் பார்ப்பதில் “திரிம்சாம்சம்” போடுதல் என்கின்ற ஒரு விடயம் உண்டு. இதன் மூலம் வரப் போகும் பெண்ணின் குணத்தை அறிய முடியுமாம்.

இதன்படி ஏறக்குறைய 40 வீதமான தமிழ் பெண்கள் ஒழுக்கம் கெட்டவர்களாக இருக்கிறார்கள். ஒரு பெண்ணின் லக்கினத்தை கணித்து எந்த திரிம்சாம்சத்தில் எவ்வகையான குணங்களை அப் பெண் கொண்டிருப்பாள் என்பதை சோதிடரத்னங்கள் பின்வரும் முறையில் கணிப்பார்கள். அதனை படியுங்கள்.

ஒரு பெண்ணின் லக்கினம் மேஷம் அல்லது விருச்சிகமாக இருந்தால்:-

1. செவ்வாய் திரிம்சாம்சமாக இருந்தால் அவள் பூப்படைவதற்கு முன்பே தகாத உறவு வத்திருப்பாள்.

2. சுக்கிரனின் திரிம்சாம்சமாக இருந்தால் கணவனைத் தவிர பிற ஆடவருடன் தகாத உறவு வைத்து இருப்பாள்.

3. புதனின் திரிம்சாம்சமாக இருந்தால் அவள் சூழ்ச்சிக் காரப் பெண்ணாக இருப்பாள்.

4. குருவின் திரிம்சாம்சத்திலே பிறந்து இருப்பாளேயானால் மிகவும் நல்லொழுக்கமுடைய பெண்ணாவாள்.

5. சனியின் திரிம்சாம்சத்தில் பிறந்து இருந்தால் ஏழ்மைமிக்க பெண்ணாக இருப்பாள்.

கன்னி, மிதுனம் லக்கினங்களுக்கு,

1. செவ்வாய் திரிம்சாம்சமாக இருந்தால் அவள் ஒரு சூழ்ச்சிக்காரப் பெண்ணாக இருப்பாள்.

2. சுக்கிரன் திரிம்சாம்சமாக இருந்தால் அவள் பிற ஆடவருடன் தொடர்பு வைத்து இருப்பாள்.

3. புதன் திரிம்சாம்சமாக இருந்தால் மிக நல்லொழுக்கத்துடன் நல்ல குணங்களுடன் இருப்பாள்.

4. குரு திரிம்சாம்சமாக இருந்தால் நற்குணவதியாக இருப்பாள்.

5. சனி திரிம்சாம்சத்தில் பிறந்தால் அந்தப் பெண்ணிற்கு சிற்றின்பங்களில் நாட்டமிருக்காது.

ரிஷபம், துலாம் லக்கினமாக ஆனால்,

1. செவ்வாய் திரிம்சாம்சமானால் பெண்ணின் நடத்தை திருப்திகரமாக இருக்காது.

2. சுக்கிரன் திரிம்சாம்சமானால் நல்ல பெண்ணாகவும், படித்த பெண்ணாகவும் இருப்பாள்.



3. புதன் திரிம்சாம்சமாக இருந்தால் மிகவும் கெட்டிக்காரப் பெண்ணாக இருப்பாள்; கலைகளில் நாட்டம் இருக்கும்.

4. குரு திரிம்சாம்சமாக இருந்தால் மிகவும் நல்ல குணவதியாக இருப்பாள்.

5. சனி திரிம்சாம்சமாக இருந்தால் அந்தப் பெண்ணுக்கு 2-ம் திருமணம் ஆகும்.

கடக லக்கினத்திற்கு,

1. செவ்வாய் திரிம்சாம்சமாக இருந்தால் நல்ல நடத்தை உள்ள பெண்ணாக இருக்க மாட்டாள்.

2. சுக்கிரன் திரிசாம்சமும் நல்ல நடத்தை உள்ள பெண்ணாக இருக்க மாட்டாள்.

3. புதன் திரிம்சாம்சமாக இருந்தால் நல்ல படித்த கெட்டிக்காரப் பெண்ணாக இருப்பாள்.

4. குரு திரிம்சாம்சமாக இருந்தால் நல்ல பண்புள்ள பெண்ணாக இருப்பாள்.

5. சனி திரிம்சாம்சமாக இருந்தால் மிகவும் கொடிய குணமுள்ளவளாக இருப்பாள். கணவனையே கொல்லும் அளவிற்கு அவளுக்குக் கொடூரம் இருக்கும்.

சிம்ம லக்கினமாக இருந்தால்,

1. செவ்வாய் திரிம்சாம்சமாக இருந்தால் பேச்சு மிகுந்து இருக்கும், குணங்களில் ஆண்மைத்தனம் நிறைந்து இருக்கும்.

2. சுக்கிரனின் திரிம்சாம்சத்தில் இருந்தால் நடத்தை நன்றாக இருக்காது.

3. புதனின் ஆதிக்கத்திலிருந்தால் குணத்தில் ஆண்மைத்தனம் இருக்கும்.

4. குருவின் ஆதிக்கத்திலிருந்தால் நல்ல உயர் பதவியில் இருப்பவரைக் கைப்பிடிப்பர்.

5. சனியின் திரிம்சாம்சத்திலிருந்தால் தன் சொந்த மதத்தின்மீது பற்றுதல் குறைவாக இருக்கும்.

மகரம், கும்பம் லக்கினமாக இருந்தால்,

1. செவ்வாய் ஆதிக்கத்திலிருந்தால் மிகவும் சிறிய வேலைகளைச் செய்பவளாக இருப்பாள்.

2. சுக்கிரன் ஆதிக்கத்திலிருந்தால் நல்ல பெண்ணாக இருக்க மாட்டாள்.

3. குரு ஆதிக்கத்திலிருந்தால் நல்ல குணமுடைய பெண்ணாக இருப்பாள்.



4. சனி திரிம்சாமசத்திலிருந்தால் கீழ்த்தரமான ஆண்களுடன் சேருவாள்.

5. புதன் ஆதிக்கத்திலிருந்தால் கெட்டிக்காரப் பெண்ணாக இருப்பாள்.

தனுசு,மீனம் லக்கினமாக இருந்தால்,

1. செவ்வாயின் ஆதிக்கத்திலிருந்தால் நற்குணங்களை உடையவளாக இருப்பாள்.

2. சுக்கிரனின் ஆதிக்கத்திலிருந்தால் நடத்தை நன்றாக இருக்காது.

3. புதனின் ஆதிக்கத்திலிருந்தால் கலைத்துறையில் சிறந்து விளங்குவாள்.

4. குருவின் ஆதிக்கத்திலிருந்தால் நற்குணவதியாக இருப்பாள்.

5. சனியின் ஆதிக்கத்திலிருந்தால் சிற்றின்பத்தில் அதிக நாட்டம் காட்ட மாட்டாள்.

இதனை படிக்கின்ற பொழுது உங்களுக்கு என்ன தோன்றுகிறது? எனக்கு ஒன்று தோன்றுகிறது. பொருத்தம் பார்க்கும் சோதிடர்களையும் அதற்கு துணை போகின்றவர்களையும் செருப்பால் அடிக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

**ஆபாசத்தின் உச்சம். துளசி பிரசாதமானது எப்படி?**
துளசிக்கு மருத்துவ குணங்கள் உண்டு. ஆனால் இந்தக் காரணங்களாலெல்லாம் துளசி பிரசாதமாகிவிடவில்லை.

பெருமாள் கோவிலில் துளசி பிரசாதமானது எப்படி? துளசி பிரசாதம் ஆன புராணக் கதை பலருக்குத் தெரியாது. இதில் தத்துவார்த்தமோ, ரகசிய அர்த்தமோ எதுவும் கிடையாது.

இராமனின் அவதாரமும், இராமாயணமும் உண்டாவதற்குத் துளசி பற்றிய கதையும் காரணம்.
பெருமாள் கோவில்களில் துளசி பிரசாதமானது எப்படி? திருத்துழாய் என்று வைணவர்கள் துளசியைப் போற்றுகிறார்கள்.

துளசிக்கு மருத்துவ குணங்கள் உண்டு. தலையில் பேன் இருந்தால் தலையணை உறைக்குள் துளசியை அடைத்து அதன்மீது படுத்தால் பேன் உதிர்த்து விடும். இருமல், சளிக்குச் சுக்குக் கஷாயத்தோடு துளசியைச் சேர்த்துச் சாப்பிடுவதும் உண்டு.

ஆனால் இந்தக் காரணங்களாலெல்லாம் துளசி பிரசாதமாகிவிடவில்லை.

துளசி பிரசாதம் ஆன புராணக் கதை பலருக்குத் தெரியாது. இதில் தத்துவார்த்தமோ, ரகசிய அர்த்தமோ எதுவும் கிடையாது.

அவ்வாறு நல்ல வாய்ப்பாக எந்தப் பண்டிதரும் சொல்லவுமில்லை. துளசி பற்றிய புராண மூடநம்பிக்கைக் கதை புராணத்திலுள்ளதுதான்.

எனவே துளசிபற்றிய மூடக்கதை என்று சொல்லும் பகுத்தறிவாளரைக் குறை கூறக்கூடாது. இதில் இன்னொரு சுவையான தகவலும் கூடுதலாக உண்டு.



இராமனின் அவதாரமும், இராமாயணமும் உண்டாவதற்குத் துளசி பற்றிய கதையும் காரணம். துளசி பற்றிய கதை

பகுத்தறிவுவாதிகளோ, வரலாற்று ஆசிரியர்களோ கற்பனையாகப் புனைந்த கதையும் அன்று. சைவ புராணங்களில் கந்த புராணத்தில் உள்ளது. இந்தப் புராணத்தை எடுத்து விட்டால் சைவமில்லை என்று கூறுமளவிற்கு முக்கியத்துவம் வாய்ந்தது என்று கூறுவர்.

இனி கதைக்கு வருவோம்.

விருத்தாசுரன் என்கிற ஒரு வலிமை மிக்கவன் இருந்தான். அவனுடைய மனைவி பெயர் விருதை என்பதாகும். விருத்தாசுரனின் துணைவி அழகிலும் கற்பிலும் சிறந்தவள்.

விருதையை மகாவிஷ்ணு கண்டு மோகித்து வசப்படுத்தத் தந்திரங்கள் பல செய்தும், தம்முடைய கடவுள் சக்தி எல்லாம் காட்டியும் முடியாமல் சூரனிடம் சண்டையிட்டார். சூரன் மகாவிஷ்ணுவைவிட வலிமைமிக்கவன் ஆதலால், சூரனிடம் சண்டையிட்ட அவர் தோற்று ஓடி விட்டார்.

ஓடியவர் சிவனைக் கண்டு அவரிடம் தன் ஆசையையும் கவலையையும் தெரியப்படுத்தினார். சிவன் சூரனிடம் சண்டையிட்டுச் சூரனைக் கொன்றார். விஷ்ணு சூரன் உடலுக்குள் புகுத்து கொண்டார். விருதையிடம் திருட்டுத்தனமாகக் கலந்து இருந்தார்.

விஷ்ணுதான் தன் புருஷன் உடலில் புகுந்து திருட்டுத்தனமாகத் தன்னைக் கூடி விட்டான் அன்று தெரிந்து விஷ்ணுவை நீ அயோக்கியனினும் அயோக்கியன். நீ ஒரு சண்டாளன். செய்த காரியத்திற்கு மன்னிப்புக் கிடையாது.

ஆகையால் நீ மனிதனாகப் பிறந்து உன் மனைவியை அசுரகுலத்தவன் தூக்கிச் சென்று சிறை வைத்துக் கற்பை அழிக்கும்படியாகச் சாபம் கொடுக்கிறேன் என்று சாபம் கொடுத்துவிட்டாள்.

பத்தினி சாபம் பலிக்கும் என்று சொல்வார்கள் அல்லவா? எனவே விருதையின் சாபம் பலித்தது. சாபம் கொடுத்த விருதை அக்கினியில் விழுந்து சாம்பலானாள். மகாவிஷ்ணுவுக்கோ விருதை சாம்பலான பின்னரும் மோகம் தணியவில்லை. விருதையின் மோக ஆசையால் அந்தச் சாம்பலில் விழுந்து புரண்டு கிடந்தார்.

இந்த அவமானத்தை விஷ்ணுவின் சகோதரியும், சிவனின் மனைவியுமான பார்வதி பொறுக்காமல் துளசி என்னும் தன்னுடைய தாதிப் பெண்ணை அனுப்பி விஷ்ணுவின் சோகங்களை எல்லாம் தீர்த்து அழைத்து வருமாறு அனுப்பினாள்.

அவ்வாறே துளசி என்னும் பெண் சென்று திருமாலின் சோகங்களையெல்லாம் நீக்கி, அவரை அழைத்து வந்தாள். அந்தத் துளசி என்னும் பெண்ணை மகாவிஷ்ணு தம் மார்பில் வைத்துக் கொண்டார்.

இவ்வாறு இராம அவதாரமும், இராமாயணமும் உண்டாவதற்கு இந்தக் கதை அடிப்படையாயிற்று.

ஜனகாதி மகரிஷிகள் விஷ்ணுவின் காவற்காரர்களான துவாரபாலகர்களுக்குக் கொடுத்த



சாபத்தால் விஷ்ணு ராமராக அவதாரம் செய்தார் என விஷ்ணு புராணம் கூறும்.

எப்படியாயினும் சாபத்தால் விஷ்ணு அவதாரம் செய்தார் என்று ஆகிறது.

பார்வதியின் பணிப்பெண் துளசி விருதையின் பிணச் சாம்பலில் சோகத்தில் புரண்டு உருண்ட மகாவிஷ்ணுவின் சோகத்தைத் தீர்த்தமையால் துளசியை மகாவிஷ்ணு மார்பில் அணிந்து கொண்டார். அதுபோல் எல்லாரும் துளசியை அணிந்து கொண்டால் எல்லாவித சோகத்தினின்றும் சுகம் பெறலாம் என்று நினைத்து வைணவ பக்தர்கள் துளசியை அணிந்து கொள்கிறார்கள்.
மகாவிஷ்ணு பார்வதி தேவியின் அண்ணனானபடியால் அவருக்குப் பணிப் பெண் துளசி கிடைத்தது. அவ்விதம் எல்லாருக்கும் கிடைக்க வழியில்லாததால் விஷ்ணுவின் பெயர் சொல்லித் துளசித் தழையை அணிந்து கொள்கிறார்கள். வைதீக மதம் பொய்யைப் புளுகி வயிறு வளர்க்கும் கதையில் இதுவும் ஒன்று என்று கூறுவார் கைவல்யம் சுவாமிகள்.

இதுவரை புராணக் கதை கேட்டோம். துளசியை நம்பி தஞ்சாவூர் ஒழிந்த உண்மையான வரலாறு ஒன்று இருக்கிறது.

இது நாயக்க மன்னர்கள் காலத்து வரலாறு.தஞ்சாவூரை நாயக்க மன்னர்கள் ஆண்டார்கள். மதுரையை ஆண்டவர்கள் மதுரை நாயக்கர்கள். தஞ்சையை ஆண்டவர்கள் தஞ்சை நாயக்கர்கள். தஞ்சை நாயக்கர்கள் வைணவர்கள். அதாவது நாமக்காரர்கள்.
எனவே இந்த வைணவர்களின் அரசாட்சியை ஒழித்துக் கட்ட சைவர்கள், மராத்தியர்களுடன் பேசித் தஞ்சாவூர்மீது படையெடுத்து வரும்படி செய்தார்கள்.

மராத்தியர்களுக்குச் சைவர்கள் கூறிய யோசனை இது. நவராத்திரி சமயம் தஞ்சைமீது படையெடுங்கள். அதுதான் சரியான சமயம். ஏனென்றால் நவராத்திரியின் போது ஆயுதங்கள் எல்லாம் பூசையில் இருக்கும். அதை எடுக்காமலிருக்க ஏற்பாடு செய்கிறோம் என்றும் கூறினார்கள்.

அதுபடி மராத்தியர்கள் நவராத்திரியின் போது வந்தார்கள். மராத்தியர்கள் படை எடுத்து வந்திருக்கிறார்கள்; தடுத்து நிறுத்த வேண்டும் என்று தஞ்சை நாயக்க மன்னரின் தளபதிகள் சொன்னார்கள். ஆயுதமோ இல்லை, பூசையில் இருக்கிறது. என்ன செய்வது? குருக்களையும் புரோகிதர்களையும் கேட்டார்கள். குருக்களின் யோசனை எப்படி இருக்கும்? குருக்கள் சொன்னார்: ஆயுதத்தைப் பூசையில் வைத்திருக்கிறோம். எனவே ஆயுதத்தை எடுத்தால் அம்பாள் கோபிப்பாள், மகாதோஷம் என்றார்.
மன்னர் கேட்டார்: மராத்தியர் படை எடுத்து வந்திருக்கிறார்களே, தடுக்க என்ன வழி? குருக்கள் அருமையான ஆன்மிக யோசனை ஒன்று சொன்னார். பூசைக்கு ஏராளமான துளசி வந்திருக்கிறது. அதைக் கோட்டை வாசலில் போட்டு விட்டால் அதைத் தாண்டி எதிரிகள் வர மாட்டார்கள். துளசியைத் தாண்டுவது மகாபாவம் என்றனர்.

இவ்வாறு புரோகிதர்களின் புளுகை அன்றும் நாயக்க மன்னர்களும், அவருடைய பக்தர்களும் நம்பினார்கள்.
அங்குள்ள துளசியையெல்லாம் கோட்டை வாயிலில் போட்டார்கள். துளசியின் விசேடம்(!) மராத்தியனுக்குத் தெரியுமா? தெரியவில்லை. மராத்தியர்களின் குதிரைகளுக்கும் தெரியவில்லை. கோட்டைக்குள் மராத்தியர்கள் மளமளவென்று வெள்ளம் போல் புகுந்தார்கள். தஞ்சை நாயக்கர்களின் தலைகளைப் பனங்காய்களைப் போல் சீவித் தள்ளினார்கள். தஞ்சை நாயக்கர் ஆட்சி மறைந்து நாயக்கர் ஆட்சி இருந்த இடத்தில் மராத்தியர் ஆட்சி ஏற்பட்டது.



அன்று துளசியின் பித்தலாட்டத்தைச் சொல்ல தந்தை பெரியார் போல் வேறு ஒருவரும் இல்லை. இராப்பகலாய் இருபது நாள் கொள்ளையடித்தார்கள். துளசி பார்த்துக் கொண்டிருந்தது. துளசிக்குள்ளிருந்த அம்பாளும், சக்திகளும் பட்ட அடியால் அங்கேயே மாண்டு போனார்கள்.

தஞ்சை நாயக்கர் ஆதிக்கம் துளசிப் பிரசாதத்தின் மகிமையால் நம்பி மன்னர்களின் அலுவலர்கள் தம் கடமையைக் கைவிட்டனர். எனவே அந்தக் காலத்துப் புலவன் பார்ப்பான் பெருத்து வடுகன் துரைத்தனம் பாழ்ந்ததுவே என்று பாடினார். பிரசாதமும், பூசையும் மலிந்து விட்டது என்பதுதான் இதன் பொருள்.-
முனைவர் பேராசிரியர் ந.க. மங்களமுருகேசன் அவர்கள் 14-8-2010 “விடுதலை” ஞாயிறு மலரில் எழுதிய கட்டுரை.
SOURCE: http://thamizhoviya.blogspot.com/2010/08/blog-post_6136.html

**2.இந்தியாவில் இருந்த 450 மதங்களில் எது இந்து மதம்?**

படிப்படியாகப் பார்ப்போம்.

ஒரு புருஷனும், அவன் பத்தினியும் மழை பெய்த சாலையில் நடந்து கொண்டிருக்கிறார்கள். வழியில் ஒரு பள்ளம். இடையில் மழை நீர் தெரு மண்ணோடு கூட்டணி வைத்து ‘சகதி’ அந்தஸ்தோடு கிடக்கிறது.புருஷன் பார்த்தான். ஒரே தாண்டு. இந்தப்பக்கம் வந்துவிட்டான்.

திரும்பிப் பார்த்தால் அவன் பத்தினி பாவமாக நின்று கொண்டிருந்தாள். தாண்டினால் விழ வேண்டியதுதான் என பயந்தாள்.‘கொஞ்சம் கை குடுங்கோ... வந்துடறேன்’ என்கிறாள் பத்தினி. இது உங்களுக்காக சொன்ன உதாரணம்தான்.

இதேபோலத்தான் அன்று... ஆரியர்கள் சிந்து நதி, இமயமலை என பள்ளத்தாக்குகளை தாண்டி இந்தியாவுக்குள் நுழைந்து கொண்டிருக்கிறார்கள். நம்மூர் மழைச் சாலையைவிட மலைச் சாலை எவ்வளவு கடினமாக இருந்திருக்கும்?

நதிக்கு கரையில்லாத காலமது. காடு, மலை, விலங்குகள் இவற்றை யெல்லாம் தாண்ட ஆரிய பெண்களுக்கு தைரியம் இல்லை. பெண்கள் கோரிக்கை விடுத்தார்கள். அது புறக்கணிக்கப்பட்டது.
‘வரும் பெண்கள் வரலாம். வராதவர்கள் இங்கேயே இருக்கலாம்.’ஆப்கானிஸ்தானைவிட்டு ஆரியக் கூட்டம் கிளம்பி இந்தியாவுக்குள் நுழைந்த போது, கூட வந்த பெண்கள் கம்மி. வரலாற்றுக் கண்ணோட்டத்தில், இங்கு வந்த ஆண்களின் எண்ணிக்கையோடு, பெண்களின் எண்ணிக்கையை ஒப்பிட்டால் அது புறக்கணிக்கத்தக்கதுதான்.
ஆரியர்கள் பெண்களைத்தான் விட்டுவிட்டு வந்தார்கள்.
ஆனால், மனு ஸ்மிருதியை கையோடு கொண்டு வந்தனர்.

**மனு? வேதங்களை எல்லாராலும் படிக்க முடியாது. அஃதை விளங்கிக் கொள்ள அனைவருக்கும் அறிவு குறைவு. அதனால் வேதம் வகுத்த கர்மாக்களை, கட்டளைகளை விளக்கி, புரியும்படி சொல்கிறோம் என எளிமை என்ற பெயரில் செய்யப் பட்டதுதான் மனுதர்மம்.பிராமணன், க்ஷத்திரியன், வைசியன் என வேதம் வகுத்த சமூக நிலைகளை ‘மனு’ பிளவாக்கியது.**

**கூடவே, இவர்களைத் தாண்டி 'சூத்திரர்கள்' என்ற பிரிவினரை உருவாக்கி அவர்களை வெறும் வேலைக்காரர்களாகவே ஆக்கியது மனு.**

பிராமணனுக்கு தவம், வேத அறிவு, ஞானம், விஞ்ஞானம் உள்பட 11 குணங்களை வகுத்த மனு - சூத்திரனைப்பற்றி இப்படி எழுதியது."சூத்திரனுக்கு அறிவு கொடுக்காதே, தர்மோபதேசம் பண்ணாதே. சண்டை வந்தால் சூத்திரன் எந்தப் பக்கம் இருக்கிறானோ அந்தப் பக்கத்துக்கே தண்டனை கொடு. அவனை உதை..." இப்படிப் போகிறது மனு.

**வந்தேறிய இடத்தில் அனைவரும் சூத்திரர்கள் என்றும், அவர்கள் தங்கள் கட்டுப்பாட்டில் தான் இருக்கவேண்டும் என்றும் பிராமணர்கள் செய்த திட்டம் 'நன்றாகவே' வேலை செய்தது.ஏற்கெனவே பிராமணர்களின் கட்டுப்பாட்டில் இருந்த க்ஷத்திரியர்களும், வைசியர்களும் சூத்திரர்களை வேலைக்காரர்களாக எடுபிடிகளாக வைத்திருப்பது என்ற பிராமணர்களின் கோட்பாட்டுக்கு குழைந்தனர்.**
**'அடே... குழந்தாய் இந்தா பால். இதைக் குடித்து மகிழ்வாய் வாழு' என்ற வேதத்தை மனு திரித்து... "இந்த பாலை இவன் குடிக்க வேண்டும்... இவன் குடிக்கக் கூடாது. இவன் எச்சில் படாமல் குடிக்க வேண்டும். இவன் பால் கறக்கும் மாட்டை மேய்க்கவேண்டும்" என பிளவு செய்தது.**

ஆரியர்கள் பெண்களை அழைத்து வரவில்லை என்று சொன்னேன் அல்லவா? இதற்குக் காரணம் என எடுத்துக்கொள்ள ஏதுவான மனு ஸ்லோகம் ஒன்றை பாருங்கள்.

"பால்யே பிதிர்வஸே விஷ்டேதுபாணிக்ரஹா யெளவ் வனேபுத்ரானாம் பர்த்தரீ ப்ரேதுநபஜேத் ஸ்த்ரீ ஸ்வ தந்த்ரதாம்"

"பெண்ணே... நீ குழந்தைப் பருவம் வரை அப்பன் சொன்னதை கேள்... வளர்ந்து மணமானதும் கணவன் சொன்னதைக் கேள். உனக்கு குழந்தை பிறந்து தலையெடுத்ததும் உன் மகன் சொல்வதைக் கேட்க வேண்டும். உனக்கு இது தான் கதி. நீ சுதந்திரமாக வாழத் தகுதியவற்றவள், ஆண் சொல்படி கேள்."

இப்படி 'பெண்ணுரிமை' பேசும் மனு இன்னொரு இடத்தில் சொல்கிறது.
"பெண்கள் அசுத்தமானவர்கள். உனக்கு விதிக்கப்பட்டுள்ள மந்த்ரோப தேச சம்ஸ்காரங்கள் அவளுக்கு கிடையாது. அவளை மதிக்காதே..." பிராமண ஆணுக்கு சொல்லுவதாய் வந்த கருத்து இது.
**மனுவின் இத்தகைய கட்டுப்பாடுகளுக்கு '          ' மாடுகள்போல தலையாட்டினார்கள் மற்ற வர்ணத்தவர்கள்.**

வைதீக கட்டுப்பாடுகள் சர்வாதிகாரமாக விதிக்கப்பட்டன. "கடவுள் இப்படித்தான் செய்யச் சொல்லியிருக்கிறான். இதுபடி கேள். இல்லையேல் நீ பாபியாவாய்..." என மந்த்ரங்களால் மிரட்டப்பட்டனர் மக்கள்.

பல நூறு வருடங்கள். ஒரு கிரிமினல் லா போன்றே மனுநீதி சமூக கட்டமைப்பை தன் கட்டுக்குள் வைத்திருந்தது. வைதீக கர்மாக்களை பிறருக்கு எடுத்துச் சொல்லி நீதி பரிபாலனம் செய்ய வேண்டிய பிராமணன், க்ஷத்ரியர்கள், வைசியர்கள், சூத்திரர்கள் எல்லோரையும் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தான்.
இப்படிப்பட்ட ஒரு 'சாஸ்திர ஏகாதிபத்ய' சூழ்நிலையில்தான்... இன்றைய நேபாளத்திலிருந்து ஒரு குரல் புறப்பட்டது."கடவுள் பெயரை சொல்லியும்... கர்மாக்கள் பெயரைச் சொல்லியும் சிந்தனை வளராத அப்பாவிகளை ஏமாற்றிப் பிழைக்கிறீர்களே?



உங்களுக்கு இந்த உரிமையை யார் கொடுத்தது? கடவுளா? அவன் எங்கே இருக்கிறான்? வேதத்தை சாதத்துக்கு (பிழைப்புக்கு) பயன்படுத்தாதீர்கள். பேதம் வளர்க்காதீர்கள். கொடுமைதான் உங்கள் கொள்கை என்றால் வேதம் வேண்டாம். மனு வேண்டாம். கடவுள் வேண்டாம். கர்மாக்கள் வேண்டாம். மனித தர்மம் மட்டும் தான் வேண்டும்...”என அந்த சூழ்நிலையில் மிகமிக வித்தியாசமான குரல் தொனித்தது. அது புத்தர் குரல். இன்றைக்கு அணு குண்டு வெடி சோதனைக்கே ‘புத்தர் சிரித்தார்’ என பெயர் வைக்கிறோம். அன்றைக்கு புததரே வெடித்தார் என்றால் விளைவுகள் என்ன?

**3.அசுவமேதயாகத்தின் ஆபாசங்கள் கொடூரங்கள்**

வேதத்தின் பெயரைச் சொல்லி கர்மாக்கள் அரங்கேறிக் கொண்டிருந்ததை எதிர்த்து புத்தர் எழுப்பிய குரலை போன அத்தியாயத்தில் கேட்டோம்.

குரல் கொடுத்த பின்னணி, அடுத்தபடியாக அவரது செயல்கள் எப்படி இருந்தன? விளைவுகள் என்ன சம்பவித்தன? என்பது பற்றி இப்போது பார்க்கலாம்.

சகல சவுபாக்கியங்களையும் ருசித்துக் கொண்டு மனைவி யசோதராவோடு இளமைப் பருவத்தில் இல்லறம் நடத்திக் கொண்டிருந்த புத்தருக்கு ஒரு வைராக்கியம் பளிச்சிட்டது. இனி பெண் சுகம் வேண்டாம். இல் சுகம் வேண்டாம். வெளியே போகலாம். அங்கே என்னென்ன நடக்கிறது பார்க்கலாம்.- என மூளைக்குள் முடிவெடுத்தார். சட்டென இளம் மனைவி யசோதராவையும், பிஞ்சு மகன் ராகுலையும் விட்டு விட்டு வெளியே போய் விட்டார். வெளியே வந்த பிறகு அவர் கண்ட காட்சிகள் தான் புத்தரை போராட்ட களத்துக்கு கொண்டு சென்றன.

எங்கெங்கு காணினும் மூடப் பழக்க வழக்கங்கள். ஊரெல்லாம் ஒரே அக்னிப் புகை. அந்தப் புகையில் புறக் கண்களும் தெரியாமல், அக அறிவுக் கண்களும் தெரியாமல் துழாவிக் கொண்டிருந்தனர் மக்கள்.

ஏன் அக்னிப் புகை...? பிராமணர்கள் சொன்னார்கள், “ஊரெல்லாம் நலமாக இருக்க, நாமெல்லாம் வளமாக இருக்க அக்னி வளர்த்து அதில் பசுக்களை பலியிட வேண்டும். வேதம் பயின்ற நாங்கள் யாகம் நடத்துகிறோம். பிராணிகளையும், தட்சணையையும் கொடுத்து நீங்கள் புண்ணியம் பெறுங்கள்” என அக்னிப் புகைக்கிடையே அழுத்தமாய் சொன்னார்கள்.(அந்த காலத்திலேயே பிராமணர்கள் பசுவை பலியிட்டிருக்கிறார்களா? என்ற சந்தேகம் உங்களுக்கு எழலாம்.

**பசு என்றால் சமஸ்கிருதத்தில் நாலுகால் பிராணி என பொருள் பிற்காலங்களில் பசு என்றால் கறவை மாடு என வழங்குவது வழக்கமாகி விட்டது. தமாஷவக்காக இப்போது நாலு சக்கர பஸ்ஸை கூட பசு என கூறினாலும் கூறலாம்).**

அந்த புகைக்கிடையே பிராமணர்கள் மந்திரங்களை சொல்லச் சொல்ல ஒன்றும் புரியாமல் கேட்டுக் கொண்டிருந்தனர். காரணம், அன்று மக்கள் பேசியது பிராக்ருத மொழி. அவர்களுக்கு சமஸ்கிருத மந்திரங்கள் புரியவில்லை. அதில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்றும் தெரியவில்லை.

**புத்தர் இதை பார்த்தார். மக்களுக்கு விழிப் புணர்வு ஏற்படுத்தவேண்டுமானால், அவர்களின் மொழியான ப்ராக்ருதத்திலேயே கருத்துகளை பரப்பவேண்டும் என முடிவெடுத்தார்.அப்போது தான் அசுவமேத யாகத்தின் கொடூரங்களையும்,**



**ஆபாசங்களையும் கண்கூடாக கண்டார் புத்தர்.**

அதென்ன அசுவமேத யாகம்? ராஜாக்கள் ஒரு ஆண் குதிரையை அவிழ்த்து விட்டு... அடித்து விரட்டி விடுவார்கள். அக்குதிரை எங்கெங்கு சென்று விட்டு வருகிறதோ... அந்த எல்லை வரைக்கும் போரிட்டு ஜெயித்து விட்டு அந்த வெற்றியை கொண்டாடுவதற்காக நடத்தப்படும் யாகம் தான் அசுவமேத யாகம்.

ஓடிக் களைத்து வந்த அந்த குதிரையை கட்டிப் போட்டுவிட்டு விடுவார்கள். அக்குதிரையோடு ஒரு பெண் குதிரையை சேர்த்து விடுவார்கள்.

இயற்கை உந்துதலால் ஆண் குதிரையின் உறுப்பு நீண்டிருக்கும்.

**அப்போது ஓரிரவு முழுவதும் சம்பந்தப்பட்ட ராஜா வீட்டுப் பெண்கள் முக்கியமாக ராணி... குதிரையின் உறுப்பை கைகளால் இரவில் பிடித்துக் கொண்டிருக்கவேண்டும். இந்தக் கடமை முக்கியமாக ராணிக்குத்தான். இதைக் கூற சவுஜன்ய (கூச்சம்) மாகத்தான் இருக்கிறது. என்ன செய்ய, அசுவமேத யாக ஸ்லோகமே அப்படித்தானே இருக்கிறது.**

“அஸ்வஸ்ய சத்ர சிஷ்நந்துபத்னி க்ராக்யம் ப்ரசக்ஷதே...”என போகிறது ஸ்லோகம். அஸ்வமாகிய குதிரையை ராஜாவின் பத்தினி ராணி ‘வழிபட வேண்டிய’ முறையைத் தான் விளக்குகிறது இந்த ஸ்லோகம்.

இரவு இந்த கடமை முடிந்ததும்... மறுநாள் அந்த ஆண் குதிரையை அப்படியே அக்கினியில் போட்டு பஸ்பமாகும் வரை எரித்துவிடுவார்கள். இதுதான் அஸ்வ மேத யாகம்.

* * * * * * * * * * * *

தொடர்புடையது.

*ராமனின் தந்தை தசரதன் நடத்திய அசுவமேத யாகம்.*

*அறுபதாயிரத்து மூன்று மனைவிமார்கள் தசரதனுக்கு இருந்தும் குழந்தை மட்டும் இல்லை. அதற்காக அசுவமேத யாகம் ஒன்றை நடத்தினான் தசரதன். இந்த யாகத்தை நடத்துவதற்காக கலைக்கோட்டு (ருசிய சிருங்கர்) முனிவர் அழைத்து வரப்பட்டார்.*

*இதுபற்றி பண்டித மன்மத நாததத்தயர் பின்வருமாறு மொழி பெயர்த்து எழுதுகிறார்.*

Kausalya with three strokes slew that horse experiencing great glee. Kausalya with an undisturbed heart passed one night with that horse.
The Hotas, Adhwaryus and the Ugatas joined the king’s wives.

*இதன் பொருள் வருமாறு: தசரதனின் மூத்த மனைவியாகிய கோசலை மூன்று வெட்டில் அக்குதிரையை மிக உற்சாகத்தோடு கொன்றாள். அவள் கலங்கா நெஞ்சோடு ஒரு நாளிரவை அக்குதிரையோடு கழித்தாள்.*

ஹோதா, அத்வர்யு முதலிய இருத்துவிக்குகள் இராச பாரியைகளைப் புணர்ந்தார்கள்.

இதன் காரணமாக தசரதனின் ராஜபத்தினிகள் கர்ப்பம் தரித்தார்கள் என்று வால்மீகி தெளிவாகவே கூறியுள்ளார்.

*ஆனால் வால்மீகி இராமாயணத்தைத் தமிழில் மொழிபெயர்த்த கம்பனோ என்ன எழுதுகிறான்? யாகசாலையில் புகுந்து கலைக்கோட்டு மாமுனி தீ வளர்த்து ஆகுதி*



*வழங்கினான். உடனே பூதமொன்று தீயினின்று எழுந்தது. பூதம் தோன்றி தந்த பாயசத்தைத் தசரதன் தன் மனைவியர் மூவருக்குப் பங்கிட்டுக் கொடுத்தான். அதன் காரணமாக கவுசலை, கைகேயி, சுபத்திரை ஆகியோர் கர்ப்பம் தரித்தனர் என்று புளுகுகிறார்.*

*ஆரியக் கலாச்சாரம் விபச்சாரத்தைக் கலையாகப் போற்றுவது; அந்தக் காவியத்தை மொழிபெயர்க்க வந்த கம்பனுக்கு ஏனிந்த திரிபு வேலை? - -பா.வே. மாணிக்கவேலர் . SOURCE: விடுதலை*

* * * * * * * * *

அவசியம் முழுக்கதையும் முழு விளக்கமும் அறிய சுட்டியை க்ளிக் செய்து படிக்கவும்.

**- - - > "இதுதான் அஸ்வமேத யாகம்" <- - -**

**- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -**

**மக்களைபோலவே, ராஜ குடும்பத்தினரும் பிரமாணர்களின் மந்த்ர யாகத்துக்கு கட்டுப்பட்டிருந்தார்கள். யாகம் முடிந்ததும்... "ஏ... ராஜா, இந்த யாகத்தை நல்ல விதமாக பூர்த்தி செய்தாகி விட்டது. இதற்காக நீ பொன்னும், பொருளும் தட்சணை கொடுத்தாய். அஃதோடு யாகத்தில் பங்கு கொண்ட உன் ராணியையும் நியதிப்படி நீ எங்களுக்கு தட்சணையாக்கி பிறகு அழைத்துச் செல்லவேண்டும்" என்றார்களாம்.**

அதன்படியே முதல் நாள் இரவு குதிரையின் உறுப்பை பிடித்துக் கொண்டிருந்தவள்.. மறு நாள் இரவு யாகம் நடத்திய பிராமணர்களுடன் இருக்கிறாள்.

இதையெல்லாம் பார்த்து வெகுண்டார் புத்தர். "மனித தர்மம் மிருக காருண்யம் இரண்டையுமே பொசுக்கி யாகம் செய்கிறீர்களே...? ஏன் இப்படி...?"என யாகம் நடந்த இடத்துக்கே போய் கேள்விகள் கேட்டார்.

**பிராமணர்கள் பதில் சொன்னார்கள்: "குதிரைக்கு மோட்சம் கிடைக்கும். லோகத்துக்கு க்ஷமம் கிடைக்கும்" என்று. புத்தர் திரும்ப கேட்டார்."ஒன்றும் தெரியாமல் வளர்ந்து, வாழ்ந்து சாகப் போகும் குதிரைக்கு மோட்சம் தருகிறீர்களே. எல்லாம் அறிந்த பிராமணனாகிய நீங்கள் மோட்சம் பெறவேண்டாமா?அந்த அக்னி குண்டத்தில், யாகம் நடத்தும் உங்களையும் தூக்கிப் போட்டால் உங்களுக்கும் மோட்சம் கிட்டும் அல்லவா...?"**
ப்ராக்ருத மொழியில் மக்களிடம் இதே கேள்வியை புத்தர் பரப்ப...
போனார்கள் பிராமணர்கள்.பிறகு...?

**4.** புத்தரும் **X** பிராமணர்களும்

முரட்டுத்தனமாக ஓடித்திரியும் குதிரைகளுக்கே மோட்சம் கிடைக்கும்போது, மென்மையாய் வேதம் ஓதும் உங்களுக்கு அந்த அக்னி குண்ட மோட்சம் வேண்டாமா?...

-என புத்தர் வேள்விச் சாலைக்கே சென்று ஒரு கேள்விப் பொறியை போட யாகத்தை விட பெரு நெருப்பாய் கிளம்பியது இந்த ஒரு நெருப்பு.

காகம் கொத்தி ஆல மரம் சாயுமா?...ஆலமரம் போல் வேர்களையும், விழுதுகளையும் மண்ணுக்குள்ளும், மக்களுக்குள்ளும் ஊன்றி வைத்திருந்த வேத கட்டுப்பாடுகள், மநு கட்டளைகள் ஆகியவற்றின் முன் புத்தரின் கொள்கை முழக்கம் முதலில் தடுமாறினாலும் கொஞ்சம் கொஞ்சமாய் வலுப்பெற தொடங்கியது.



முதலில், உடனடி அழிவிலிருந்து பிராணிகளை காப்பாற்றுவது, பிறகு, மெல்ல மெல்ல கவ்வும் அழிவிலிருந்து மக்களை காப்பாற்றுவது என முடிவெடுத்த புத்தர்... தன் சிந்தனையோடு ஒத்துப்போகும் சில வாலிபர்களை தேர்ந்தெடுத்தார். புத்தருக்கு அப்போது முப்பது வயது இருக்கலாம். முறுக்கேறிய தேகம்... முன்னேறும் கண்கள். ஓயாத சிந்தனை தனக்கே உரிய குணங்களைப் பெற்றிருக்கும் அவர்களோடு சாலை சாலையாக நடந்தார்.

எங்கேனும் வேள்விச்சாலை அனல் அடித்தால் அங்கே விரைந்து சென்றது புத்தர் படை.யார் நலனுக்காக யாகம் ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறதோ அவர்களை அணுகியது.. பாரப்பா... இப்படி உயிர்களைப் பலிகொடுத்து உனக்கு என்ன நன்மை கிடைக்கப் போகிறது?... சென்ற முறை பக்கத்தில் ஒருத்தன் பல யாகங்கள் நடத்தினான் பொருள் செலவு தான் மிச்சம். அவன் கண்ட பலன் ஒன்றுமில்லை.

நீ பலி கொடுக்கும் நாலு கால் பிராணியை நீயே தீனியிட்டு வளரு. அது இறந்து கொடுக்காத பலனை இருந்து கொடுக்கும். இந்த வைதீக கர்மாக்களை நம்பாதே. ஒருவனுக்கு இழப்பும், ஒருவனுக்கு பிழைப்பும் கொடுக்கும் மோசடி வித்தை... ப்ராகிருத மொழியில் பிளந்து கட்டியது புத்தர் குழாம். இதைக்கேட்ட யாகம் நடத்துபவர்கள்... உடனடியாக நிறுத்தவில்லை என்றாலும்... இனிமேல் யாகம் நடத்தமாட்டோம் என புத்தரிடம் உறுதி தந்தனர்.

புத்தர் நடந்தார். வீடு வீடாய்ச் சென்றார். இப்போது தேர்தல் வந்தால் கட்சிக்காரர்கள் வீட்டு எண்களைப் பார்த்துப் பார்த்துக் கும்பிடுவார்களே... அதே போல ஆனால் பதவியை எதிர்பாராமல் ஒவ்வொரு வீடாய்ப் புகுந்தார் புத்தர். யாகங்கள் நடத்தாதீர்கள். நெருப்புக்குள் உயிர்களைப் போட்டு கொல்லாதீர்கள். உங்கள் அறிவைப் பயன்படுத்தி வாழுங்கள். இது தான் புத்தோபதேசம்

இங்கே முக்கியமான ஒரு செய்தியை குறிப்பிட்டாக வேண்டும். புத்தருக்கு நெடுங்காலம் கழித்து தோன்றிய கிறிஸ்தவ மதத்தின் புனிதநூல் பைபிளில் மைக்கேல் கூறுவதாக கீழ்க்கண்ட வாசகங்கள் அமைந்துள்ளன."Don't pour innocent matters into the fire. God wants your love only"ஒன்றும் அறியாத அப்பாவி ஜீவன்களை நெருப்புக்குள் போ எரிக்காதீர்கள். கடவுள் இதை விரும்புவதில்லை. அவர் உங்கள் அன்பை மட்டுமே விரும்புகிறார் என கிறிஸ்தவ புனித நூலில் சொல்லப்பட்ட கருத்தை... மிக மிக மிக முன்கூட்டியே வீடுவீடாகக் சென்று சேர்த்தவர் புத்தர்.

"Anti Vedic" வேத எதிர்ப்புக் கொள்கையை இன்னும் முழுவீச்சில் மக்களிடம் கொண்டு சேர்க்க வேண்டுமானால் மக்கள் மனதில் பதியும் சில அடையாளங்களை பெற்றிருக்க வேண்டும் என ஜனரஞ்சகமான முடிவுக்கு வந்தார் புத்தர்.என்ன செய்யலாம்?

மொட்டையடிக்கலாம் ஆடையைக் குறைக்கலாம். இவை வெளிப்புற அடையாளங்கள். தலையிலிருந்து ரோமங்களையும், உடலிலிருந்து உடையையும் களைந்தது போல், மனசிலிருந்து ஆசையைக் களைய வேண்டும். பெண்ணாசை, பொருளாசை துறந்து விட்டு வீட்டை திறந்து வெளியே வந்துவிட வேண்டும்.

தனி குழாமுக்கு இப்படி அழைப்பு விடுத்தார். குவிந்தனர். வீட்டை விட்டு வெளியே வந்தாகி விட்டது. இனி மக்களிடம் நம் கொள்கையைப் பரப்புவதுதான் முழு முதல் வேலை. வேறொருவர் வீட்டிலும் தங்கக் கூடாது. எங்கே போவது?...



உருவாகின புத்த விஹாரங்கள். சிறு சிறு எளிய குடில்கள். புத்த சன்யாசிகள் என (Buddhist monks)பிட்சுகள் தங்குவதற்காக அமைக்கப்பட்ட கோயில் போன்ற ஸ்தலங்கள் தான் விஹாரங்கள் என அழைக்கப்பட்டன.

மக்கள் பேசும் மொழியான ப்ராக்ருதத்திலேயே புத்த பிட்சுகளின் பிரச்சாரங்களும் போதனைகளும் பரவத் தொடங்கின. விஹார்களின் எண்ணிக்கை சரசரவென அதிகரிக்க ஆரம்பித்தது. இன்றைய பிஹார் மாநிலத்துக்கு இப்பெயர் வர காரணமே. அங்கே புத்த விஹார்கள் எக்கச்சக்கமாய் இருந்தது தான் காரணம் என்ன ஒரு வரலாற்றுக் குறிப்பும் உள்ளது.

புத்தர் காலத்துக்குப் பிறகும் அவருடைய ஞான மார்க்கம் பரவி பெருகிய நிலையில்தான் பிராமணர்கள் தங்கள் கர்ம மார்க்கத்தை மறு பரிசீலனை செய்ய ஆரம்பித்தனர். உயிர்ப்பலிகளை குறைக்க முடிவெடுத்தனர். பிராமணர்களின் மிகப் பெரிய பலமே... யாரிடம் எது நல்லதாக இருக்கிறதோ அதை தங்களுக்கு ஸ்வீகாரம் செய்து கொள்வது தான்.

ஆங்கிலத்தில் 'Adoption' என சொல்வோமே...புத்த இயக்கத்திடமிருந்து... ஜீவகாருண்யத்தை மட்டுமா ஸ்வீஹரித்தார்கள். இப்போது மடம் மடம் என சர்ச்சைகளுக்கிடையே பேசப்படுகின்றதே... இதுபோன்ற மடங்களுக்கான மூலத்தையும் புத்த விஹார்களிடமிருந்து தான் பெற்றார்கள் பிராமணர்கள்.மெல்ல மெல்ல புத்த இயக்கத்தினர் வட இந்தியாவிலிருந்து தென்னிந்தியாவுக்கு வந்தனர் பிராமணர்களும் பின் தொடர்ந்தனர் பிறகு?

**5. வெறும் கற்சிலைகளை தெய்வங்களாக்கிய பிராமணர்கள்.**
வழிபாடு என்றால்? பூசெய்... என்பதை மாற்றி பூஜை ஆக்கினார்கள்.பூணூல் வந்த கதை வேடிக்கையானது.

புத்தம் சரணம் கச்சாமி...தர்மம் சரணம் கச்சாமி... சங்கம் சரணம் கச்சாமி... என்ற மெல்லிய கோஷங்கள் தென்னிந்தியாவின் தொண்டை மண்டலக் காற்றில் கலக்க ஆரம்பித்த காலம்.

இங்கே தமிழ் பண்பாடு... நாகரிகத்தின் உச்சியில் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தது. சங்க இலக்கியங்கள் இயற்கை, இறைமை, காதல், பக்தி என சகல விசேஷங்களையும் தொட்டு தமிழாட்சி நடத்திக் கொண்டிருந்தது.
பொதுவாகவே உலக அளவில் வழிபாட்டு முறையில் ஓர் ஒற்றுமை இருந்து வந்துள்ளது.

(i) கல்லை வழிபடுதல்-Fetish worship(ii) விலங்குகளை வழிபடுதல்-Totemism worship(iii) மனித- உரு செய்து வழிபடல்-Shamnaism worship(iv) விக்ரம், சிலை செய்து வழிபடுதல் - Idol worship நாகரிக பண்பாட்டு வளர்ச்சியின் அடிப்படையில் இந்த வழிபாட்டு முறைகளும் வளர்ச்சி கண்டு வந்தன.

தமிழ் நாகரிகமோ சிற்பக்கலையில் தேர்ந்து விளங்கியது.

பழங்கால மன்னர்கள் தங்கள் ஆட்சியின் பெருமைகளை வரலாறு தாண்டி உரத்துச் சொல்லும் அளவுக்கு சிற்பங்கள் நிறைந்த கோயில்களை கட்டி அங்கே தெய்வச் சிலைகளை எழுப்பி வழிபாடு நடத்திவந்தனர்.வழிபாடு என்றால்?



தமிழன் கல்லை சிலையாக்கும் நுண்மையான வன்மை கொண்டவன் என்றாலும்... அதே அளவுக்கு மென்மை தன்மையும் அவனிடத்தில் மேவிக் கிடந்தது.

பூக்களை பறித்து அவற்றால் வழிபாடு நடத்த ஆரம்பித்தான். அருகில் அணையாமல் நந்தா விளக்கு எரிந்து கொண்டே இருக்கும் தீப வெளிச்சத்தில் பூக்களால் நடத்தப்பட்டது தான் தமிழனின் முதல் வழிபாடு.

பூசெய் = பூவால் செய் இது இணைந்தது தான் பூசெய் பூசை என இப்போதைய வார்த்தையின் வடிவம் தோன்றியது. இதனை திராவிட மொழியியல் ஆராய்ச்சியாளர் எஸ்.கே. சாட்டர்ஜி தனது ஆராய்ச்சி நூலில் எடுத்துக் காட்டுகிறார்.

வழிபாடு மட்டுமல்ல பக்தியிலும் தமிழினம்தான் முன்னோடியாக இருந்திருக்கிறது.நீ உன் மனைவியிடம் காட்டும் அன்பை கடவுளிடம் காட்டு... என பக்திக்கு இலக்கணம் வகுத்தது பரிபாடல்.

'நாயக' நாயகி பாவம்' என்ற பக்தி வடிவத்தை உலகுக்கு கொடுத்ததே தமிழ் இனம்தான். இவ்வாறு கடவுளை காதலியாகவும், காதலனாகவும் உருவகிக்கும், வர்ணிக்கும் அளவுக்கு வளர்ந்திருப்பது தமிழ்ப் பண்பாடு.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான்... புத்தம் மற்றும் சமண கொள்கைகள் தமிழ்நாட்டில் பரவின. பரவின என்றால் சும்மா அல்ல... தெற்கே திருநெல்வேலி வரை சமணம் பரவிவிட்டது.நாகப்பட்டினம் வரை புத்தம் புகுந்து விட்டது.

வடஇந்தியாவில் புத்திஸத்தால் எதிர்க்கப்பட்ட வேத பிராமணர்கள் நகர்ந்து நகர்ந்து தென்னிந்தியாவைத் தொடுகின்றனர்.அவர்களில் ஒருவர்தான் மகேந்திர பல்லவ ராஜா என்றும் கருத இடமுள்ளது.

புத்தர் இனத்தவர்கள் தமிழினத்தவரோடு 'சம்மந்தி' உறவு முறை வரை நெருங்கி விட்ட நிலையில்...பல்லவ ராஜாக்கள் வேதத்தை வேத நெறி முறைகளை இங்கே விதைத்து வைத்தனர்.

புத்த போதனைகளால் எதிர்க்கப்பட்ட வேத போதனைகள் இங்கே பிராமணர்களால் மறுபடியும் தலை தூக்கின.பிராமணர்கள் இங்கே வந்த போது அவர்கள் அணிந்திருந்த நூல்... அதாவது பூண்டிருந்த நூல்.. அதாவது பூணூல் (இப்போது பெயர்க்காரணம் புரிகிறதா)... பார்த்து ஆச்சரியப்பட்டார்கள் இங்கிருந்தவர்கள்.
என்ன இது? என கேட்க... அதற்கு பிராமணர்கள் பதில் சொன்னார்கள். 'சமூகத்தில் நாங்கள்தான் உயர்ந்தவர்கள் என்பதற்காக அணிவிக்கப் பட்டிருக்கும் அந்தஸ்து'...

ஆனால்... உண்மையில் இந்த பூணூல் வந்த கதை வேடிக்கையானது. வேத கர்மாக்களை நிறைவேற்றுவதற்கான சடங்குகளியல் ஈடுபட்டிருக்கும் போது.. வஸ்திரத்தை தோள்பட்டை வழியாக மார்புக்கு குறுக்காக அணியவேண்டும் என்பது வேதம் வகுத்த விதி.
அதேபோல் அணிந்து பார்த்தார்கள். கைகளை உயர்த்தி வேள்விச் செயல்களில் ஈடுபடும் போது அடிக்கடி அமர்ந்து எழுகின்ற போதும்.. வஸ்திரம் அவிழ்ந்து நிலை மாறிவிடுவதால்.. இது நிலையாகவே இருக்க என்ன வழி என்று பார்த்தார்கள்.இதே போல மெல்லியதாய் அணிந்தால் பணி செய்யும் போது உபத்திரவம் செய்யாமல் இருக்குமே என யோசித்தனர். வஸ்திரம் நூலானது அதுவே பூணூலானது.



இதை 'அந்தஸ்து' என வழங்கிக் கொண்ட பிராமணர்களுக்கு வசதி செய்து கொடுக்கும் வகையில்... புத்த, சமண கொள்கைகளை பின்பற்றுவதில் கஷ்டங்கள் இருந்தன. சமண கொள்கைப்படி... உயிர்களை அதாவது எறும்பைக் கூட கொல்லக்கூடாது. நடக்கும்போதுகூட பூமிக்கு நோகக்கூடாது! மேலும் இரு கொள்கைகளுமே கடவுளை முக்கியப்படுத்தவில்லை என்பதால்.. கொஞ்சம் கொஞ்சமாய் மங்க ஆரம்பித்தன. இந்த மகா கொள்கைகள் இந்த மாற்றங்கள் நடந்த பிறகு...தமிழ்நாட்டில் வேதம் வழிந்தோடியது கிடைத்தது.

இங்கேயுள்ள மிகச் சிறந்த சிலைகளை பார்த்த பிராமணர்கள்.. "இவை வெறும் கல்லாகவே இருக்கின்றன. நான் என் மந்த்ரத்தன்மை மூலம் இவைகளை தெய்வமாக்குகிறேன்" என்றனர்.பூசெய்... என்பதை மாற்றி பூஜை ஆக்கினார்கள். பூ, நந்தாவிளக்கு என இருந்த தமிழர் வழிபாட்டில் மட்டுமா?... கலாச்சாரத்திலும் நிறைய மாற்றங்களைக் கொண்டு வந்தனர் பிராமணர்கள் என்னென்ன?

**6. தமிழர்களிடம் பிராமணர்களின் ஆதிக்க ஊடுருவல்.**

தமிழர்களின் வழிபாட்டிற்குள் ஊடுருவி கைகூப்ப கற்றுக்கொடுத்து தமிழை தள்ளி வைத்து தமிழர்களை ஆதிக்கம் செய்த பிராமணர்கள்

தமிழ் பூக்களால் தமிழர்கள் செய்த பூஜை (பூ செய்) எப்படி பூஜையானது என பார்த்தோம்.

இது மட்டுமல்ல இன்னும் பல வகைகளில் தமிழர்களின் வழிபடுமுறை மாறிப்போனது. சிற்பக் கலைகளில் ஓங்கி உயர்ந்திருந்த தமிழர்கள் பல பெண் உருவச் சிலைகளை வடித்தனர். சிறு சிறு குழுக்களுக்கு ஊர்களுக்கு அவற்றை காவல் தெய்வமாக வைத்தனர் அச்சிலைகளின் முன் நின்று உரத்த குரலில்...'ஏ... காவல் காக்கும் அம்மா... என் வீட்டில் மாடுகள் நிறைய கொடு... எங்கள் ஊருக்கு மழையைக் கொடு... என அச்சிலை மு சத்தம் போடுவார்கள்.
ஏன் என்று கேட்டால்... சிலைக்கு கல் காதல்லவா? அதனால் நாம் உரக்கச் சத்தம் போட்டால் தான் நமது வேண்டுகோள் அச்சிலையின் காதில் விழும். அப்போது தான் நமது கோரிக்கை நிறைவேற்றப்படும்... என்பது நம்பிக்கை.
இப்படியே கொஞ்ச காலம் போக... ஒருவன் சொன்னான் நாம் நமக்குள் பேசுவது போல பேசிக் கொண்டிருந்தால் சிலையின் காதில் கேட்குமா?

... என அடி வயிற்றிலிருந்து அதிரும்படியான சொற்களை உச்சரித்தால் அந்த அதிர்வில் சிலையின் காது திறக்கும் என்றான்.இந்த உரத்த வழிபாடு ஒரு பக்கம் நடந்துகொண்டிருக்க தமிழர்களுக்கு கைகூப்ப கற்றுக் கொடுத்தார்கள் பிராமணர்கள். எப்படி?

தொடக்க கால ஆரியர்களோடு தாஸே எனும் பழங்குடியின மக்கள் பல வகைகளில் மோதினர். சிந்தனை சக்தியில்லாத முரட்டுக் கூட்டத்தை உயர உயரமாய் இருந்த ஆரியர்கள் பதிலுக்குச் சண்டையிட்டு வெல்ல... அப்போது தாஸே இனத்தவர்கள் ஆரியர்கள் முன் குனிந்து இரு உள்ளங் கைகளையும் பிணைத்து... 'இனி உங்களை தாக்கமாட்டோம் என அடிபணிந்தனர்

.அதுபோல வைத்துப் பாருங்கள் கும்பிடுவது போல் தோன்றும். அந்த 'தாஸே' இனப் பெயரிலிருந்து தான் தாஸன் என்ற சொல் முளைத்தது. தாஸன் என்ற சொல்லுக்கு அடிமை என்ற அர்த்தமும் அதன் வழியேதான் முளைத்தது. தங்களை அன்று கும்பிட்ட 'தாஸே' இன



மக்கள் மாதிரியே... பிற்காலத்தில் தெய்வங்களை வழிபடக் கற்றுக் கொடுத்தனர் பிராமணர்கள்கடவுளுக்காக கை கூப்ப வைத்த பிராமணர்கள் படிப்படியாக... தமிழர்களின் உரத்த வழிபாட்டிற்குள்ளும் ஊடுருவினார்கள்.
“நாம் பேசுவதையே தெய்வத்திடம் பேசினால் அதற்குக் கேட்குமா? நாங்கள் சில மந்திரங்கள் சொல்கிறோம். அதை உச்சரித்தால்தான் உன் சிலைக்கு தெய்வ சக்தி வரும். தவிர மனிதர்களுக்குள் பேசும் மொழியை நீங்கள் தெய்வத்திடம் எப்படி பேசுவீர்கள்?.. என வேத சமஸ்கிருத மந்த்ரங்களை அச்சிலை முன்னர் கூறத் தொடங்கினார்கள்.
புதிதாக இருக்கிறதே என கேட்க ஆரம்பித்த தமிழர்கள் தான் இன்றுவரை கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இத்தனைக்கும் வேதத்தில் சொல்லப்பட்டிருப்பது என்னவென்றால்... கடவுளுக்கு உருவம் கிடையாது. உபநிஷத்துகள் உபதேசிப்பது என்னவென்றால்... “கடவுளுக்கு உருவம் எதுவும் கிடையாது. உருவம் இல்லாதது தான் உண்மையான உருவம்
வேதம், உபநிஷத்து இவற்றையெல்லாம் தாண்டிக் குதித்து தமிழகத்தில் சிலைகளுக்கு முன்னாள் மந்திரம் சொல்ல ஆரம்பித்தான்.

தமிழன் வழிபாட்டு முறையான பூவோடு... தெய்வம் சாப்பிட ஏதாவது கொடுக்க வேண்டாமா? பழம் கொண்டு வா, அன்னம் கொண்டு வா’ தொடங்கியது படையல் பண்பாடு. நந்தா விளக்கு தீபம், பூ இவற்றோடு வழிபாட்டு பொருள்களுக்கான பட்டியலில் பழம் சேர்ந்தது. உணவுப் பொருள்கள் சேர்ந்தன.

**தமிழ் மட்டும் தள்ளி வைக்கப்பட்டது.**

வழிபாட்டு முறையில் மாற்றம். அடுத்தது சமூக ரீதியாக மாற்றங்கள் உண்டாக வேண்டியதுதானே நியதி?... உண்டானது.

கலாச்சாரத்தின் முதல் மாற்றம் கல்யாணத்தில் தொடங்கியது. தமிழர்களின் கல்யாணமுறை எப்படி இருந்தது என தெரிந்து கொண்டால்தானே அது எவ்வாறு மாறியது என்பதையும் தெரிந்து கொள்ளமுடியும்.

இலக்கியங்களை சித்தரிப்பது போல களவியல் என்பதுதான் பழந்தமிழர்களின் திருமணமுறை அதென்ன களவியல்?

பெண்ணொருத்தி பூப்பெய்துகிறாள் உறவுப் பெண்கள் சுற்றிலும் மகிழ்ச்சி பொங்க முற்றுகை யிட்டிருக்கிறார்கள். பெண்மை, தாய்மை என்னும் பெருமைக்கெல்லாம் அடிப்படையே இந்த திருநாள்தானே. அதனால்தான் சுற்றத்தின் முகத்தில் மகிழ்ச்சி. அந்த யுவதியின் முகத்தில் வெட்கம்.

இதை பக்கத்து வீட்டுக் காளை பார்த்து பூரிக்கிறான். அவளது அழகு அவனை அழைப்பதாய் அவனுக்குத் தோன்றுகிறது. பெண்மையின் முதல் வெட்கத்தின் முகவரி அவள் முகத்தில் தெரிகிறது. அதை படிக்க அந்த காளை ஆசைப்படுகிறான்.
உறவினர்கள். பெண்களின் பாதுகாப்பு... அன்ன நடை போட்டா அவளை அடைய முடியும்?

பொறுத்திருக்கிறது காளை. பொழுது சாயத் தொடங்கிய உடன் பாயத் தயாராகிறது. ராத்திரியின் மெல்லிய ஒளியில் தன் ராணியை நெருங்கியவன் நேரம் காலம் பார்ப்பதில்லை.ஒரே தூக்கு. அந்த ஆளான அழகை தன் இளங்கரங்களில் ஏந்தி சிற்சில நொடிகளில் சீறிப்பாய்ந்து மறைகிறான். ருதுவான மங்கை மாய மாய்ப்போன பின்னே...



தேடுகிறார்கள். சுற்றுவட்டாரத்தையே அப்பெண்ணின் ஆண் உறவினர் கூட்டம் அணு அணுவாய் அலசுகிறது. கடைசியில் அந்த ஜோடி ஜொலித்துக் கொண்டிருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து விடுகிறது கூட்டம். பக்கத்து வீட்டு காளை அவளை பருகி நெடுநேரம் ஆகியிருந்தது. கையும் களவுமாக பிடித்த பின் என்ன தண்டனை தெரியுமா?

**7.பிராமணர்கள் உருவாக்கிய கல்யாண சடங்குகள்.**

தாலி' வந்த கதை. கல்யாணங்களில் பிராமணர்கள் எக்கச்சக்க சடங்குகளை கொண்டு வந்தனர்.

"நிச்சயதாம்பூலம்" "காசியாத்திரை" "ஊஞ்சலாட்டுதல்" "திருஷ்டி சுத்தி போடுவது" "ஆரத்தி எடுப்பது" "குளிப்பாட்டு" "புடைவைச் சடங்கு" ..... இன்னும் இருக்கு!!!

கன்னியை தூக்கிக்கொண்டு ஓடிய அந்தப் பக்கத்து வீட்டு காளைக்கு தமிழ்க்கூட்டம் என்ன தண்டனை கொடுத்தது தெரியுமா?

'இதோ பாரடா... நீ அவளை தொட்ட முதல் ஆண்மகன். அதனால் அவள் உனக்குரியவள் தான். உன்னுடன் தான் வாழ வேண்டும் அவள்' என இரண்டு பேரையும் சேர்த்து வைத்தது தீர்ப்பு. இஃது களவியல் என்றால்... தமிழர்களின் இன்னொரு சிறப்பு, சங்கப்பாடல் ஒன்று சொல்கிறது பாருங்கள்.

காதலை அஃதாவது கற்பியலை.'யாயும் ஞாயும் யாராகியரோஎந்தையும் நுந்தையும் எம்முறை கேளிர் யானும் நீயும் எவ்வழி அறிதும் செம்புலப் பெயல் நீர்போலஅன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே...''நானும் நீயும் யார் யாராகவோ இருந்தோம். என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் சொந்தக்காரர்கள் என்றும் தெரியாது. நானும், நீயும் எங்கிருந்து வந்தோ எனவும் இப்போது தெரியவில்லை.ஆனாலும்... இந்த அறிமுகங்கள் எல்லாம் தேவையே இல்லாமல் அன்பு கொண்டோம்... எப்படி தெரியுமா...

செம்மண்ணிலே பெய்யும் மழைநீரும் செந்நிறம் அடைந்துவிடுகிறதே. அதுபோல அன்பு கொண்ட நம் நெஞ்சங்கள் இரண்டும் பிரிக்க முடியாதபடி கலந்துவிட்டது. இப்படி காதல் வாழ்க்கையிலும் நாகரிகத்தின் சிகரத்தில் இருந்தனர் தமிழர்கள்.இவ்வாறு களவியல், கற்பியல் இரண்டு விஷயங்களிலுமே முன்னணியில் இருந்த தமிழர்களின் கல்யாணங்களில் 'தாலி' வந்த கதை சுவாரஸ்யமானது.

**திருநெல்வேலி போன்ற பனைமரங்கள் அதிகம் இருந்த பகுதிகளில், ஒரு ஆண் பெண்ணை திருமணம் செய்துகொண்டான் என்றால்... பனையோலை ஒன்றை சிறிய அளவில் நறுக்கி அதில் 'இந்தப் பெண் இந்த ஆணுக்கு உரியவள்' என எழுதி ஒரு நூலில் கோர்த்து கழுத்தில் கட்டி விடுவார்கள்.**

**பனைமரத்துக்கு 'தால்' என்றும் பெயர் உண்டு. பனையோலையில் எழுதிக் கட்டுவதால் அந்த சிறு ஓலைக்கு தாலி என்று பெயர் வந்தது.**

பிறகு இந்தத் தாலியில் பெயருக்கேற்றவாறு பனையோலை இல்லாமல்... பவுன் கட்டித் தொங்க விட்டதெல்லாம் மாற்றத்தின் அடையாளங்கள்.இவ்வளவு கஷ்டப்பட்டு களவியல் செய்கிறீர்களே... இவ்வளவு மகிழ்ச்சியுடன் காதல் மணம் புரிகிறீர்களே?
இவற்றையெல்லாம் முறைப்படி சடங்குகள் செய்து விழாக்களாக கொண்டாடினால் தானே மகிழ்ச்சி என்றும் கூடும்?''



**கல்யாண கலாச்சாரத்தில் மாற்றங்களைக் கொண்டு வந்தனர் பிராமணர்கள். ஒன்றா, இரண்டா? எக்கச்சக்க சடங்குகள். என்னென்ன.... ஒவ்வொன்றாய் சொல்கிறேன்.**

1. திருமணத்துக்கு முன்பே இந்த பெண்ணுக்கு இவன் தான் கணவன் என்பதை நிர்ணயிக்க வேண்டும். இந்த நிகழ்ச்சியில் பெண் தரப்பில் பொருள்களை மாப்பிள்ளை வீட்டாருக்குக் கொடுக்கவேண்டும். இதற்கு பெயர் நிச்சயதாம்பூலம்.

2. கல்யாணச் சடங்குகள் ஆரம்பிக்கின்றன. முதலில் காசி யாத்திரை.சந்நியாசம் வாங்க வேண்டுமென்றால்... மகனே கல்யாணத்துக்கு முன்னரே நீ சந்நியாசம் வாங்கிவிட வேண்டும். அதைவிட்டு கல்யாணத்துக்குப் பிறகு துறவறம் போகிறேன் என சொல்லி பெண்ணின் வாழ்வை படுத்தாதே.. என சூத்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் கல்யாணத்துக்கு முன் 'காசியாத்திரை'என்றொரு சடங்கு.

அதாவது மாப்பிள்ளை குடைக்கம்பை பிடித்துக்கொண்டு காசிக்கு புறப்படுவதுபோல 'பாவ்லா' (Drama) செய்யவேண்டும். மாப்பிள்ளையை சமாதானப்படுத்தி மறுபடி திருமணத்துக்கு அழைத்துப் போவார்கள்.

3. ஊஞ்சலாட்டுதல் குழந்தாய்... நீ பெண்ணோடு சந்தோஷமாக இருக்கும்போது அவருடன் ஊஞ்சல் பலகையில் அமர்ந்து ஆனந்தமாய் ஆடுவாயாக என்பது வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது.
அதாவது கல்யாணம் என்றால் மஹஸ். அதாவது (Festival) கொண்டாட்டம் இதற்காகத்தான் ஊஞ்சல்.
4. மாலை மாற்றுவது:இது க்ஷத்திரியர்களின் கலாச்சாரம். மணமகனும், மணமகளும் சுக துக்கங்களை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ளவேண்டும் என்பதன் அடையாளமாகத்தான் மாலை மாற்றிக் கொள்வார்கள்.
5. திருஷ்டி சுத்தி போடுவது. மணமக்களுக்கு யார் கண்ணும் பட்டுவிடக் கூடாது என்பதற்காக உறவினர்கள் எல்லாம் மணமக்களுக்கு திருஷ்டி கழிப்பார்கள்.
6. நீராஜனம் எனப்படும் ஆரத்தி எடுப்பது.
7. இது முக்கியமானது. பெண்ணும், பையனும் இப்போது தான் நேருக்கு நேராக பார்த்துக் கொள்ளவேண்டும். மந்த்ரங்கள் ஒலிக்க... பெண்ணை உட்கார வைத்து அவள் தலையில் தண்ணீரை மெல்ல மெல்ல ஊற்றி குளிப்பாட்ட வேண்டும்.
8. பிறகு... முழுக்க நனைந்த அவளை... உள்ளே அழைத்துச் சென்று மணமகனே அவளுக்கு புடைவை உடுத்திவிட வேண்டும்.

அவளது நனைந்த புடைவையை களைந்து விட்டு... புதுப் புடைவையை மணமகன் உடுத்தி விடும் போது... இந்த சேலை வளர்வது போல் நம்முடைய மகிழ்ச்சி. சந்ததியெல்லாம் வளரவேண்டும் என்பதற்காகத்தான் இப்புடைவைச் சடங்கு. இன்னும் இருக்கும் கல்யாணச் சடங்குகளையும்... அவை மறுபடியும் எப்படி மாறின என்பதையும் அடுத்து பார்ப்போம்.

**8. திருமண சடங்குகளின் விளக்கங்கள்.**

கல்யாண கலாச்சாரத்தில் பிராமணர்கள் கொண்டு வந்த சடங்கு சம்பிரதாயங்களில் இது வரை ஏழு பார்த்தோம்.

எட்டாவது சடங்கு பாணிக்ரஹனம். பாணிக்ரஹனம். இதுதான் முக்கியமான சடங்கு. 'கைத்தலம் பற்ற கனாக்கண்டேன் தோழி' என ஆண்டாள் பாசுரம் போலவும், மேற்கத்திய கலாச்சாரத்தில் 'கை'ப்பற்றுவது போலவும் அமைந்தது இச்சடங்கு.மணமகள் - மணமகனை



கைப்பிடிப்பது! இனி வாழ்விற்கு நீதான் இணை, துணை, எல்லாம் நீயே என்ற அர்த்தத்தில் இருவரும் கைப்பிடித்துக் கொள்வது தான் கல்யாணத்தின் முக்கிய அம்சம்.
9. கைத்தலம் பற்றிய பின், மணமகள் 7 அடி எடுத்து வைக்கவேண்டும். எதற்காக தெரியுமா? முதல் அடி அன்னம் பெருகவேண்டும் என்பதற்காக.
இரண்டாவது அடி அந்த அன்னம் உண்டபின் செரிக்க வேண்டும்,
மூன்றாவது அடி கணவனுக்காக விரதங்கள் அனுஷ்டிக்க வேண்டும் என்பதற்காக...
நான்காவது, குடும்பம் சந்தோசமாக விருத்தியாக வேண்டும் என்பதற்காக...
5-ஆவது அடி வீட்டில் மாடுகள் பெருகவேண்டும் என்ற வேண்டுதலுக்காக...
6-ஆவது அடி வைப்பது குடும்பத்தில் அய்ஸ்வர்யம் (செல்வம்) கொழிப்பதற்கு...
7-ஆவது அடி இந்த சகல சவுபாக்கியங்களும் சேர்ந்து கிடைக்க... தாலிக்கு அதாவது, 'நம் குடும்பம் இனிமேல் ஒன்று. உன் அப்பா யாரோ. என் அப்பா யாரோ... ஆனால், இன்று முதல் நாம் ஒன்று' என சங்கப் பாடல் படித்தோமே அதே பொருளுக்காக... யாகத்தை நெருங்குவதுதான் 7-ஆவது அடி.

**இந்த சடங்குகளோடு தமிழ்த் தாலியையும் சேர்த்தனர்.**

இப்படியாகத் தூக்கிப் போவது, காதலிப்பது என சம்பிரதாயங்களில் சிக்காமல் இருந்த தமிழ் திருமண முறையும், பிராமண திருமண முறையும் திருமணம் செய்துகொண்டன.

இதன் விளைவாக தமிழனின் களவியல், கற்பியலில் மந்த்ர இயல் புகுந்தது. சடங்குகள் பிறந்தன. கல்யாணம் என்பது வேதக் கட்டளைப்படி நடக்கும் விழா ஆனது.''மேலோர்க்கு யாத்த கரணம் கீழோர்க்கு ஆன காலமும் உண்டே...'' என்கிறது தொல்காப்பியம்.

கரணம் என்றால் கல்யாணம். அதாவது... மேலோர்களான பிராமணர்கள் வகுத்த கல்யாண கர்மாக்கள்... மற்றவர்களுக்கும் வழக்கத்தில் இருந்தது. விளக்கம் என்னவென்றால்... தொடர்ந்து 10 நாள்கள் வரை நடக்கும்

**கல்யாணச் சடங்குகளை பிராமணர்கள், தங்களால் சூத்திரர்கள் என அழைக்கப்பட்ட தமிழர்களுக்கும் பண்ணி வைத்தனர்.**

மந்த்ர பூர்வமான கல்யாணத்தில் இடமில்லை. ஆனால், தமிழர்களுக்கு கல்யாணம் பண் வைக்கும் போது... அவர்களின் வழக்கத்துக்கு விரோதமாக செயல்பட இயலாதென்பதால் தாலியை... பனை ஓலை கயிறை - மெல்ல மந்த்ர மஞ்சளில் இழைத்து மாங்கல்யமாக்கி விட்டார்கள், தங்களுக்கும் சேர்த்து.

மேற்கூறிய... தொல்காப்பிய வாசகத்தில் கவனிக்கவேண்டிய பதம் ஒன்று உண்டு. ''மேலோர்க்கு யாத்த கரணம் கீழோர்க்கு ஆன காலம் உண்டே.''என்பதில் கீழோர்க்கு ஆன காலம் உண்டே என்பதை மட்டும் உற்றுப் பாருங்கள். 'பிற்பாடு - இந்த கல்யாண முறையில் மாற்றம் வந்துவிட்டது ஒன்றாக இருந்த காலம் உண்டு' என்று தெரிய வரும்.
ஏன் மாறிப் போனது?
முதல் காரணம் தனக்கும் கீழானவர்கள் அதாவது சூத்திரர்களின் கல்யாணச் சடங்குகளும் ஒன்றாக இருக்கலாமா? அவர்களுக்கும் நாமே கல்யாணம் செய்து வைப்போம். அதனால் சடங்குகளில் சிற்சில மாற்றங்களைக் கொண்டு வருவோம் என நினைத்தார்கள் பிராமணர்கள்.
இரண்டாவது காரணம்... இவ்வளவு நீண்ட சடங்குகளை நடத்தி திருமண விழாவை பத்து நாள்கள் நகர்த்திச் செல்ல தமிழர்களுக்கு பொறுமையோ அல்லது விருப்பமோ இல்லை. கண்ணிமைக்கும் நேரத்தில் கன்னியை தூக்கிக் கொண்டோடி சுகித்து திடீர்



திருமணங்களை நடத்திக்கொண்ட 'களவியல்' மரபுக்காரர்களாயிற்றே.
அவனது கண்களும், அவளது கண்களும் சந்தித்துக்கொண்ட சிற்சில நொடிகளில்... மவுனப் புன்னகையே மந்திரமாக... கற்பியல் முறையில் காதல் மணம் கண்டவர்களாயிற்றே.
அதனால் தமிழர்களுக்கு அந்த நீண்ட நெடிய சடங்குகளில் பிடிப்பு வரவில்லை. கல்யாண கலாச்சாரங்களுக் கிடையில் 'விவாகரத்து' ஏற்பட்டுவிட்டது.

**இத்தகைய காரணங்களால்... சூத்திரர்களை தனியாகப் பிரித்து வைத்த பிராமணர்கள் கல்யாண முறை மட்டுமல்லாது அனைத்து வகையிலும் சூத்திரர்களை கீழ்ப்படுத்தினார்கள்.**

இப்படி செய்வதற்கு... அவர்கள் கையில் கசங்காமல் இருந்த 'மனு ஸ்மிருதி' தான் ரொம்ப உதவியாக இருந்தது.

**மனுமூலம் சூத்திரர்களை கெடுபிடி செய்த பிராமணர்கள்... இந்தக் கொடுமைக்கும் அதிகமான கொடுமைகளை இன்னொரு பிரிவினருக்குச் செய்தார்கள்.யாருக்கு க்ஷத்திரியர்களுக்கா...? வைஸியர்களுக்கா...? இல்லை, இல்லை சண்டாளர்களுக்கு.**

**சண்டாளர்களா? யாரவர்கள்? மனு கூற்றுப்படி 'சண்டாளர்கள்' யார் என்பதை என் எழுத்தில் என்னால் கூற முடியவில்லை.**

என்னிடம் மகாத்மா காந்தி கூறியதை அப்படியே உங்களுக்குத் தருகிறேன்.

**9. " தலித் " துகள் சண்டாளர்களாம். ? தலித் களுடன் பிராமண ஆண் பெண்களின் கள்ள உறவு.**
9. தலித் களுடன் பிராமண ஆண் பெண்களின் கள்ள உறவு. யார் அந்த சண்டாளர்கள்? " தலித் " துகள் சண்டாளர்களாம். ? துரோகம் செய்தவனை கொலை பாதகனை, பத்தினிகளை வேட்டையாடுபவனை தான் பொதுவாக சண்டாளன் என்று சாடுவோம்.

**ஆனால், மநு யாரைச் சொல்கிறது தெரியுமா? சூத்திரர்களுக்கு கீழ்பட்டவர்கள். எல்லா விதத்திலும் ஒடுக்கப்பட வேண்டியவர்கள். வர்ணாஸ்ரம பேதத்தின் கடைசி கூட்டத்தினர் இப்படியாக அருவருப்புடன் வர்ணிக்கப்படும் தலித்துகளைத்தான் மநு தனது அகராதியில் பஞ்சமர்கள் என்று சண்டாளர்கள் என்றும் குறிப்பிட்டார்.**

ஏன் அவர்களைச் சண்டாளர்கள் என குறிப்பிடவேண்டும்? அவர்கள் அப்படி என்ன பாவம் செய்தார்கள்?
இதற்கான பதிலைத்தான் தானே எழுதிட முன் வரவில்லை. அண்ணல் காந்தியடிகள் எனக்கு உரைத்த பதிலை அப்படியே உங்களுக்குத் தருகிறேன் என குறிப்பிட்டேன்.
முதலில் காந்தியாரை நான் சந்தித்த சந்தர்ப்பம் பற்றி விரிவாகச் சொல்லுகிறேன். இந்திய நேரத்தின் விடுதலைக்கு முந்தைய காலம்.
சுதந்திர போராட்டத்தை விடவும் காந்தியடிகள் சமூக சீர்திருத்த போராட்டத்தில் தான் அதிகம் ஈடுபட்டிருந்தார். அந்த வகையில் எங்கள் ஊரான கும்பகோணத்திற்கு தீண்டாமை ஒழிப்பு பிரச்சாரத்துக்காக காந்தி பல தடவை வந்தார்.

அப்படி ஒரு தடவை வந்தபோது ஊரிலுள்ள நான் உட்பட சில பிராமண இளைஞர்கள் ஒன்று கூடினோம். காந்தி சனாதன தர்மத்தை சாய்க்க வருகிறார். அவரை நாம் எதிர்க்கவேண்டும். அவரது பிரச்சாரத்தை முறியடிக்கவேண்டும் என திட்டம் தீட்டப்பட்டது.உடனடியாக அந்த கூட்டத்தின் தீர்மானங்கள் செயலாக்க வடிவம் பெறத் தொடங்கின. அதில் முதல் திட்டம்தான் முதன்மையான . காந்தியடிகளுக்கு கருப்புக்



கொடி காட்டுவது தான்.
திட்டப்படி காந்தியடிகள் கும்பகோணம் நகருக்கு வந்தபோது, நானும் சில சனாதன இளைஞர்களும் ஒன்று சேர்ந்து கருப்புக்கொடிகளைப் பிடித்துக்கொண்டோம். தீண்டாமை ஒழிப்பில் ஈடுபடும் காந்தியாரே திரும்பிப் போங்கள். சனாதன வர்ணாஸ்ரமத்தை எதிர்க்காதீர்கள் என்று நாங்கள் பல முழக்கங்களை போட்டோம். காந்தி மேடைக்கு வந்துவிட்டார். அவரது பேச்சைக் கேட்க நிறைய பேர் கூடியிருக்கிறார்கள். நாங்கள் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக முழக்கங்களை எழுப்பி கருப்புக் கொடிகளை உயர்த்திக் காட்டினோம்.அப்போதைய கும்பகோணம் காங்கிரஸ் தலைவர் பந்தலு அய்யர் என நினைக்கின்றேன். காந்தி பந்துலு அய்யரை தன் அருகே அழைத்தார்.

என்ன விவகாரம்? என கேட்டார். அய்யரும் எங்களின் எதிர்ப்புணர்வை சுட்டிக்காட்டி, ‘உங்களை தீண்டாமைக்கு எதிராக பேச வேண்டாம் என்கிறார்கள். கொஞ்ச நேரம் போராடிவிட்டு போய்விடுவார்கள். நீங்கள் பேசுங்கள் என காந்தியடிகளிடம் தெரிவித்தார். ஆனால், காந்தி அவ்வாறு எங்களை அலட்சியப் படுத்தவில்லை.

எங்களை நோக்கி கையசைத்து கூப்பிட்டார். போனோம். முன்வரிசையில் நான்தான் இருந்தேன் Why are you demonitpte young men? என கேட்டார் நாங்கள் போராட்டம் பற்றி சொன்னோம். அதற்குப் பிறகு காந்தி முதலில் எங்களிடம் பதிலளிக்க ஆரம்பித்தார்.

நான் தீண்டாமை முற்றாக வேண்டாம் என்கிறேன். பஞ்சமர்கள் என பட்டம் கட்டி அவர்களை கொடுமைபடுத்துவதை விட்டுவிடுங்கள். அவர்களும் மனிதர்கள்தான். அவர்களுக்கும் இவ்வுலகில் வாழ உரிமை உண்டு. அவர்களை தீண்டத் தகாதவர்கள் என ஒதுக்கிவைக்காதீர்கள். அவர்களையும் பொது இடங்களில் அனுமதியுங்கள். கோயில்களில் நுழைய விடுங்கள் என பிரச்சாரம் செய்யவந்தேன்.
இதையெல்லாம் வர்ணாஸ்ரமம் பேசும் நீங்கள் எதிர்க்கிறீர்கள். நீங்கள் மநு ஸ்மிருதி படித்துள்ளீர்களா? மநுவில் பஞ்சமர்களை சண்டாளர்கள் என அபாண்ட வார்த்தையால் குறிப்பிட்டுள்ளார்கள். ஏன் என்பதையும் குறிப்பிட்டுள்ளார்கள்.

அந்த காலத்தில் பிராமணர்கள் சூத்திரர்களை தங்களது முழுக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார்கள். அதாவது, தாங்கள் இட்ட கட்டளைகளை சிரமேற்கொண்டு செய்து முடிக்கக்கூடிய அளவுக்கு சூத்திரர்களை அடிமைப்படுத்தி வைத்திருந்தார்கள். இத்தகைய காலகட்டத்தில் பிராமண சமூகத்துப் பெண்கள் சிலருக்கு சூத்திரர்கள் மீது பரிதாபம் , அனுதாபம் ஏன் ப்ரியம் ஏற்பட்டது. தனது வீட்டிலுள்ள பிராமணர்களுக்கு தெரியாமல் அப்பெண்கள் சூத்திரர்களுடன் நட்பு பாராட்டினார்கள். உறவு கொண்டாடினார்கள். ஏன்? கல்யாணம் கூட பண்ணிக் கொண்டார்கள். சூத்திரர்களை கடுமையாக நடத்திவந்த பிராமணர்கள் தங்கள் வீட்டு பெண்களில் சிலரே அவர்களுடன் வாழ்க்கை அமைத்துக்கொண்டதை பெரும் அவமானமாக கருதினார்கள்.

**பிராமண ஸ்திரீகளுக்கும் சூத்திர ஆண்களுக்கும் பிறந்த சந்ததியை அதனால்தான் சண்டாளர்கள் என பெயரிட்டு ஒதுக்கிவைத்தனர்.**
**நாளடைவில் பிராமண ஆண்கள் சூத்திர பெண்களை கள்ளத்தனமாக உறவு கொண்டனர்**
இவர்களுக்கு பிறந்த சந்ததியினருக்கும் அதே சண்டாளர்கள் என்றுதான் பெயர். அதனால்தான் சண்டாளர்களை ஊரைவிட்டு ஒதுக்கிவைத்து நீ என் கண்ணில்பட்டாலே தீட்டு, அபச்சாரம் என புறந்தள்ளி வைத்தார்கள் பிராமணர்கள். நான் சொல்வது வெகு காலம் முன்பு.

**இப்படி வளர்ந்த சந்ததியைத்தான் இப்போது நீங்கள் தீண்டத்தகாதவர்கள் என ஒதுக்கி**



**வைக்கிறீர்கள் அவர்களின் தாயார் தகப்பனார் யார் என எண்ணிப் பாருங்கள். இதெல்லாம் புஸ்தகத்தில்தான் இருக்கிறது. நானாக சொல்லவில்லை என எங்களிடம் ஆங்கிலத்தில் சரசரவென பேசிமுடித்தார்**காந்தியடிகள்.முன்வரிசையில் இருந்த நான் திரும்பிக்கொண்டேன். ஜாதியை உருவாக்கிய பிராமணன். பிறப்பின் அடிப்படையில் ஜாதியை வளர்த்தார்கள்

**10.**பிராமண ஆண்பெண்கள் கீழ்ஜாதிகளிடம் கள்ளஉறவு கொண்டால்**?**

பிராமண ஆண்பெண்கள் கீழ்ஜாதிகளிடம் உறவு கொண்டால் ? தவறு செய்யும் ஆணை விட்டுவிடலாம். பெண்ணை ஊருக்கு வெளியே புறம் தள்ளி வைக்க வேண்டும்.

என்ன?... அண்ணல் காந்தியடிகள் பல வருடங்களுக்கு முன் சண்டாளர்கள் என்றால் யார் என சொன்னதை போன அத்தியாயத்தில் கேட்டீர்களா?

நீங்கள் இப்போது கேட்டதை நான் பற்பல வருடங்களுக்கு முன்னால் காந்தி வாயால் கேட்டு லேசாக அதிர்ந்தேன். பிறகு... நான் மநுவுக்குள் மூழ்க ஆரம்பித்தேன். 'சண்டாளர்கள்' என குறிப்பிட்ட மநு அவர்களைப் பற்றி மேலும் என்ன சொல்லியிருக்கிறது என்பதுதான் தேடல்.

**பிராமண வீட்டுப் பெண்கள் சூத்திரர்களோடு ப்பிரியப்பட்டார்கள் அல்லவா?... அதே காரணத்துக்காக அவர்கள் சமூகத்திலிருந்து தனியே பிரிக்கப்பட்டார்கள்.**

சமூகம்?...ஆமாம்... தொழில் முறையில் பிரிவு பிரிவுகளாக வாழ்ந்த மக்களை பிராமணர்கள் பார்த்தார்கள். 'நாளைய சந்ததியில் இவர்கள் தொழில் மாறிவிட்டால் என்ன சொல்லி அழைப்பது'-சிந்தித்தார்கள். a stable society அதாவது நிலையான சமூகக் கட்டுமான அமைப்பு வேண்டுமென்றால் அது சாதியாக பிரிக்கப்பட்டால்தான் உறுதியுடன் இருக்கும் என்பது பிராமணர்களின் கணிப்பு.
அதற்காக? பிறப்பின் அடிப்படையில் ஜாதியை வளர்த்தார்கள்.
சூத்திரனுக்கு பிறந்தவன் நாளை தொழில் மாறினாலும் சூத்திரன்தான். வைசியனுக்கு பிறந்தவன் பிறகு வணிகத்தை மறந்தாலும் அவன் வைசியன்தான். க்ஷத்திரியனுக்கு பிறந்தவன் பின்னாளில் ராஜ்யமின்றி நடுத்தெருவில் நின்றாலும் அவன் க்ஷத்திரியன்தான். இதுதான் அவர்கள் வகுத்த stable society.

மறுபடியும் மநுவுக்குள் செல்வோம்.
சாதி விட்டு சாதி மாறிய காதல்கள் பிராமண ஸ்திரிகளுக்கும், சூத்ர புத்ரர்களுக்கும் மட்டுமல்ல க்ஷத்திரிய ஸ்த்ரிகள்-சூத்ர புத்ரர்கள்வைசிய ஸ்திரிகள்-சூத்ர புத்ரர்கள்மேலும்...சூத்ர ஸ்திரிகள்-பிராமண, க்ஷத்திரிய, வைஸிய புத்ரர்கள்.

**இப்படி காதல்தேவன் கட்டுகளை உடைத்து கல்யாணங்களை கள்ளத்தனமாக பண்ணிக் கொண்டிருந்தான். காதல் தேவனும், காமதேனும் கூட்டணி வைத்துஇஷ்டத்துக்கு திருவிளையாடல் நடத்திக் கொண்டிருந்தால் மநு நினைத்த stable society அமையுமா? அமையாதே.**
இதுவும் தெரிந்திருந்தது மநுவுக்கு. அதனால் தான் இந்த பிரச்சினைக்காக மாற்றுச் சட்டமும் இயற்றியிருக்கிறார். என்ன மாற்றுச் சட்டம்?
முறைகேடான சாஸ்திரங்களை சாகடிக்கக்கூடிய வகையில் இது போல கலப்பு மணம் செய்து கொண்டவர்களுக்கு இரண்டு அளவுகோல் வைத்துப் பார்த்தார். மநு



ஒன்று.. அனுலோம சங்கரம்... இரண்டு... ப்ரதிலோம சங்கரம்

பிரதிலோம என்றால் என்ன என தெரிந்து கொள்வதற்கு முன் ‘சங்கரம்’ என்பதற்கு இந்த இடத்தில் என்ன பொருள் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.
முறைகேடான.. சபிக்கப் படக்கூடிய உறவுகள் உண்டாகுமானால் அந்த சாஸ்திர விரோத சம்பந்தத்துக்குப் பெயர்தான் ‘சங்கரம்’ என்பதற்கு இந்த இடத்தில் என்ன பொருள் என்று தெரிந்து கொள்ளவேண்டும்.
முறைகேடான... சபிக்கப்படக்கூடிய உறவுகள் உண்டாகுமானால் அந்த சாஸ்திர விரோத சம்பந்தத்துக்குப் பெயர்தான் ‘சங்கரம்’. சரி அனுலோம சங்கரம் என்றால்? இந்த உறவில்.. ஆண் மேல் ஜாதிக்காரனாக இருந்தால், இதற்கு பெயர் அனுலோம சங்கரம்.
ஆனால், இவர்களை மநு சண்டாளர்களாக பார்ப்பதில்லை. ஏனென்றால் மேல் ஜாதி ஆண் அல்லவா? கீழ் ஜாதிப்பெண்ணை எடுத்துக் கொண்டிருக்கிறான்.

நம் இனத்து ஆண்... பிற இன பெண்களை பார்ப்பது, பறிப்பது, நுகர்வது, உறவுகள், உண்டாகுமானால் அந்த சாஸ்திர விரோத சம்பந்தத்துக்குப் பெயர்தான் பொதுவாய் ‘சங்கரம்’.

இக்கட்டுரையின் முற்பகுதியிலேயே சொன்னது போல எல்லா ஜாதிக் காரர்களுக்கும் அந்த ப்ரியம் பொதுவானதாக இருந்தது.
இந்த சம்மந்தத்தில் ஆண் மேல் ஜாதிக்காரனாகவும் பெண் கீழ்ஜாதிக்காரியாகவும் இருந்தால் இதற்கு பெயர் அனுலோம ‘சங்கரம்’. உலகத்துக்கே அமைதியைத் தருவது பெண்களின் அழகுதான்... என்றது வேதம்.

**மநுவோ... கீழ்ஜாதிப் பெண்கள் மேல் ஜாதி ஆண்களைக் கவர்ந்தபோது மட்டும் அவர்களை கண்டுகொள்ளவில்லை. என்ன செய்தாலும் அது பாபம் அல்ல என்கிறது மநு.**

இவர்களை அடித்துத் துரத்தி கொடுமைகள் செய்யாமல் தங்கள் உடனேயே தங்க வைத்துக் கொள்கிறது மநு சாஸ்திரம்.

அடுத்து சொல்லப்போகும் ‘ப்ரதிலோம சங்கரம்’ பற்றி நீங்கள் யூகித்திருக்கலாம். அதாவது....மேல்ஜாதிப் பெண்களை கீழ்ஜாதி ஆண்கள் கவர்ந்தது, பறித்து நுகர்ந்து சென்றால் மநுவின் பார்வையில் இது பிரதிலோம சங்கரம்.

**அடேய்.. அதெப்படி நம் இனத்து பெண்ணை ஒரு கீழ்சாதிப் பயல் கவர்ந்து செல்லலாம்?... இவளுக்கு எங்கே போயிற்று புத்தி? ஊரைவிட்டே பகிஷ்காரம் பண்ணுங்கள் நாம் வாழும் தெருவில் அவர்களின் பாபத்தடங்கள் படக்கூடாது அவர்களின் சுவாசக்காற்று நமது தெருக்காற்றை உரசக்கூடாது.அவர்களும், அவர்களைத் தொடர்ந்துவரும் சந்ததிகள் அத்தனை பேரும் சண்டாளர்கள் தான் சட்டம் இயற்றி தண்டனை விதித்தது மநு.**

இதன் காரணமாக பிரதிலோம சங்கர கூட்டம் ஊரைவிட்டு விரட்டப்பட்டது. இன்று வரை அவர்கள் ஊரோரம் குடியிருக்கும் காரணம் புரிகிறதா?
ஆனால்... ‘அனுலோம சங்கர’ கூட்டத்துக்கு ஊரிலேயே இடம் கொடுத்து தேர் ஓட்டுங்கள் என ஆணையிட்டது மநு மநுவின் ‘சண்டாளன்’ என்ற பதத்துக்கு... சமஸ்கிருத மொழியியல் பேரறிஞரான பாணினி கூட அர்த்தம் தேடுகிறேன் எனச் சொல்லியிருக்கிறார். நாம் மேலும் வரலாற்றைத் தேடுவோம்.



**11.மக்களைப் பிளவு படுத்தி வாழ்ந்த பிராமணர்கள்.**

நிலையான சமூக கட்டுமானத்துக்காக தொழில் அடிப்படையில் இருந்த பிரிவுகளை பிறப்பு அடிப்படையில் சாதியாக மாற்றினார்கள்.! பிராமணர்கள்' என்பதை கடந்த அத்தியாயத்தில் கவனித்தோம்.

**வணிகத்தை மறந்துவிட்டாலும் வைசியனுக்குப் பிறந்தவன் வணிகன்தான், சூத்திரனுக்குப் பிறந்தவன் வேளாண்மையை மறந்தாலும் அவன் சூத்திரன்தான். க்ஷத்திரியனுக்குப் பிறந்தவன் ஆள ராஜ்யமின்றி நடுத்தெருவுக்கு வந்தாலும் அவன் க்ஷத்திரியன்தான்.**

**-என ஸ்டேபிள் சொசைட்டிக்கு மனு முடிந்து வைத்த சாதி முடிச்சுகளைப் படிப்பவர்களுக்கு ஒரு கேள்வி எழலாம்.**

**அப்படியானால், பிராமணனுக்குப் பிறந்தவன் என்ன தொழில் செய்தாலும் பிராமணன் என்றாகுமே. உண்மையில் பிராமணர்களுக்கு இன்னது தான் தொழில் என சாஸ்திரம் ஏதாவது சொல்லியிருக்கிறதா? என்ற கேள்விதான் அது.**

இந்த கேள்வியின் பதிலுக்குள் செல்வதற்கு முன் பல ஆண்டுகளுக்கு முன்பு ஒன்றாம் வகுப்பு பாடப் புத்தகத்தில் 'படம் பார்த்து தெரிந்துகொள்' என்ற தலைப்பில் அச்சிடப்பட்டிருந்த பாடத்தை உங்கள் எல்லோருக்கும் சொல்கிறேன்.

'என்னடா... ஒண்ணாவது பிள்ளைகள் படிப்பதையெல்லாம் நமக்கும் சொல்லிக் கொடுக்கிறாரே இந்த ஆள்' என நினைக்காதீர்கள். அந்த பாடத்திலிருந்து தான் பதிலை ஆரம்பிக்கவேண்டும்.

சொல்லிக் கொடுத்தவுடனேயே 'பசுமரத்தில் இறங்கிய ஆணிபோல'; 'பற்றிக்கொள்ளும் கற்பூரம் போல கிரகித்துக் கொள்ளும் சின்னக் குழந்தைகளுக்கு என்ன தெரியுமா சொல்லிக் கொடுக்கப்பட்டது -

அந்த புத்தகத்தில்? க்ஷத்திரியன் (ராஜா போல் படம்) நாட்டை ஆள்பவன் வைசியன் (ஒரு வியாபாரி படம்), வியாபாரம் செய்பவன் சூத்திரன் (ஏர் உழுவது மாதிரி படம்), விவசாயம் செய்பவன் அய்யர் (ஒரு பிராமணர் படம்) நல்லவர். இந்த ஒன்றாம் வகுப்பில் சொல்லிக் கொடுத்த பாடத்தை வைத்துதான் நீங்கள் மேலும் மேலும் படித்திருப்பீர்கள். ஆனால், அதில் பிராமணர் என்பவருக்கான தொழிலாக 'நல்லவர்' என எழுதப்பட்டிருக்கிறது

ஏன்? பிராமணியம் தனிச் சிறப்பு வாய்ந்தது. தனி நோக்கம் கொண்டது. பிராமணன் ப்ரம்மத்தின் அவதாரம்.

பிராமணன் தெய்வம் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்விக்க வந்தவன். தெய்வ நம்பிக்கையை வளர்க்க வந்தவன். பொய் சொல்லமாட்டான். கொலை செய்யமாட்டான். லோக சாந்திக்காக வாழ்வான். இவனால் தான் அரசர்கள் முதற் கொண்டு அனைவரும் சமாதானமாக சேமமாக வாழ்கிறார்கள் என வேத நூல் நீட்டி முழக்கிச் சொன்னதைத் தான் நமது பாட நூல் அய்யர் - நல்லவர் என இரண்டு வார்த்தைகளில் திரட்டித் திரட்டி தந்திருக்கிறது.
சரி... நல்லவனாக இருப்பது ஒரு தொழிலா? அப்படியானால், மற்ற வர்ணத்தவர்கள் கெட்டவர்களா? இப்படியும் கேள்விகள் உங்களுக்கு எழலாம். சிலருக்கு ஒன்றாம் வகுப்பிலேயே எழுந்திருக்கலாம்.



அப்போது கேள்விகள் கேட்டால் வாத்தியார் அதட்டி அமர வைத்து விடுவார். ஆனால், சாஸ்திர புஸ்தகங்கள் அப்படியல்ல, பிராமணர்களின் கடமைகள், வேலைகள் என்னென்ன என்பதுபற்றி அவைகளில் ரொம்ப விளக்கமாக விஸ்தாரமாக எழுதி வைத்திருக்கிறார்கள். சாஸ்திரக்காரர்கள்.

“அய்யர் - நல்லவர்” மாதிரி இங்கேயும் முதலில் இரண்டே இரண்டு பதங்கள்தான் யஜனம். யாஜனம் அப்படி என்றால்? யஜனம் – பண்ணுவது யாஜனம் - பண்ணுவிப்பது பண்ணிவைப்பது எதை? மந்த்ரம், யாகம், ஹோமம் ஆகியவற்றைதான்.

எப்படி? இங்கேயும் பள்ளிக் குழந்தைகளை உதாரணம் காட்ட வேண்டியிருக்கிறது. சின்னக் குழந்தைகள் டைம் டேபிள் பயன்படுத்துவது போல ஒரு நாளில் இன்னின்ன சமயத்தில் இன்னதை செய்யவேண்டும். காலக்ரமப்படி கர்மாக்கள் வகித்துள்ளது சாஸ்திரம்.

என்னென்ன என்று பார்ப்போம்! காலை 4.30-இல் இருந்து 5 6 மணிக்குள் அதாவது சூரியோதயத்துக்கு முன் நித்திரையிலிருந்து எழுந்திருக்கவேண்டும். சிறுநீர் கழிக்கச் செல்லும் போது பூணூலை எடுத்து காதில் சுற்றிக் கொள்ள வேண்டும். காலைக் கடன்கள் கழித்த பின் கை, கால்களை அலம்பிக் கொண்டு சில மந்திரங்களைச் சொல்லவேண்டும்.

பிறகு ஸ்நானம் செய்வதற்கென சில மந்த்ரங்கள்.சூரியோதயத்துக்கு முன்னரே செய்யவேண்டிய இன்னொரு முக்கியமான சடங்கு சந்தியாவந்தனம்.

(பின்னாளில் ராட்சஸர்கள் சூரியனை மறைத்துக் கொண்டதாகவும், அதனால் ராட்சஸர்களிடமிருந்து சூரியனை மீட்பதற்காகவே எல்லோரும் பிராமணர்களைத் தேடியதாகவும் ஒரு நம்பிக்கை உண்டு. பிறகு பிராமணர்கள் சிறிது தீர்த்தத்தை எடுத்து மந்த்ரங்கள் சொல்லித் தெளிக்க அதன் வலிமையினால் அசுரர்கள் ஓடிவிட்டனர். சூரியன் மெல்ல மேலெழுந்தான் என சந்தியாவந்தனத்துக்கும் ஒரு திரைக்கதை தயாரித்தார்கள் பின் வந்தவர்கள். இந்தச் சடங்கில் ப்ராணாயாமம் என்ற மூச்சுப் பயிற்சியும் உண்டு. இதனை காலையிலும் மாலையிலும் செய்தால் உடம்புக்கு நல்லது என அன்றே அறிந்தவர்கள் பிராமணர்கள். இன்றைக்கு அனைவருக்கும் தேவைப்படுவது இந்த மூச்சுப் பயிற்சிதான்.

அடுத்ததாக யஜனம், யாஜனம். இரண்டும் தான் அன்று முழுக்க பிராமணர்களின் பிரதானப் பணி. அதாவது தங்களுக்குரிய பிற கர்மாக்கள் செய்யவேண்டும். பிறருக்கும் அவர்களுக்கென அமைக்கப்பட்டுள்ள கர்மாக்களை செய்து வைத்து தட்சணைகள் பெற்றுக் கொள்ள வேண்டும். இக்கர்மாக்களில் அக்னிஹோத்ர உள்ளிட்ட மந்த்ர சம்பிரதாயங்கள் அடங்கும். சூரியன் உச்சி வரும் வேளையில் போஜனம் முடித்து, கொஞ்ச நேரம் சயனம் அதாவது தூக்கம்.

பிறகு சில சாஸ்திர புஸ்தகங்களைப் படிப்பது. மாலையில் சூரியன் சாயும் வேளையில் மறுபடியும் சந்தியாவந்தனம் செய்வது, பின் உண்டு உறங்குவது.

இது தான் பிராமணர்களுக்கென சாஸ்த்திர புஸ்தகங்கள் வகுத்து வைத்த க்ரமம்.

இப்படி இருந்துகொண்டு மக்களைப் பிளவு படுத்தி வாழ்ந்த பிராமணர்களுக்குள்ளேயே பிளவு ஏற்பட்டது



**12. பிராமணர்களிடையே பிளவா? லிங்க வழிபாடு.**

12.பிராமணர்களிடையே பிளவா? லிங்க வழிபாடு. ஆபாசத்தை, அசிங்கத்தைச் சொல்லும் லிங்கத்தை வழிபட முடியாது என்ற கருத்து தோன்றியதால் ஆரம்ப காலங்களில் கோயில்களில் இடம் கிடைக்கவில்லை.

பிராமணர்களிடையே பிளவா? லோக சேமத்துக்காகவே தெய்வத்தின் அவதாரமாக வாழ்பவர்கள் எப்படி பிளவுபடுவார்கள். இதற்கான பதில் அறிவதற்கு முன்பு தமிழர்களின் முக்கிய வழிபாட்டு முறையைப்பற்றி ஓரளவு தெரிந்துகொள்வோம்.

உலகிலேயே பக்தியை காதலிலும், காமத்திலும் தோய்த்தெடுத்தவர்கள் தமிழர்கள்தான் என்பதை முதலிலேயே பார்த்திருக்கிறோம். காதலையும், காமத்தையும் பக்தியாகப் பாவித்து கடவுளை ஆணாகவும், தன்னைப் பெண்ணாகவும்.... கடவுளை பெண்ணாகவும், தன்னை ஆணாகவும் உருவகித்து “நாயக- நாயகி - பாவ”த்தை காட்டியது தமிழ் வழிபாடு.

பல வழிபாட்டு வடிவங்களுக்கு முன்னுதாரணமான இந்த நாயக - நாயகி பாவ வழிபாட்டு முறைக்காக தமிழர்கள் வைத்துக்கொண்ட வடிவம் தான் லிங்கம்

இன்னும் லிங்கத்தைப் பார்ப்பவர்கள் அது கடவுளின் உருவம் என்றும், அதில் கண்கூட வைத்திருக்கிறார்கள் என்றும் நினைக்கலாம்.

வழிபாட்டு முறையிலேயே அணுகப்போனால் லிங்கம் ஓர் உருவம் அல்ல. அது ஒரு சின்னம்.ஆமாம்... காமமே பக்தியின் சின்னமாக காட்சியளிப்பதுதான் லிங்கத்தின் தத்துவம். ஆணும்... பெண்ணும் ஆலிங்கனம் செய்து ஆனந்தத்தில் கூத்தாடும்போது அவர்களது அங்கங்களை மட்டும் தனியே வைத்தால் என்ன தோற்றம் தருமோ அதுதான் லிங்கம்.

தமிழர்களின் இந்த வழிபாட்டு முறைக்கு ஆரம்ப காலங்களில் கோயில்களில் இடம் கிடைக்கவில்லை. ஆபாசத்தை, அசிங்கத்தைச் சொல்லும் இவ்வடிவத்தை வழிபட முடியாது என்ற கருத்து தோன்றியதால்

லிங்கத்தை மரத்தடிகள், குளத்தங்கரைகள், ஆற்றங்கரைகள் என இயற்கையின் மடியிலேயே வைத்து வழிபட்டுக் கொண்டிருந்தனர். அங்கங்கே அன்றலர்ந்த பூக்களைக் கொண்டு பூசை செய்தும் வந்தனர். அதிலும் வில்வ மரத்தடிகளில்தான் லிங்கத்தை அதிகளவில் வைத்து வழிபட்டனர் என்றும் ஒரு தகவல்.

இப்படி லிங்க வழிபாடு ஒரு பக்கம் நடந்துகொண்டிருக்க வேத வழி வந்த பிராமணர்கள் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் விஷ்ணுவை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஈடுபட்டிருந்தார்கள்.

வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற பிரம்மமாகிய விஷ்ணுவை வழிபடுபவன் சூத்திரனாக இருந்தாலும் பிராமணனாகி விடுகிறான். விஷ்ணு பக்தி இல்லாத பிராமணன்கூட சூத்திரனாவான் என்கிறார் வேதாந்த தேசிகர்.‘நசூத்ரஜா பகவத் பக்தாஜாலிப்ரா பாகவதா’என போகும் ஸ்லோகத்தில்தான் இப்படி விஷ்ணு பக்தியை பிரதானப்படுத்தி சொல்லப் பட்டிருக்கிறது.

ஆரிய மதம் - வேத மதம் - ப்ராமணமதம் - வைஷ்ணவ மதம் என வைஷ்ணவம் தழைத்திருந்த அந்த நேரத்தில்...ஒரு குரல் எழுந்தது.



இன்றைய வடாற்காடு மாவட்டத்தில் இருக்கும் அடையப்பலம் எனும் ஊரைச் சேர்ந்த அப்பய்ய தீட்சிதர் என்பவரின் குரல்தான் அது.

“வேதத்தில் ப்ரம்மம் என சொல்லப் பட்டிருப்பதெல்லாம் சிவனைத்தான். விஷ்ணுவை அல்ல...” என குரல் கொடுத்த அப்பய்ய தீட்சிதர் ‘ஷிவோத் கிருஷ்டம்’ என அழைக்கப்பட்டவர். அதாவது பரமசிவனையே போற்றிப் புகழ்பவர் - சிவனையே துதிப்பவர் என்பது இதன் பொருள். வேதத்தில் சிவன்தான் மையப்படுத்தப் பட்டிருக்கிறார் என்பதை நிறுவ அப்பய்ய தீட்சிதர் நீலகண்ட விஜயம் எனும் நூல் உள்பட பல புஸ்தகங்களை எழுதினார்.

தீட்சிதரும் பிராமணர்தான். ஆனாலும், சிவனே வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிற கடவுள் என அப்பய்ய தீட்சிதர் வரையறுத்ததற்கு ஏகப்பட்ட எதிர்ப்புகள் எழுந்தன.

வேதாந்த தேசிகன் உள்ளிட்ட வைஷ்ணவ வித்வான்கள் இதனைக் கடுமையாக எதிர்த்தனர். வேதத்தில் கர்ம காண்டம், ஞான காண்டம் என இரண்டு பிரிவுகள் உண்டு. கர்மாக்களை எப்படிச் செய்யவேண்டும் என்பதைப்பற்றியது கர்ம காண்டம். கர்மாக்களை செய்தால் மட்டும் மோட்சம் கிடைத்துவிடாது. அதற்கு பகவான் நாராயணனை வழிபடவேண்டும். அப்போதுதான் மோட்சகதி கிடைக்கும் என சொல்வது வேதத்தில் ஞான காண்டம் என அழைக்கப்படுகிற உபநிஷது.

இந்த உபநிஷத்திலுள்ள ஸ்லோகங்களை அடிப்படையாக எடுத்து வைத்துக்கொண்டு வேதத்தின் நாயகன் நாராயணனே என வைஷ்ணவ பிராமணர்கள் வாதிட்டனர்.

நாராயணம் மகாக்ஞயம் விஸ்வாத்மானாம் பராயணம்‘நாராயண பரம்ப்ரும்ஹா தத்வம் நாராயணா பரஹா...’என்கிறது தைத்ரிய உபநிஷது. அதாவது உலகத்தை உய்விக்க ஒரே சக்தி நாராயணன் தான். அவன் தான் அனைத்துலகுக்கும் பரம்பொருள். ‘அதனால் நாராயண தத்துவத்தை நாடிச் சென்று வழிபட்டு வழிபட்டு மோட்சத்தைப் பெறுங்கள்’ என்கிறது தைத்ரிய உபநிஷத்தின் இந்த ஸ்லோகம்.
“மோட்ச மிச்சேது ஜனார்த்தனாது” என்ற இன்னொரு ஸ்லோகமும் இதற்கு கட்டியம் கூறுகிறது. சைவ சம்பிரதாயத்தினர் லிங்க வழிபாட்டை ஏற்றுக்கொள்ள... வைஷ்ணவ சம்பிரதாயத்தினர் நாராயணனை மட்டும் வழிபடவேண்டும் என வாதிட... சைவ... வைணவ வாத, பிரதிவாதங்களால் பிராமணர்களே பிளவுபட்டனர்.

### 13. ஆதிசங்கரர் யார்? ‘எல்லாமே பொய்... எதுவும் மெய்யில்லை’

‘எல்லாமே பொய்... எதுவும் மெய்யில்லை’ ஆதிசங்கரர். இவர் எழுதியது என்ன? செய்தது என்ன? உபதேசித்தது என்ன?
விஷ்ணுவே முழுமுதற் கடவுள் என வைணவர்களும், சிவனே முழுமுதற் கடவுள் என சைவர்களும் சர்ச்சைகளைக் கிளப்பியது பற்றி படித்தோம். அவைகள் ஒரு பக்கம் இருக்கட்டும்.
இப்போது நாம் ஒரு புதியவரைத் தரிசிப்போம். இன்றுவரை இவரை மையமாக வைத்து ஒரு பக்தி உலகமே சுழன்று வருகிறது. இவர் எழுதியது என்ன? செய்தது என்ன?- உபதேசித்தது என்ன? இதெல்லாம் தெரிந்தோ தெரியாமலோ இவரையே தெய்வமாக வழிபடும் ஓர் ஆன்மீக உலகம்தான் அது.
இவரைப் பின்பற்றும் சீடர்களும் இன்று இருக்கிறார்கள். அவர்களுக்கும் சீடர்கள் இருக்கிறார்கள். ஆன்மீக உலகில் இவரை மையமாக வைத்து ஸ்தோத்ரங்கள் மட்டுமல்ல



கோஷங்களும்கூட, எழுந்து கொண்டிருக்கின்றன.

யார் இவர்? கேரள மாநிலம் திருச்சூரிலிருந்து சில தொலைவு போனால் ஆல்வே... அங்கிருந்து கொஞ்சம் திரும்ப வந்தால் அங்கமாலி என்கிற ஊர். அங்கமாலியிலிருந்து சில பல காலடிகள் எடுத்து வைத்து நடந்தால் வருவதுதான் காலடி... தற்போது தமிழ்நாட்டுக்கும் கேரளாவுக்கும் இடையே பிரச்சினைகள் எழும்பியிருக்கும் 'பெரியாறு' நதி அழகாக காலடி வழியாக ஓடிக் கொண்டிருக்கிறது.

இயற்கை செழிப்பான இந்த காலடியில்...ஷிவகுரு எனும் பிராமணர் இவருக்கு ஆரியம்பாள் எனும் பத்தினி இவர்களுக்கு மகனாக பிறந்த செழுமை பூமியில் தன் மழலை காலடிகளைப் பதித்தான் சங்கரன். காலடியே இவனைக் கண்டு துள்ளிக் குதித்தது. 'அழகான குழந்தை... கண்ணைப் பாருங்கள். ஞானம் சிரிக்கிறது. காதுகள் பாருங்கள் உலகத்தையே கேட்பது மாதிரி விரிந்திருக்கிறது.' என பார்த்த ஊர்ப் பெரியவர்கள் எல்லாம் சங்கரனுக்கு திருஷ்டி வைத்தார்கள்.

அப்பாவும்... அம்மாவும் சங்கரனைப் பெற்ற மகிழ்ச்சியில் ஆனந்தமாயிருக்க.. ஆனந்தம் அக்குடும்பத்துக்கு நிரந்தரமாய் நீடிக்கவில்லை. சங்கரன் சிறு குழந்தையாய் இருக்கும் போதே அவனது அப்பா இறந்து விட்டார்.

அதுவரை அக்குடும்பத்தை கொஞ்சிக் கொண்டிருந்தவர்கள்... கொஞ்சம் கொஞ்சமாய் விலகத் தொடங்கினர். விதவையாய் போன சங்கரனின் அம்மாவை பார்த்தாலே பாபம் என சாஸ்திர சாலையில் நடந்து போனார்கள். சங்கரனின் குடும்பம் ஏழ்மையில் விழுந்தது.ஆனாலும்... சங்கரனின் ஞானத்தேடலுக்கு ஒரு குறையும் வைக்கவில்லை அவனது அப்பா.

அவனது வயிற்றுப் பசியையும் போக்கி... அறிவுப்பசிக்கும் பல்வேறு சாஸ்திர பண்டிதர்களிடம் சேர்த்து படிக்க வைத்தாள். உள்ளூர் பண்டிதர்களிடம் படித்துக் கொண்டிருக்கும் போதே 8 வயதில் சங்கரனுக்கு உபநய சடங்கை செவ்வனே செய்து வைத்தார்கள்.இதன்பிறகு சங்கரனின் சாஸ்திர தேடல் வீரியம் கொண்டது.

அம்மாவிடம் ஒருநாள் சங்கரன் சொன்னான். "அம்மா... உள்ளூர் பண்டிதர்களிடம் படித்தது போதும் அம்மா... நர்மதா நதிக்கரையில் சில பண்டிதர்கள் இருப்பதாக கேள்விப்பட்டேன். அவர்களிடம் பயில்கிறேனே..." அம்மாவிடம் சொல்லி விட்டு...பெரியாறு நதிக்கரையிலிருந்து நர்மதா நதிக்கரைக்கு பயணம் செய்தான் சங்கரன். அறிவு நதியில் குளிப்பதற்காக, மூழ்குவதற்காக, நர்மதா நதிக்கரையில் கோவிந்த பாதர், பத்மபாதர், கவுடபாதர் போன்ற வித்வான்களிடம் அங்கேயே வாசம் செய்து கற்ற சங்கரர்... அங்கே பல விடயங்களைத் தெரிந்து கொண்டார்.அவர்கள் உபதேசித்த விடயங்களை உள் வாங்கிக் கொண்டு யோசிக்க ஆரம்பித்தார்.
சங்கரர் கற்ற வேதம், பகவத் கீதை, பிரம்ம சூத்ரம் போன்றவற்றுக் கெல்லாம் பாஷ்யம் அதாவது உரை எழுதிய சங்கரர்... அப்போது புத்தரையும் வாசிக்க ஆரம்பித்தார்.

**அதுவரை அவர் படித்த வேதம்.. பிரம்ம சூத்ரம், ஆகியவற்றை பற்றியெல்லாம் சங்கரரை மறுபரிசீலனை செய்ய வைத்தது புத்தம்.**

புத்தன் சங்கரருக்குள் வெளிச்ச விழுதுகளை இறக்க ஆரம்பித்தார். மறுபடியும் மற்ற சாஸ்திரங்களையும் வாசிக்கத் தொடங்கிய சங்கரர்.. இறுதியில் ஒரு தெளிவிற்கு வந்தார். புத்தன் சொன்ன ஞானத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன். இவ்வுலகில் உள்ள அனைத்தும்



பொய்... அதுதான் எனக்கு கிடைத்த ஞானம்.நம் பிறப்பு பொய்.. வாழ்வு பொய் இவ்வுலகத்தில் ஞானம். அக்ஞானம் ஆகிய இரண்டும்தான் உண்டு, மற்ற எதுவுமே கிடையாது” என தனக்கு கிடைத்த ஞானத்தை ஊருக்கெல்லாம் சொல்ல ஆரம்பித்தார் சங்கரர்.வேதம் அது சொன்ன கர்மாக்கள் எல்லாம் பொய் கடவுளைத் தவிர... என சங்கரர் மேலும் உபதேசம் செய்யச் செய்ய வைதீகர்கள் சங்கரரை எதிர்க்க ஆரம்பித்தனர்.

இதெல்லாம் சங்கரரின் இளமைக்காலம். ஆண் பொய், பெண் பொய் அனைவரும் பொய் என்ற சங்கரர் கல்யாணம் பண்ணிக் கொள்ளவும் மறுத்தார். அம்மா எவ்வளவோ சொல்லியும் ஏற்றுக் கொள்ளவில்லை. இளமை பொங்கும் வயதில் சந்யாசம் போனார். தான் சொன்னவற்றை ஏற்றுக் கொண்ட உலகையே மாயம் என ஒப்புக் கொள்கிற இளைஞர்களை திரட்டினார் சங்கரர்.

அவருக்கு முதன் முதலில் கிடைத்தவர்கள் நான்குபேர். ஆனந்தகிரி, சுரேஷ்வரன், பத்மநாபர், ஹஸ்தாமலகம். இவர்கள் தன்னை பின்தொடர ஒவ்வொரு ஊராய் சென்றார். உலகமே மாயம் எதுவுமே உண்மையில்லை. எதற்கும் கலங்காதே... தனது அத்வைதத்தை ஊர் முழுக்க பரப்பினார் ஆதிசங்கரர்...‘எல்லாமே பொய்... எதுவும் மெய்யில்லை’ என அழுத்திச் சொல்லிக் கொண்டிருந்த ஆதி சங்கரரை அந்த சம்பவம் அழுத்தமாக உலுக்கியது.

## 14.சந்யாசிகள் எப்படி எப்படி வாழவேண்டும், வாழக் கூடாது.

14. சந்யாசிகள் எப்படிஎப்படி வாழவேண்டும், வாழக் கூடாது.
உண்மையான சந்யாசி ஒரு குதிரை வண்டியையோ, மாட்டு வண்டியையோ பார்க்கவே கூடாது. அவனது பார்வைகூட. அந்த வண்டிகளில் பயணம் செய்யக் கூடாது. மற்றவர்களிடம் பிச்சை வாங்கி உண்பதுதான் சந்யாச பண்பாடு. சந்யாசியானவன் பணத்தை கையால் தொட்டால் கூட அது மிகப் பெரிய பாவம்...

வேதம், கர்மாக்களை பொய் என்று சொல்லி பிரச்சாரம், உபந்யாசம் என அருளிக் கொண்டிருந்த ஆதிசங்கரரை அழுத்தமாகப் பாதித்த சம்பவம். இளமைப் பருவத்திலேயே - அவரது தாயாரும் இறந்ததுதான், அனைத்தையும் பொய் என்ற போதும் அன்னையின் இறப்பு சங்கரரை ரொம்பவே பாதித்தது.

வைதீகர்கள் வந்தார்கள். ‘பாரப்பா உன் அம்மாவுக்குரிய இறுதிச் சடங்குகளை நீதான் செய்யவேண்டும். வழக்கம்போல அது பொய், இது பொய் என உளறாதே...’ என அவர்கள் பலவந்தப்படுத்தியதை அடுத்துதன் அம்மாவுக்கான கடைசிக் காரியங்களை தான் இதுவரை உபதேசித்து வந்த கருத்துகளுக்கு மாறாக இருந்தபோதும் செய்து முடித்தார் சங்கரர்.

‘இனி நமக்காக, நம்மை நம்பி யாருமில்லை...’ என்ற நிலைமை அன்னையின் மறைவிற்குப் பிறகு ஏற்பட்டதால் சந்யாசத்தில் தீவிரமானார் ஆதிசங்கரர். மறுபடியும் ஒவ்வொரு ஊராகச் சுற்றினார். சந்யாசம் வாங்க வேண்டியதன் அவசியத்தை ஒவ்வொரு இளைஞனுக்கும் சூடான ஸ்லோகங்கள் மூலம் பரப்பினார். பிற்பாடு கேரளாவைத் தாண்டியும் சங்கரர் பயணம் மேற்கொண்டு அத்வைதத்தையும் சந்நியாசத்தையும் உபதேசித்தார் என்றும் சங்கரரின் வாழ்க்கை வரலாற்றில் தகவல்கள் வழிகின்றன.

சங்கரர், சந்யாசிகள் எப்படி வாழவேண்டும் என கடும் நிபந்தனைகளை தனக்கும் விதித்துக் கொண்டு... தன்னைப் பின்பற்றும் அதாவது சந்யாசத்தைப் பின்பற்றும் சீடர்களுக்கும் அதை உபதேசித்தார்.சந்நியாசியானவன் தனக்கென எதுவும் வைத்திருக்கக் கூடாது. தனக்கு



உணவு தேவையென்றால்கூட பொருள்களை வாங்கி அவன் சமைக்கக் கூடாது. நமக்கென்று உலகில் எதுவும் இல்லை என்றபோது... மற்றவர்களிடம் பிச்சை வாங்கி உண்பதுதான் சந்யாச பண்பாடு.

சந்யாசி அக்னியைக்கூட தேவைக்காக நெருங்கக்கூடாது. ஒவ்வொரு வீடாய் போய் பிச்சையெடுக்கவேண்டும். அதில் கிடைப்பவற்றை சாப்பிட்டுக் கொள்ள வேண்டும் **என்ற** சங்கரர்... சந்யாச ஸ்மிருதி வகுத்த விதிகளை கடுமையாக பின்பற்றினார்.

சந்யாச ஸ்மிருதியா? அது என்ன சொல்கிறது? ஆசையைத் துறந்த சந்யாசிகள் எப்படி எப்படி வாழவேண்டும், வாழக் கூடாது என்பவற்றை வகுத்தது தான் சந்யாச ஸ்மிருதி.

'பததீ அஸோவ் ஸ்வயம்பிக்ஷுஹீ யஸ்ய ஏததுத்வயம் பவேது...' -- சந்யாசியானவன் பணத்தை கையால் தொட்டால் கூட அது மிகப் பெரிய பாவம்...என்று சொன்ன சந்யாச ஸ்மிருதி, சந்யாசிகள் எவ்வளவு எளிமையாக இருக்கவேண்டும் என்பதையும் வலியுறுத்தியிருக்கிறது.

எங்கு போனாலும் சந்யாசி கால்நடையாகத்தான் செல்ல வேண்டும். அல்லது பல்லக்கில் போகவேண்டும்.

இதைத் தவிர்த்து வேறு எந்த வசதிகளையும் சந்யாசிகள் பயன்படுத்தக் கூடாது என்பதை பின்வரும் ஸ்லோகத்தில் சொல்கிறார்கள்.

"வாகனஸ்த்தம் யதீம் திருஷ்ட்வாசஜேஸ ஸ்நான மாசரேது..."என போகும் இந்த ஸ்லோகத்தின் உள்ளர்த்தம் என்ன தெரியுமா?

சந்யாசியானவன் எத்தனை மாற்றங்கள் உலகியலில் வந்த பன்னாலும் தன்னை மாற்றிக் கொள்ளாதவனாக இருக்க வேண்டும். கால்நடையாக திரிந்து உன் உபதேசங்களைப் பரப்பவேண்டும். அதை விட்டுவிட்டு வண்டி வாகனங்களை தேடிக் கொண்டிருக்காதே. அவற்றில் ஏறி ஜம்மென உட்கார்ந்து கொண்டு ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருக்காதே. அதைவிட மிகப்பெரிய பாவம் வேறெதும் இருக்க முடியாது. உண்மையான சந்யாசி ஒரு குதிரை வண்டியையோ, மாட்டு வண்டியையோ பார்க்கவே கூடாது அவனது பார்வைகூட. அந்த வண்டிகளில் பயணம் செய்யக் கூடாது.பிறகு அவர் எப்படி பயணம் செய்ய முடியும்? தவிர்க்க முடியாத துரதிருஷ்டவசமாக சந்யாசி அப்படிப்பட்ட வண்டிகளைப் பார்த்துவிட்டால் அந்த கணமே தலைமுழுகி ஸ்நானம் செய்து அப்பாவத்தை தீர்த்துக் கொள்ளவேண்டும் என **'வாகன'** பற்றி சந்நியாசிகளுக்கு அப்போதே அறிவுறுத்தியிருக்கிறது சந்யாச ஸ்மிருதி.

இத்தனைக் கட்டுப்பாடுகளையும், நியதிகளையும் துளிகூட வழுவாமல் தன் சந்யாசத்தை மேற்கொண்டிருந்தார் சங்கரர். இந்த இடத்தில் நானொரு விஷயத்தைச் சொல்வது மெத்தப் பொருத்தமாகயிருக்கும். மகாபெரியவர் சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் இந்த வாகனத் தீட்டு விஷயத்தில் ரொம்ப கவனமாயிருந்தார். தான் இருக்கும்வரை எவ்வித இயந்திர வாகனத்திலும் அவர் பயணித்ததில்லை. (பல்லக்குகளில் தான் ஏறிச் சென்று கொண்டிருந்தார்).

இளமையிலேயே இவ்வாறு சந்யாச ஸ்மிருதிகள்படி வாழ்ந்து வந்த ஆதிசங்கரர் இதோடு இல்லாமல் தானே பஜகோவிந்தம் என்னும் சாஸ்திர நூலையும் இயற்றினார்.



மூடமதே… அதாவது மூட மடனமே என மனங்களை அழைக்கும் பஜகோவிந்தத்தில் - ஆதிசங்கரர் அருளிய ஸ்லோகங்கள் இன்றளவும் சராசரி புருஷர்களுக்கும், சந்யாசிகளுக்கும் புத்தி சொல்லக் கூடியதாக… அறிவூட்டக் கூடியதாக அமைந்திருக்கின்றன.

பணத்தாசை பிடித்தால் என்ன நேரும்? பெண் பித்து பிடித்தால் என்ன நேரும்? என பல சூடான கருத்துகளை பஜகோவிந்தத்தில் (பஜகோவிந்தம் என்றால் கோவிந்தனை பஜனை செய்கிறேன் என பொருள்) எடுத்துக் காட்டியிருக்கிறார்

ஆதிசங்கரர். அதில் சில தேவையான ஸ்லோகங்களைப் பார்ப்போம். அவை சொல்லக்கூடிய விதத்தில் இன்றைய சந்யாசிகள் இருக்கிறார்களா என்றும் அந்த ஸ்லோகங்களின் ஜன்னல்கள் திறந்து தரிசிப்போம்.

**15. பணத்தை தேடித் தேடி அலையாதே. பெண்களை நம்பாதே – சங்கரர்.**

15. பூணூலை அவிழ்த்து எறிந்தார் சங்கரர். 'பெண்களை நம்பாதே' பணத்தை தேடித் தேடி அலையாதே. பணத்தால் திவலை அளவு கூட நன்மையில்லை. பணத்தால் சத்யம் சாகடிக்கப்படும். சங்கரர் அத்வைத குட்டையைக் குழப்பிவிட்டார்

பஜ கோவிந்தத்தில் ஆதி சங்கரர் சொன்ன சேதிகளை யெல்லாம் அவரைப் பின்பற்றக் கூடியவர்கள் நிஜ கோவிந்தமாக காதில் வாங்கினார்களா? கடை பிடிக்கிறார்களா? பானை சோற்றுக்கு பதச் சோறாக சில ஸ்லோகங்களை மட்டும் பார்க்கலாம். .
'அர்த்தம் அனர்த்தம் பாவைய நித்யம் நாஸ்தி தகஹா சுக வேஸஹா சத்யம்'

இதுவும் "பண" பக்தி பற்றிய ஸ்லோகம் தான். பணம் என்பதற்கு ஒன்றுமில்லை என்று தான் பொருள். பணத்தால் திவலை அளவுகூட நன்மையில்லை. பணத்தை தேடித் தேடி அலையாதே. பணத்தால் சத்யம் சாகடிக்கப்படும்.

உனக்குள்ளேயே கலகங்கள் நடக்கும். பணம் சம்பாதிப்பதைவிட அதைக் காப்பாற்றுவது கஷ்டம். நீ பணக்காரன். ஆனால், மித்ரன்கூட சத்ரு ஆகி விடுவான். அதாவது நண்பன் கூட பகைவன் ஆகிவிடுவான் என்ற ஆதிசங்கரர்,

'புத்ராதபி தனபாஜாம் பீதிஹி' என்றும் சொல்லுகிறார். இதற்கென்ன அருஞ்சொற் பொருள்? பணக்காரனுக்கு தன் மனைவி மக்களால் கூட ஆபத்து, பீதி ஏற்பட்டுக்கொண்டே இருக்கும்.

இவ்வாறு, மண்ணாசை, பொன்னாசை உள்ளிட்ட ஆசைகளுக்கு அடித்தளமான, பணத்தை பற்றி குறிப்பிட்டுக் காட்டி எச்சரிக்கும் ஆதிசங்கரர் அடுத்து முக்கியமாக… பெண்ணாசையைப் பற்றி பொட்டில் அறைந்தாற் போல ஒரு ஸ்லோகத்தில் சொல்கிறார்:

"நாரீஸ் தனபர நாபீதேசம்த்ரிஷ்டவா மாதாமோஹாவேஸம்…" என்று போகிற இந்த சமஸ்கிருத கவிதையின் சாராம்ஸமே. 'பெண்களை நம்பாதே' என்பதுதான்.

பெண்கள் தங்களது பாவங்களையும், பாகங்களையும் காட்டி உங்களை மயக்கப் பார்ப்பார்கள். அவள் இருண்ட கேஸத்தில் சிக்கிக் கொண்டு நீ மோசம் போய்விடாதே. அந்த சிரிப்பு என்ற நெருப்பில் மாட்டிக் கொண்டு மாய்ந்து போய்விடாதே.



முக்கியமாக பாவி, பெண்களின் மேல் பாகங்களைப் பார்த்து மயங்கி விழுந்து விடாதே. பின்னர் அதிலிருந்து நீ எழுந்திருக்கவே முடியாது. அதனால் முன்னெச்சரிக்கையாக நடந்துகொள். உலகில் யாவும் பொய். பொண்ணு பொய். அவளது மெய் (உடம்பு) யும் பொய்.- என எச்சரிக்கை விடுக்கிறார் அன்றே ஆதிசங்கரர்!

இன்று நாம் சகஜமாக செய்தித்தாளில் படிக்கிற பல செய்திகளையும் வைத்துப் பார்க்கிறபோது, சந்யாசிகள் முதல் கொண்டு சினிமாப்பட ரசிகர்கள் வரைக்கும் சங்கரரின் அறிவுரை மற்றும் எச்சரிக்கை எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது?

ஒரு பக்கம் தீவிர கட்டுப்பாடுகளுடன் சந்யாசத்தை தழுவிக் கொண்ட சங்கரர் வேத கர்மாக்களை எதிர்ப்பதிலும் அதி தீவிரம் காட்டிக் கொண்டிருந்தார்.அதற்காக... தான் சந்யாசியான க்ஷணத்திலேயே தலையை மொட்டை அடித்துக் கொண்டார்.

இதைவிட முக்கியமாக பிராமணர்களுக்கு வேத கர்மாக்களை செய்வதற்கு பிரதானமாக இருக்கக்கூடிய யக்ஞோபிதம் அதாவது பூணூலை அவிழ்த்து எறிந்தார் சங்கரர். வேதம் பொய். அதன் கர்மாக்கள் பொய் என்ற நிலையில் தன் தோள்பட்டையில் பூணூல் என்னும் பொய்யை எப்படி தாங்கிக் கொண்டிருப்பது என்ற சிந்தனையின் அடிப்படையில் தான் அதை கழற்றி எறிந்தார் சங்கரர்.

இந்த இரண்டு நடவடிக்கைகளும் தான் சங்கரர் மீது வேதக்காரர்களுக்கு கடும் கோபத்தை ஏற்படுத்தியது. ஏனெனில் சிகை (குடுமி) யக்ஞோபிதம் (பூணூல்) ஆகிய இரண்டும் கர்மாக்கள் செய்கையிலே பிராமணர்களுக்கு பிரதானம் என சாஸ்திரங்களில் வழங்கப்பட்டு வந்த நிலையில்... சங்கரர் தடாலடியாக குடுமியை மழித்து, பூணூலை கழித்து சந்யாசியான விதம் அவர்களை அதிருப்தியாக்கியது.

சங்கரரின் இந்த செய்கைகள் ஏற்படுத்திய கோபத்தின் மீது இன்னொரு கோப அடுக்கை ஏற்படுத்தின - . அவரது உபதேசங்கள்.இக்கட்டுரைத் தொடரின் முற்பகுதியிலே நான் குறிப்பிட்டுக் காட்டியதை போல... குழந்தாய்.. இந்தா பால், இதைக் குடித்து வளமோடு வாழு என்கிறது வேதம்.

உனக்கென உன்னை நம்பும் பெண்ணோடு இணைந்து வாழ்க்கையைச் சுகமாக நடத்துவாயாக. இதெல்லாம் கூடாது என சந்யாசம் பேசி வருபவர்களைச் சமூகத்துக்குள்ளேயே விடக்கூடாது. அவர்களை விரட்டியடியுங்கள் என சொல்கிறது வேதசாரம். இன்னும் உபநிஷது சொல்வது என்னவென்றால் ஜானாதீ இச்சதீ யததே...? அதாவது நாம் பார்ப்பதன் மேல் அறிவானது ஆசை கொள்ளும். ஆசையின் மிகுதியால் அந்த பொருளை அடைய பிரயத்தனம் செய்யும். பிரயத்தனம் செய்து அந்த ஆசைப்பட்ட பொருளை அடைந்தால் அதுதான் ஆனந்தம். இந்த ஆனந்தமே வாழ்க்கை. ஒரு பொருளின் மீது ஆசைப்பட்டு அடைய முயற்சிகள் செய்து முயற்சியில் வெற்றிபெற்று ஆனந்தப்படுவது தான் அறிவு -என்கிறது உபநிஷது.ஆனால் சங்கரரின் அத்வைதம்... இவைகளுக்கு எதிரானவையாக இருந்ததால் வேதக்காரர்கள் சங்கரர் மீது சரமாரியாக கருத்துத் தாக்குதல் நடத்தினார்கள்.

இந்நிலையில் தான் சங்கரரை பின்பற்றியவர்களிலேயே இரண்டாக சிறு பிளவு ஏற்பட்டது.

உலகமே மாயம் என்று மாயாவாதத்தை ஒரு பிரிவினரும், மாயம் அல்ல, அது நம் அக்ஞானம் என்று ஒரு பிரிவினரும் முளைத்தனர்.சங்கரர் முழுக்க முழுக்க தன் தத்துவத்தை “Educated Class” அளவிலேயே கூறி வந்ததால்,



இந்த பிளவும் பெரிய விளைவுகளை ஏற்படுத்தவில்லை. மாறாக, வேதபககாரர்களின் எதிர்ப்பை சமாளிக்க சங்கரரே ஒரு முரண்பாட்டை சூடிக்கொண்டார். “வேதோ நித்யமதிய தாம்ததுஉதிதம் கர்ம ஸ்வனுஷ்டேதாம்காம்யே மதிஹி” அஃதாவது சித்த சுத்தியுடன் வேதம் சொன்ன கர்மாக்களை செய்தால் மோட்சம் எளிதில் பெறலாம் என்ற ரீதியில் சங்கரர் சொல்லி அத்வைத குட்டையைக் குழப்பிவிட்டார்.

**16. கர்மா,வழிபாடு எல்லாம் தேவையில்லை என்கிறார் சங்கரர்.**

அப்படியென்றால் மோட்சம் பெற என்ன வழி...?
வேத கர்மாக்களை செய்தால் எளிதில் மோட்சம் பெறலாம் - என சங்கரர் சொல்லி அத்வைத குட்டையை குழப்பிவிட்டார் என்பதை கடந்த கட்டுரையில் குறிப்பிட்டிருந்தேன்.

குட்டைதான் குழம்பியது. அதில் குளித்தெழுந்த சங்கரர் குழம்பவில்லை. தன்னளவில் மாயாவாதத்தை விட்டு விலகாமல்தான் இருந்தார். இது ஒரு பக்கம் இருக்க... ஆதிசங்கரருக்கும், ஆகமக்காரர்களுக்கும் இடையே கருத்து மோதல்கள் வெடிக்கத் தொடங்கியது.

ஆகமக்காரர்களா...? முதலில் ஆகமம் என்றால் என்ன? கடவுளை எப்படி வழிபடவேண்டும். என்னென்ன சம்பிரதாய சடங்குகள் விக்ரகத்துக்கு செய்யவேண்டும் என்பன போன்ற விதிமுறைகளையும் மேலும் பிறப்புக்குப் பிறகிலிருந்து இறப்புக்குப் பிறகுவரை ஒரு மனிதனுக்கு செய்ய வேண்டிய சடங்குகளையும் பற்றி சொல்வது தான் ஆகமம்.

ஆக மொத்தம் ஆகமம் என்பதற்கு வழிமுறை என்று பொருள்.இதில் வைஷ்ணவ சம்பிரதாயத்துக்கு இரண்டு ஆகமங்களும், சைவ சம்பிரதாயத்துக்கு 63 ஆகமங்களும் இருக்கின்றன.

வைஷ்ணவ சம்பிரதாயத்துக்கு வைகானச ஆகமம், பாஞ்சராத்ர ஆகமம்.
பெருமாளை எப்படியெல்லாம் ஆராதனை செய்யவேண்டும். அர்ச்சிக்க வேண்டும்... ஆகியவற்றை ‘விகனசர்’ என்பவர் வகுத்தார். எனவே, இது வைகானச ஆகமம் ஆயிற்று.

அடுத்ததாக... பெருமாளே இறங்கி வந்து ‘என்னை இப்படி இப்படியெல்லாம் பூஜிக்கவேண்டும். புனஸ்காரம் பண்ண வேண்டும், அர்ச்சிக்க வேண்டும், அலங்காரம் பண்ணவேண்டும்’ என தன்னை வழிபடும் முறைகளை அந்தப் பெருமாளே சிலரிடம் கூறியதாக ஒரு கருத்துரு காணப்படுகிறது. இதுவே பாஞ்சராத்ர ஆகமம் எனப்படுகிறது.

சைவ சம்பிரதாயத்துக்கு 63 ஆகமங்கள். அவற்றில் பலவற்றை இப்பொழுது புழக்கத்தில் பார்ப்பதே அபூர்வமாகி விட்டது.

சரி... இவைதான் ஆகமங்கள். அதாவது விக்ரக வடிவிலான தெய்வத்தை எப்படி ஆராதனை செய்யவேண்டும் என போதனை செய்த மந்திரங்கள் தான் ஆகமங்கள். இதையெல்லாம் சொன்ன ஆகமங்கள்... இதோடு இன்னொன்றையும் கூறின.

‘இப்படியெல்லாம் க்ரமங்களோடு பகவானை வழிபட்டால் தான் மோட்சம் கிட்டும்’ என்பது தான் அது. இங்கே தான் ஆதிசங்கரர் குறுக்கிட்டார். கண்டித்தார் என்றுகூட சொல்லலாம்.

கடவுள் மட்டும் தான் நிஜம். மற்ற அனைத்தும் மாயம், பொய். ஆகமங்கள் பொய்களை திரட்டி வந்து உண்மையை பூஜிக்கச் செய்கின்றன. அந்த உண்மையைக் கூட விக்ரகம்



என்னும் பொய் வடிவமாகவே பார்க்கின்றன. இப்படியெல்லாம்... ஆகமக்காரர்களின் அறிவுரைகளை நம்பிக் கொண்டிருந்தால் மோட்சம் கிட்டாது. கடவுளின் கடாட்சமும் கிட்டாது. ஆகமங்கள் தவறு. அது அடியொற்றுவதும் தவறு என வாதிட்டார் ஆதிசங்கரர்.

அப்படியென்றால் மோட்சம் பெற என்ன வழி...?

சொன்னார்."சத்ஸங்கத்வே நித்ஸங்கத்வம் நித்ஸங்கத்வே நிர்மோகத்வம் நிர்மோகத்வே நித்ஸலசித்தம் நித்ஸலசித்தே ஜீவன்முக்தி..." இந்த வரிகளுக்குள் வாழும் பொருள் என்ன?

சந்யாசிகள், சாதுக்கள், ஞானிகளின் தொடர்பு கிடைக்கும் போது உனக்கு உலகியல் மீதான நாட்டம் குறைகிறது. உலகியல் பற்று குறையும் போது உன் மனம் மோகத்தை முழுமையாக விட்டு விடுகிறது. மோகத்தை நீ விட்டுவிட்ட போது உனக்கு சலனம் இல்லாத சித்தம் வாய்க்கிறது. சித்தத்தில் சலனம் இல்லாமல் இருந்தாலே உனக்கு மோட்சம் கிடைக்கும். இதற்காக கர்மா, வழிபாடு எல்லாம் தேவையில்லை என்கிறார் சங்கரர்.

இப்படியாக வாழும் முறையிலிருந்து, மோட்ச தத்துவம் வரை பல இடங்களுக்கும் தன் காலடியால் கடந்து பரப்பிய ஆதிசங்கரர். தனது 32 வயதிலேயே மோட்சம் அடைந்ததாகச் சொல்கிறார்கள்.

அவர் பிறந்த இடம் காலடி என உறுதிபடச் சொல்வதுபோல்... அவர் இன்ன இடத்தில் தான் இறந்தார் என்பதற்கு எவ்வித தகவல் ஆதாரங்களும் கிடைக்கவில்லை. இமயமலைப் பக்கம் சென்றவர் திரும்பவேயில்லை என உறுதியற்ற தகவல்தான் நிலவுகிறது.

ஒருவேளை கிடைத்திருந்தால்... அவருக்கு அங்கே அவரை பின்பற்றியவர்கள் நினைவுச் சின்னம் அமைத்திருப்பார்களே அதுவும் இல்லை. அதனால்... ஆதிசங்கரர் இங்குதான் உயிர் நீத்தார் என்பதும் எங்கே எனத் தெரியவில்லை.

இந்த யூகங்கள் ஒருபுறம் இருக்க... சங்கரரின் காலம் பற்றியும் பல கணிப்புகள்! தனது "Discovery of India" என்னும் வலுவான வரலாற்று நூலில் ஆதிசங்கரர் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்ததாக நேருஜி கூறுகிறார்.

இன்னும் சிலர்... நான்காம் நூற்றாண்டு, ஆறாம் நூற்றாண்டு என்றெல்லாம் சொல்கிறார்கள். இவர்களைத் தூக்கி சமைக்காமலே சாப்பிடுவதுபோல் இன்னும் சிலர் சங்கரர் இரண்டாயிரத்து அய்நூறு வருடங்களுக்கு முற்பட்டவர் என்கிறார்கள் சகஜமாக.

இப்படி சில கணிப்புகள் திணிக்கப்பட்டாலும் பொதுவாக சங்கரர் கி.பி. ஏழு அல்லது எட்டாம் நூற்றாண்டுக்காரர் தான். அதாவது இன்றைய காலத்திலிருந்து 1,200 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர் என்பது தான் வரலாற்றை வடிகட்டிப் பார்க்கும்போது கொடிகட்டி நிற்கும் நிஜம்.

என்ன இது சங்கரர் அவதரித்தது முதல் முக்தியடைந்தது வரை சொல்லி முடித்துவிட்டாரே? சங்கரர் என்றால் மடங்கள் தானே ஞாபகம் வரும். அவற்றை ப்பற்றி ஒருவரி கூட சொல்லவில்லையே? என நீங்கள் கேட்பது என் செவிகளில் தீர்க்கமாக தெறிக்கிறது.

சங்கரமடங்கள் அனைத்தும் சங்கரருக்குப் பிறகு தானே ஆரம்பிக்கப்பட்டவை. அதை எப்படி சங்கரர் வாழ்க்கை வரலாற்றில் சொல்ல முடியும்.



**17. மடங்கள் எப்படி தோன்றின.மடங்களுக்கான நோக்கம்?**

அப்படியானால்...சங்கரர் சகாப்தம் முடியும் வரை சங்கர மடங்கள் தோன்றவில்லையா?... அந்த மடங்களையெல்லாம் சங்கரரே ஸ்தாபித்தார் என்ற கருத்து உண்மையில்லையா?... அவ்வாறே வைத்துக் கொண்டால் அத்வைத மடங்கள் மலர்ந்த கதை என்ன?...இந்த கேள்விகளுக்கெல்லாம் பதிலை சங்கரருக்குப் பிறகான நூற்றாண்டு காலம்தான் சொல்கிறது.
தான் போதித்த அத்வைத கருத்துக்களை தன் காலத்துக்குப் பின்னாலும், உலகம் முழுவதும் சென்று பரப்புமாறு தன் சிஷ்யர்களுக்கு ஆணையிட்டார் ஆதிசங்கரர்.

புத்தரிடமிருந்து தனக்கான அத்வைதத்தின் சாரத்தை பெற்ற சங்கரர்... வைஷ்ணவர்களால் 'ப்ரசன்ன பௌத்தர்' என்றே அழைக்கப்பட்டார்.

அதாவது புத்தரின் கருத்துக்களை மறைமுகமாக சொன்னவர் என்பதால் இப்பெயரால் அழைக்கப்பட்டார். இதேபோல் ஆதி சங்கரரின் சிஷ்யர்களும்... ப்ரஸன்ன பௌத்தர்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

சங்கரரர் காலத்துக்குப் பிறகு... அத்வைதத்தை பரப்ப முழுக்க முழுக்க முனைந்தார்கள் இந்த ப்ரஸன்ன பௌத்தர்கள். சங்கரரை போலவே ஊர் ஊராக சுற்றினார்கள்.

வாழ்வே பொய் எதையும் நம்பாதே. சந்நியாசம் பெறு...! என சுற்றிச் சுற்றி வலியுறுத்தினார்கள்.

'தனேஷனே... பார்யஷனே... புத்ரேஷனே'... என சொல்லித்தான் அவர்கள் சந்நியாசம் ஏற்றார்கள். அதாவது செல்வ ஆசையை துறந்தேன். மனைவி (பெண்) இச்சையை மறந்தேன். அதன் மூலம் புத்ர விருப்பத்தை மறுத்தேன் என்பது தான் இந்த மூன்று வார்த்தைகளின் முழக்கம். இந்த உறுதி மொழியை எடுத்துக் கொண்டு சங்கரரை பரப்புவதற்காக நடந்த சிஷ்யர்கள் அலைந்து அலைந்து ஓர் முடிவுக்கு வந்தார்கள்.

"நமது குருநாதர் புத்தரிடமிருந்த சர்வம் சூன்யம் என்ற உபதேசத்தைத்தான் கைக்கொண்டு கடவுள் மட்டும் உண்மை மற்ற அனைத்துப் பொய் என சொன்னார்.

அப்படிப்பட்ட சங்கரரின் புத்தோபதேசத்தை பரப்ப... நாமும் புத்தரைப் பின்பற்றியவர்களி யுக்தியை பின்பற்றலாமே"... என ஆலோசித்தனர். என்ன யுக்தி?...

இந்தத் தொடரின் முற்பகுதியில் புத்தரைப் பற்றி எழுதிய அத்தியாயங்களில் நான் ஒன்றை குறிப்பிட்டேனே ஞாபகம் இருக்கிறதா?...

"இப்போது மடம் மடம் என சர்ச்சைகளுக்கிடையே பேசப்படுகின்றதே... இது போன்ற மடங்களுக்கான மூலத்தையும் புத்த விஹார்களிடமிருந்து தான் பெற்றார்கள்" என இத்தொடரில் 4-ஆவது அத்தியாயத்தில் குறிப்பிட்டிருந்தேன்.

அதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இந்த புத்த யுக்தியைதான் சங்கரரின் சிஷ்யர்கள் பின்பற்றலாமா என ஆலோசித்தனர். அதன்படியே ஆதிசங்கரரின் சிஷ்யர்கள்... புத்தர் விஹார்களை முன்னோடியாக வைத்து மடங்களை நிர்மாணிக்க ஆரம்பித்தனர்.

ஆதிசங்கரரின் அத்வைத சிஷ்யர்கள் திசைக்கு கொஞ்சம் பேராய் கொத்துக் கொத்தாய்



நடந்தனர். தெற்கு திசை நோக்கி நடந்தவர்கள் சிருங்கேரியில் ஒரு மடத்தை எழுப்பி... அத்வைத பிரச்சாரத்துக்கு அடிக்கல் நாட்டினார்கள். கிழக்குப் பக்கமாக மாயாவாதத்தை பரப்ப சென்றவர்கள் பூரியில் மடத்தை நிர்மாணித்தார்கள்.

மேற்குப் பக்கமாய் அத்வைதம் பரப்புவதற்காக துவாரகையில் தொடங்கப்பட்டது மடம். வடக்குப் பகுதிக்கும் சென்றனர். பத்ரியில் சங்கரரின் கொள்கைகளை விரிவாக்க ஒரு மடத்தை நிர்மாணித்தனர். இவ்வாறு... சங்கரரின் முக்கியமான சிஷ்யர்களான சுரேஷ்வரன், ஆனந்தகிரி, பத்மநாபர், ஹஸ்தமலர் போன்றவர்கள் உள்ளிட்ட பல சிஷ்யர்கள் இந்த 4 மடங்களையும் நிர்மாணிக்கிறார்கள்.

ஆதிசங்கரரின் உபதேசத்திற்கு இணங்க... இம்மடங்களில் எந்தவிதமான பூஜை புனஸ்காரங்களுக்கும் இடம் கிடையாது. அத்வைதம் காட்டும் ஞான மார்க்கத்தின்படி... விக்ரக வழிபாடு கிடையாது. பூஜைகள் கிடையாது. கோவில்களுக்கும் மடங்களுக்கும் சம்பந்தம் கிடையாது. ஆகமங்கள் கிடையாது. வேதங்கள் சொன்ன கர்மங்கள் கூடாது.

சங்கர கொள்கைகளை பரப்புவதற்கான இம்மடங்களில் சமையல் செய்யக்கூடாது. பிச்சை எடுத்து சாப்பிடும் சந்நியாசிகள் தங்கும் இடத்தில் எதற்காக சமையல்?...

சமையல் இல்லையென்றால்... அதாவது நைவேத்யம் இல்லையென்றால் பிறகு அங்கே பூஜை எப்படி நடக்கும்? பூஜை இல்லையென்றால் அங்கே விக்ரகம் எப்படி இருக்கும்?

ஆங்கிலத்தில் சொல்ல வேண்டுமென்றால்... **“Shankara Muths are only for proclamation of Advydam”** அதாவது சங்கரரின் சிஷ்யர்களால் நிர்மாணிக்கப்பட்ட மடங்களின் முதல் மற்றும் முழுமையான பணி... அத்வைத கொள்கையை பறைசாற்றி... உலகெங்கும் பிரச்சாரம் செய்வதற்காகத்தானே மட்டுமன்றி... வேறெதற்கும் அல்ல...

இப்போது நீங்கள் கேட்கலாம் மடங்களுக்கான நோக்கம் இப்போதும் அதே அளவில் இருக்கிறதா?... சங்கரர் மடங்களை ஸ்தாபிக்கவில்லை என்பதற்கு என்ன ஆதாரம்?

சங்கரர், சங்கர மடங்களை ஸ்தாபித்தாரா?...

ஆதிசங்கரர் போதித்தபடி தான் அவர்தம் சிஷ்யர்களால் சிருஷ்டிக்கப்பட்ட மடங்கள் நடக்கின்றதா? ஆதி சங்கரரே மடங்களை ஸ்தாபிக்கவில்லை என்பதற்கு என்ன ஆதாரம்?

இரண்டாவது கேள்விக்கான பதிலை முதலில் பார்ப்போம்.
வரலாற்றுச் செய்திகளை, வதந்திகளை தூக்கிப் பிடித்துக் கொண்டு அப்படியே அண்ணாந்து பார்த்து ஆமாம் போடுவதல்ல அறிவு. அதிலே சொல்லப்பட்டவற்றின் உள்ளே போய் உட்கார்ந்து சிந்தனை செய்து சரிபார்ப்பதுதான் முறை. அந்த முறையில்... சங்கரர், சங்கர மடங்களை ஸ்தாபித்தாரா?... என்பதை பார்க்கக் கடவோம்.

ஆதிசங்கரர் தனது முப்பத்து இரண்டாவது வயதிலேயே மோட்சமடைந்து விட்டார் என கொண்டு பார்த்தால், சாலை வசதிகள் தெளிவான பூகோள வழிகாட்டுதல்கள் என எவ்வித போக்குவரத்து தகவலமைப்பும் துளிகூட இல்லாத சங்கரரது காலத்தில் அவர் இந்தியா முழுமையும் சுற்றியிருக்க முடியுமா? என்பதே சிந்திக்கத் தகுந்ததாகிறது

.இன்றுகூட நெடுஞ்சாலைகளிலிருந்து கோபித்துக் கொண்டது போல் எத்தனை சிறு வீதிகள் விலகிச் செல்கின்றன. அவற்றின் வழியே எத்தனை கிராமங்கள் கல்லும் மண்ணும்



கலந்த சந்துகளால் கட்டப்பட்டு கிடக்கின்றன. அந்த சின்னச் சின்ன சாலைகளைக் கடந்து அந்த கிராமத்துக்குள் செல்வதற்கு...விஞ்ஞானம் வளர்ந்த இக்காலத்திலேயே நமக்கு எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது? கால விரயம் ஆகிறது?

அப்படியென்றால் விஞ்ஞானம் வளராத- ஞானம் வளர்ந்த காலத்தில் வாழ்ந்த சங்கரர் தன் காலத்தில் எத்தனை வியாக்யானங்கள் பாஷ்யங்கள் செய்திருக்கிறார். இவ்வளவையும் மூலநூல்கள் பார்த்து படித்து உணர்ந்து தெளிந்து பாஷ்யமாக மாற்றி இயற்றுவதற்கு சங்கரருக்கு குறிப்பிட்ட காலம் நிச்சயமாக பிடித்திருக்கும். இந்த பெருங்காரியத்தோடு ஊரெங்கும் சுற்றி கால் நடையாகவே சுற்றி... அத்வைதத்தை பரப்பியும் வந்திருக்கிறார்.

கால தேவனின் குளிர், வெப்ப ஜாலங்களில் பயணித்து... இன்று இந்தியா என்று சொல்கிறோமே இவ்வளவு பெரிய நிலப்பரப்பையும் பரவலாக சுற்றி வந்திருக்க சங்கரருக்கு எவ்வளவு காலம் பிடித்திருக்கும். ஊர் ஊராக போய் உடனே மடம் நிர்மாணிப்பதை சங்கரர் முக்கிய கடமையாக கருதவில்லை. சென்ற உடனேயே அங்கே மடம் ஆரம்பிக்க வேண்டிய அவசியமும் சங்கரருக்கு இருந்திருப்பதாக தெரியவில்லை.

இந்த நிலையில்... தெற்கே சிருங்கேரியிலிருந்து வடக்கே பத்ரிநாத்... கிழக்கே பூரி, மேற்கே துவாரகா என திக்குக்கு ஒன்றாய்... எக்கச்சக்க தொலைவுகளை இவ்வளவு இளவயதில் முக்தியடைந்த சங்கரர் பயணித்து மடங்களை நிர்மாணித்தார் என்பதை காலக்கணக்கு கேள்வி கேட்கிறது.

அடுத்ததாக...சங்கரர் முக்தியடைந்த அந்த புண்ணிய பூமி எங்கே இருக்கிறதென இதுவரை இறுதியாக தெரிய வரவில்லை. ஒருவேளை சங்கரரே இந்த நான்கு மடங்களையும் தன் ஆயுளுக்குள் ஸ்தாபித்ததாக கருதிக் கொள்வோம்.

அப்படியானால்... சங்கரர் முக்திபெற்ற பிறகு. அவர்மேல் கொண்ட பக்தியின் காரணமாக, மரியாதையின் காரணமாக... அவர் போதனையை கேட்டவர்கள் என்பதன் காரணமாக... சிஷ்யர்கள், சங்கரருக்கு அவர் ஸ்தாபித்த ஏதாவது ஒரு மடத்தில் அவருக்கு சமாதி அமைத்திருப்பார்களே அவர் ஸ்தாபித்த மடத்துக்கு இதைவிட வேறென்ன பெருமை கிடைத்திருக்க முடியும்?.

சரி... சங்கரரே என் இறப்பும் ஒரு பொய்தான். அதனால் என்னை நான் நிர்மாணித்த மடங்களில் ஒன்றில் அடக்கம் செய்து மடத்தின் நோக்கத்தை கெடுத்து விடாதீர்கள் என்று சிஷ்யர்களிடம் சொல்லியதாக வைத்துக் கொள்வோம்.

அப்படியிருப்பின் சங்கரர் முக்தி பெற்ற ஸ்தலத்திலேயே அவருக்கு ஜீவசமாதி எழுப்பியிருக்க மாட்டார்களா? அதுவும் தேடலில் காணக் கிடைக்கவில்லையே. இந்த கேள்விக் குறிகளையெல்லாம் ஒரு பக்கம் வையுங்கள்.

இன்னொரு பக்கம் சங்கரர்... சங்கர மடங்களை ஸ்தாபிக்கவில்லை என்பதற்கு தெய்வங்களே சாட்சி சொல்கின்றன.

தெய்வ சாட்சியா? ஆமாம். கடந்த அத்தியாயத்துக்கு, முதல் அத்தியாயத்தில் தான்... மோட்சம் பெறுவதற்கு சங்கரர் அருளிய ஸ்லோகத்தை சொல்லியிருந்தேன். அதாவது... சந்நியாசிகளின் நற்சம்பந்தம் பெற்று அதன்மூலம் உலகியல் பற்றை ஒழித்து... மோகத்தை துறந்து... அதன் அடிப்படையில் சித்தம் சலனம் இன்றி இருந்தாலே மோட்சம் கிடைக்கும் என்று.



இதைச் சொன்ன சங்கரர்... விக்ரஹ வழிபாட்டை வலியுறுத்திய ஆகமக்காரர்களை கண்டித்த கதையையும் சொல்லியிருந்தேன். அதாவது... மனசு சுத்தமானாதான் மோட்சமே தவிர... அப்படி, இப்படி, என விக்ரக வழிபாடுகளால் அல்ல என்பது சங்கரோபதேசம். இப்படிப்பட்ட சங்கரர்... தான் மடங்களை நிர்மாணித்து அதில் ஆஹம ரீதியான வழிபாடுகளை நடத்தியிருப்பாரா...?

[அதிலும் 'அகம் ப்ரம்மம்' என்று சொன்ன சங்கரரின் மடங்களில் நிலவும் வழிபாடுகளைக் கவனியுங்கள்.]

தெற்கே உள்ள சிருங்கேரி மடத்தில் சாரதாதேவி வழிபாடு... கிழக்கே உள்ள பூரி மடத்தில் க்ருஷ்ண உபாசனை, வடக்கேயுள்ள பத்ரிநாத் மடத்தில் சில வழிபாடு... மேற்கே இருக்கிற துவாரகையில் கிருஷ்ண துதி இப்படியாக 4 மடங்களிலும் விக்ரக வழிபாடு... உபாஸனை. அதுவும் வெவ்வேறு தெய்வ வழிபாடு... சங்கரரே உண்மையில் மடங்களை ஸ்தாபித்திருந்தால் இப்படிப்பட்ட முரண்பாடுகளை முடிச்சு போட்டிருப்பாரா?

இதற்கெல்லாம் சிலர் பதில் சொல்லலாம். 'சங்கரர்தான் மடங்களை ஸ்தாபித்தார்.அவரது சிஷ்யர்கள் காலத்தில் இந்த மாற்றங்கள் ஏற்பட்டிருக்கலாம்' என்று. சபாஷ். இந்த பதில்தான் முதல் கேள்விக்கு பதில். அதாவது... சங்கரர் போதித்தபடி தான் மடங்கள் நடக்கின்றதா என்ற கேள்விக்கு இல்லை என்ற பதில் கிடைத்து விட்டதே.

அடுத்ததாக 4 மடங்கள் தானா காஞ்சி மடத்தைப் பற்றி சொல்லவே இல்லையே? இந்த கேள்வி காதில் கேட்கிறது எங்களைப் போன்றவர்களுக்கு. அது கும்பகோண மடம்தான்.-

**19.ஸ்திரீகளை மடத்துக்குள் சேர்க்கக்கூடாது.**

மடாதிபதி என்றால் யார்...? கும்பகோணம் மடமா? காஞ்சி மடமா?

இந்தக் கேள்விக்குள் நுழைவதற்கு முன்பு, 500 வருடங்கள் பின்னால் போய் அதோ அந்த சிருங்கேரி மடத்தின் வாசலில் நில்லுங்களேன். இன்றைய பெங்களூரிலிருந்து சில மணித்துளிகள் வாகனப் பயணம். அங்கே ஷிமோகா இயற்கையின் அழகு அமோகமாய் மேற்குத் தொடர்ச்சி மலைமீது ஏறி இறங்கி தவழ்ந்து கொண்டிருக்கிறது.

இங்கிருந்து சுமார் 100. கிலோமீட்டர் கடந்து... தண்மையான துங்கா நதியின் மத்திய கருநாடகாவிலுள்ள இந்த சிருங்கேரியில் தான் சங்கரத்துவத்தின் தென்பகுதி மடம் எளிமையாக அமைந்திருந்த குடில் போன்ற தோற்றம் கொண்ட இம் மடத்தின் வாசலில் ஆங்காங்கே சில பிராமணர்களின் பேச்சுக்குரல்.

மடத்துக்கு உள்ளே சந்நியாசிகள் அமர்ந்திருக்க... அங்கேயும் சில பிராமணர்கள், பல நாள்கள் வெளியே சுற்றித் திரிந்த அத்வைத சந்யாசிகள் அன்றுதான் மடத்துக்கு வந்திருப்பார்கள் போலும்.

அதனால்தான் இந்த பக்தி பரபரப்பு. இந்த இடத்தில் ஒரு விஷயம் சொல்வது விசேஷம். மடத்தை மையமாக வைத்தபடி அதைச் சுற்றியுள்ள சில பகுதிகளில்தான் சுற்றித் திரிந்து அத்வைதம் பரப்பவேண்டும்.

அதேபோல, அதே பகுதிகளில் வாழ்பவர்கள்தான் அம்மடத்துக்குள் வந்து ஸ்வாமிகளிடம்



தரிசனமோ, தீட்சையோ பெற்றுக் கொள்ளவேண்டும். இவ்வாறு ஒவ்வொரு மடத்துக்கும் ஒரு எல்லை வகுக்கப்பட்டிருந்தது.

அந்த எல்லையை விட்டு மடாதிபதிகளும் வெளியே போகக்கூடாது. அந்த எல்லையைத் தாண்டிய பக்தர்களும் அம்மடத்துக்கு வரக்கூடாது. இந்த இடத்தில் மடாதிபதி என்றால் யார்...? என்ற கேள்வி எழும்.

மடங்களின் அதிபதி மடாதிபதி. அதிபதி என்றால் மடத்துக்குப் பொறுப்பானவர் அதாவது இருக்கும் சந்யாச சிஷ்யர்களிலேயே சந்யாச காலத்தில் மூத்தவர்கள் மடாதிபதி என அழைக்கப்படுவார். அவருக்கு அடுத்தது சந்யாசகாலம் பெற்றவர். அடுத்த மடாதிபதியாக வருவார். இதுதான் மடாதிபதி என்பதன் பொருள்.

மாறாக மடத்துக்கு வருவாய் ஆதாரங்களைத் திரட்டி வைத்துக்கொண்டு நிருவாகம் செய்பவர் அல்ல அதாவது... அந்த காலத்திலெல்லாம் சங்கர மடங்களில் நிறைய சிஷ்யர்கள் இருந்திருக்கிறார்கள்.

சந்யாசம் வாங்கிக்கொண்டு செயல் பட்டிருக்கிறார்கள். அவர்களில் அதிக அளவு சந்யாச காலம் பெற்றவர் மடாதிபதியாகிறார். அதாவது The Senior Saint becomes seer இந்த சின்ன விளக்கத்துக்குப் பிறகு மறுபடியும் சிருங்கேரி மடத்தின் வாசலுக்கு வந்துவிட்டீர்களா?

அப்படி ஒரு மூத்த சந்யாசி மடாதிபதியாக வீற்றிருந்தார் மடத்தில். அவரைப் பார்த்து தரிசித்து வணங்கி மகிழ்ந்துவிட்டு திருப்திபட்டுக் கொண்டவாறே சில பிராமணர்கள் வெளியே வந்தனர்.

அப்போது சில யுவஸ்திரீகள் சங்கர மடாதிபதியைச் சந்தித்து ஆசிர்வாதம் வாங்குவதற்காக உள்ளே நுழைய...“நில்லுங்கள்” என்றது மடத்துக்காரரின் குரல் நீங்களெல்லாம் உள்ளே வரக்கூடாது. ஸ்வாமிகள் உங்களை பார்க்கமாட்டார். நீங்கள் கொண்டு வருபவற்றை ஸ்வீகரிக்க மாட்டார். போய்விடுங்கள். ”“ஏன்...?” கையில் பழங்களை வைத்திருந்த பெண்கள் திரும்பக் கேட்டனர்.

“ஏனென்றால் நீங்களெல்லாம் ஸ்திரீகள். உங்கள் சம்பந்தம் வேண்டாம். உங்களால் உண்டாகும் இன்பங்களெல்லாம் வேண்டாம். புத்ர சுகம்... முதலான லவுகீக வஸ்துகளெல்லாம் வேண்டாம் என்றுதானே சந்யாசம் பெற்றிருக்கிறார். பிறகு எப்படி உங்களை நோக்குவார். பிக்ஷாந்திக்காக வந்தால் அப்போது இப்பழக்கங்களை இடுங்கள். இப்போது திரும்ப நடங்கள்” என நீண்டதொரு விளக்கம் சொல்லி வைத்தா மடத்துக்காரர்.

ஸ்திரீகளை மடத்துக்குள் சேர்க்கக்கூடாது என்பது சங்கர மடங்களில் ஆரம்ப காலங்களில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த கட்டுப்பாட்டு நெறிமுறை. அந்த இளம் பருவத்து ஸ்திரீகள் மடத்தை திரும்பித் திரும்பிப் பார்த்தபடியே நடந்து போனார்கள்.

இதற்குப் பின்னர் அதே மடத்துக்கு இன்னும் சில பிராமணர்கள் கொத்தாக வந்தனர். அதே ரீதியில் அவர்களும் தடுக்கப்பட்டனர். “ஏனப்பா? நாங்கள் என்ன ஸ்திரீகளா? அத்வைதிகள்தான். அனுமதிக்க வேண்டியது தானே...?”“இல்லை உங்களுக்கு அனுமதி இல்லை?”“அனுமதி இல்லையா? ஏன்?”



இக்கேள்விக்கு அம் மடத்துக்காரர்கள் சொன்ன பதிலுக்குப்பின் ஒரு கதை.

மடங்களுக்கென்று ஓர் எல்லை நிருணயிக்கப்பட்டிருந்தது. அதன் அடிப்படையில்தான் பக்தர்களும் மடாதிபதிகளும் செயல் படுகிறார்கள் என குறிப்பிட்டேன் அல்லவா? அந்த வகையில் சிருங்கேரி மடத்துக்குட்பட்ட எல்லையில் இன்றைய தமிழ்நாடும் அடங்கும். தமிழ்ப் பிரதேசத்திலிருந்து பல நூற்றுக்கணக்கான பிராமண குடும்பங்கள் ஷிமோகா மாவட்டத்திலும் மற்ற இடங்களிலும் குடியேறியிருந்தனர். அவர்களில் வேத விற்பன்னர்கள், வித்வான்களுக்கெல்லாம் அரசர்கள் உள்ளிட்ட பல புரவலர்கள் கிராமங்கள், நிலங்கள் என பரிசுகளாகக் கொடுத்தனர்.

அவ்வாறு தேஜஸான வளத்தை அனுபவித்து வந்த தமிழ்ப் பிராமணர்கள்தான் கொத்துக் கொத்தாக போனார்கள். இவர்களின் வளத்தைப் பார்த்தோ மொழியைப் பார்த்தோ சிருங்கேரி மடத்துக்காரர்களில் சிலருக்கு செரிமானம் ஆகவில்லை.

“நீங்கள் தமிழ்நாட்டுப் பூர்வீக பிராமணர்கள்தானே...” “ஆமாம்... அதற்கென்ன?...” “நீங்கள் சிறீமடத்தின் எல்லைக்கு அப்பாற்பட்டவர்கள் அதனால் உங்களுக்கு இங்கே ப்ராப்தம் இல்லை.” என்றனர் மடத்துக்காரர்கள். “தென்தேசம் முழுதுமே சிருங்கேரி மடத்தின் எல்லைக் குட்பட்டதுதானே... நாங்களும் தென்தேசக் காரர்கள்தானே?.”

“பூகோள எல்லை கிடக்கட்டும் ... உங்கள் கோத்ர அனுஷ்டானங்களின்படி, பின்பற்றும் சாஸ்திர சம்பிரதாயங்களின்படி நீங்கள் இம்மடத்துக்கு தோஷக்காரர்கள் இம்மடத்தின் வைதீக எல்லைக்கு வெளியே இருக்கிறீர்கள். அதனால் உங்களுக்கு அனுமதி இல்லை...” கருநாடக மண்ணில் ‘தமிழர்கள்’ முதன்முதலாக அனுமதி மறுக்கப்பட்டது. இந்த சமயத்தில்தானோ என நினைக்கிறேன்.

### 20. காஞ்சி மடமா? கும்பகோண மடமா?

சிருங்கேரி மடத்துக்குள் தமிழ் குடியேற்றங்களை உள்ளே விடாததற்கும்... காஞ்சியா கும்பகோணமா என்பதற்கும் என்ன சம்மந்தம் என்று தானே கேட்கிறீர்கள்.

மறுபடியும் மடத்தின் வாசல். “நீங்கள் எந்த கோத்ரமாக இருந்தாலும்... எந்த வேதக்காரராக இருந்தாலும் (பிராமணர்களில் ரிக் வேதக்காரர்கள், யஜுர், சாம, அதர்வண வேதக்காரர்கள் என ஒவ்வொரு வேதத்தின் வழி வந்தவர்களாக பிரிக்கப் பட்டிருக்கிறார்கள்) இங்கே உங்களுக்கு ஆசி பெறவோ, தீட்சை பெறவோ, தரிசனம் பண்ணவோ பாக்கியம் கிடையாது. அதனால் நீங்கள் இம்மடத்துக்கு வரவேண்டாம். உங்களால் மடத்துக்கு, தோஷமும் உங்களுக்கு பாவமும் நேரவேண்டாம்.”

“நாங்களும் இந்த மடத்துக்கு பாத்யப் பட்டவர்கள்தானே... நாங்கள் உள்ளேவர சாத்தியப்படாதா?” என்றெல்லாம் தமிழ்நாட்டிலிருந்து குடியேறியவர்கள் கேள்வி எழுப்பி செய்த பக்தி போராட்டம், வெற்றியைத் தரவில்லை.

இங்கே இன்னும் ஒரு முக்கியமான விஷயம் சோழ மண்டலத்திலிருந்தும்... திருநெல்வேலி போன்ற தமிழகத்தின் தென் மண்டலத்திலிருந்தும் சிருங்கேரி சுற்று வட்டாரங்களில் சில தலைமுறைகளுக்கு முன்னரே குடியேறியவர்களில் சிலர்... முறையாக தீட்சை பெற்று... சந்யாசம் பெற்று பிரம்மச்சர்யத்தை பிடிப்போடு கவனித்து வந்தார்கள். அவர்களுக்கும் அனுமதி மறுப்பு கண்டு கொதித்துப்போன தமிழ் வழி குடியேற்றத்தினர், என்ன செய்யலாம் என்று விவாதிக்கக் கூடினார்கள்.



“நம்மை அனுமதிக்காத மடத்தை நாம் விடக்கூடாது. எப்படியாவது உள்ளே செல்லவேண்டும். மட காரியங்களில் நாம் பங்கு பெறவேண்டும்” குடுமியை முடிந்து கொண்டே கோபத்தை அவிழ்த்து விட்டார் ஓர் இளைஞர்.

“பக்தியில் பிளவு செய்யப் பார்க்கிறார்கள். இதை சாத்வீகமாய் எதிர்கொண்டு மடத்துக்குள் சஞ்சரிப்போம்” என்றார் இன்னொருத்தர். இப்படி பல கருத்துகள் எதிரொலித்துக் கொண்டிருந்த போது தான்... ஒரே ஒரு குரல் வித்தியாசமாய் வெளிப்பட்டது.

“நாம் சாதாரணப்பட்டவர்கள் அல்ல... வேத ஞானம் விருத்தியானவர்கள். நம்முடைய வித்வான்களுக்காக ராஜாக்களும், நிலக்கிழார்களும் பல கிராமங்களை நமக்கு பாத்யப்படுத்தியிருக்கிறார்கள். இப்படியிருக்க நாமே தனியாக ஒரு மடத்தை ஸ்தாபித்து, இறைத்தொண்டும் ஏழைகளுக்குத் தொண்டும் செய்யலாமே...”

இந்த யோசனையை எல்லோர்க்கும் பிடிக்க... அன்று முதல் சிருங்கேரி மடத்தை பகிஷ்கரித்து அதன் அருகிலேயே சங்கமேஸ்வரம் என்னும் இடத்தில் புதிய மடத்தை ஸ்தாபித்தனர்.

தங்களுக்குள்ளேயே ஒரு மடாதிபதியை நியமித்துக் கொண்டு - சங்கர மடங்களிலிருந்து பெற்ற சாரங்களை அடிப்படையாக வைத்து இம்மடத்தை பரிபாலித்தனர். இம்மடத்துக்கு சோழ மண்டல, தொண்டை மண்டல... என தமிழகத்தின் பல பக்தர்களும் வந்து போக ஆரம்பிக்க... காலதேவன் பயணத்தில் காஞ்சியில் ஓர் முக்கிய சம்பவம் நடந்தது.

கோயில்கள் நகரம், சிற்பக் கலைகளின் சீமாட்டி நகரம் என்றெல்லாம் புகழ் பெற்ற காஞ்சீபுரம் சப்த (ஏழு) முத்தி ஸ்தலங்களிலும் ஒன்றாகக் கருதப்பட்டது.அதாவது... அயோத்யா, மதுரா, மாயாபுரி, காசி, காஞ்சீ, பூரி, துவாரகை எனப்படும் சப்த (ஏழு) ஸ்தலங்களில் தென்பகுதியில் இருக்கும் ஒரே நகரம் காஞ்சிதான்.

அந்த அளவுக்கு இங்கே பக்தி வெள்ளம் அணைகள் இல்லாமல் ஆன்மீகப் பாசனம் செய்து கொண்டிருந்தது. எங்கெங்கு பார்த்தாலும் இறை முழக்கங்கள், சிற்ப சாஸ்திரங்கள் நிறைந்த காஞ்சீபுரத்தில் சங்கமேஸ்வர மடத்தின் ஒரு கிளையை அங்கிருந்து திரும் வந்தவர்கள் நிர்மானித்தனர். கட்டிடம் கிடையாது, பெரிய இடம் கிடையாது, சிறியதொரு குடில், மிக எளிமையான தோற்றம் கொண்டது காஞ்சிமடம். சங்கரரின் உபதேசங்களின் படி அத்வைதத்தை பரப்பவும், அறம் செய்யவும் அமைக்கப்பட்ட இம்மடம் இருக்குமிடம் தெரியாத அளவுக்கு எளிமையாக இருந்தது. மடத்திலிருந்த சந்நியாசிகள் பிக்ஷாந்திக்காகவும்... உபந்யாசங்களுக்காகவும்... கோயில்கள், ஆற்றங்கரைகள் என மக்கள் கூடும் இடங்களுக்குச் சென்றுவர காஞ்சியின் மணம் மெல்ல மெல்ல வீசத் தொடங்கியது.

அப்போது தஞ்சாவூரில் நாயக்கர் ஆட்சித் தொடங்கியிருந்தது. சந்நியாசிகளின் உபதேசங்கள், அவர்களுடைய ஆசீர்வாதம் ஆகியவற்றில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டனர் நாயக்க மன்னர்கள். சொல்லப்போனால் நாயக்கர்களின் ராஜ நாயகர்களாக விளங்கியவர்கள் சந்நியாசிகளும், துறவிகளும்தான். அறமும், பக்தி நெறியும், ஆன்மீகக் கட்டுப்பாடுகளும் ஒருங்கிணைந்து தங்களை வழிநடத்த வேண்டும் என விரும்பிய நாயக்க மன்னர்களின் காதுகள் வரை வந்து நிறைந்தது காஞ்சி மடத்தின் புகழ்.

அப்படிப்பட்ட ஒரு மடம்... ஏன் அதே மடத்தை நம் ராஜ்ஜியத்தில் அமையுங்கள்.எல்லா ஏற்பாடுகளையும் நான் செய்கிறேன். அறமும், பக்தியும் தழைக்கவேண்டும் என நாயக்க



மன்னன் ஆசைப்பட, ஆணையிடப்பட்டது.

உதயமானது கும்பகோண மடம் இன்றையிலிருந்து சுமார் நானூறு - அய்ந்நூறு ஆண்டுகளுக்குமுன் கும்பகோணத்தில் காமகோடி மடம் என்ற பெயரில் ஸ்தாபிக்கப்பட்டது காஞ்சியிலிருந்த அம்மடம். காஞ்சியில் இருந்ததைவிட கும்பகோணத்துக்கு வந்தபின் நாயக்கர்களின் ஆதரவால் பீடுநடை போட்டது புதிய மடம். சொத்துகளை நிறைய தானமாக கொடுத்தனர் மன்னர்கள். அன்றிலிருந்து கடந்த நூற்றாண்டின் முற்பகுதி, சுமார் 60, 70 ஆண்டுகள் முன்புவரை, கும்பகோண காமகோடி மடம்தான் அது.

எனவேதான், கும்பகோண மடம் என்றே பலராலும் அழைக்கப்பட்டது. இவ்வளவு பிற்காலத்தில் தோன்றிய இம்மடத்தையும் ஆதிசங்கரர்தான் நிர்மானித்தார் என சிலர் சொல்லி வருவதை ஒதுக்கிவிட்டு... கும்பகோண மடம் காஞ்சிக்கு மீண்டும் வந்த கதையைப் பார்ப்போமா...?

**21.ஆசைவைப்பவன் பக்தன் கிடையாது.**

நம்மில் 'பக்தர்கள்' எத்தனை பேர் இருப்போம் என்றும் எண்ணிப் பாருங்கள்.

கும்பகோண மடம் காஞ்சிக்கு இடம் பெயர்ந்தது எப்படி என்பதைப் பார்ப்பதற்கு முன்பு... கும்பகோணத்தில் மடத்தின் செயல்பாடுகள் எப்படி இருந்தன என்பதை பொதுவாகப் பார்த்துவிடலாம்.

பெண்களை உள்ளே அனுமதிக்காத, 'எல்லைகளை' கடுமையாக அனுஷ்டித்த சிருங்கேரி மடம் போலவேதான் கும்பகோண மடமும், மடம் அமைந்திருக்கும் தஞ்சாவூர் ஜில்லா தாண்டி திருச்சிராப்பள்ளி ஜில்லாவின் ஒரு பகுதி. ராமநாதபுர சமுத்திரக் கரைப்பகுதி தொண்டை மண்டல பிரதேசம் என எங்கும் மடாதிபதி போகமாட்டார். ஆனால்... இம்மடத்துக்கே உரிய விசேஷமான விஷயம், பக்தர்கள் எங்கிருந்தும் இம்மடத்துக்கு வரலாம். அதாவது,'எல்லை தாண்டிய பக்தியோடு இங்கே வரலாம்.

இந்த இடத்தில் பக்தர்கள் என்றால் யார் என்பதற்கு இலக்கணமாக ஒரு ஸ்லோகம் பார்க்கலாமா?

"பரமாத்மனே யேர் ரக்தஹவிரக்தோ அபரமாத்மநீ"...என்று போகும் வரிகள், பக்தர்கள் என்றால் யார் என்பதைச் சொல்கின்றன. அதாவது, கடவுளைத் தவிர வேறு யார் மீதோ, எந்தப் பொருள் மீதோ ஆசைவைப்பவன் பக்தன் கிடையாது. இன்னும் விளக்கமாக சொல்லவேண்டும் என்றால்... பெண்ணோடு தேக சம்பந்தம் கொள்ளாது, புத்ர இஷ்டம் இல்லாத... லௌதீகத்தில் நாட்டம் வைக்காத மனது கொண்டவன்தான் பக்தன் என்கிறது இலக்கணம்.

இப்போதெல்லாம் சின்னச் சின்ன தெருமுனைக் கோயில்கள் வரை உற்சவங்களுக்கு வெளியிடப்படும் அழைப்பிதழ்களில் எல்லாம் 'பக்த கோடிகளே' என அழைக்கிறார்கள். சிந்தித்துப் பாருங்கள் நம்மில் 'பக்தர்கள்' எத்தனை பேர் இருப்போம் என்றும் எண்ணிப் பாருங்கள். சரி விஷயத்துக்கு வருவோம். இப்படிப்பட்ட இலக்கணங்கள் பெற்றோ, பெறாமலோ பல பக்தர்கள்(!) கும்பகோண மடத்துக்கு வந்து கொண்டிருந்தார்கள். ஆனால், இவர்களில் ஒருவர்கூட சூத்திரர் கிடையாது காரணம்?

"அப்பிராமணர்கள் (பிராமணர் அல்லாதவர்கள்) சந்யாசிகளாக கூடாது..." என்று ஸ்மிருதி



வகுத்த விதி அப்படியென்றால் சந்யாசம் பெற்றவர்களை தரிசிக்கவும் கூடாது என்றது தொடர்விதி.

இப்படிப்பட்ட சீதோஷண நிலையில் மன்னர்களின் ஆதரவோடு ‘சிறப்பாக’ நடந்து கொண்டிருந்தது கும்பகோண மடம். பல மடாதிபதிகளுக்குப் பிறகு கும்பகோண மடாதிபதியானார் சிறீசந்திரசேகர சரஸ்வதி ஸ்வாமிகள் அவருடன் நான் பல விஷயங்களில் நட்பு பாராட்டி ஆத்ம தோழனாக இருந்தேன்.

அப்போத மகாபெரியவர் அத்வைத பிரச்சாரம் பண்ணுவதற்காக பல வெளிஸ்தலங்களுக்கும் போக ஆரம்பித்தார். (எல்லைக் கட்டுப்பாடுகள் தளர ஆரம்பித்துவிட்டன). இதன் விளைவாக பல முக்கியஸ்தர்கள் மகாபெரியவரின் பக்தர்கள் ஆனார்கள்.

சுதந்திரப் போராட்ட காலத்தில் என் ஞாபகப்படி மகாத்மா காந்தியடிகளே கும்பகோணத்துக்கு வந்து மகா பெரியவரை மூன்று முறை சந்தித்திருக்கிறார். இன்னும், பல தேசத் தலைவர்களும் மகா பெரியவரை தரிசித்து ஆசிபெற்று அருள்பிரசாதம் பெற்றுச் சென்றிருக்கிறார்கள். இந்த சமயங்களில்கூட சிருங்கேரி மடத்துக்கும் கும்பகோண மடத்துக்கும் இடையே கருத்து ரீதியான பல மோதல்கள் நடந்து கொண்டிருந்தன.

‘நாங்கள்தான் ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்ட மடக்காரர்கள்’ என அவர்களும்... இல்லை இல்லை நாங்கள்தான் ஆதிசங்கரரால் நிர்மாணிக்கப் பட்டவர்கள்’ என்றும் பல வாதங்கள், பிரதிவாதங்கள் ஒரு பக்கம் நடக்க... இன்னொரு பக்கம் அத்வைத ப்ராபகண்டாவை லட்சியமாகக் கொண்ட காரியங்களும் நடந்து கொண்டிருந்தன.

மடங்களுக்குள் எத்தனை கருத்து வேறுபாடுகள் இருந்தாலும் வர்ணாஸ்ரம தர்மத்தை வளர்த்துக் காப்பதில் சங்கரரரின் சர்வ மடங்களும் சம்மதமாகத்தான் செயல்பட்டு வந்தன என்பதையும் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.

சென்ற நூற்றாண்டின் முற்பகுதி... பல அரசியல் தலைவர்களும் தரிசித்துச் சென்றதாலும், வெளியூர்களுக்குச் சென்று வந்ததாலும் மகா பெரியவரின் ப்ராபகண்டா பெருகியது.

அந்த நேரத்தில் கிழக்குப் பகுதி மடமான பூரி சங்கராச்சாரியாரின் மதராஸ் ராஜதானிக்கு வந்து பல சமய சம்ப்ரதாய நிகழ்ச்சிகளில் பங்குகொண்டு, தன் எல்லையை விஸ்தரிக்க ஆரம்பித்தார். இச்செய்தியை மகாபெரியவரின் கவனத்துக்கு சிஷ்ய கோடிகள் கொண்டு சென்றார்கள்.

“கிழக்கேயிருந்து இங்கே வந்து ப்ராபகண்டா செய்கிறார் பூரி சங்கராச்சாரியார். நாம் அங்கே செல்லும்போது நமக்கு பல எதிர்ப்புகளை அவர்கள் காட்டியிருக்கிறார்கள். நமது மடத்தை அவர்கள் ஒரு மடமாகவே பார்க்காமல் ஜடமாக பார்த்து வந்தார்கள். அவர்கள் இங்கே வருவதா? என சித்தம் நொந்து கேட்டிருக்கிறார்கள். அவர்களை சாந்தப்படுத்தினார் மகா பெரியவர்.

இதெல்லாம் சென்ற நூற்றாண்டின் முற்பாதிப் பகுதியில் நடந்தவை. அப்போது மகா பெரியவர் ‘தேசாந்திரம்’ எனப்படும் வெளியூர் பயணங்கள் மேற்கொள்ளும் போது... ‘கும்பகோணம் மடாதிபதி வருகை...’ என்றே அன்றைய செய்தித்தாள்கள் பிரசுரம் செய்தன. இதற்கெல்லாம் பிறகுதான் நாம் கும்பகோணத்தில் இருப்பதால் பலரும் நம்மை ஒதுக்கப் பார்க்கிறார்கள்.நாம் பிரதான ராஜஸ்தானியர் மதராசுக்கு அருகில், பல வருடங்கள் முன்பு



தாய்மடம் இருந்த காஞ்சிக்கே செல்லலாம்' என முடிவெடுக்கப்பட்டது. கும்பகோண மடம் மறுபடியும்... காஞ்சிக்கு வந்த கதை இப்போது புரிந்துவிட்டதா?

சரி... மகாபெரியவர் சந்திரசேகர சரஸ்வதி சுவாமிகளுடன் தோழமை கொண்டிருந்தேன் என குறிப்பிட்டேன் அல்லவா? அந்தத் தூய்மையான தோழமையில் எனக்கு வாய்க்கப்பெற்ற அனுபவத்தை உங்களோடு, சேர்ந்து மறுபடியும் அனுபவித்துப் பார்க்கட்டுமா?

**22 பெரியாருக்கு பதிலடி .ஆரிய சமாஜம்.**

மகாபெரியவர் சந்திரசேகரேந்திர ஸ்வாமிகளுடன் நான் பெற்றிருந்த பாக்கியத்துக்குரிய தோழமை அனுபவங்களை நினைத்துப் பார்க்கும் முன், அவரோடு எனக்கு நெருக்கத்தை ஏற்படுத்திய என் வாழ்க்கை நிலைமையும் ஞாபகத்தில் வந்து கூத்தாடுகிறது. இதைச் சொல்லிவிட்டுப் பிறகு மகா பெரியவரின் தோழமைக்குள் நுழைந்ததை தொட்டுத் தொடருகிறேன்.

என் குழந்தைப் பருவத்திலே நான் தொட்டு விளையாடிய பொருள்களிலே வேதப்புஸ்தகங்களும் அடங்கும்.என்னுடைய தகப்பனார்...தாததேசிக தாத்தாச்சாரியார் வேதங்களைக் கரைத்துத் தாளித்துத் தளிகை செய்து உண்டவர் என்றுகூட சொல்லலாம். நான் சின்னக் குழந்தையாக இருக்கும் போதே என் சின்னச்சின்ன செவிமடல்களில் அவரது வேதக்குரல் மோதிக் தளும்பும் அப்போது எனக்கு வேதமும் தெரியாது வெங்காயமும் தெரியாது.

நான் வளர்ந்த நாள்களில் சேட்டைகள் செய்து கொண்டிருக்கும் போது சொந்தக்காரர்கள் பலர் அது சொல்லுது... இது சொல்லுது... என பேச வைத்துக் கொண்டிருக்க... என் தந்தையார் என்னைக் கொஞ்சும் போதும் வேத மந்திரங்களைத் தான் சொல்லுவாராம். நான் ரொம்ப அடம் பண்ணினால் கோபிக்கும் போதும், வேத மந்திரங்களிலிருந்து சில கடும் புத்தி சொல்லும் ஸ்லோகங்களைச் சொல்லித்தான் கோபிப்பாராம். இப்படியாக எனக்குத் தெரியாமலேயே... வேதங்கள் என்னோடு விளையாடிக்கொண்டிருந்தன.

கற்கும் வயது வந்ததும் என்னுடைய தகப்பானாரே எனக்கு வேதங்களைக் கற்றுக்கொடுக்க ஆரம்பித்தார். அவரிடம் வேத அத்யயனம் செய்த நான்... அவருடைய மகனாக மட்டுமன்றி மாணவனாகவும் மலர்ந்தேன். வேதத்தின் ஓசைகளை காதால் கேட்டு அதை நாக்கால் புரட்டிப் போடுவது தான் வேத அத்யயனம் என்ற நிலை இருந்த அந்தக் காலத்தில் எனக்கு சின்னஞ்சிறு வயதிலேயே வேதத்தின் பொருள் பகுத்து விளக்கிவந்தார் தகப்பனார்.

பதினைந்து வயது முதலான நாள்களில் வேதங்களைப் பற்றி நானே சிந்திக்க ஆரம்பித்தபோதுதான்... நாட்டில் ஆரிய சமாஜம் என்ற அமைப்பு பிராமணர்களிடையே பரபரப்பாகப் பேசப்பட்டது. அதென்ன ஆரிய சமாஜம் தயானந்த சரஸ்வதி என்பவரால் வடநாட்டில் ஏற்படுத்தப்பட்ட அந்த அமைப்பு பிராமணர்களிடையே ஒரு பீதியை ஏற்படுத்தியதை அன்று இளைஞனான என்னால் உணர முடிந்தது.

அந்த அளவுக்கு தயானந்த சரஸ்வதி என்ன சொன்னார் தெரியுமா...?

“வேதத்தை பிராமணர்கள் தங்களது தொழிற்கருவியாகப் பயன்ப டுத்திவிட்டனர். இதனால் வேதம் பிராமணர்களின் வீட்டு புஸ்தகங்களுக்குள் புதைந்து கிடக்கிறது. தாங்களும் வேதத்தைக் கற்காமல் அடுத்தவர்களும் கற்காமல் வேதத்தை அவர்கள் சிறைப் பிடித்து வைத்துள்ளனர்.



எனவே, வேதத்தை பிராமணர்கள் மட்டுமல்ல எல்லோரும் படிக்கவேண்டும். வேதப்பொருள்களை அனைவரும் உணர வேண்டும். அனைவரும் என்றால் பிராமணர் அல்லாதவர்களும்." என்ற ரீதியில் தயானந்த சரஸ்வதி பரப்பிய கருத்தை அவரது ஆரிய சமாஜத்தினர் இந்தியா முழுவதும் பரப்பி வந்தனர். இங்கே தமிழ் நாட்டுக்கும் வந்து சேர்ந்தது அந்தக் கருத்துரு.

பத்திரிகைகளில் பிரசுரம் செய்யப்பட்டது. சென்னை சவுகார்பேட்டையில் வந்து சமாஜத்தினர் கூட்டங்களும் போட்டனர். இந்த நிலையில்தான் கும்பகோணத்தில் வேதம் படித்துணர்ந்த நானும் என் சனாதன சகாக்களும் பிராமணீயத்தைக் காப்பாற்ற வேண்டும் என முடிவெடுத்தோம். பிராமண சபை, என ஒரு சபையை அமைத்தோம். அந்த நேரத்தில் ஈரோடு ஈ.வெ.ராமசாமி நாயக்கரும் பிராமணர்களை… பிராமணீயத்தைக் கடுமையாக விமர்சித்து வந்தார்.

எனவே நாங்கள் 'பிராமண சபை'யை ஆரம்பித்து சனாதன தர்மத்தைப் பாதுகாக்கு பிரச்சாரங்களில் ஈடுபட்டோம். ஊர், ஊராக கிராமம் கிராமமாக ஜில்லா முழுவதும் செல்வோம். ஒருநாள் உபந்யாசம் செய்தால் சபையிலிருந்து 10 ரூபாய் சம்பளமாகக் கொடுப்பார்கள். ஊரெல்லாம் சுற்றி நாங்கள் ராமசாமி நாயக்கருக்குப் பதிலடி கொடுத்து வந்த வேளையிலே ஒரு சுவராஜ்யம்.

பரவஸ்து ராஜகோபாலாச்சாரி அய்யங்கார் எனும் ஒரு நண்பர்… வேதங்கள் மற்றும் சமஸ்கிருத ஸ்லோகங்களில் சூத்திரர்களைத் தாக்கி, அவமானப்படுத்தும் விதமாக உள்ள ஸ்லோகங்களை யெல்லாம் எடுத்து எழுதி ராமசாமி நாயக்கரின் இயக்கக்காரர்களிடம் கொடுத்து விடுவார். அவர்களுக்கு எங்களை வசவுபாட இது மேலும் வசதியாக இருக்கும்.

இப்படிப்பட்ட நிலையிலும் சனாதன தர்மசபை என மேலும் ஒரு சபை நிறுவப்பட்டது. அந்தக் காலத்தில் காங்கிரசில் தீவிரமாக இருந்த ஜி வெங்கட்ராமய்யர், எம்.கே. வைத்யநாத அய்யர் போன்றவர்கள் எல்லாம் எங்கள் சபைக்கு வரத்தொடங்கினர்.

அப்போது கும்பகோணத்தில் கம்பீரமாக இருந்த சங்கரமடத்தின் சார்பில் 'ஆரிய தர்மம்' என்னும் ஒரு பத்திரிகைகூட வெளிவந்தது. அதிலே என்னுடைய சித்தப்பா அக்னிஹோத்ரம் கோபால தேசிகாச்சாரியார் 'எடிட்டர்' ஆகவும் இருக்கிறார். அதோடு 'ஜாதி தத்வ நிரூபணம்' எனும் ஒரு புத்தகத்தையும் அவர் எழுதினார்.

இப்படியாக நான் சபைகளின் மூலம் வேத தர்மத்தைக் காக்க பிரச்சாரத்திலும், சில பத்திரிகைகளில் எழுதிக் கொண்டும் இருந்த போது… அடிக்கடி சென்னை சென்றும் வருவேன். நான் இப்பிரச்சாரங்களில் மிகத் தீவிரமாக இருக்கும் விஷயத்தை கேள்விப்பட்ட கும்பகோண மடத்தின் சங்காராச்சாரியார் சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் என்னைப் பற்றி சிலரிடம் விசாரித்திருக்கிறார். அவர்களிடமே என்னை அவர் கூப்பிட்டு அனுப்ப… என் இளமைப் பருவத்தின் ஒரு காலைவேளையில் கும்பகோணம் சங்கர மடத்துக்குப் போனேன். தாத்தாச்சாரீ… வாரும்.. உட்காரும்… என அழைத்து தன் அருகிலேயே என்னை உட்கார வைத்தார்.

## **23.** பிராமணர்களை திருத்த வேத சாஸ்திர பரிபாலன சபை

"வாரும் தாத்தாச்சாரியார்… நன்னா இருக்கீரா? உம்மைப் பத்தி சிஷ்யாளெல்லாம் சொன்னா… தர்ம பிரச்சாரம் பண்ணிண்டே இருக்கீராமே… உடம்பை பார்த்துக்



கோங்காணும்....”....என முதன் முதலாய் என்னிடம் வார்த்தைகளை மென்மையாக வீசினார்

சங்கராச்சாரியார்.சனாதனத்துக்கு நம்மளால முடிஞ்சதை பண்ணணுமே ஸ்வாமி... அதான் அங்க இங்கேன்னு அலைஞ்சாலும் விடாம தர்மப் பிரச்சாரத்துலேயே இருக்கேன். என நான் பதில் சொல்ல.... எங்களது சபை சமாச்சாரங்களைப் பற்றி ரொம்ப கேள்விகள் கேட்டார் மகா பெரியவர்.

நானும் சளைக்காமல் போன, வந்த இடங்கள், பிரசங்க அனுபவங்கள் பற்றியெல்லாம் ஏற்ற இறக்கங்களோடு அவரிடம் விளக்கினேன். எனது அனுபவங்களையெல்லாம் சிலாகித்துக் கேட்ட மகா பெரியவர்... ‘ரொம்ப நல்லது பண்ணின்டிருக்கீர்... இன்னோர் நாளைக்கு விஸ்தாரமா பேசுவோம்’ என விடை கொடுத்தார். அவரின் பல வினாக்களுக்கு விடை கொடுத்த நானும் கிளம்பி வந்தேன்.

நான் சங்கராச்சாரியாரைப் பார்த்து விட்டு வந்ததில் எங்கள் சமூகக்காரர் களுக்கிடையிலேயே ஒரு சின்ன சலசலப்பு.

என்ன ஓய்... நாமெல்லாம் சுத்த ஆச்சார்ய புருஷாள்... ஆனா இவர் சங்கராச்சாரியாரை பார்த்துட்டு வந்திருக்காரே... இதெல்லாம் நன்னா இருக்ககோ...” என என் காதுபடவே கும்பகோணத்தில் சில குரல்கள் புறப்பட்டன.இதெல்லாம் நன்னா இருக்கோ?... என பார்ப்பதற்கு முன்... ‘அதென்ன ஆச்சார்ய புருஷாள்?... என உங்களுக்குள் ஒரு கேள்வி முளைக்கும்.

ஒரு சமூகத்தில் அதாகப்பட்டது அந்த கால பிராமண சமூகத்தில் சமய தத்துவங்களை போதிக்க ஞானம், ஒழுக்கம், அனுஷ்டானம் ஆகியவை நிரம்பப் பெற்ற சிந்தன வாதிகளுக்குக்குத் தான் சிறப்புத் தகுதி இருந்தது. அதாவது அவர்களை குரு ஸ்தானத்தில் வைத்திருந்தனர். இதுபோல் அனைத்து சமய தகுதிகளும் வாய்க்கப் பெற்ற குரு ஸ்தானத்தில் உள்ளவர்கள் சிற்சிலர் தான் இருப்பார்கள். அவர்களை தேர்ந்தெடுத்து சகல மரியாதைகளையும் கௌரவத்தையும் கொடுத்து போற்றி வந்திருக்கிறார்கள். அப்படி போற்றப்பட்டவர்கள் தான் ஆச்சார்ய புருஷரின் வம்சா வழியான நானும் ஓர் ஆச்சார்ய புருஷன்.

அதே நேரம்... வெறும் வம்சத்தால் மட்டுமே இப்பெருமையை இப்போது பலர் பெற்றிருக்கிறார்கள். சிலர் தான் அந்த ஞானம் ஒழுக்கம், அனுஷ்டானம் ஆகியவற்றில் இன்னமும் தங்கள் பரம்பரைப் புகழை காப்பாற்றி வருகின்றனர்.

உதாரணத்துக்கு சிறீராமானுஜர் அருளிய பாஷ்யத்தைப் பற்றி உபதேசிக்கவும் எடுத்துரைக்கவும் பாஷ்ய சிம்மாசனாதிபதிகள் என சிலர் அவரது காலத்திலேயே நியமிக்கப்பட்டனர். அவர்களின் பரம்பரையில் பிறந்து வந்ததன் காரணமாகவே இன்றும் சிலர் தங்களை பாஷ்ய சிம்மாசனாதிபதிகள் என அழைத்துக் கொள்கிறார்கள். உண்மையில் ‘பாஷ்யம்’ பற்றி இவர்களுக்கு தெரிந்தது பூஜ்யம் என்றாலும் கூட இவர்கள் தான் இன்று பாஷ்ய சிம்மாசனாதிபதிகள். அதுபோல... ஆச்சார்ய புருஷர் பரம்பரையில் வந்த நான் ஞானம், ஒழுக்கம், அனுஷ்டானம் ஆகியவற்றில் எதையும் நழுவவில்லை. அதனால்தான் ஆச்சார்ய புருஷராகிய நான் மாற்று தத்துவக்காரராகிய மகா பெரியவரை சந்தித்தது பற்றி சிலர் கும்பகோணத்தில் கேள்வி எழுப்பினார்கள்.

அழைத்தவரை சென்று சந்திக்காமல் இருப்பதைவிட பெரிய கௌரவக் குறைச்சல்



இருக்கமுடியுமா?...அதனால் அக்குரல்கள் பற்றி நான் கவலைப்படவில்லை.அந்த முதல் சந்திப்புக்குப் பிறகு மகா பெரியவர் அவ்வப்போது என்னை சந்திப்பார்.

அப்படி ஒரு தடவை சந்தித்தபோது... 'முதலில் நாம் நம்மை சுத்தப்ப படுத்திக்கணும் இல்லையா?... இப்போது பல பிராமணர்கள் வேதத்தை மறந்து பாவம் சுமக்க தொடங்கி விட்டார்கள். வேதத்தை எப்படியாவது காப்பாற்றணும் அதற்கு நாம் ஏதாவது ஸ்தாபனரீதியாக செய்யவேண்டும். ஏதாவது சொல்லுங்களேன்...' என்றார் மகா பெரியவர்.

நான் சொன்னேன் 'நாங்கள் சபை மூலமாகவும், பத்திரிகைகள் முலமாகவும் கூடிய அளவுக்கு பிரச்சாரங்கள் செய்தபடி தான் இருக்கிறோம். டி.கே. ஜெகந்நாதச்சாரியார் (எழுத்தாளர் சாண்டில்யனின் தகப்பனார்) கூட 'பிராமணன்' 'தார்மீக ஹிந்துனு' பத்திரிகைகள் நடத்தறார். நாங்களும் பேசி எழுதிதான் வருகிறோம்' என நான் சொன்னேன். பதிலுக்கு மகா பெரியவர்...'அதெல்லாம் நடக்கட்டும் தாத்தாச்சாரியார்... ஆனாலும் பிராமணர்கள் தங்கள் கடமையை மறந்துட்டா இல்லையா?அதனால அவாளை திருத்துறதை முக்ய நோக்கமா கொண்டு... ஒரு சபை ஆரம்பிக்கலாம்.

அதுக்கு வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபைனு பேர் வைக்கலாம். இதுக்கு நீர்தான் பெரிய உபகாரம் பண்ணனும்.மொதல்ல பிராமணர்கள் வேதத்தை படிச்சு அதை தழைக்க செய்யணும். இந்த சபை நடத்தறத்துக்கான பணத்தை பிராமணாள்ட்ட மட்டும் வாங்கணும். அப்பத்தான்.. நாம செஞ்ச பாவத்தை நாமளே சுத்தப்படுத்த முடியும்" என்றார்.

இஃது உடனே செயல் வடிவமாக்கப்பட்டது.குளித்தலை அண்ணாத்ர அய்யங்காரும், ஜெயராமய்யரும் இந்த சபைக்கு செகரட்டரியானார்கள்.அன்றைய தஞ்சாவூர் ஜில்லா முழுவதும் இவர்கள் பிராமணர்களை சென்று சந்தித்து அவர்களால் முடிந்த காணிக்கை பணத்தை வசூல் செய்ய, அவர்களோடு நானும் புறப்பட்டேன்.

"பிராமணர்கள் திருத்தினால் நல்வழிப்படுத்தினால் அவர்கள் சமூகத்தை நல்வழிப்படுத்துவார்கள்" நம்பிய மகா பெரியவர். இதற்காகத்தான் வேத சாஸ்திர பரிபாலன சபையை ஆரம்பிக்க வைத்தார். அது என்ன பலனை கொடுத்தது?

**24 பெரியாரின் பரபரப்பு பிரசாரம். பிராமணிய பலத்துக்காக யாகம்.**

மகா பெரியவரின் ஆசீர்வாதத்தோடு ஆரம்பிக்கப்பட்ட வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபை. அன்று எங்களைப் போலவே இளமையோடு வீரியமாக விஸ்தாரமாக செயல்பட ஆரம்பித்தது. " வேதங்களை சிரத்தையாக வாசித்து அது சொல்லியபடி அனுஷ்டிக்கும் பிராமணாள் குறைஞ்சிட்டா... அவாளுக்கு வேதிக் ஸ்பிரிட் (Vedic spirit) உண்டாக்கணும்.

நாம் நம்ம தரப்பிலிருந்து செய்ய வேண்டியவற்றை செய்தால்தான்... பகவான் அவர் தரப்பிலிருந்து செய்ய வேண்டியதை செய்வார் இல்லையா?..." என என்னிடம் வினவிய மகா பெரியவர், வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபையின் ஒவ்வொரு கூட்டங்களிலும் யஜுர் வேதத்தில் சொல்லப்பட்டுள்ள ஆவஹந்தி ஹோமத்தை நடத்துமாறும் கேட்டுக் கொண்டார்.

எத்தனையோ ஹோமங்கள் வேதங்களில் சொல்லப்பட்டிருக்க எதற்கு ஆவஹந்தி ஹோமம்?... அப்படியென்றால் என்ன?...ஒவ்வொரு ஹோமமும் ஒவ்வொரு நோக்கத்துக்காகத்தான் அதாவது கோரிக்கைகளை (Demands) முன்னிறுத்திதான் நடத்தப்படுகின்றன. அந்த வகையில் ஆவஹந்தி ஹோமம்.. ப்ரம்ம தேஜஸ்க்காக நடத்தப்படுகிறது.



புனித கலசத்தை நிறுவி... அதன்மேல் வேதங்களை தொகுத்த வ்யாஸரை போற்றி துதி செய்து... அக்னி வளர்த்து மந்த்ரங்களை முழங்குவதுதான் ஆவஹந்தி ஹோமம் இந்த ஹோமத்துக்கு முக்கியமாக பயன்படுத்தப்படுவது வெறுஞ்சாதம். அஃதாவது அன்னத்தை கொடுத்து வ்யாஸரின் வேத அறிவையும் கொடுத்து 'ப்ரம்ம தேஜஸ்'ஸை, கடவுளின் பலத்தை அதிகரிக்கச் செய்யவேண்டும் இந்த ஹோமத்தில் ப்ரம்ம தேஜஸ்' என்பது பிராமணீயத்தின் பலம் என குறிப்பிடப்படும்

ஆவஹந்தி ஹோமத்தின் முக்கிய பலன் பிராமணீயத்தை பலப்படுத்துதல்.

*இப்போது புரிகிறதா இந்த ஹோமத்தை ஏன் பண்ணச் சொன்னார் என்று.*

இந்த ஹோமம் செய்து முடிந்ததும்... வேதத்தைப்பற்றி விளக்கமாக உபன்யாசிக்க வேண்டும். வேதங்களை பிராமணர்கள் கைக்கொண்டு செய்ய வேண்டியவற்றையெல்லாம் அந்த உபன்யாஸங்கள் விளக்கும்.

அப்போது... கும்பகோண மடத்துக்கு ஒன்றும் சொல்லிக் கொள்ளும்படியான செல்வம் இல்லை. நாங்கள் இந்த சபைக்கென எந்த மூலதனத்தையும் முன் கூட்டியே வைத்திருக்கவில்லை. இன்னும் சொல்லப்போனால் எந்த வங்கிக் கணக்கும் இல்லை. சபைக்கென டிரஸ்டியும் இல்லை. இந்த 'வசதி'கள், ஒன்றுகூட இல்லாவிட்டாலும் அப்போது... மகாபெரியவரின் ஆசீர்வாதம். எங்களது உழைப்பு ஆகியவற்றால் வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபை கனஜோராக செயல்பட்டது.

இதன் முக்கியமான விளைவாக... தஞ்சாவூர் ஜில்லாவில் நாங்க போன ஒவ்வொரு கிராமத்திலும்... ஒவ்வொரு பேரூர்களிலும் வேதப் பிரச்சாரம் முழுமையாக நடந்தது. பல பிராமணர்கள் தங்கள் குழந்தைகளை வேத பாடசாலை பக்கம் திருப்பி விட்டனர். ஒரு ஆன்மீக வேத புத்துணர்ச்சி எழும்பியது. இதற்கு சீதாராமையர் பெரும் பொறுப்பு வகித்தார்.

இப்படியாக... இந்த வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபை படிப்படியாக வளர்ச்சி கண்டு வந்ததில் மகா பெரியவருக்கு மெத்த மகிழ்ச்சி. தஞ்சாவூரின் கிராமங்களில் வேத உபன்யாஸமும் பண்ணிக் கொண்டிருந்த எங்களுக்கு பம்பாயிலிருந்து அழைப்பு வந்தது. யார் அழைத்தது? இங்கேயிருந்து போன பிராமணர்கள்தான் செல்வச் செழிப்பில் மிதந்த அவர்கள் வேதத்தை விட்டு ஒதுங்கியிருந்தாலும் வேத ஈடுபாட்டிலிருந்து விலகவில்லை.

அதனால் எங்களை அழைத்தார்கள். பம்பாய் தொடங்கி... அகமதாபாத் டெல்லி, கல்கத்தா, நாக்பூர் என தென்னிந்திய பிராமணர்கள் வசிக்கும் வட இந்திய பகுதிகளுக்கெல்லாம் சென்றோம். ஹோமம் வளர்த்தோம். உபன்யாசம் செய்தோம். அதன்மூலம் வேதம் வளர்த்தோம். அதற்கு கிடைத்த சம்பாவணை அதாவது சன்மானத்தை மறுபடியும் தஞ்சாவூர் ஜில்லாவில் வேதம் வளர்க்க பயன்படுத்தினோம். இப்படி நாங்கள் பரபரப்பான பகவத் சேவையில் ஈடுபட்டுக் கொண்டிருந்த சமயம்.. நாத்திக நாயகரான ராமசாமி நாயக்கரும் பரபரப்பான பிரச்சாரத்தில் இறங்கி சுற்றிக் கொண்டிருந்தார்.

அவருக்கும் தெரிந்த எனக்கும் தெரிந்த ஒருத்தர் கே.கே. நீலமேகம். கும்பகோணம் கடைத்தெருவில் அவரை நான் பார்க்கும்போது.. "ஸ்வாமி... பார்த்தீரா... எங்கள் *ராமசாமி நாயக்கர் உங்களை வாங்கு வாங்கென வாங்கிவிட்டார்*" என்பார். கடைத்தெருவில் நாயக்கர் சொன்ன வாதங்களுக்கு எதிர்வாதங்களை நீலமேகத்திடம் எடுத்துச் சொல்லிவிட்டுத்தான் நான் நகர்வேன்.
இந்நிலையில் பிராமணர்களை மட்டுமன்றி.. தெய்வங்களின் சொரூபங்களை



கிண்டலடிக்கும் அபச்சாரத்தை அப்போது நாத்திகக்காரர்கள் கூடுதல் உத்தியாக கையிலெடுத்தனர். இது மகா பெரியவரையும் உறுத்தியது. வழக்கம்போல என்னிடம் ஆலோசித்தார். தாத்தாச்சாரீ... நாம மொதல்ல நடத்தின வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபை ரொம்ப நன்னா போறது.

அதுக்கு அடுத்ததா.. அவாள்லாம் சொரூபங்களை கிண்டலடிக்கிறதால... நாம் பூஜா தத்வத்தையும்... சிற்ப சாஸ்திரத்தையும் பத்தி எல்லாருக்கும் புரிய வச்சாகணும்... என்ன சொல்றீர்.." என்றார். "வாஸ்தவம்தான் ஸ்வாமீ... இந்த 'அவேர்னஸ்' (Awareness) பிராமணாளுக்கும் வரணும்... மத்தவாளுக்கும் வரணும்..." என்றேன். எங்களின் சிலநாள் ஆலோசனைகளுக்குப் பிறகு... உதித்தது ஆகம சிற்ப சதஸ்.

தமிழில் பேசினால் தீட்டு கழிய ஸ்நானம் பண்ணணும்.

அதென்ன ஆஹம சிற்ப சதஸ்? ஆஹமம் என்றால் என்ன என்பது பற்றி முந்தைய அத்யாயங்களிலேயே உங்களுக்கு நான் விளக்கியிருக்கிறேன்.

விக்ரகங்களை... தெய்வ சிற்பங்களை எப்படியெல்லாம் வழிபடவேண்டும் என்கிற சூத்திரங்களைச் சொல்லிக் கொடுப்பதுதான் ஆஹமம் என்றும், இதனை ஆதிசங்கரர் எதிர்த்ததையும் கூட பார்த்தோம். ஆஹமத்தின் அர்த்தம் விளங்கிவிட்டது.

சிற்பம்? இன்றும் நாம் கோயில்களுக்குச் செல்கையில் கர்ப்ப கிரகத்தில் பார்க்கும் தெய்வச் சிற்பங்கள் தமிழ்நாட்டுக்கே உரிய தனிச் சிறப்பு. நீங்கள் வட இந்தியக் கோயில்களுக்கு சென்றால்கூட நமது தென்னிந்திய சிற்பங்களைப்போல நுட்பமும், அழகும் ஒரு சேர வாய்த்திருத்தல் கடினம். பழங்கால மன்னர்கள் ஆங்காங்கே பிரம்மாண்டமாக கட்டி வைத்த கோயில்களின் கோபுரங்களில்கூட சிறு சிறு சிற்பங்கள் தமிழர்களின் நுண்கலைத் திறத்தை எடுத்துக் காட்டும்.

இப்படிப்பட்ட சிற்பங்களையும், அவைகளை வழிபட வகுக்கப்பட்ட ஆஹமங்களையும் பற்றிய பெருமித உணர்வை எழுப்பிட வேண்டும் என்ற நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டது தான் ஆஹம சிற்ப சதஸ்.இந்த அமைப்பை நடத்த வேண்டியதற்கான பொறுப்பை காங்கிரஸ் முக்கியஸ்தரான சா. கணேசனிடம் ஒப்படைத்தார் மகாபெரியவர்.

ஆஹம சிற்ப சதஸ் அமைப்பு என்ன பண்ணியது? கோயில் கோயிலாக போவோம். ஆலய தத்துவ பிரச்சாரம். பூஜாதத்துவ பிரச்சாரம். இவை இரண்டும்தான் நோக்கம். கோயிலின் பிரகாரத்தில் தான் கூட்டம் நடக்கும். கோபுரத்தின் அழகு. பிரகாரங்களின் அழகு. மதில் சுவர்களின் அழகு. கோயிலின் படிகளில் படிந்த அழகு, கர்ப்பக்ரஹத்தில் தெய்வச் சிற்பத்தின் தேக அழகு இவற்றைப் பற்றியெல்லாம் விளக்குவோம்.

இந்த இடத்தில் ரிக் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் செய்தியை மகாபெரியவர் என்னிடம் சொன்னது போல நான் உங்களிடமும் சொல்கிறேன்.

"ஆதிகாலத்தில்... அதாவது சிருஷ்டிக்கு முன்னால் உலகம் உருவம் இல்லாமல் இருந்தது. அப்போது பகவான் ஒரு தச்சனாக வந்தான். உலகத்துக்கு உருவமும், வடிவமும் கொடுத்தான். பகவான் உலகத்தை 'விஸ்வகர்மா'வாக வந்து வடிவமைத்ததுபோல... அவருக்கு நாம் சிற்பங்களைச் சமைத்து வைத்தோம்.



அதனால் சிற்பங்கள் எல்லாம் 'விஸ்வகர்மா'வாக வந்து பகவான் செய்தவற்றின் தொடர்ச்சிதான். எனவே, நாம் சிற்பங்களை பகவானாக பார்த்து ஆராதிக்கவேண்டும்" என ஆஹம சிற்ப சதஸ்-ஸின் கூட்டங்களில் பேசினோம்.

நாங்கள் மட்டுமல்லாது ஆஹமங்கள் அறிந்த பட்டாச் சார்யார்களாகவும் அழைத்து வந்த அக்கூட்டங்களில் பேச வைத்தோம். இந்த இறை இயக்கம் 15 ஆண்டுகளாய் வெற்றிகரமாக நடந்தது. சனாதன தர்மசபையில் ஆரம்பித்து... வேத தர்ம சாஸ்திர பரிபாலன சபை, ஆஹம சிற்ப சதஸ் என வெற்றிகரமாக நடந்து கொண்டிருந்தாலும் மகாபெரியவருக்கு ஒரு மனக்குறை.

திருவிடைமருதூர் சத்திரத்தில் நானும், அவரும் ஒரு நாள் தங்கியிருந்தபோது அந்த மனக்குறையை என்னிடம் எடுத்து வைத்தார். "ஏன் தாத்தாச்சாரியாரே - நாம எவ்வளவோ சபை நடத்துகிறோம். உபன்யாஸம் பண்றோம். ஹோமம் பண்றோம்.

ஆனா... பிராமணாளுக்கும், மத்தவாளுக்கும் இதனால நெருக்கம் உண்டாகியிருக்கோ? இல்லியே... அப்படியானா நம்மகிட்டதான் ஏதோ தப்பு இருக்கு. இவா ரெண்டு பேரையும் சேர்த்து வைக்கிறா மாதிரி ஏதாவது பண்ணணுமே..." என்ற மகாபெரியவரிடம் நான் கொஞ்சம் ஆலோசனைகளைத் தந்தேன்.

நீண்ட நேரமாக பேசிக் கொண்டிருந்தோம். இவா ரெண்டு பேரையும் இணைக்க கடவுள்தான் பாலம். கடவுளை மட்டும் வச்சிண்டு சேர்க்கறது எப்படி?

ரெண்டு பேருக்கும் தெரியக்கூடிய பாஷையை எடுத்துப்போம். தமிழ்தானே!

ஆழ்வார்களோ பாசுரம், நாயன்மார்களோட பாடல்கள். இன்னும் சுலபமா திருப்பாவை, திருவெம்பாவை இது ரெண்டையும் வச்சே சேர்க்க முடியாதோ?"

திருவிடைமருதூர் சத்திரத்தில் மகாபெரியவர் என்னிடம் இந்த திட்டத்தை தெரிவித்தபோது அவருடைய கண்களில் ஞானத்தோடு நம்பிக்கையும் மின்னியது. "இதப்பாரும் எல்லா கோயில்கள்லயும் திருப்பாவை திருவெம்பாவை உற்சவம் நடத்துவோம். இதுக்கு முன்னாடி நாம நடத்தின உபன்யாஸங்களைவிட இது இன்னும் நன்னா போய்ச் சேரும். ஏன்னா - நாம எடுத்துண்டதும் தமிழ். சொல்றதும் தமிழ் என்ன சொல்றீர்?" என மகாபெரியவர் கேட்டபோது, சகல ஜனங்கள்மீதும் அவருக்கு இருக்கும் ஈர்ப்பு எனக்குப் புலப்பட்டது.

நாங்கள் இப்படி பெரிய திட்டம்பற்றி சத்தமாக சிரித்துப் பேசிக் கொண்டிருந்தபோதும்... சத்திரத்தில் இருந்த மேலும் சிலருக்கு அது புரியவில்லை. ஏன் அவர்கள் செவிடா என்று கேட்காதீர்கள். அவர்கள் செவிடல்ல. நாங்கள் பேசிக்கொள்வது சுத்த சமஸ்கிருதத்தில்தான்.
அதனால் பல பிராமணர்களுக்குக்கூட நாங்கள் பேசிக் கொள்வது புரியாது. "ரகசியமா பேசுகிறீர்கள்? தமிழில் பேசினால் என்ன?" என்று மகாபெரியவர் நகர்ந்த பிறகு சிலர் என்னிடம் கேள்வி கேட்டார்கள். அதற்கு நான் சொன்னேன்.

"உனக்கு சமஸ்கிருதம் தெரியவில்லை என்றால் கற்றுக்கொள். உனக்காக அவர் ஒரு நாளைக்கு எத்தனை தடவை ஸ்நானம் பண்ணுவார்? புரிந்து நடந்துகொள்..." என்றேன். அப்போதும் அந்த கேள்வியைக் கேட்டவர்களுக்குப் புரியவில்லை. உங்களுக்கு...?



**26.** தமிழ் பேசினால் எனக்கு தீட்டு.

“நீங்களும் மகா பெரியவரும் ஏன் சமஸ்கிருத்திலேயே பேசிக்கொள்கிறீர்கள்? இதை நாங்கள் கேள்வி கேட்டால்... ஸ்நானத்தை முடிச்சுப் போடுகிறீர்கள். பேசிக் கொண்டிருப்பதற்கும் குளிப்பதற்கும் என்ன சம்பந்தம்...?”...மறுபடியும் புரியாமல் என்னிடம் கேட்டார்கள்.
சத்திரத்தில் இருந்த சிலர் அன்று நான் அவர்களுக்கு பதில் சொல்லிவிட்டேன். அந்த பதிலை உங்களுக்குச் சொல்வதற்கு முன்... மகாபெரியவர் திருப்பாவை ...திருவெம்பாவை என்னும் கருத்துருவை தேர்ந்தெடுத்ததை அவர் மூலம் கேட்ட வழியில் சொல்கிறேன்.

தமிழ் மாதங்களில் ஆடி மாதம் முதல் மார்கழி வரையிலான ஆறு மாதங்கள் தட்சணாயணம் என அழைக்கப்பெறும். அதாவது சூரியன் தென்திசை வழியாக பயணிக்கும் காலம் என இதற்குப் பொருள். (அயணம் என்றால் வழி என இங்கே அர்த்தப்படும்.!

தை முதல் ஆனி வரையிலான மீதமுள்ள ஆறு மாதங்களும் உத்தராயணம் என அழைக்கப்பெறும். அதாவது சூரியன் வடதிசை வழியே பயணிக்கும் என பொருள். தட்சணாயண காலத்தில் பகல்பொழுது சுருக்கமாகவும், ராப்பொழுது அதிகமாகவும் இருக்கும். உத்தராயண காலத்தில் ராப்பொழுது சுருங்கி பகல் பொழுது விஸ்தாரமாகும்.

இப்படிப்பட்ட தட்சணாயண காலத்தின் விடிகாலைகளில் தமிழச்சிகள் தங்களது தோழிமார்களை கூட்டிக்கொண்டு நதிக்கரைக்குச் செல்வார்கள். குளிர் கூத்தாடும் வைகறைப் பொழுதில் நதியோர சிலுசிலு நடுக்கத்தையெல்லாம் தங்களது மென்மையான பாதங்களால் மிதித்து ஈர வஸ்திரங்களோடு ‘பாவை தெய்வம்’ பேரை சொல்லி நீராடி தொழுதார்கள் தமிழச்சிகள்.

இப்பண்பாடு நீட்சியாகி... தங்களுக்கு சிறந்த கணவன் வேண்டி கடவுளை தொழுவதற்காக விடிகாலைகளில் நீராடினார்கள். இந்த நிலையிலிருந்தும் வளர்ந்து... ‘நமது கோரிக்கைகளை விடிகாலையில் கடவுளிடம் சொல்கிறோம்.

நாம் எழுந்திருந்தது போல் கடவுளும் எழுந்திருப்பாரோ அவரை முதலில் எழுப்ப வேண்டும்’ என எண்ணிய பக்தைகள் முதலில் கடவுளை எழுப்புகிறார்கள்.
கடவுளை மனித வழியில் அணுகுவது என்ற கலாச்சாரம் இது. பிற்பாடு... கடவுளையே கணவனாக அடையவேண்டும் என்ற ‘நாயக’ நாயகி பாவம்’ வரை வளர்ந்தது இந்தப் பண்பாடு. தொடர்ந்து அதிகாலைகளில் நீராடி... கடவுளை எழுப்புவதற்காக, கட்டுப்பாட்டோடு இதில் கலந்துகொள்ள வேண்டும் என்பதற்காக நோன்பு, அதாவது விரதமாக இதை அனுஷ்டிக்க ஆரம்பித்தனர். பாவையர் மட்டுமே பங்கு பெற்ற பக்தி நோன்பு, ஆதலால் ‘பாவை நோன்பு’ ஆயிற்று.

இத்தகைய தூய தமிழ் கலாச்சாரத்தைத் தான் சைவத்தின் மாணிக்கவாசகப் பெருமானும், வைணவத்தின் ஆண்டாள் சுடர்க்கொடியும் பக்தி இலக்கியங்களில் பயன்படுத்தினார்கள். திருப்பாவை, திருவெம்பாவை என தமிழ்ரசம் சொட்டும் பக்திப்பாக்கள் செய்தார்கள். இத்தகைய தமிழ் பாக்களைத்தான் சைவ-வைஷ்ணவ ஒற்றுமைக்கும், பிராமணர்-பிராமணர் அல்லாதார் நெருக்கத்துக்கும் பயன்படுத்த நினைத்தார் மகாபெரியவர்.

தமிழை, தமிழ்ப்பண்பாட்டு அடிப்படையிலான இலக்கியத்தை ‘பாவைமாநாடு’ என்ற பெயரில் உற்சவமாக தொடங்கி வைத்தார் மகா பெரியவர். அப்படிப்பட்டவர் ஏன்



என்னோடு உரையாடும்போது சமஸ்கிருதத்தில் உரையாடுகிறார் என்ற சந்தேகம் உங்களுக்குள் உயிர்த்திருக்கும்.
இதே சந்தேகத்தைத்தான் அன்று திருவிடை மருதூர் சத்திரத்தில் உள்ளவர்களும் கேட்டார்கள். நான் சொன்ன 'ஸ்நான' பதில் அவர்களுக்கு புரியவில்லை.அவர்கள் புரிந்து கொள்ளும்படியாக... மடத்தில் நடந்த ஓர் உண்மை சம்பவத்தையே அவர்களிடம் அறிவித்தேன்.

அது...கும்பகோண மடம்... சூரியன் வானத்தின் மேற்குப் பக்கமாய் மேய்ந்து கொண்டிருந்தான். மஞ்சள் நிறக் கதிர்கள் பூமியின் மீது பொலபொலவென உதிர்கின்றன. ஒருவிதமான ஊதல் காற்று கும்பகோணத்தையே குளிப்பாட்டிக் கொண்டிருந்தது.

அந்த நாளுக்கான மாலைநேர பூஜைகளுக்காக மடம் தயாராகிக் கொண்டிருந்தது. மகாபெரியவர் ஸ்நானம் முடித்திருந்தார். மதியம் சிறிது நேரம் தூங்கினால் கூட 'மடி' அதாவது ஆச்சாரம் போய்விடும். மறுபடியும் குளிக்கவேண்டும். அந்த வகையில் குளித்து முடித்துவிட்டிருந்தார் மகாபெரியவர்.

அந்த நேரமாய் பார்த்து ஒரு சில பக்தர்கள் அவரைப் பார்த்தே தீருவது, அருளாசி பெற்றே தீருவது என்ற முடிவில் காத்திருந்தார்கள். அவர்களில்... நாட்டுக்கோட்டை செட்டிநாட்டிலிருந்து வந்திருந்த அருணாசலம் என்ற பக்தர்... மகாபெரியவரை பார்த்து அவரிடம் அருள்மொழிகள் வாங்கிவிட்டுத்தான் போவது என்ற உறுதியோடு இருந்தார்.

அந்த நேரம் நானும் மடத்தில் இருந்ததால், அருணாசலத்திடம் சொன்னேன்... 'இதோ பாரப்பா, இன்றைக்கு நீ மகாபெரியவரை பார்க்க முடியாது. நாளை வாயேன்..' என்றேன். 'இல்லை சாமி இப்பவே அவரை பார்க்கணும்' என்றார் பக்தர்.எங்கள் பேச்சுச் சத்தத்தை கேட்ட சிலர்... விஷயத்தை மகாபெரியவரிடம் சொல்ல அவர் என்னை உள்ளே அழைத்தார். போனேன். கேட்டார் சொன்னேன்.

'இதோ பாரும் தாத்தாச்சாரி... அவரை பாக்கறதுக்கு நேக்கு ஒண்ணுமில்லை. பாத்தால் ஏதாவது கேப்பார். பதிலுக்கு நான் தமிழ் பேசவேண்டிவரும். நோக்குதான் தெரியுமே. தமிழ் பேசினால் எனக்கு தீட்டு. மறுபடியும் ஸ்நானம் பண்ணணும். பூஜைக்கு நேரமாயிடுத்துல்யோ... அதனால் நான் மௌனம் அனுஷ்டிக்கிறேன்னு சொல்லி அனுப்ச்சிடுங்கோ..." என என்னோடு சமஸ்கிருத சம்பாஷணை நிகழ்த்தினார் மகாபெரியவர்.

நானும் வெளியே வந்தேன். நான் சொன்னதுதானப்பா... சுவாமிகள் மௌனத்தில் இருக்கார். நாளைக்கு வாயேன்.. என்றேன். 'அப்படியா? தெய்வத்தை இன்னிக்கே பார்க்கலாம்னு எதிர்பார்ப்போட வந்தேன். சரி... நாளைவரை ஏதும் சத்திரத்தில் தங்கிவிட்டு வர்றேன்' என தாய்மொழியாம் தமிழில்' மகாபெரியவரை தெய்வமாக மதித்து ஆதங்கப்பட்டுக் கொண்டே சென்றார் அருணாசலம்.

**27. சூத்ரனோ, பஞ்சமனோ கோயிலுக்குள் பாதம் வைத்தால் விக்ரகம் வெறுங்கல்லாகி விடும். ??**

கோயில்களுக்குள் சூத்ரனோ, பஞ்சமனோ ஒரு அடியெடுத்து வைத்தால்கூட அனுஷ்டானங்கள் கறைபட்டு விக்ரகங்களில் இருந்து பகவான் 'பட்'டென ஓடிப் போய்விடுவார்.

அதனால்... சூத்ரனோ, பஞ்சமனோ கோயிலுக்குள் பாதம் எடுத்து வைத்தால்... விக்ரகம்



வெறுங்கல்லாகி விடும்.

ஒருவேளை அப்படி நுழைந்து விட்டால்...?அதற்குப் பரிகாரம் தான் சம்ப்ரோக்ஷணம். அதாவது கும்பாபிஷேகம். அதாவது குடமுழுக்கு... என பரிகாரமும் பண்ணி வைத்திருக்கிறது ஆகமம்.
செட்டிநாட்டு அருணாசலம் போன்ற பல பக்தர்கள் மகாபெரியவரை பார்க்க வேண்டுமென்று கெட்டியான பிடிவாதத்தோடு வந்திருக்கிறார்கள், போயிருக்கிறார்கள். இது ஒரு பக்கம் இருக்க, பாவை மாநாடு சீரும் சிறப்புமாக நடந்து கொண்டிருந்தது.

"சைவத்துக்கும், வைணவத்துக்கும் சண்டை வராம இருக்க ***ஒரு காமன் கடவுளை (Common God) கண்டுபிடிக்கணும்*** தாத்தாச்சாரீ" என என்னிடம் விருப்பத்தை சொன்ன மகாபெரியவர் பிராமணர் - பிராமணர் அல்லாதவர், சைவ - வைணவ துவேஷங்களை தீர்த்து வைக்க பாவை மாநாடு பெரிதும் உதவும் என நம்பினார். அவருடைய நம்பிக்கை வீண் போகவில்லை.

அரசியல் கட்சி மாநாடு அளவுக்கு பாவை மாநாடு பெரும் கூட்டத்தைக் கூட்டியது. மார்கழி மாதம் முழுதும்... தமிழ்நாடு பூராவும் இந்த பக்தி மாநாட்டை கூட்டி திருப்பாவை - திருவெம்பாவை உபன்யாசங்களை நிகழ்த்தினோம். ஒவ்வொரு ஊரிலும் பொது இடங்களைத் தேர்ந்தெடுத்து பந்தல் போடுவோம்.

பின்... விசேச மேடை தயார் செய்து அதில் ஆண்டாள் விக்ரகத்தையும், மாணிக்கவாசகர் விக்ரகத்தையும் நிறுவி வைப்போம். இதன் பக்கத்தில் நின்றுகொண்டு திருப்பாவை - திருவெம்பாவை ஆகியவற்றில் கூறப்பட்டுள்ள பகவத் விஷயங்களை பேசுவோம்.

எந்தெந்த ஊரில் மாநாடு போடுகிறோமோ அந்தந்த ஊரில் உள்ள கோயில்களில் இருந்து விக்ரகங்களை எடுத்துக்கொள்வோம். கிடைக்காத பட்சத்தில் படங்களை பயன்படுத்துவோம்.

கோயில்கள் அரசின் அறநிலையத்துறைக்கு உட்பட்டவையாக இருக்கும்போது... நீங்கள் எப்படி சிலைகளை எடுத்துக்கொண்டு வர முடியும்? ஆண்டாளையும், மாணிக்கவாசகரையும் கையைப் பிடித்து கூட்டி வருகிற காரியமா இது?

என நீங்கள் சந்தேகக் கேள்விகளை பிரசவிக்கலாம்.பாவை மாநாடு - வெற்றிகரமாக - விரும்பும் விதமாக அமைவதை உணர்ந்த அன்றைய அறநிலையத்துறை கமிஷனர் சாரங்கபாணி முதலியார்... இம்மாநாட்டை அரசே நடத்தும் என்று சொல்லி விட்டார்.

மகாபெரியவரின் ஆசீர்வாதத்துடன் தொடங்கப்பட்ட இம்மாநாடு... அரசாங்கமே எடுத்து நடத்துகிற அளவுக்கு பிரம்மாண்டம் பெற்றது. இதனால் மகாபெரியவருக்கு அரசியல் முக்கியத்துவமும் ஏற்பட்டுவிட்டது.

பாவை மாநாடா? நல்ல விஷயங்கள் நிறைய சொல்லுவார்களே... என பிராமணர்கள் பிராமணர் அல்லாத மற்ற சாதியினர் என அனைவரும் கூடினார்கள்.

நல்ல விஷயங்கள் நடக்கும்போது தடங்கல்கள் வராமல் இருக்குமோ? தமிழ்நாடு முழுவதும் மதுரை, திருநெல்வேலி, தஞ்சாவூர் என எல்லா ஜில்லாக்களிலும் மார்கழி மாதம் முழுவதும் நாங்கள் நடத்திய இம்மாநாட்டுக்காக...மன்னார்குடி வந்தோம். பொது வீதியில் மேடை போட்டோம்.



இந்தப் பக்கம் ஆண்டாள்... பக்கத்தில் மாணிக்கவாசகர். வைணவமும், சைவமும் பக்கத்துப் பக்கத்தில் இருப்பதை பார்த்து சிலரது கண்கள் அனல் கக்கின. அந்த அனலை அடக்க முடியாமல் என்னிடம் ஓடோடி வந்தார் மன்னார்குடி ராஜகோபால் தீட்சிதர்.

'ஸ்வாமி... என்ன இப்படி பண்ணிட்டேள்?' என மொட்டையாக ஆரம்பித்தார். 'எதை எப்படி பண்ணிட்டேன். விவரமா சொல்லுங்கோ...' என நான் பதில் உரைத்தேன்.

'தெரிஞ்சுண்டே கேக்கறீளே...?' மறுபடியும் மொட்டை மொழிகளையே பேசினார் ராஜகோபால் தீட்சிதர். "தீட்சிதரே... என்ன சொல்றீர்? கேக்கறது எனக்கு முன்கூட்டியே தெரியறதுக்கு நான் என்ன பகவானா?" மறுபடியும் உரைத்தேன். தீட்சிதர் அப்போது தான் தன் உள்ளக் கிடக்கையை உடைத்தார்.

"பகவானுக்கே அபச்சாரம் பண்றேளே.... ஆண்டாள் யாரு? மாணிக்க வாசகர் யாரு? ஆண்டாள் பிராட்டி பக்கத்துல அந்த சூத்திரன் மாணிக்க வாசகர் இருக்கலாமா? இது பகவானுக்கே பாவம் பண்ற மாதிரி ஆகாதா? அந்த சங்கராச்சாரி சொன்னா நீர் கேக்கணுமா?"

மன்னார்குடி வாழ் சில கண்களின் கனலை தான் தீட்சிதர் தன் வாயால் ஊதி எரிய வைக்கிறார் என்று எனக்குப் புரிந்தது. இதுக்குத்தான் இவ்ளோ நேரம் இழுத்தேளா? இந்த பாவை மாநாடு நான் நடத்தறதோ... சங்கராச்சாரியார் நடத்தறதோ இல்ல... இப்படி இது அரசாங்கம் நடத்துறா... அவாள்ட்ட போய் கேளும்..." என எதார்த்த பதிலை எடுத்து வைத்தேன். தீட்டு பார்த்த தீட்சிதர் அதற்குமேல் என்னிடம் எதுவும் பேசாமல் கிளம்பினார்.

மன்னார்குடியில் இந்த தீட்சிதர் என்றால்... இதுபோல் பல ஊர்களிலும் பலர் பாவை மாநாட்டை தடுத்துப் பார்த்தனர். முடியவில்லை. பல வருஷங்கள் நடந்தது மாநாடு...சைவ - வைணவ - பிராமணர் - பிராமணரல்லாதவர் ஒற்றுமையை வலியுறுத்தி இப்படி மாநாடுகள் ஒரு பக்கம் நடந்து கொண்டிருந்தாலும், சூத்திரர்கள், பஞ்சமர்கள் ஆகியோர் கோயில் இருக்கும் திசையைகூட திரும்பிப் பார்க்க முடியாத அளவுக்கு ஜாதி துவேஷம் ஜ்வாலை விட்டு எரிந்த காலம் அது.

ஆகமம் போட்ட ஆணைக்கு இணங்கதான் இந்த அனுமதி மறுப்பு என்னும் ஆச்சாரத்தை பிராமணர்கள் பின்பற்றி வந்தனர்.ஆகமம் எப்படி என்னதான் ஆணையிட்டது என் கேட்கிறீர்களா? "த்ருஷ்ட்வா தேவஹா பலாயதே..."என்று போகிற பாஞ்சாத்ர ஆகம ஸ்லோகம் என்ன உத்தரவிடுகிறது என்றால்...பல ஆச்சார அனுஷ்டானங்களின் அடிப்படையில் பகவானை விக்ரகங்களில் இருத்தி வைத்திருக்கிறோம்.

இந்தப் புனிதமான கோயில்களுக்குள் சூத்ரனோ, பஞ்சமனோ ஒரு அடியெ வைத்தால்கூட அனுஷ்டானங்கள் கறைபட்டு விடும். அதனால்... அந்த விக்ரகங்களில் இருந்து பகவான் 'பட்'டென ஓடிப் போய்விடுவார்.

அதனால்... சூத்ரனோ, பஞ்சமனோ கோயிலுக்குள் பாதம் எடுத்து வைத்தால்... விக்ரகம் வெறுங்கல்லாகி விடும். பகவான் அதில் க்ஷணம் கூட தங்கமாட்டார். எனவே, அவர்களை கோயிலுக்குள் விடாதே... என்கிறது ஆஹமம்.



**27.** சூத்ரனோ**,** பஞ்சமனோ கோயிலுக்குள் பாதம் வைத்தால் விக்ரகம் வெறுங்கல்லாகி விடும்**. ??**

பகுதி 27. *கோயில்களுக்குள் சூத்ரனோ, பஞ்சமனோ ஒரு அடியெடுத்து வைத்தால்கூட அனுஷ்டானங்கள் கறைபட்டு விக்ரகங்களில் இருந்து பகவான் 'பட்'டென ஓடிப் போய்விடுவார்.*

*அதனால்... சூத்ரனோ, பஞ்சமனோ கோயிலுக்குள் பாதம் எடுத்து வைத்தால்... விக்ரகம் வெறுங்கல்லாகி விடும்.*

*ஒருவேளை அப்படி நுழைந்து விட்டால்...?அதற்குப் பரிகாரம் தான் சம்ப்ரோக்ஷணம். அதாவது கும்பாபிஷேகம். அதாவது குடமுழுக்கு... என பரிகாரமும் பண்ணி வைத்திருக்கிறது ஆகமம்.*

செட்டிநாட்டு அருணாசலம் போன்ற பல பக்தர்கள் மகாபெரியவரை பார்க்க வேண்டுமென்று கெட்டியான பிடிவாதத்தோடு வந்திருக்கிறார்கள், போயிருக்கிறார்கள். இது ஒரு பக்கம் இருக்க, பாவை மாநாடு சீரும் சிறப்புமாக நடந்து கொண்டிருந்தது.

"சைவத்துக்கும், வைணவத்துக்கும் சண்டை வராம இருக்க ***ஒரு காமன் கடவுளை (Common God) கண்டுபிடிக்கணும்*** தாத்தாச்சாரீ" என என்னிடம் விருப்பத்தை சொன்ன மகாபெரியவர் பிராமணர் - பிராமணர் அல்லாதவர், சைவ - வைணவ துவேஷங்களை தீர்த்து வைக்க பாவை மாநாடு பெரிதும் உதவும் என நம்பினார். அவருடைய நம்பிக்கை வீண் போகவில்லை.

அரசியல் கட்சி மாநாடு அளவுக்கு பாவை மாநாடு பெரும் கூட்டத்தைக் கூட்டியது. மார்கழி மாதம் முழுதும்... தமிழ்நாடு பூராவும் இந்த பக்தி மாநாட்டை கூட்டி திருப்பாவை - திருவெம்பாவை உபன்யாசங்களை நிகழ்த்தினோம். ஒவ்வொரு ஊரிலும் பொது இடங்களைத் தேர்ந்தெடுத்து பந்தல் போடுவோம்.

பின்... விசேச மேடை தயார் செய்து அதில் ஆண்டாள் விக்ரகத்தையும், மாணிக்கவாசகர் விக்ரகத்தையும் நிறுவி வைப்போம். இதன் பக்கத்தில் நின்றுகொண்டு திருப்பாவை - திருவெம்பாவை ஆகியவற்றில் கூறப்பட்டுள்ள பகவத் விஷயங்களை பேசுவோம்.

எந்தெந்த ஊரில் மாநாடு போடுகிறோமோ அந்தந்த ஊரில் உள்ள கோயில்களில் இருந்து விக்ரகங்களை எடுத்துக்கொள்வோம். கிடைக்காத பட்சத்தில் படங்களை பயன் படுத்துவோம். கோயில்கள் அரசின் அறநிலையத்துறைக்கு உட்பட்டவையாக இருக்கும்போது... நீங்கள் எப்படி சிலைகளை எடுத்துக்கொண்டு வர முடியும்? ஆண்டாளையும், மாணிக்கவாசகரையும் கையைப் பிடித்து கூட்டி வருகிற காரியமா இது? என நீங்கள் சந்தேகக் கேள்விகளை பிரசவிக்கலாம்.பாவை மாநாடு - வெற்றிகரமாக - விரும்பும் விதமாக அமைவதை உணர்ந்த அன்றைய அறநிலையத்துறை கமிஷனர் சாரங்கபாணி முதலியார்... இம்மாநாட்டை அரசே நடத்தும் என்று சொல்லி விட்டார்.

மகாபெரியவரின் ஆசீர்வாதத்துடன் தொடங்கப்பட்ட இம்மாநாடு... அரசாங்கமே எடுத்து நடத்துகிற அளவுக்கு பிரம்மாண்டம் பெற்றது. இதனால் மகாபெரியவருக்கு அரசியல் முக்கியத்துவமும் ஏற்பட்டுவிட்டது. பாவை மாநாடா? நல்ல விஷயங்கள் நிறைய சொல்லுவார்களே... என பிராமணர்கள் பிராமணர் அல்லாத மற்ற சாதியினர் என அனைவரும் கூடினார்கள்.

நல்ல விஷயங்கள் நடக்கும்போது தடங்கல்கள் வராமல் இருக்குமோ? தமிழ்நாடு முழுவதும்



மதுரை, திருநெல்வேலி, தஞ்சாவூர் என எல்லா ஜில்லாக்களிலும் மார்கழி மாதம் முழுவதும் நாங்கள் நடத்திய இம்மாநாட்டுக்காக...மன்னார்குடி வந்தோம். பொது வீதியில் மேடை போட்டோம்.

இந்தப் பக்கம் ஆண்டாள்... பக்கத்தில் மாணிக்கவாசகர். வைணவமும், சைவமும் பக்கத்துப் பக்கத்தில் இருப்பதை பார்த்து சிலரது கண்கள் அனல் கக்கின. அந்த அனலை அடக்க முடியாமல் என்னிடம் ஓடோடி வந்தார் மன்னார்குடி ராஜகோபால் தீட்சிதர்.

'ஸ்வாமி... என்ன இப்படி பண்ணிட்டேள்?' என மொட்டையாக ஆரம்பித்தார். 'எதை எப்படி பண்ணிட்டேன். விவரமா சொல்லுங்கோ...' என நான் பதில் உரைத்தேன்.

'தெரிஞ்சுண்டே கேக்கறீளே...?' மறுபடியும் மொட்டை மொழிகளையே பேசினார் ராஜகோபால் தீட்சிதர். "தீட்சிதரே... என்ன சொல்றீர்? நீர் கேக்கறது எனக்கு முன்கூட்டியே தெரியறதுக்கு நான் என்ன பகவானா?" மறுபடியும் உரைத்தேன். தீட்சிதர் அப்போது தான் தன் உள்ளக் கிடக்கையை உடைத்தார்.

"பகவானுக்கே அபச்சாரம் பண்றேளே.... ஆண்டாள் யாரு? மாணிக்க வாசகர் யாரு? ஆண்டாள் பிராட்டி பக்கத்துல அந்த சூத்திரன் மாணிக்க வாசகர் இருக்கலாமா? இது பகவானுக்கே பாவம் பண்ற மாதிரி ஆகாதா? அந்த சங்கராச்சாரி சொன்னா நீர் கேக்கணுமா?" மன்னார்குடி வாழ் சில கண்களின் கனலை தான் தீட்சிதர் தன் வாயால் ஊதி எரிய வைக்கிறார் என்று எனக்குப் புரிந்தது. இதுக்குத்தான் இவ்ளோ நேரம் இழுத்தேளா? இந்த பாவை மாநாடு நான் நடத்தறதோ... சங்கராச்சாரியார் நடத்தறதோ இல்ல... இப்படி இது அரசாங்கம் நடத்துறா... அவாள்ட்ட போய் கேளும்..." என எதார்த்த பதிலை எடுத்து வைத்தேன். தீட்டு பார்த்த தீட்சிதர் அதற்குமேல் என்னிடம் எதுவும் பேசாமல் கிளம்பினார்.

மன்னார்குடியில் இந்த தீட்சிதர் என்றால்... இதுபோல் பல ஊர்களிலும் பலர் பாவை மாநாட்டை தடுத்துப் பார்த்தனர். முடியவில்லை. பல வருஷங்கள் நடந்தது மாநாடு...சைவ - வைணவ - பிராமணர் - பிராமணரல்லாதவர் ஒற்றுமையை வலியுறுத்தி இப்படி மாநாடுகள் ஒரு பக்கம் நடந்து கொண்டிருந்தாலும், சூத்திரர்கள், பஞ்சமர்கள் ஆகியோர் கோயில் இருக்கும் திசையைகூட திரும்பிப் பார்க்க முடியாத அளவுக்கு ஜாதி துவேஷம் ஜ்வாலை விட்டு எரிந்த காலம் அது.

ஆகமம் போட்ட ஆணைக்கு இணங்கதான் இந்த அனுமதி மறுப்பு என்னும் ஆச்சாரத்தை பிராமணர்கள் பின்பற்றி வந்தனர்.ஆகமம் எப்படி என்னதான் ஆணையிட்டது என்று கேட்கிறீர்களா?

"த்ருஷ்ட்வா தேவஹா பலாயதே..."என்று போகிற பாஞ்சாத்ர ஆகம ஸ்லோகம் என்ன உத்தரவிடுகிறது என்றால்...பல ஆச்சார அனுஷ்டானங்களின் அடிப்படையில் பகவானை விக்ரகங்களில் இருத்தி வைத்திருக்கிறோம்.

இந்தப் புனிதமான கோயில்களுக்குள் சூத்ரனோ, பஞ்சமனோ ஒரு அடியெடுத்து வைத்தால்கூட அனுஷ்டானங்கள் கறைபட்டு விடும். அதனால்... அந்த விக்ரகங்களில் இருந்து பகவான் 'பட்'டென ஓடிப் போய்விடுவார்.

அதனால்... சூத்ரனோ, பஞ்சமனோ கோயிலுக்குள் பாதம் எடுத்து வைத்தால்... விக்ரகம்



வெறுங்கல்லாகி விடும். பகவான் அதில் க்ஷணம் கூட தங்கமாட்டார். எனவே, அவர்களை கோயிலுக்குள் விடாதே... என்கிறது ஆஹமம்.

**29. ஸ்திரிகளுக்கு எதுக்கு சொத்து? ஓடிப்போயீடுவா...!!!**

ஸ்திரிகளுக்கு சொத்துல பங்கு கொடுத்தா என்ன ஆகும் தெரியுமா? ஸ்தீரிகளுக்கு பாத்யமோ சம்பாத்யமோ இருக்கக்கூடாதுன்னு மநு ஸ்மிருதி சொல்லியிருக்கு. ஆம்படையானுக்கு அடிமையாக இருக்கறதுதான் ஸ்த்ரீக்கு அழகு.அவர்களுக்குத்தான் கல்யாணம் பண்ணும்போது சீதனம் கொடுக்கிறாளே...அப்புறம் எதுக்கு சொத்து? இருக்கு என்ற தைரியத்துல இஷ்டப்பட்டவாகூட ஓடத்தான் போறா. லோகமே அழியப்போறது ஓய்.

ஆலயப்பிரவேச போராட்டத்தை தடுத்த பெண்கள் தாக்கப்பட்டதற்காக அழுத சங்கராச்சாரியார்... பெண்களுக்கு சொத்துரிமை கொடுக்கப்பட்டதற்கு சந்தோஷப்பட்டிருக்க வேண்டும். **ஆனால்?..**

டில்லியில் நேரு 'ஹிந்து கோடு பில்'லில் பெண்களுக்கும் சொத்தில் பங்கு கொடுக்கவேண்டும் என கொண்டுவந்த செய்தி பேப்பர்களில் வந்தது. அப்போது மடம் காஞ்சிக்கு வந்துவிட்டது. கும்பகோணத்தில் இருந்த எனக்கு ஒரு தந்தி பறந்து வந்தது' உடனே காஞ்சிபுரத்துக்கு புறப்பட்டு வரவும்' (-) இதுதான் தந்தி வாசகம் கொடுத்திருந்தவர் சங்கராச்சாரியார்.

நான் புறப்பட்டு காஞ்சி போன சமயம் காஞ்சிபுரத்துக்கு அருகே உள்ள எசையனூர் என்னும் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெண் தனது குடும்பச் சொத்துகளை எல்லாம் மடத்துக்கு கொடுப்பதாகச் சொல்லியிருந்தார். அவற்றை பார்வையிட எசையனூருக்கு சென்றிருந்தார் மகாபெரியவர்.

என்ன ஸ்வாமி' என்றேன் நான் அன்றைய பேப்பரை எடுத்து என்னிடத்தில் காட்டிய மகா பெரியவர். லோகமே அழியப்போறது ஓய்... அழியப் போறது... என படபடப்பாகப் பேசினார்.

"இதப்பார்த்தீரா... ஸ்திரிகளுக்கு சொத்துல பாத்யம் கொடுக்கப் போறாளாம். அவாளுக்கு சொத்துல பங்கு கொடுத்தா என்ன ஆகும் தெரியுமா? இஷ்டப்பட்டவா கூட ஸ்த்ரீகள் ஓடிப்போயீடுவா... அபாண்டமா அபச்சாரமா போயிடும் ' என அந்த பேப்பரை தட்டியபடி வியாக்யானம் தந்து கொண்டிருந்தார் மகா பெரியவர்.

நான் சிரித்தபடியே பதில் சொன்னேன். எனக்கு நல்லதுதான் ஸ்வாமி.. என் மாமனாருக்கு நிறைய சொத்துகள் இருக்கு ஒருவேளை என் ஆத்துக்காரிக்கு பங்கு வந்தால் எனக்கும் நல்லதுதான். இந்த பதிலைக் கேட்டதும்...அசட்டுத்தனமாக பேசாதீர். இந்த சட்டம் ஸ்திரி தர்மமே பாழாயிடும்

ஸ்தீரிகளுக்கு பாத்யமோ சம்பாத்யமோ இருக்கக்கூடாதுன்னு மநு ஸ்மிருதி சொல்லியிருக்கு. ஆம்படையானுக்கு அடிமையாக இருக்கறதுதான் ஸ்த்ரீக்கு அழகு. அங்கே தேவி உபாசனை செய்யும் ஒரு அம்மா இருந்தார். அவரிடம் போய் இதுபோல சர்க்கார் ஒரு சட்டம் கொண்டு வந்திருக்கு பெண்களுக்கும் சொத்து பாத்யம் உண்டுனு சர்க்கார் கொண்டு வந்திருக்கிற சட்டத்தை பெண்கள் மூலமாகவே எதிர்க்கணும்னு மகாபெரியவர் சங்கராச்சாரியார் சொல்லியிருக்கார் அதனால இங்க ஸ்த்ரீகள் கூட்டம்போட வந்திருக்கோம். கூட்டத்துக்கு நீங்களும் ஸ்த்ரீகளை கூட்டி வரணும்' என்றேன்.



அந்த தேவி உபாசகரோ மறுத்துவிட்டார். பிறகு ஒவ்வொரு வீடாய் போய் பெண்களை பெரிய முயற்சிக்குப் பிறகு கூட்டத்துக்கு அழைத்து வந்து...எங்களுக்கு சொத்துரிமை வேண்டாம். மனு ஸ்மிருதியில் உள்ளபடி ஸ்த்ரீ தர்மம் பாதுகாக்கப்படணும் சர்க்கார் இந்த பில்லை வாபஸ் வாங்கணும்' என பெண்களை வைத்தே தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது. இந்த தீர்மானத்தை நகல் எடுத்து டில்லி சர்க்காருக்கு அனுப்பி வைத்தோம் இது மட்டுமா? திருநெல்வேலி ஜில்லாவிலிருந்து தமிழ்நாட்டின் பல ஊர்களில் இப்படி ஸ்த்ரீகள் கூட்டம் சங்கராச்சாரியாரின் உத்தரவுப்படி நடந்தது என்ன ஏதென்றும் தெரியாமலேயே பல பெண்கள் இதில் கலந்து கொண்டு எங்களுக்கு சொத்து பாத்யம் வேண்டாம் என சொன்னார்கள்.

கும்பகோணத்தில் நடந்த ஸ்த்ரீகள் கூட்டத்துக்கு ஹைகோர்ட் ஜட்ஜ் திருவேங்கடாச்சாரியாரின் தங்கை செண்பகத்தம்மாளை அழைத்து வந்தோம். அவரோடு இன்னும் பல ஸ்த்ரீகளும் வந்து எங்களுக்கு சொத்து பாத்யம் வேண்டாம் என தீர்மானம் போட்டார்கள். கிட்டதட்ட ஒருமாதம் தமிழ்நாடு பூராவும் 100 ஸ்த்ரீ கூட்டங்கள் நடந்தன. தீர்மான நகல்கள் தவிர சர்க்கார் இந்த பில்லை வாபஸ் வாங்கணும் என்று டில்லிக்கு பல தந்திகளும் அனுப்பிக் கொண்டே இருந்தோம்.இந்த கூட்டங்கள் நடந்து கொண்டிருக்கும் போதே சங்கராச்சாரியார் மறுபடியும் என்னை அழைத்தார். இங்கேயே கூட்டம் நடத்திக் கொண்டிருந்தால் சரிபட்டு வராது போலிருக்கிறது. டில்லிக்கே போய் எதிர்ப்பை தெரிவிக்கணும் அதுக்கு நீர் டில்லி கிளம்பணும்" என்றார்.

Constituion Club- இல் ஸ்த்ரீகளுக்கும் சொத்து பாத்யம் பில் பாஸ்பண்ணலாமா, வேண்டாமா என நடந்த ஆலோசனைக் கூட்டத்துக்கு பெரிய அளவில் பெண்களை திரட்டிக் கொண்டு போனோம்.அங்கே, பெண்களுக்கு சொத்துரிமை வேண்டும் என வலியுறுத்த கமலாதேவி சட்டோபாத்யாய தலைமையில் பல பெண்கள் கூடியிருந்தனர்.

நாங்கள் கூட்டிப்போயிருந்த பெண்கள், நேரு அங்கே வருவதற்கு முன்னரே கலைந்து விட்டதால் பயன் இல்லாமல் போய்விட்டது. சங்கராச்சாரியாரின் எதிர்ப்பால் கொஞ்சநாள்கள் பில்லை தள்ளிவைத்த நேரு... பிறகு பெண்களுக்கு சொத்தில் பங்கு உண்டு என்ற பில்லை பாஸ் பண்ணிவிட்டார். 'டில்லிவரை சென்று போராடியும் ஸ்த்ரீ தர்மத்தை பாதுகாக்க முடியவில்லையே...' என வருத்தப்பட்ட சங்கராச்சாரியார் பில் பாஸான செய்தியை பேப்பரில் படித்துக் கொண்டே மறுபடியும் என்னிடம் சொன்னார். அவர்களுக்குத்தான் கல்யாணம் பண்ணும்போது சீதனம் கொடுக்கிறாளே...அப்புறம் எதுக்கு சொத்து? இருக்கு என்ற தைரியத்துல இஷ்டப்பட்டவாகூட ஓடத்தான் போறா...

**30 ஹோமம் வளர்ப்பது போல் துவேஷம் வளர்த்துக் கொண்டு...**

மடங்களை ஒரே குட்டையில் திரட்டும் முயற்சி. ஹோமம் வளர்ப்பது போல் துவேஷம் வளர்த்துக் கொண்டு இருந்தன.

வர்ணாஸ்ரம தர்மத்துக்குட்பட்டு ஜனங்களை ஒற்றுமையாக (!) வாழவைக்கவேண்டும் என மடாதிபதி என்ற முறையில் பல காரியங்களை செய்தார் சங்கராச்சாரியார்.ஆனால், மக்களை ஒற்றுமைப்படுத்த வேண்டிய மடங்களே சண்டையிட்டுக் கொண்டு... ஹோமம் வளர்ப்பது போல் துவேஷம் வளர்த்துக் கொண்டு இருந்தன.

வைஷ்ணவ மடங்கள்-சைவ மடங்கள், பிராமண மடங்கள், பிராமணர் அல்லாத மடங்கள் இப்படி மடங்களுக்கிடையே முட்டல், மோதல்கள் மூண்டபடி இருந்தன. 'கும்பகோண' மடத்துக்கும், சிருங்கேரி மடத்துக்கும் சகோதரச்சண்டை என்று ஆன்மீக



வட்டாரத்திலேயே அழுத்தமான பெயர் உண்டு.

இங்கே இப்படியென்றால்... நம்மூர் மடங்களை ஏதோ புழுபூச்சி போல பார்த்து வந்தார்கள் வட இந்திய மடக்காரர்கள். காரணம், தமிழ்நாடு திராவிடதேசம், சூத்திரதேசம் என்பது அவர்கள் வாதம். இன்னொன்றாக, கும்பகோண மடம் உண்மையான சங்கரமடம் இல்லை என வட இந்தியாவிலுள்ள சங்கர மடாதிபதிகளே சொல்லிக் கொண்டிருந்தார்கள். மகாபெரியவர் சங்கராச்சாரியார் யாத்திரை மேற்கொண்ட போது... அவர் காசிக்குள்ளேயே வரக்கூடாது' என்றெல்லாம் அவர்கள் தடை உத்தரவுகளை பிறப்பித்தனர்.

சங்கராச்சாரியாரை ஜெகத்குரு என அழைக்கக்கூடாது. அவர் ஜெகத்குரு அல்ல. இன்னும் சொல்லப் போனால் அவர் குருவே அல்ல. பின் எப்படி “ஜெகத்குரு” ஆகமுடியும்?- என்றெல்லாம் வட இந்தியாவிலிருந்து எதிர்ப்புக் குரல்கள் ஏகத்துக்கும் கிளம்பின.

இதுபற்றி சங்கராச்சாரியாரிடமே கேட்டபோது அவர் சொன்னார்.‘என்னே ஜெகத்குரு என்று நான் சொல்லிக் கொண்டதில்லை. சொல்லுமாறும் நான் கேட்டுக் கொண்டதில்லை. “ஜெகத்குரு” என்றால் என்ன அர்த்தம் தெரியுமோ? ஜெகம்தான் எனக்கு குரு அதாவது லோகம்தான், உலகம்தான் எனக்கு குரு நான் குருவல்ல என பதில் சொன்னார் மகாபெரியவர்.

இப்படியாக உள்ளூரிலிருந்து, தேச அளவில் மடங்கள் முஷ்டி உயர்த்திக் கொண்டு நின்ற சூழலில்.. எந்த மடாதிபதிக்கும் வராத யோசனை மகாபெரியவருக்கு வந்தது. “மடங்கள் மடத்தனமா சண்டை போட்டுண்டிருக்கா தேசத்துல இருக்குற எல்லா மடங்களும் ஒரே அமைப்பா வரணும். அது மூலமா... மதவிஷயங்களை, மனு தர்மத்தை இன்னும் வேகமா கொண்டு போகணும்” என என்னிடம் கூறிய மகாபெரியவர்...நான் அடிக்கடி வட இந்தியாவில் யாகங்கள் மதப் பிரச்சாரக் கூட்டங்கள் என சென்று வந்து கொண்டிருந்ததால்.. வட இந்திய மடங்களிடம் பேசி மடங்களுக்கான அமைப்பை உருவாக்க என்னை அங்கே போகச் சொன்னார்.

அயோத்தியில் எக்கச்சக்க மடங்கள் இருக்கின்றன. இதுதவிர பூரி, துவாரகா, பத்ரி போன்ற சங்கரமடங்களுடனும் பேசினோம், சின்னச்சின்ன மடங்களைகூட விட்டுவைக்காமல் ஒருங்கிணைக்கும் முயற்சியில் இறங்கினோம் ‘Association of Mutts’ என்ற பெயரில் மடங்களுக்கான அமைப்பை சங்கராச்சாரியார் உருவாக்க முனைவதையும், இதற்கான காரியங்கள் நடைபெற்று வருவதையும் கேள்விப்பட்ட குல்ஸாரிலால் நந்தா குறுக்கே வந்தார்.

குல்ஸாரிலால் நந்தா.. வட இந்திய காங்கிரஸ் தலைவரான இவர், நேருஜி காலமான போதும், லால்பகதூர் சாஸ்திரிஜி காலமானபோதும் இரண்டு முறை பாரதத்தி இடைக்கால பிரதம மந்திரியாக இருந்தவர் அவ்வளவு பெரியவரான அவர்... ஒரு தென்னிந்திய மடாதிபதி இந்திய அளவில் மடங்களை இணைக்க முயற்சிப்பதை விரும்பவில்லை.

நாங்கள் வக்கீல்களை வைத்து... மடங்களை ஒரு குடையில் ஒன்று சேர்க்க சங்கராச்சாரியார் தலைமையில் செயல்பட்டுக் கொண்டிருப்பதை தனது அரசியல் செல்வாக்கால் முடக்கிப்போட்டு விட்டார் குல்ஸாரிலால் நந்தா. எந்த மடத்துக்காரர்களும் எங்கள் முயற்சிக்கு ஒத்துழைக்கவில்லை காரணம்... ஒரு தென்னிந்திய மடாதிபதி இந்திய அளவில் மடங்களை ஒருங்கிணைத்து விடுவாரோ என்ற பயத்தில்... நந்தா வட இந்தியாவி உள்ள மடங்களை எல்லாம் ஒருங்கிணைத்து ‘சாது சம்மேளன்’ என்றொரு அமைப்பை



தோற்றுவித்து விட்டார்.சங்கராச்சாரியாருக்கு இத்தகவலை தெரிவித்தேன்.

“பாரதம் பூரா ஒண்ணு சேக்கலாம்னு நெனைச்சேன். அவா பேதம் பாக்குறாளா? சரி... நாம இங்கேயே இருக்கிற மடங்களை சேத்து அஸோஸியேஷன் ஆரம்பிச்சிடலாம்” என சொல்லிவிட தமிழ்நாடு, கருநாடகா, ஆந்திரா போன்ற தென்னிந்திய மடங்களை ஒரே குட்டையில் திரட்டும் முயற்சியை தொடங்கினோம்.

உடுப்பியில் 8 மடங்கள் இருந்தன. அவர்களிடம் பேசிப் பார்தோம். சங்கராச்சாரியார் எடுக்கும் எந்த முயற்சிக்கும், செய்யும் எந்த காரியத்துக்கும் சிருங்கேரி மடத்துக்காரர்கள் எதிராகத்தானே இருப்பார்கள். அவர்களைத் தவிர பல மடங்களை சேர்க்கும் முயற்சியில் இறங்கினோம். ஆனால்... வருகிறேன் வருகிறேன் என்று சொல்லிவிட்டு அவர்களும் பின்வாங்கிவிட்டார்கள்.

கடைசியில்... தமிழ்நாட்டு அளவில் இருக்கிற அத்தனை மடங்களையும் சேர்ப்பது என்ற முடிவுக்கு வந்தார். சங்கராச்சாரியார் மதுரை ஆதீனம், திருவாடுதுறை, திருப்பனந்தாள், தர்மபுரம் என மற்ற மடத்தின் ஆதீனங்களோடு பேசி அனைவரையும் ஒன்று சேர்த்தார்.

இந்திய அளவில் முயற்சித்து... அது குல்ஸாரிலால் நந்தாவால் தடுக்கப்பட்டுவிட்டது. சரி... தென்னிந்திய அளவில் மடங்களை இணைக்கலாம் என்ற மகாபெரியவரின் முயற்சி சிருங்கேரி கைங்கரியத்தாலோ என்னமோ முடங்கிப் போனது.
கடைசியில் தமிழ்நாட்டில் உள்ள மடங்களை மட்டும் இணைத்த சங்கராச்சாரியார் Association of Mutts ஆரம்பித்தார். நான், செகரட்டரி ஆனேன். சங்கராச்சாரியார் மடங்களுக்கான அமைப்பின் தலைவரானார்.

**31. ‘சூத்ராள் பூஜை பண்றது, அதுவும் தமிழ்ல பண்றது ஏத்துக்க முடியாது..**
கோவில் கட்டியவனுக்கு சாமியை சுமக்க, பூசை செய்ய தடையா? ‘சூத்ராள் பூஜை பண்றது, அதுவும் தமிழ்ல பண்றது ஏத்துக்க முடியாது...’

யோசித்தோம். மடங்களுக்கான அமைப்பை கஷ்டப்பட்டு உண்டாக்கிய பிறகு அதை முறைப்படி பதிவு (Register) செய்தோம். இதற்காக அனைத்து மடங்களின் பிரதிநிதிகளும் கையெழுத்து போட்டார்கள். நான் செகரட்டரி என்ற முறையிலும், பரகால மடத்தின் பிரதநிதி என்ற முறையிலும் கையொப்பம் போட்டேன். சங்கராச்சாரியார்கள் எந்த இடத்தில் தங்கள் கையொப்பத்தை போட நேர்ந்தாலும்... பெயரை எழுத மாட்டார்கள் ‘நாராயண ஸ்மிருதி’ என்று தான் கையொப்பம் போடுவார்கள். அஃது போல் மகாபெரியவரும் நாராயணஸ்மிருதி என கையொப்பம் போட்டார்.

அமைப்பு, லெட்ஜரில் பதிவாகிவிட்டது. மக்கள் மனதில் பதிவாக வேண்டுமே, அப்படியென்றால் தனம், செல்வம் சேர்க்கவேண்டுமே.

மகாபெரியவருக்கு செல்வத்தின் மீது பணத்தின் மீது கொஞ்சம் கூட ஆசை கிடையாது. செல்வமோ, நகையோ அதை திரும்பிக்கூட பார்க்கமாட்டார்.

உதாரணத்துக்கு ஒரு சம்பவம் சொல்கிறேன் கேளுங்கள். மடத்தில் அன்று நானும் இருந்தேன். வடநாட்டுத் தொழிலதிபர் பிர்லா அன்று மகா பெரியவரை பார்ப்பதற்காக வந்திருந்தார். எத்தனை தொழிற்சாலைகளை நிருவகித்துக் கொண்டிருப்பவர். சாதாரணமாகவா வருவார்?



ஒவ்வொரு நிலையிலும் படாடோபம் பட்டவர்த்தனமாக தெரிந்தது.வெள்ளித்தட்டு முழுக்க புதுபுஷ்பம் கமகமத்தது. இன்னொரு வெள்ளித்தட்டில் ரகம் ரகமாய் பழங்கள். அடுத்தாக ஒரு வெள்ளித்தட்டு அதன் மேல் கட்டுக்கட்டாய் பணம்... மூன்றாவது தட்டு முழுதும் அடுக்கி வைக்கப்பட்டிருந்தது பணம்.

பிர்லா... மகாபெரியவரை தரிசித்துக் கொண்டிருக்கும்போதே அவருடன் வந்தவர்கள் அந்த தட்டுகளை மகாபெரியவர் முன் அர்ப்பணிப்பதற்காக எடுத்து வந்தார்கள்.

புஷ்பத்தட்டை பார்த்த மகா பெரியவர் புன்னகைத்தார். பழத்தட்டை பார்த்ததும் புன்னகைத்தார். மூன்றாவதாக அந்த பணத்தட்டு வருவதை பார்த்துவிட்ட உடனேயே..பிர்லாவை கூப்பிட்டு... ‘என்ன இது’ என்ன இது? என்றார் அவசரமாய்.‘ஸ்வாமிஜி... மடத்து காரியங்களுக்காக என்னுடைய சிறிய காணிக்கை...’ என பிர்லா இழுக்க... மகாபெரியவரோ சட்டென அந்த தட்டை தூக்கி பார்த்து வெளியே போய் விடுங்கள்’ என்று பொருள்படும்படி கைகளால் சைகை காட்டி விட்டார். பிர்லா எவ்வளவோ சொல்லியும்...’நான் சந்நியாசி... எனக்கே இவ்வளவு பணம் தேவைப்படுமானால்... லோகத்தில் சம்ஸாரிகளாக இருப்பவர்களுக்கு எவ்வளவு தேவைப்படும். அவர்களிடமே கொடுங்கள். பொது காரியத்துக்காக லோக சேமத்துக்காக மடத்துக்கு வெளியே செலவழித்து விடுங்கள்’ என மென்மையாய் மறுத்துவிட்டார் மகாபெரியவர்.

‘அர்த்தம் அனர்த்தம்’ என்ற ஆதிசங்கரரின் கூற்றுக்கு எவ்வளவு உண்மையாக மகா பெரியவர் வாழ்ந்திருக்கிறார் என்பதை அப்போது அங்கே நான் பார்த்தேன். இப்படிப்பட்ட மகா பெரியவர் மடாதிபதியாக இருந்த மடத்தில் செல்வத்துக்கு அதிகம் வேலையும் இல்லை. தேவையுமில்லை. அதனால் மடங்களுக்கான அமைப்பை ஆரம்பிப்பதிலிருந்து... ஆதீனங்கள் ரொம்ப உதவிகள் செய்தார்கள்.

திருவாவடுதுறை ஆதீனத்துக்கு ஏகப்பட்ட சொத்துகள் உண்டு. அதுபோல மற்ற ஆதீனங்களுக்கும் வருவாய் இனங்கள் உண்டு.இவற்றை முறைப்படுத்திப் பயன்படுத்திக் கொள்ள... ஒரு திட்டம் தீட்டினோம். அதாவது... மடங்கள் தங்கள் வருவாயில் 5 சதவீதத்தை வருஷத்துக்கொரு தடவை ‘மடங்களுக்கான அமைப்பு’க்காக கொடுக்கவேண்டும். இந்த நிதியில்தான் அமைப்பு இயங்க வேண்டும்.

இந்த செல்வம் மூலம்... நமது மதத்தில் நிலவும் பிரிவுகளைத் தாண்டி ஒரு பொதுவான ஆன்மீகப் பிரச்சாரம் செய்யவேண்டும் என நாங்கள் திட்டம் போட்டோம்.

இந்த விஷயங்கள் பற்றி விவாதிக்க... அமைப்பின் கூட்டத்தையும் கூட்டினோம். இதில் மகாபெரியவர் தலைமையேற்பார். மற்ற மடங்களின் மடாதிபதிகளின் பிரதிநிதிகள் கலந்து கொள்வார்கள். வருஷா வருஷம் கூட்டம் நடந்தது. ஆனால்... சொன்னபடி மடங்கள் தங்களது வருவாயில் 5 சதவிகித பங்கை கொடுக்க முன்வரவில்லை.கூட்டம் மட்டும் நடந்தபடி இருந்தது. 5 வதோ, 6வது கூட்டமோ... அதில்தான் மதுரை பெரிய ஆதீனம் ஒரு பிரச்சினையை கிளப்பினார்.

கோவில்களை கட்டியது மன்னர்கள், அதற்கு உதவி செய்தது... உழைப்பு கொடுத்தது... வியர்வை கொடுத்தது.. வீர்யம் கொடுத்தது. கல் சுமந்தது மண் சுமந்தது எல்லாம் பிராமணர்களா? கல்சுமந்து மண் சுமந்து கோவில் கட்டியவனுக்கு சாமியை சுமக்க, பூசை செய்ய தடையா?



வடநாட்டில் குறிப்பாக காசியில் கோவிலுக்கு வருகிறவர்கள் எல்லாம் அவரவர் பூசை செய்து போகிறார்கள். அதுபோல... இங்கேயும் அனைவரும் பூசை செய்யவேண்டும். மடங்களுக்கான அமைப்பு அதற்கு முன் முயற்சி எடுக்கவேண்டும். தமிழில் அர்ச்சனைகள் நடைபெறவேண்டும். அதற்கு இந்த அமைப்பு உதவவேண்டும்."என்றெல்லாம் மதுரை ஆதீனம் புதிய கருத்துகளை பேசினார்.

சொன்னதோடு இல்லை. தஞ்சாவூர் ஜில்லாவில், கும்பகோணம் சுவாமிமலை இடையே இருக்கிற திருப்புறம்பியத்தில் கோவிலில் குடி கொண்டுள்ள சிவனைப் போலவே வேறொரு விக்ரகத்தை கோவிலுக்கு வெளியே வைத்து... அதை அனைவரும் பூசிக்க ஏற்பாடும் செய்தார்.

இது மடங்களுக்கான அமைப்பில் சலசலப்பை உண்டு பண்ணியது. ஏற்கெனவே நிதியாதாரம் இல்லாமல் நடைபோட்ட அமைப்பில்... மதுரை ஆதீனத்தின் கருத்தை மகாபெரியவர் ஏற்றுக் கொள்ளவில்லை. 'சூத்ராள் பூஜை பண்றது, அதுவும் தமிழ்ல பண்றது ஏத்துக்க முடியாது...'என்றார் மகா பெரியவர்.

**32. நாஸ்திகர்களை நசுக்க இடியாய் வந்தவர்.**

ராமானுஜர் எப்படிப்பட்டவர்? பௌத்தம்...புத்தர் வேதங்களை எதிர்த்து ஓர் இருட்டை பரப்பினார்.மண்டையோட்டு வழிபாட்டு முறையை எரிக்க,,.

மதுரை பெரிய ஆதீனம் உரிமைப் பிரச்சினை கிளப்பியதும், அதை மகாபெரியவர் சங்கராச்சாரியார் மறுத்ததும், 'மடங்களுக்கான அமைப்பு' மேலும் செயல்படுவதில் தடங்கலை ஏற்படுத்தியது. சில வருடங்களில் அமைப்பின் செயல்பாடுகள் குறையத் தொடங்கின.

சேற்றிலிருந்து பறித்து வந்த செந்தாமரைகள் போல வேததர்ம சாஸ்திர பரிபாலனசபை, ஆகமசிற்ப சதஸ், திருப்பாவை... திருவெம்பாவை மாநாடு, மடங்களுக்கான அமைப்பு... என சமய ஒற்றுமைக்காக மகாபெரியவர் ஏற்படுத்திய ஸ்தாபனங்கள் எல்லாம் அவருடனேயே போய்விட்டன. அவரது காலத்திற்குப் பிறகு மடத்தில் இந்த ஸ்தாபனங்கள் பற்றி கவலைப்பட, அக்கறைப் பட யாரும் இல்லை. அந்த செந்தாமரைகள் கொஞ்சம் கொஞ்சமாய் வாடி... இப்போது சுண்டிச் சுருங்கிவிட்டன.

மகாபெரியவர் என்ற மகாபுருஷரோடு என்னுடைய அனுபவங்களை சிலபல அத்தியாயங்களில் படித்திருப்பீர்கள். ஆதிசங்கரரில் ஆரம்பித்து மகாபெரியவருடனான அனுபவங்கள்வரை பகிர்ந்து கொண்டாயிற்று. இப்போதைய சங்கராச்சாரியாருடனான சிலவற்றை தக்க சமயத்தில் உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். அடுத்து...?

அடுத்து உங்களுக்கு நான் அறிமுகப்படுத்தப் போகிறவர் ஆதிசங்கரரின் அத்வைதம் மீது வேதாந்த ஆயுதம் பாய்ச்சியவர்! அவர் யார்?

அதற்கு முன்...சோழச்சக்ரவர்த்தி ராஜராஜ சோழனின் தனயன் ராஜேந்திரசோழன்... தன் தந்தையின் வெற்றிகளைக் கண்டு பூரித்துப்போனதோடு மட்டுமல்ல... அப்பாபோல நாமும் இந்த தரணி வெல்லவேண்டும். நம்மை பலரும் பரணி பாடவேண்டும். தந்தை தஞ்சையில் கட்டிய கோவிலைப் போன்றே தானும் கட்டவேண்டும் என நெஞ்சுக்குள் வேட்கையை வெறியாக எரியவிட்டான். விளைவு?

படைகளை கிளப்பினான். திக்கெட்டும் வெல்லப் புறப்பட்டவன். வடஇந்தியாவை நோக்கிப்



படையெடுத்தான் பலநாட்கள். கடந்த அவனது படை கங்கை கரையை முட்டியது. கங்கை கொண்ட சோழன்... அங்கே ஒரு வேத விற்பன்னரை சந்தித்தான்.

அவரது சாஸ்திர விளக்கங்கள் அறிவு சார்ந்த கருத்துக்களைக் கேட்ட ராஜேந்திர சோழன்... 'இந்த வித்வானை நம்முடன் அழைத்துச் சென்றால்தான் வெற்றிமுழுமைப்படும்' என்ற முடிவுக்கு வந்தான். அவர்தான் நாதமுனி இன்றும் உத்திரப்பிரதேசத்தின் கோரக்பூரில் நாதமுனியின் உபதேசத்தைப் பின்பற்றுகிற 'நாதபந்துக்கள்' என்ற பிரிவினர் வாழ்ந்து வருகிறார்கள்.

நாதமுனியை மிகுந்த மரியாதையோடு தென்னகம் அழைத்து வந்த ராஜேந்திரசோழன் கங்கை கொண்ட சோழபுரம் அமைத்ததோடு... நாதமுனியை தனது ராஜ ஆலோசகராக... உபதேசம் செய்பவராக வழிபட்டான்.

சோழனுக்கு உபதேசங்கள் செய்ததோடு... பல வேத நூல்களையும், உபநிஷதுகளையும் ஆழ்ந்து கற்ற நாதமுனியை வேதமுனி என்றே சொல்லலாம். பல ஸ்லோகங்கள் பண்ணிய நாதமுனியின் பேரன்தான் ஆளவந்தார்.

நாதமுனியின் பரம்பரைக்கும், சோழ ராஜாக்கள் பரம்பரைக்கும் தலைமுறை தாண்டிய சம்பந்தம் தொடர்ந்து ஆளவந்தாரும் தன் காலத்திய சோழ சாம்ராஜ்யத்துக்கு ராணுவ ஆலோசகராக அமர்ந்தார். சோழனின் யானைப் படை, குதிரைப்படை, காலாட்படை, கப்பற்படை ஆகியவற்றுக்கு ஆலோசனை செய்யும் முக்கியமான பொறுப்பில் அமர்ந்திருந்த ஆளவந்தாரை சமய சம்ப்ரதாய விஷயங்களுக்காக தாத்தாவான நாதமுனி பலதடவை அழைத்தார்.

புண்டரீகாக்ஷர், குருகை காவலப்பன் என பல தூதுவர்களின் வற்புறுத்தலுக்குப் பிறகும் நாதமுனியின் உபதேசத்தை கேட்க மறுத்துவிட்டார் ஆளவந்தார்.இப்பேற்பட்ட ஆளவந்தாரின் பேத்திக்கு பிள்ளையாக மலர்ந்தவர்தான்... அதாவது ஆளவந்தாரின் பேரன் திருமலைநம்பியின் தங்கையான பூமிபிராட்டி என்பாருக்கு மகனாக வந்து உதித்தவர்தான் விசிஷ்டாத்வைதம் கண்ட ஸ்ரீராமானுஜர்.

ராமானுஜர் எப்படிப்பட்டவர் என உங்களுக்கு அறிமுகப்படுத்த ஓர் வடமொழி கவிதை எவ்வளவு தகவல்களை தேக்கித் தருகிறது பாருங்கள்.

"பாஷண்ட த்ருமஹண்ட தாவதகனாஹாசார்வாக சைலாஹனிஹிபௌத்த த்வாந்த்த நிராஸ வாஸரபதிஹிஜைனேப கண்ட்டீர வஹாமாயாவாதி புஜங்க பங்க கருடஹாத்ரைவித்ய சூடாமணிஹி..." என்று போகும் இந்த கவிதையின் கருத்து என்ன தெரியுமா?

அந்தக் காலத்தில் சுடுகாட்டில் உட்கார்ந்து கொண்டு மண்டை ஓடுகளை எடுத்து வைத்துக்கொண்டு பூசை செய்யும் ஒரு 'பயம்' தரும் வழிபாட்டுமுறை பரவிக்கிடந்தது. இப்படிப்பட்ட மண்டையோட்டு வழிபாட்டு முறையை எரிக்க காட்டுத்தீயாக வந்தவர்.

'சார்வாகன்' என்பவரின் உபதேசப்படி தெய்வமே இல்லை எல்லாம் மூடர்களின் கற்பனை மனிதர்கள் வாழப் பிறந்தவர்கள். தெய்வத்தை கும்பிட்டு வாழ்நாளை வீணாக்காதீர்... என்ற கொள்கை பிடிப்பில் வந்த நாஸ்திகர்களை நசுக்க இடியாய் வந்தவர்.

பௌத்தம்...புத்தர் வேதங்களை எதிர்த்து ஓர் இருட்டை பரப்பினார். அந்த இருட்டை கிழித்து வேத வெளிச்சத்தை ஏற்படுத்திய உதயசூரியனாக வந்தவர். ஜைனம் என்னும்



யானையை அடக்க சிங்கமாக புறப்பட்டவர்.

மாயாவாதம் என்னும் துன்பம் தருகின்ற கொடிய மலைப்பாம்பினை கொத்தி கொலை செய்யவந்த வைணவ கருடன்.

இப்படியாக மண்டையோட்டு வழிபாட்டு கலாச்சாரம், நாஸ்திக கூட்டம், பெளத்த இருட்டு, ஜைனம் என்ற யானை, மாயாவாதம், அதாவது ஆதிசங்கரர் போதித்த அத்வைதம் என்கிற மலைப்பாம்பு ஆகியவற்றை அடக்கி ஒடுக்க வந்தவர்தான் ஸ்ரீராமானுஜர்.இவர் என்ன சொன்னார்...? செய்தார்.?

**33.** ப்ராமண ஸ்த்ரீகளும் சூத்ரர்கள்தான். பகவானுக்கு உருவம் உண்டு? கிடையாது?
ப்ராமண ஸ்த்ரீகளும் சூத்ரர்கள்தான். எனவே அவர்கள் அடுத்த ஜென்மாவில் 'ப்ராமண புருஷனாக அவதரித்தால்தான் மோட்சத்துக்கு பாடுபடுவதற்குரிய தகுதியே கிடைக்கும்..."

மோட்சம் வேண்டும் என்றால்... இந்தப் பிறவியை இப்படியே கழித்து...அடுத்த ஜென்மாவில் ப்ராமணனாக பிறக்க பகவானை பிரார்த்திக்க வேண்டும்.

பகுதி 33 இந்து மதம் எங்கே போகிறது ?

காட்டுத் தீயாக... இடியாக, உதயசூர்யனாக, சிங்கமாக, கருடனாக வர்ணிக்கப்பட்ட ஸ்ரீராமானுஜர் தன் சிறுபிராயத்திலேயே வேத, உபநிஷத்துகளை அத்யயனம் செய்ய ஆரம்பித்தார்.

ராமானுஜர் ஸ்ரீபெரும்புதூரில் அவதரித்ததாக தகவல்கள் பரவியிருந்தாலும், தான் எழுதியுள்ள எந்த க்ரந்தத்திலும் தன் சொந்த ஊரான ஸ்ரீபெரும்புதூரைப் பற்றியோ அங்கே அமைந்திருக்கும் பெருமாளைப் பற்றியோ எந்த ஒரு தகவலையும் ராமானுஜர் குறிப்பிடவில்லை. இன்னொன்று தமிழ்மொழியில் எந்த க்ரந்தத்தையும் அவர் அருளிச் செய்யவில்லை.

வேத, உபநிஷத்துகளோடு தன் முன்னோடிகளான நாதமுனி, ஆளவந்தார் பற்றியும் கசடற கற்றார் ராமானுஜர். நாதமுனிகளைப் பற்றி ஆளவந்தார் அருளிய ஸ்லோகம் ஒன்று."ஜனித்வா வம்ஸே மாதிக்யா கேஸதாம்கசீனாம் சுத்தாநாம்சித் அசிது ஈஸ்வர தத்வ விஷதாம்..."

பிறக்கும்போதே புகழ் பொருந்திய வம்சத்திலே வந்த நாதமுனிகள் 'சித்' ஆகிய ஜீவாத்மா, அசித்தாகிய ஜடப்பொருளான உலகம், ஈஸ்வரனாகிய ப்ரம்மம் மூன்றும் மெய்யானவை என்றார். அதாவது மாயாவாதத்துக்கு எதிரான சிந்தனையை வெளியிட்டார்..." என அந்த ஸ்லோகத்தில் சொல்லியிருக்கிறார் ஆளவந்தார்.

"நஸந்த்ரீசே திஷ்டதீ ரூபமஸ்ய நசக் குஹா பத்யயீகஷ்யனயேனம் ஹ்ருதா மனிஷாமனசா அபிகிருப்தஹா யயேனம் விதுஹீஅமிர்தா ஸ்தே பவந்த்தீ...என்று சொல்கிற உபநிஷத்து ஸ்லோகம் சொல்வது என்னவென்றால்...

பகவானுக்கு உருவம் கிடையாது. அரூபமானவன் இதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்றால்... உனக்கு வேணுமெனில் உன் மனதுக்குள் அவனை உருவம் உடையவனாக நினைத்துகொள். அவன் உருவத்தை தியானித்துக் கொண்டிரு..." என்கிறது.



நாதமுனிகள் சொன்னதையும், உபநிஷதுகள் சொன்னதையும் ராமானுஜர் தன் வேதாந்த அறிவில் விதைத்து முழுமூச்சாக சிந்தித்து முளைக்க வைத்தார். அதுதான் வசிஷ்டாத் வைதம் இது என்ன சொல்கிறது?

உலகில் எதுவுமே மாயை என்பது தவறு பகவானுக்கு ரூபம் உண்டு. அவன் வைகுந்தத்தில் வசிக்கிறான். அவன்தான் ஜீவாத்மாவாகிய நம்மையும், உலகத்தையும் படைத்தான். பகவானின் உருவம் மனசு கற்பித்ததில்லை. அவன் நிஜமான உருவம் கொண்டவன். பக்கத்தில் பிராட்டியோடு... வைகுண்டத்தில் இருக்கும் பகவானை நாமெல்லாம் தியானிக்க வேண்டும் என்பதுதான் ராமானுஜ உபதேசம்.

இவ்வாறு... புது தத்துவத்தை முரசறைந்த ராமானுஜர் இதை நிலைநாட்டுவதற்கும்... பரப்புவதற்கும் பல பயணங்கள் மேற்கொண்டார். உபநிஷத்தின் வியாக்யானமான ப்ரம்மசூத்திரம் முக்கியமான வேதாந்த நூல் இதைப்படித்து உரை எழுதுவது அதாவது பாஷ்யம் பண்ணுவது மிகக்கடினமான காரியம். சமஸ்கிருத மேதாவிலாசமும், ஞான சித்தியும் வாய்க்கப் பெற்றவர்கள் மட்டுமே இதை பண்ணமுடியும்.

அப்படிப்பட்ட ப்ரம்ம சூத்ரத்துக்கு சங்கரரர் உரை எழுதினார். அது சங்கர பாஷ்யம் எனப்பட்டது. மத்வர் உரை எழுதினார். அது மத்வ பாஷ்யம் என அழைக்கப்படுகிறது. அதே ப்ரம்ம சூத்ரத்துக்கு ராமானுஜரும் உரை எழுதினார். ஆனால்... அது ராமானுஜ பாஷ்யம் என அழைக்கப்படாமல்'ஸ்ரீபாஷ்யம்' என மேன்மையோடு அழைக்கப்படுகிறது.

இந்த பாஷ்யத்தை படைப்பதற்காக... காஷ்மீர் பயணித்த ராமானுஜர் அங்கே போதாயணரைப் பார்த்தார். இன்றைய தட்பவெப்ப நிலையிலேயே இந்த்ரியங்களை நடுங்கச் செய்யும் காஷ்மீரம்.. பல நூற்றாண்டுகள் முன்பு எவ்வளவு பனிக்கட்டிகளை மடியில் கட்டிக் கொண்டிருக்கும். அப்பேற்பட்ட இடரிலும் போதாயணரை பார்த்து அவரிடத்திலே ப்ரம்மசூத்ரத்தை வாங்கினார் ராமானுஜர். ராமானுஜர் ப்ரம்மசூத்ரத்துக்கு பாஷ்யம் பண்ணப்போகிறார்.

அதில் சங்கர பாஷ்யத்துக்கு பதிலடி கொடுப்பார் என கருதிய அத்வைதிகள் சிலர் ராமானுஜருக்கு ப்ரம்மசூத்ரம் கிடைக்காமல் செய்வதற்கான வழிகளையும் காஷ்மீர்வரை சென்று மேற்கொண்டனர்.

சீப்பை ஒளித்து வைத்தால் கல்யாணம் நிற்குமோ? போதாயண வ்ருத்திக்காரர் என்ற காஷ்மீரத்து ஞானியிடமிருந்து மிகவும் கஷ்டப்பட்டு ப்ரம்மசூத்ரத்தை வாங்கி அதற்கு பாஷ்யம் அதாவது உரையெழுதினார் ஸ்ரீராமானுஜர்.

இங்குதான் ராமானுஜரைப் பற்றி இருவேறு கருத்துகள் ஆரம்பிக்கின்றன.

தான் அருளிய ஸ்ரீபாஷ்யத்தின் முதலிலேயே... “பூர்வாச்சாரியார்கள், அதாவது ப்ரம்ம சூத்ரத்தை பண்ணிய ஆச்சாரியார்கள் என்ன சொன்னார்களோ அதை அப்படியே நான் இங்கு தருகிறேன். இதில் என் கருத்தென எதுவும் இல்லை. அவர்கள் சொன்னதுதான் நான் சொன்னதும்” என ‘ஆமாம்’ போட்டுவிட்ட ராமானுஜர்.

ஸ்ரீ பாஷ்யத்தின் அபசூத்ராதிஹிரணம் என்ற பகுதியில் சொல்வது இதுதான்.

“பகவானின் உருவத்தை நித்யமும் தியானித்து உபாஸனம் செய்பவர்களுக்குத்தான்



மோட்சம் நான் சொல்வது மோட்சம் வேண்டும் என்றால்... இந்தப் பிறவியை இப்படியே கழித்து... அடுத்த ஜென்மாவில் ப்ராமணனாக பிறக்க பகவானை பிரார்த்திக்க வேண்டும்.

ஒருவேளை அடுத்த பிறவியில் பிராமணர்களாக பிறக்க அவர்களுக்கு ப்ராப்தம் கிடைக்குமானால் வேத, உபநிஷதுகளை கற்று... பகவானை தொடர்ந்து தியானித்து... மோட்சம் பெறலாம்.

அதுபோலவே... ப்ராமண ஸ்த்ரீகளும் சூத்ரர்கள்தான் எனவே அவர்கள் அடுத்த ஜென்மாவில் 'ப்ராமண புருஷனாக அவதரித்தால்தான் மோட்சத்துக்கு பாடுபடுவதற்குரிய தகுதியே கிடைக்கும்..." என்கிறார் ராமானுஜர். (மோட்சம் என்றால் அடுத்த ஜென்மம் பிறந்து அவதிப்படாமல் வைகுண்டத்தில் பகவானின் திருவடிகளை அடைந்து நித்ய ஆனந்தம் அனுபவிப்பது.

ஆனால்... ராமானுஜர் திருக்கோட்டியூர் கோவிலில் கோபுரத்தில் மீதேறி... அனைத்து சாதியினருக்கும் மோட்சம் கிடைக்க வேண்டும் என்பதற்காக திருமந்திரத்தை கூவிச் சொன்னார் என கெட்டியான தகவல் பரவிக் கிடக்கிறது.

இது ராமானுஜரின் வாழ்வில் நிகழ்ந்திருக்குமானால் தன் க்ரந்தங்கள் எதிலும் இதுபற்றி அவர் குறிப்பிடவில்லையே ஏன்?

ராமானுஜரின் சிஷ்யரான கூரத்தாழ்வான்... "பிராமணர்களுக்கு மட்டும் மோட்சம் என சொல்வது தவறு... எல்லா வர்ணத்தவரும்தான் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் அனைவருக்கும் மோட்சம் கிடைக்கவேண்டும்..." என சொன்னது ஏன்?

**34. சூத்ரன் அர்த்தம் என்ன? பெண்ணை கேசத்தால் ஏரில் கட்டினான்.**
சூத்திரர்களுக்கு மோட்சம் கிடையாது. (பிராமண) பெண்களுக்கும் மோட்சம் கிடையாது என அபசூத்ராதிஹரணத்தில் ராமானுஜர் அருளியிருந்ததை பார்த்தோம்.

சூத்ரன் என்று அடிக்கடி சொல்கிறோமே?... இச் சொல்லின் அர்த்தம் என்ன? சூசம்+த்ராதி-சூசம் என்றால் கடின உழைப்பால் ஏற்படும் கஷ்டம் என்று பொருள் த்ராதி என்றால்? அதை விரட்டுபவன்.

அதாவது கடின உழைப்பின் கஷ்டத்தை தானே பெற்று... அந்த கஷ்டத்தை உனக்கு வராமல் விரட்டுகிறவன் தான் சூத்ரன். இன்னும் சொல்லப்போனால் தான் உழைத்து உனக்கு சுகம் கொடுப்பவன்' என்கிறது சமஸ்கிருத மொழி.

அப்படித்தான் பெண்களையும் சூத்ர மரியாதை கொடுத்து வைத்திருந்தார்கள். பெண்களுக்கு என்றுமே இந்த நிலைதானா?... இந்த கேள்வியை சற்று ஆழமாகவே அலச வேண்டிய கட்டாயம் நமக்கு இருக்கிறது.

வேதம் தோன்ற முனைந்த காலகட்டத்திலும், வேத காலத்திலும் பெண்கள் எப்படி இருந்தனர். அவர்கள் ஆரம்பத்திலேயே ஆண்களால் அடக்கப்பட்டனரா?... வழிபடப்பட்டார்களா...?

சமுதாயம், மதம் என கட்டுமானங்கள் ஏற்பட்ட பிறகு பெண்ணின் முக்யத்துவம் எப்படி இருந்தது?... இந்த கேள்விக்கான விடைகள் அன்று முதல் இன்றுவரை என்ன?...



ப்ரிமிட்டிவ் கல்ச்சர் (Primitive culture) காலம் அதாவது நாகரிகத்தின் தொடக்க காலம் (theintitial stage of cvilization)... இதற்கும் முன்னால் நாகரீகம் வளராத காலம் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

ஆணும், பெண்ணும் நிர்வாணமாக அலைந்து கொண்டிருக்கிறார்கள். இவளால்தான் நாம் பிறந்தோம் என அவனுக்கு தெரியாது. அவனை நாம்தான் பெற்றெடுக்கிறோம் என அவளுக்கு தெரியாது. அதாவது... ஆணுக்கும் பெண்ணுக்கும் இயற்கை போட்டு வைத்திருந்த முடிச்சை அவிழ்க்கத் தெரியாத அறியாமைக் காலம் அது.

வெட்கம் கிடையாது. காமத்துக்கு வடிகால் அவள்தான் என்றோ... அவன் தான் என்றோ இருபாலருக்கும் கண்டுபிடிக்கத் தெரியாத காலம்.

இப்படிப்பட்ட காலத்தில் ஆண் கூட்டம் தனியாக அலைந்து கொண்டிருக்கும் மரங்களில் ஏறுவது... பழங்களை பறிப்பது தொப்பென கீழே விழுவது... இப்படி மலை, காடு மேடுகளில் ஊர்ந்து கொண்டிருந்த மனிதன் பெண்ணை முழுதாக நிமிர்ந்து பார்த்தான்.

தன் கை, கால்களை ஒரு தடவை பார்த்துக் கொண்டான். முகத்தை தடவி மூக்கை பிடித்துப் பார்த்தான் தன் வாய்க்குள் கையை விட்டுப் பார்த்தான். காதுகளை சுண்டிக் கொண்டான். கன்னத்தை தட்டிக் கொண்டான். மறுபடியும் தன்னை கால்களிலிருந்து கழுத்து வரை கண்களால் அளந்தான்.
பிறகு பெண்ணை இன்னொரு முறை திரும்பிப் பார்த்தவன், அச்சு அசலாய் தன்னைப் போலவே அவள் இருப்பதைக் கண்டு திடுக்கிட்டான்.

சில வித்தியாசங்கள்... அவளுக்கு மார்பகங்கள் திரண்டு நின்றன. கேசம் இடுப்பு வரைக்கும் ரோமநார்களாய் தொங்கிக் கொண்டிருந்தன. கன்னங்கரேரென முகத்தைச் சுற்றி மறைத்து நின்ற கேஸத்தை பார்த்ததும்... ஆதிமனிதனுக்கு முதலில் வந்தது பீதி.

‘அய்யோ... பேய்... பிசாசு... மிருகம்...’ என அக்காலத்தில் அவன் பயம் கொள்ளத்தக்க விஷயங்களை பட்டியல் போட்டான்.
சத்தம் கேட்டு பக்கத்தில் நின்ற ஒரு சிலர் ஓடி வந்தனர்.

அனைவரும் அவளைப் பார்த்து... அவளின் தலைவிரி கோலத்தை பார்த்து மிரண்ட விழிகளைப் பார்த்து பயந்தனர். ‘அய்யோ பேயை, பிசாசை அடித்து விரட்டணும்’ என்ற முடிவுக்கு வந்து கம்பு, கல், மண் என கண்டதையும் எடுத்து அடித்தான். பெண்ணைக் கண்டதும் ஆணுக்கு ஏற்பட்ட முதல் உணர்வு பயம்தான். ஆனால் இந்த பயம் நீடித்ததா?

கூந்தலை அவள் ஒதுக்கியபோது தான் முகத்தின் அழகு முழுதாய் தெரிந்தது. காலப்போக்கில் இயற்கையின் தத்துவம் விளங்கத் தொடங்கியது. முதலில் பெண்ணைப் பார்த்து பயந்தவன்... பெண்ணை பயமுறுத்தத் தொடங்கினான். அவள் கூந்தலை பிடித்து இழுத்தான். அடித்தான் அவளது மிரட்சி இவனது மிரட்டலை அதிகப்படுத்தியது.

நாகரீகத்தின் தொடக்க காலத்தில் சமவெளிகளில் வாழ்ந்த மனிதன்... விவசாயம் செய்யத் தொடங்கியபோத ஏர் போன்ற கருவி செய்தான். அப்போது விலங்குகளை எல்லாம் கண்டு வெகுவாக பயந்ததால் அவைகளிடமிருந்து விலகியே இருந்த மனிதன் அவைகளை பழக்குவதற்குரிய பரிணாம வளர்ச்சி இல்லாத நிலையில்...

ஏரில் பூட்டி உழவு செய்வதற்கு என்ன செய்வது என யோசித்தபோது தான்... மிரண்டு



கிடந்த பெண்கள் அவனது யோசனையில் வர ஆரம்பித்தனர்.

என்ன சொன்னாலும் கேட்ட பெண்களில் கூந்தலை பிடித்து இழுத்து வந்தான்... அந்த சடை முடியை இழுத்து ஏரின் நுனியில் கட்டினான். அவர்களது பின்னங்கழுத்தில் ஏரை சுமத்தி பெண்களைக் கொண்டே உழவு செய்ய ஆரம்பித்தான். மட்டுமா?

கம்பை கொண்டு அடித்து அவர்களை துரிதப்படுத்தினான். கழுத்து வலி தாளாத பெண்கள் கதறினர். ஆனாலும் ஆதிமனிதன் விடவில்லை. அவர்கள் அழுதபடியே உழுதார்கள். ஆணை பார்த்து தொழுதார்கள்.

இதை உங்களால் மனக்கண்ணில் யூகிக்க முடிகிறதா?... முடியவில்லை என்றால்... 'பழநி' என்ற பழைய சினிமாவில் ஒரு காட்சி வரும் (என்னடா... தாத்தாச்சாரியார் சினிமாவை எல்லாம் ஆன்மீக தொடரில் சம்பந்தப்படுத்து கிறாரே... என எண்ணாதீர்கள். மக்களுக்கு பல உண்மைகளைச் சொல்ல வேண்டி வரும்போது அவர்களுக்கு எது புரிகிறதோ அந்த வழியில் சொல்லிட வேண்டுமல்லவா?

இனி அந்த சினிமா காட்சி... அண்ணன் தம்பிகள் பாகப் பிரிவினையின்போது சிவாஜிக்கு கரடுமுரடான கட்டாந்தரைதான் வாய்க்கும். அவருக்கோ அதை பண்படுத்த மாடுகள் வாங்கக்கூட முடியாத வறுமை நிலை அப்போது. ஏரில் தன் குடும்பப் பெண்களையே பூட்டி உழவு செய்வார்.

ஏரின் நுகத்தடி பெண்ணின் புரடியில் இருக்கும். சிவாஜி அந்தப் பெண்களை சாட்டையால் அடித்து ஏரை செலுத்துவார். இப்படியாக அமைக்கப் பட்டிருக்கிறது அந்த சினிமாக் காட்சி.

இதே கற்பனைக் காட்சிதான் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் நிஜக்காட்சியாக நடை பெற்றிருக்கிறது. கேசத்தை கண்டு பயந்தவனே பெண்ணை கேசத்தால் ஏரில் கட்டினான். பிறகு...?-

**35.பெண் வீட்டுக்குள்ளேயே தான் இருக்கவேண்டும்.**

பெண்களை பிசாசு, மிருகம் என கர்ணக் கொடூரமாய் வர்ணித்து பார்த்தவன். அவள் கர்ப்பவதியாய் இருப்பதை பார்த்தான். அடிவயிறு புடைத்து அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருந்ததை பார்த்த அவனுக்குள் 'சரிதான் இவள் ராட்சதப் பிசாசு தான்......

நாகரீகம் முளை விடுவதற்கு முன்பு மூளை இருந்தும் சிந்திக்கத் தெரியாத அறியாமை பொந்துக்குள் வாழ்ந்த மனிதன் பெண்களை ஏரில் கட்டி உழுத கொடுங்கதையை பார்த்தோம்.

இந்த காலகட்டம் தாண்டி வேதம் தோன்ற முனைந்த காலத்தில் அவர்மீது கொஞ்சமாய் நாகரீக வெளிச்சம் கொட்டியிருந்தது. ஆனாலும் பெண்ணின் மீதிருந்த பயம் மிரட்டலாய் மாறியிருந்தது.

ஏற்கெனவே பெண்களை பிசாசு, மிருகம் என கர்ணக் கொடூரமாய் வர்ணித்து பார்த்தவன். அவள் கர்ப்பவதியாய் இருப்பதை பார்த்தான். அடிவயிறு புடைத்து அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருந்ததை பார்த்த அவனுக்குள் 'சரிதான் இவள் ராட்சதப் பிசாசு தான். சில நாள் முன் சப்பையாய் இருந்தாள். இப்போது திடீரென உப்பித் திரிகிறாளே' என்ற தீர்மானம் பளிச்சிட்டது.



இப்போது கல்லெடுக்கவில்லை. கம்பெடுக்கவில்லை. அக்கினியை மூட்டினான். அவள் அருகில் எரிய வைத்தான் எதற்கு? அவளுக்குள் இன்னொரு பிசாசு புகுந்து வீங்கியிருக்கிறது. அதை விரட்டத்தான் இங்கு அக்னி சூட்டுக்கு பயந்து பிசாசு ஓட்டம் எடுக்கும் என நம்பினான். அதனால் பற்ற வைத்தான்.

இதுவே வேதத்தில் ஜாதகர்மா என்ற ஹோமமாக வடிவம் பெற்றது. முதன்முதலில் கர்ப்பிணியை பிசாசுக்குள் பிசாசு என நினைத்து விரட்ட நெருப்பு பற்ற வைத்த மூடநம்பிக்கையை முழுதாக தத்தெடுத்துக் கொண்டது வேதம்.

வேதம் என்றால் பற்பல ரிஷிகள் சேர்ந்து செய்த நெறிமுறைக்கு கட்டுப்பாடுகள்தான் என்பதை இக்கட்டுரைத் தொடரின் முதலாம் அத்தியாயத்திலேயே பார்த்தோம் அல்லவா?

அப்படித்தான் இந்தப் பழக்கத்தையும் தன்னுள் தரித்துக் கொண்டது வேதம்.

இதில் இன்னொரு விஷயம் என்னவென்றால் இந்த ஜாதகர்மா என்ற 'தீ வைக்கும்' பழக்கத்தை இன்றும் தங்கள் பிழைப்புக்குப் பயன்படுத்திக் கொள்ளும் பிராமணர்கள். கல்யாண வைபோகங்களில் ஜாதகர்மா என்றொரு ஹோமச் சடங்கை நடத்துகிறார்கள்.

இங்கே இதன் அர்த்தம் என்ன தெரியுமா? மணமகளாய் அமர்ந்திருக்கும் பெண்ணுக்கு பிறக்கும் குழந்தைகளை பேய், பிசாசு போன்ற தீய சக்திகள் அண்டக்கூடாது என்பதற்காகத்தான் இந்த சடங்கு.

காட்டுக்கு நடுவே அன்றைய மனிதன் தீயின்மீது மூடநம்பிக்கையே இன்னும் நவநாகரீக உலகத்தில் வாழும் அப்படியே பின்பற்ற மனிதன் பார்க்கிறான் என்றால் அந்த வேகத் தீயின் வீச்சைப் பாருங்கள்.

பெண்களை இதுபோல் பயம் தரும் கோபம் தரும் ஜந்துவாய் சித்தரித்தவன் மெல்ல மெல்லதான் அவளது அழகைப் பார்க்க ஆரம்பித்தான்.

இதையும் வேதம் எப்படித் தெரியுமா சொல்கிறது? இந்த உலகம் ஆற்றுப் படுவதற்கு Relaxation இயற்கையும் பெண்களும் தான் மூல காரணம். அவர்கள் இருவரிடமும்தான் உலகை சாந்தப்படுத்தும் சக்தி. அழகு என்ற ரூபத்தில் நிரம்பிக் கிடக்கிறது.

அதனால் அதனால்?புரந்திர் யோஷா ஜாதாம்அப்படியென்றால்? தேவனே பெண்களை எப்போதும் அழகாகவே வைத்திருப்பாயாக. அப்போதுதான் உலகமும் வாழ்க்கையும் அழகாக இருக்கும்.இது பிராமணர்கள் செய்யவேண்டிய பிரார்த்தனைகளாக வேதம் வகுத்தவற்றில் ஒன்று.அதாவதுஇது 'Vedic Prayer' என அழைக்கப்படும் இன்னின்ன வேண்டும் என தெய்வத்திடம் கோரிக்கை வைக்கிறார்கள்.

ஆகவே எஜமானஸ்ய விரோ ஜாயதாம்.நல்ல குணங்கள் கூடிய குழந்தைகள் பிறக்கவேண்டும்.'சபாயோ யுவர் ஜாயதாம்.'?அந்தக் குழந்தை வளர்ந்து பெரியவனாகி சான்றோர்கள். சிந்தனையாளர்கள் நிரம்பிய சபையிலே மரியாதையுடன் திகழ வேண்டும்.

நிகாமே நிகாமே.பர்தன்யோ வர்ஹது'
நாங்கள் ஆணையிட்டவுடன் வானைவிட்டு மேகம் மழையாய் மண்ணில் இறங்க வேண்டும். அதாவது பெய்யெனச் சொன்னால் மழை பெய்ய வேண்டும்.இப்படிப்பட்ட வேண்டுதல்களில்



முக்கியமான ஒன்றாகத்தான் பெண்கள் எப்போதும் அழகாகவே இருக்கவேண்டும். அவர்களால் உலகமும் அழகாகவே அமைந்திருக்கவேண்டும் என்ற பிரார்த்தனையும்,

சரி.. பெண்கள் காலம் முழுவதும் அழகாகவே இருந்து என்ன பண்ணப் போகிறார்கள்? வேதத்திடம் நாம் வினா தொடுத்தால் பதில் கொடுக்கிறது. இந்த ஸ்லோகம் மூலம்,'பத்னிஹீ பாரீனஷ்யஸ்ய ஏஸேபத்னியைவ அனுமதம் நர்வபதி'

பெண் என்பவள் அனுதினமும் அழகாக இருக்கவேண்டும். எவ்வளவு அழகுடையவளாக இருந்தாலும் அவள் வீட்டுக்குள்ளேயே தான் இருக்கவேண்டும். அவள் வீட்டின் அதிகாரி. அதாவது வீட்டில் உள்ள வேலைகளையெல்லாம் செய்து கொண்டு தன் கணவன் வெளியிடங்களுக்கு பிழைப்புக்காக செல்லும் நேரங்களில் வீட்டில் குழந்தைகளுக்கு பாதுகாப்பாக இருக்கவேண்டும்.

வீட்டைவிட்டு வெளியே செல்லாமல் தன் புனிதமான அழகை காப்பாற்றிக் கொள்ளவேண்டும். அதே நேரம், கணவன் தன் செலவில் ஏதேனும் யாஹங்கள், ஹோமங்கள் நடத்தப் போகிறான் என்றால், அதற்கு மனைவியிடம் அனுமதி வாங்க வேண்டும். ஏனென்றால் யாகங்களுக்கு பயன்படுத்தப்படும் பொருட்களை வீட்டில் இருந்து தானே எடுத்துக் கொள்ளவேண்டும். அதற்கு வீட்டு அதிகாரியான பெண்ணிடம் கேட்கவேண்டும்.

என "வீட்டுக்குள்ளே பெண்களை பூட்டி வைப்போம் என்ற விந்தை மனிதர்களால் நிரம்பியிருந்தது வேதம்" ஒரு பக்கம். இப்படி பெண்களை வீட்டுச் சிறைக்குள் வைக்கச் சொல்லும் வேதத்தின் இன்னொரு பக்கத்தில். இன்று நாம் காணும் காட்சிகளைப் போன்று பெண்களைப் பார்க்க முடிகிறது.

எங்கே? ஸ்த்ரீ சம்ஸாதத்தில் ஸ்த்ரீ சம்ஸாதம் என்றால்? நிறைய பெண்கள் ஓரிடத்தில் கூடியிருக்கிறார்கள். ஆமாம் அதாவது பெண்கள் மாநாடு வேதத்தில் பெண்கள் மாநாடா?

**36.கோத்ரம் என்றால் என்ன? பெண்கள் மாநாடா? வேதத்திலா?**

'கோ'களை அதாவது மாடுகளை கட்டி வைப்பவர்களின் அடிப்படையில் குழுவாக பிரிக்கப்பட்டதுதான் கோத்ரம்.

என்னது? பெண்கள் மாநாடா? அதுவும் வேதத்திலா? என்ன சொல்கிறீர்கள்? என்ற உங்கள் பிரமிப்பு புரிகிறது.அந்த ஸ்த்ரீ சம்ஸாதத்துக்குள் நாம் நுழைவதற்குமுன் பொதுவான சபாவைப் பற்றி பார்த்து விடுவோம்.

ரிக் வேதத்தில் வருகின்ற ஸ்லோகங்கள் இவை."நஸா சபாயத்து நபாது செய்ஹநஸா சபாயத்து விபாது செய்ஹ"

அதாவது... எதையுமே எந்த விஷயத்தையுமே கூடிப்பேசி, விவாதித்து இந்த முடிவெடுத்தால் நல்லது, கெட்டதுகள் என்னென்ன ஏற்படும் என்பதை பலரின் கருத்துக்கு விட்டு பெரும்பாலும் என்ன சொல்கிறார்களோ? அதை முடிவாகக் கருதவேண்டும்."

- இன்று நமது பார்லிமென்ட் (Parliament) நடைமுறையில் உள்ள தத்துவத்தை ரிக் வேதச் சிந்தனை யாளர்கள் ரீங்காரமிட்டுள்ளார்கள்.சரி... சபாவில் குழப்பம் குளறுபடி வந்தால்?

"சங்க சத்வம்சம்ப சுத்வம்சம்போ மனாம்ஸி ஜானதாம்"ஒரே பாதையில் நடங்கள், ஒரே வழியில் சிந்தியுங்கள். ஒன்றாகப் பேசி முடிவெடுங்கள். (Walk United, Think United, Talk



United) என ஒற்றுமையாக வலியுறுத்தி ‘சபா’வை ஸ்திரப்படுத்தச் சொல்கிறது ரிக் வேதம்.

அதாவது… வேத காலத்தில் சமூக கட்டமைப்புக்குள் கட்டுப்பட்டு வளர்ந்த மக்களின் பிரச்சினை களை தீர்த்துக் கொள்வதற்காக ஏற்படுத்தப்பட்ட அமைப்புதான் சபா. இந்த சபாவில் சிந்தனை சக்தி மிகுந்த ரிஷிகள் அமர்ந்திருப்பார்கள். அந்தந்த குழுமத்தைச் சேர்ந்தவர்கள் ஒன்றாகக் கூடி தத்தமது எண்ணங்களை எடுத்துரைப்பார்கள்.

இறுதியாக ரிஷிகள் இதற்கொரு முடிவு சொல்வார்கள். சரி… இங்கு பெண்களைப் பற்றியே எங்கும் சொல்லக் காணோமே. பிறகு, பெண்கள் எப்படி வருவார்கள்?

உங்கள் கேள்விக்கு… இன்னொரு வேத ஸ்லோகம் விடை சொல்கிறது…

‘தம்பதிஇவ க்ரஹிபிதா ஜனேஸி…’அதாவது நீ எங்கு சென்றாலும்… யாரைப் பார்க்கச் சென்றாலும்… ஏன் கடவுளையே பார்க்கச் சென்றாலும் உன் மனைவியை பத்தினியை உடன் கூட்டிப்போ.

வீட்டுக்குள்ளே பெண்ணை பூட்டி வைக்கச் சொன்ன வேதம்… கால வளர்ச்சியில் இதனை சொல்கிறது என நாம் எடுத்துக் கொள்ளலாம். (ஏனென்றால், வேதங்கள் திடுதிப்பென திடீரென்று ஒரே பொழுதில் உண்டாக்கப்பட்டவை அல்ல…)இதன்படி ஒவ்வொருத்தரும் சபாவுக்கு வரும்போது தன் மனைவியை கூட்டிவர ஆரம்பித்தான். அப்படி வரும்போதுதான் பெண்கள் சபாவுக்கு வரத் தொடங்கினார்கள்.

அப்போது வெளியுலக பிரச்சினைகள் அவர்கள் காதிலும் விழுந்தது. கணவனின் கட்டளைகளாகலேயே நிரம்பிப் போயிருந்த காதுகளில் சமூகப் பிரச்சினைகள் வந்து விழுந்தன.

வாயில்படி தாண்டியிராத பெண்களின் வாயிலிருந்து பொதுக் கருத்துகள் புறப்பட ஆரம்பித்தன.பிரச்சினைகளைப் பற்றி பெண்கள் பேசிய பேச்சுகளை கேட்ட ஆண்கள் அசந்து போய்விட்டனர். எப்படி இவர்களுக்கு இப்படியெல்லாம் பேசத் தோன்றுகிறது? என வியந்தனர்.

இந்தக் காட்சியை“அபிப்ராவந்த்தா சமனே இவயோஷாஹதகல்யாண்யஹ ஸ்மயமானாஹா அக்னிம்…”என்று வேத ஸ்லோகம் சொல்கிறது.
“எல்லாம் கூடியிருக்கிற இடத்திலே பெண்கள் ஆண்களுக்குச் சமமாக உட்கார்ந்திருக்கிறார்கள். அது மட்டுமா? அங்கே வெளிச்சத்துக்காக வளர்க்கப்பட்டிருக்கும் அக்னியைச் சுற்றி பெண்கள் அமர்ந்து கொண்டு சிரித்தபடியே பேசிக் கொண்டிருக்கிறார்கள்.”

இதைப் பார்த்துதான்… அழைத்து வந்த ஆண்கள் வியப்படைந்து போய்விட்டார்கள். அவர்களின் வியப்புக்கு வேதம் விளக்கம் சொல்கிறது கவனியுங்கள்.“°த்ரீநாம் த்விகனம் ஆஹாரம் புத்தீஸ் சாபி சதுர் குணம்”அதாவது வீட்டில் ஆண்கள் சாப்பிட்டு மிச்சம் வைத்துவிட்டு வெளியே போய்விடுவார்கள்.

இதையெல்லாம் பெண்கள்தான் சாப்பிடுவாள். அதனால், அந்த ஆண் சாப்பிட்ட சாப்பாட்டைவிட கிட்டத்தட்ட இரண்டு மடங்கு அதிகமாகவே அவள் ஆஹாரம் புசிப்பாள். இரண்டு மடங்கு உணவு அதிகமாக உண்ணும் பெண்… ஆணைவிட நான்கு மடங்கு அதிகமாக அறிவைப் பெற்றிருப்பாள்.



இவ்வாறு ஆண்களைவிட நான்கு மடங்கு அதிகமாய் ‘புத்தி’ பெற்ற பெண்கள் வேத மந்த்ரங்களையும் இயற்றினார்கள். அத்யயனம் செய்தார்கள் என்பது வேதமே ஒப்புக்கொள்ளும் அளப்பரிய உண்மை.“அபகேஸ்ம ஸ்த்ரியோமந்த்ர கிருத ஆசுஹீப்ரா கல்பேது நாரீனாம்பௌஞ்ச்சீ பந்தது இஷ்யரேஅத்யாபனந்த வேதானாம்...”பெண்கள் வேதமந்த்ரங்களையும் இயற்றியுள்ளார்கள்.

பெண்கள் இயற்றிய வேத மந்த்ரங்களை பெண்களே அத்யயனம் அதாவது தினசரி உச்சரித்தும் வந்துள்ளார்கள்.குறிப்பாக ஆத்ரேய கோத்ரத்துப் பெண்கள் இதில் சிறப்பாக விளங்கினார்கள். ஆத்ரேய கோத்ரம் என்றால் ஆத்ரேயர் என்ற ரிஷியின் வழிவந்தவர்கள் என்று பொருள்.

கோத்ரம் என்றால் என்ன? ஒன்றும் பெரிய அர்த்தம் இல்லை.வேத காலங்களில் மாடுகளை குழு குழுவாக கட்டி வைத்திருப்பார்கள். ஒரு ரிஷியின் குழுவினர் மாடுகளை ஓரிடத்தில் சேர்த்து கட்டி வைத்திருப்பார்கள்.‘கோ’களை அதாவது மாடுகளை கட்டி வைப்பவர்களின் அடிப்படையில் குழுவாக பிரிக்கப்பட்டதுதான் கோத்ரம்.

இப்படியாக ஆத்ரேய கோத்ர பெண்கள் அறிவில் மிகச் சிறந்தவர்களாக விளங்கினர். இப்படிப்பட்ட பெண்கள்தான் ஸ்த்ரி சம்ஸாதம் அதாவது பெண்களுக்காக மட்டும் கூட்டங்களை கூட்டினர். இதுதான் பெண்களின் மாநாடு... ஒருநாள் இந்த மாநாட்டில்...?

**37.மாதவிடாய் பெண்களை விலக்கிவையுங்கள். ப்ரம்மஹத்தி தோஷம் என்றால் என்ன?**
அவள் தீட்டு, அவளை, அசிங்கமானவள், சுத்தமில்லாதவள் என்றெல்லாம் கடுஞ்சொற்களால் பெண்களை ஒதுக்கி வைத்தது.

கரு உருவாகுவதற்காக கர்ப்பப்பையை சுத்தம் செய்யும் விதமாக மாதாமாதம் இயற்கையே அதிலுள்ள கழிவுகளை வெளியேற்றும் ஏற்பாடுதான் மாதவிடாய். ஆனால், இதை வேத காலம் எதனோடு ஒப்பிட்டு காரணம் கண்டு பிடித்தது தெரியுமா?

ஸ்திரீ ஸம்ஸாதம் அதாவது பெண்கள் மாநாடு பற்றி போன அத்தியாயத்தில் பார்த்தோம். ஆணைவிட 4 மடங்கு அறிவு கொண்ட பெண்கள் ஒன்றாக கூடி விவாதங்கள் செய்து... வேத காலத்தில் சிறந்து விளங்கினார்கள்.

கார்க்தி, வாஸக்தலி, யாக்ஞவல்கியரின் மனைவி மைத்ரேயி போன்றவர்கள் இந்த விவாதங்களில் கலந்து கொண்டிருக்கிறார்கள் என்பதும் நமக்கு அறியக் கிடைக்கிறது.

இவ்வளவு முற்போக்காகவா பெண்கள் இருந்திருக்கிறார்கள் என்கிற நம் ஆச்சரியக்குறியை ஒடித்துப் போடுகிற அளவுக்கு அடுத்த தகவல் அதிர்ச்சி தருகிறது.

அது என்ன? பெண்களுக்கு இயற்கை மாதாமாதம் அளிக்கும் ஒரு துன்பம்... வலி உடலியல் காரணங்களால் வெளியேற்றப்படும் கழிவாகிய ‘மாதவிடாய்’ என்பதை காரணம் காட்டி பெண்களை வெறுத்து ஒதுக்கியது வேதகாலம்.

அவள் தீட்டு, அவளை விலக்கிவையுங்கள், அசிங்கமானவள், சுத்தமில்லாதவள் என்றெல்லாம் கடுஞ்சொற்களால் பெண்களை ஒதுக்கி வைத்தது ஏற்கெனவே இயற்கை



தந்த துன்பத்தை சகித்துக் கொண்டிருக்கும் பெண்கள் - அறியாமையால் ஆண்கள் தந்த தீண்டாமை துன்பத்தையும் சகித்துக் கொண்டார்கள்.

கரு உருவாகுவதற்காக கர்ப்பப்பையை சுத்தம் செய்யும் விதமாக மாதாமாதம் இயற்கையே அதிலுள்ள கழிவுகளை வெளியேற்றும் ஏற்பாடுதான் மாதவிடாய். ஆனால், இதை வேத காலம் எதனோடு ஒப்பிட்டு காரணம் கண்டு பிடித்தது தெரியுமா?

பார்ப்பதற்கு முன்...மீண்டும் ஸ்திரீ ஸம்ஸாதம்.... பெண்கள் கூடிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். சிரிப்பொலி காற்றில் சிணுங்கலாக மிதந்து கொண்டிருக்கிறது. அந்த வேளையில் திடுமென அவ்விடத்தில் ஒரு பிரகாசம். வெளிச்சப் புகைக்கு நடுவே அங்கே வந்திறங்குகிறான் இந்திரன்.

இந்திரன்? ஆம் தேவர்களின் அரசன். சர்வ சந்தோஷங்களையும் அனுபவித்து அனுதினமும் பகட்டில் வாழும் அவன் முகமே பார்க்க முடியாத அளவு கோரமாய் காட்சியளித்தது. செம்பட்டு இழையான தலைமுடி கொண்ட இந்திரன் செம்பட்டையும் பரட்டையுமாக மாறி போயிருந்தான்.

புன்னகை வெளிப்பட்ட வாயிலிருந்து கோரப் பற்கள் கறுத்து இருண்ட மேனியுடன் வந்த இந்திரனின் முகத்தில் சங்கட ரேகைகள். கண்கள் மட்டும் அல்ல, அங்கங்கள் அனைத்தும் அழுதன. நடுக்கம் அவன் நெற்றியில் எழுதி ஒட்டப்பட்டிருந்தது. என்ன ஆச்சு இந்திர ராஜாவுக்கு!

ப்ரம்மஹத்தி தோஷம் அப்படியென்றால்...!குற்றங்களிலேயே மிகக் கொடிய குற்றம். உச்ச பட்ச தண்டனைக்கு உள்ளாகும்படியான குற்றம். தலைமைக் குற்றம் என்றுகூட சொல்லலாம். இக்குற்றத்தை செய்தவனுக்கு எந்த பரிகாரமும் இல்லை.
அலைவதைத் தவிர

சரி.. என்ன செய்தால் இந்த குற்றம் வரும்? ப்ராமணனை கொலை செய்வது தான் ப்ரமஹத்தி குற்றம். பிரம்மம் - பிராமணன்; ஹத்தி கொலை அதாவது பிராமணனை கொலை செய்யும் குற்றம்தான் ப்ரமஹத்தி.

இப்பேர்ப்பட்ட குற்றத்தைத்தான் இந்திரன் செய்துவிட்டான். இப்போது இந்த காலத்தில் காஞ்சிபுரம் கோவிலுக்குள்ளேயே வைத்து சங்கரராமன் என்னும் பிராமணனை கத்தி, அரிவாள் போன்ற கொடூர ஆயுதங்களால் ஹத்தி (கொலை) செய்தார்களே. அவர்களும்கூட வேதத்தின் நீதிமன்றம் முன்பு ப்ரமஹத்தி (தோஷம்) குற்றம் செய்தவர்கள்தான். அதாவது அவர்கள் இவ்வளவு ப்ரமஹத்திகள்.

சரி., நாம் இந்திரன் விவாவதத்துக்கு வருவோம் ப்ரம்ஹாத்தி குற்றம் செய்யும் அளவுக்கு இந்திரன் என்ன செய்தான். காஸ்யபன் என்றொரு முனிவர். அவருக்கு திதி, அதிதி என இரண்டு மனைவிகள். திதியின் பிள்ளைகள் மதத்தவர்கள். அதாவது அசுரர்கள். திதி அசுர குலத்தை சேர்ந்தவள். இன்னொரு மனைவி அதிதியின் பிள்கைள் தேவர் குலத்தைச் சேர்ந்தவர்கள்.

அதிதிக்கு பிறந்த 12 புதல்வர்களில் ஒருவரான தொஷ்டா, அசுர குலத்தைச் சேர்ந்த ரஸனை என்னும் பெண்ணை மணமுடிக்கிறார். தேவனாகிய தொஷ்டாவுக்கும் அசுரப் பெண்ணாகிய ரஸனைக்கு பிறந்தவன் விஸ்வரூபன். இந்திர ராஜ்யத்தில் புரோகிதராக இருந்தான் விஸ்வரூபன்.



புனித யாகங்கள் முடிந்தபின் கிடைக்கும் ‘ஹவிஸ்’ என்ற பெரும் நலம் கொடுக்கக்கூடியப் பொருளை இந்திரனுக்குத் தெரியாமல் தன் மாமாவான அசுரர்களுக்கு கொடுத்துவிட்டான். இது தெரிந்த இந்திரன் - விஸ்வரூபனின் தலையையும் கோபப்பட்டு வெட்டி வீழ்த்திவிட்டான். விஸ்வரூபன் ஒரு பிராமணன் கொலை செய்தவன் இந்திரன் சும்மா விடுமோ?

பிடித்தது ப்ரம்மஹத்தி. எங்கெங்கோ போய் கத்திப் பார்த்தான் அலைந்தான் - திரிந்தான்.

கடைசியில் ‘ஞானம்’ வந்த இந்திரன் தனது ப்ரமஹத்தி கொடுத்து விடுதலை பெறலாம் என நினைத்தான்.முதலில் பூமா தேவியை போய் பார்த்து அழுதான் இந்திரன். என்னயென்று கேட்டாள் பூமாதேவி.

இதுபோல் நான் ப்ரமஹத்தி தோஷத்திற்கு ஆளாகிவிட்டேன் தேவி. என் தோஷத்தை நீதான் எடுத்துக்கொண்டு எனக்கு அருளவேண்டும் என்றான் இந்திரன்.

எல்லா தோஷத்தையும் நானே எடுத்துக்கொண்டால் என் மேல் வசிக்கும் ஜீவராசிகளுக்கு ஏது சந்தோஷம். அதனால் நீ கேட்கிறாய் என்பதற்காக ஒரு பகுதி தோஷத்தை என்னிடம் கொடு என்கிறாள் பூமாதேவி.

அதன்படி.... இந்திரன் தன் கொலைக் குற்றத்தில் ஒரு சிறு பகுதியை பூமாதேவியிடம் இறக்கி வைத்தான்.

அதுதான், தானியங்கள் விவசாய தகுதி இல்லாத தரிசு நிலங்களாகவும், பாலைவனங்களாகவும் மாறிபோய் விட்டன. தோஷத்தை வாங்கிக் கொண்டதற்கு பரிகாரமாக பூமி பிளந்தால் ஒன்று சேரக்கூடிய வரத்தை வழங்கினானாம் இந்திரன்.

விருட்சங்ளே... என் ப்ரம்மஹத்தி தோஷத்தை எடுத்துக் கொள்ளுங்களேன் என கெஞ்சினான். அப்படியானால், எங்களை வெட்டிப் போட்டாலும் வெட்டிய இடத்திலிருந்து துளிர்க்க வரம் தா என கேட்டன மரங்கள். வரம் கொடுத்த இந்திரன் உடனே தன் ப்ரம்மஹத்தி தோஷத்திலும் பாதியை கொடுத்தான்.

அதுதான் மரங்களில் பிசினாக (கோந்து) வழிந்து கொண்டிருக்கிறது. பெருங்காயமும் ‘ஹிங்கு என்ற மரத்திலிருந்து வந்த ஒரு பிசின்தான். அதனால்தான் பிராமணர்கள் முக்கிய விழா சிரார்த்தம் (தவசம்) போன்ற காரியங்களில் சமையலில் பெருங்காயத்தை உபயோகப்படுத்த மாட்டார்கள்.

இன்னும் பாதி ப்ரம்மஹத்தி தோஷத்தை வைத்திருந்த இந்திரன் கடைசியாக ஸ்தரீ சம்ஸாதம். அதாவது பெண்களின் மாநாட்டில் பிரவேசித்தான். அங்கே?

**38.இந்திரனின் தோஷமே பெண்களுக்கு மாதவிடாய்.**

மந்திரங்கள் பெண்களின் காதுகளில் விழுந்துவிடக் கூடாது.
இந்திரனின் தோஷமே பெண்களுக்கு மாதாமாதம் மாதவிடாயாக வெளிவருகிறது என்கிறது வேதக் கதை.

யாகங்களில் சொல்லப்படும் மந்திரங்கள் பெண்களின் காதுகளில் விழுந்துவிடக் கூடாது.



விழுந்திட்டால் யாகத்தின் பலன் கிடைக்காது

பூமாதேவியிடம் கொஞ்சம் ப்ரம்மஹத்தி தோஷத்தையும், விருட்சங்களிடம் கொஞ்சம் ப்ரம்மஹத்தி தோஷத்தையும் கொடுத்த இந்திரன்... மீதி வைத்திருந்த அந்த குற்ற தோஷத்தை எங்கே கொண்டுபோய் கொட்டுவது என யோசித்தான்.

யோசித்து யோசித்துதான் அந்த ஸ்த்ரீ ஸம்ஸாதத்தில் பிரவேசித்தான். எப்படி பிரவேசித்தான் என்பதை சென்ற அத்தியாயத்தில் படித்திருப்பீர்கள். அழகு குன்றி, கர்வம் இன்றி... வாழ்ந்து கெட்ட செல்வந்தனைப்போல அந்த ஸ்த்ரீகளிடையே தோன்றினான் இந்திரன். அவர்களிடமும் தனது வழக்கமான வேண்டுகோளை இறக்கி வைத்தான்.

‘எனது ப்ரம்மஹத்திதோஷத்தில் ஒரு பங்கு இன்னும் என்னிடம் பாக்கியுள்ளது. நீங்கள் அதை தயைகூர்ந்து ஏற்றுக்கொண்டால் பழையபடி இந்திரனாகிவிடுவேன்’ என காலில் விழாத குறையாக கெஞ்சினான் இந்திரன்.

“எங்களுக்கென்ன தருவாய்?”

“கேட்டதை தருகிறேன்...”“அப்படியானால்... நாங்கள் குழந்தைகள் பிரசவிக்கும் வரை எங்கள் புருஷன் எங்களோடு தேகஸம்பந்தம் வைத்துக் கொள்ள வசதி செய்து வரம் கொடு...’- என வேண்டுகோள் வைத்தார்களாம் பெண்கள்.

மனிதனை தவிர மற்ற விலங்குகளில்... கர்ப்பம் தரித்த நிமிடத்திலிருந்து ஆண் விலங்கு பெண் விலங்கை முகர்ந்துகூட பார்க்காது. மனிதர்களில்தான் பிரசவத்துக்கு முன்புவரை நெருங்கும் பழக்கம் இருக்கிறது.

இந்திரனும், பிரசவத்துக்கு குறிப்பிட்ட காலம் முன்புவரை பெண்கள் தங்கள் புருஷனோடு தேகஸம்பந்தம் கொள்ள வரம் கொடுத்தான்.

கூடவே ப்ரம்மஹத்தி தோஷத்தையும் வழித்து துடைத்து அவர்களிடம் கொடுத்து விட்டான்.இப்படியாக முடிகிறது அந்த வேதக்கதை.

இந்த இடத்தில்தான் நாம் முக்கியமாக ஒன்றை கவனிக்கவேண்டும்.தனது ப்ரம்மஹத்தி தோஷத்தை இந்திரன் பெண்களிடம் முற்றாக ஒப்படைத்தான் அல்லவா?

அந்த தோஷம்தான் பெண்களுக்கு மாதாமாதம் மாதவிடாயாக வெளிவருகிறது என்கிறது வேதக் கதை.

அதனால்தான் அந்த மூன்று நாள்களை பகிஷ்டை என்றே சமஸ்கிருதத்தில் குறிப்பிட்டார்கள். அதாவது... வெளியில் வை... விலக்கி வை... ஒதுக்கி வை என்று இதற்கு அர்த்தம்.

பிராமணனைக் கொன்ற ப்ரம்மஹத்தி கொலைக் குற்றத்தை தங்களுக்குள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள் பெண்கள். அதனால் அவள் தோஷம் பிடித்தவள் என்றது வேதம்.

அதாவது... இயற்கை பெண்ணின் உடலில் நிகழ்த்தும் ஒரு நிகழ்ச்சி... அது ஒரு கற்பனைக் கதையோடு தொடர்புபடுத்தி அந்த நாள்களில் பெண்களை ஒதுக்கி வைத்து துன்புறுத்தி இருக்கிறது வேதம் வகுத்த விதி.



ஒரு பக்கம் இப்படி பெண்களை துரத்தித் துரத்தி துன்புறுத்திய வேதம்...

இன்னொரு பக்கம் அழகிப் போட்டியே நடத்தியிருக்கின்ற தென்றால் பாருங்களேன். அதாவது இன்று மிஸ் வேர்ல்டு என்று சொல்வதைப்போல 'மிஸ் வேதா' என்று வேண்டுமானால் நீங்கள் கற்பனை செய்துகொள்ளலாம்.அந்த அளவுக்குப் பெண்களை அழகுப் பதுமைகளாக முன்மொழிந்து வழிமொழிகிறது. வேதகாலம் எப்படி? இப்படித்தான்.

"யதாஷனவ யோஹாஹாஸ்வர்ணம் க்ரணியம் பேசலம்விப்ரதீ ரூபாணி ஆஸ்தி..."

வேதகால விதிகளில் பெண்கள் எப்படி நடந்து வந்தார்கள் தெரியுமா?முழுக்க முழுக்க தங்க நகைகள், ஆபரணங்கள் அணிந்து... மிக மென்மையான உடம்பை பாதங்களால் அளப்பதுபோல நகர்த்தி நடந்து வருகிறாள் பெண். அவள் அழகு எப்படி ஜொலிக்கிற தென்றால்... ஜலத்தில் துளியளவில் நெய் பட்டால் எப்படி மினுமினுவென்று தண்ணீர் தகதகக்குமோ... அதேபோல, தங்க ஆபரணங்களை தாங்கி வரும் பெண்ணும் ஜொலிக்கிறாள் என வர்ணிக்கிறது ஸ்லோகம்.

இந்த அழகு மட்டும்தானா? பெண்களுக்கு புற அழகுதான் பிரதானமா? "சுப்ராஹா கன்யாஹா யுவதயஹாசுபேஷசஹா கர்மகிருதஹாசுகிர்தாஹா வீர்யாபதிஹி..."பெண்ணானவள் ஒளி பொருந்தியவள். அவள் பார்த்தாலே பிரகாசம்.

அடுத்தவர்களை கவர்ந்திழுக்கக் கூடியவள். இவளோடு சேர்ந்து வாழவேண்டும் என ஆண்களுக்கு ஆசையை ஏற்படுத்தக் கூடியவள். எக்கச்சக்கமான அலங்காரங்கள் செய்து கொள்பவள். எப்போதும் துருதுருவென ஏதாவது காரியம் செய்துகொண்டே இருப்பவள்.

எதிர்காலத்தைப்பற்றி கவலை கொண்டு அதற்கேற்றவாறு வாழ்க்கையை நிகழ்காலத்தில் திட்டமிட்டுக் கொண்டு செல்பவள். இவற்றையெல்லாம்விட உடல், உள்ளம் இரண்டுமே பலம் மிக்கது பெண்களுக்குத்தான்.என வேதகால பெண்களைப் பற்றி வரையறுக்கிறது அந்த ஸ்லோகம்.

சரி சரி... தேகம் ஆரம்பித்து மனம் வரைக்கும் பெண்களை புகழ்ந்து தள்ளும் வேதம்... வேதகாலத்தில் முக்கிய கர்மாவான யாகம் நடக்கும்போது பெண்களை எப்படி நடத்தியது? ஒரு உதாரணம் சொல்கிறேன்.

சில வருடங்கள் முன்பு திருச்சூரில் ஓர் யாகம். சோம யாகம். கிட்டத்தட்ட நான்காயிரம் படித்த பெண்கள் அந்த யாகத்துக்கு வந்திருந்தார்கள். எல்லாரும் இக்கால நவநாகரிக பெண்கள். நானும் அந்த சோம யாகத்தில் கலந்து கொண்டேன்.

யாகம் நடத்துபவர்கள் யாக சாலையில் இவ்வளவு பெண்கள் நிறைந்திருப்பதைக் கண்டு ஒரு கணம் யோசித்தார்கள். 'அம்மா... நீங்க எல்லாரும் உங்க சேலைத் தலைப்பால் காது, முகத்தை மூடிக்கோங்கோ...' என பெருங்குரலில் ஆணையிட்டனர்.

உடனே பெண்கள் அனைவரும் தங்களது சேலை தலைப்பை எடுத்து 'காதுகளோடு முகத்தை மூடிக்கொண்டார்கள். ஏன் இந்த மூடு காரியம்...?

யாகங்களில் சொல்லப்படும் மந்திரங்கள் பெண்களின் காதுகளில் விழுந்துவிடக் கூடாது. விழுந்திட்டால் யாகத்தின் பலன் கிடைக்காது.



அதற்காகத்தான். சில வருடங்களுக்கு முன் திருச்சூரில் நடந்த நிகழ்வு இது. வேதத்திலிருந்தே உங்களுக்கு உதாரணத்தை என்னால் காட்ட முடியும்.

ஆனால்...இந்த காலத்திலேயே இவ்வளவு கட்டுப்பாடுகளுடன் நடந்த யாகம்... வேத காலத்தில் எப்படி நடந்திருக்கும் என உங்களின் யூகத்துக்கு விடத்தான் தற்கால நிகழ்வைச் சொன்னேன்.

வேதகால பெண்களின் தேக லட்சணம் யாக லட்சணம் எல்லாம் பார்த்தோம்... அன்று கல்யாணம் எப்படி? முதல் மணமகள் யார்?

**39.விவாஹம் என்றால் தூக்கிக்கொண்டு ஓடுதல் என்று அர்த்தம்.**
பெண்களின் இயற்கையான உடலியல் நிகழ்வை வேதம், எத்தனை கற்பனை முடிச்சுகளால் கட்டிப்போட்டு வைத்திருக்கிறது என்பதை உணர்ந்தீர்களா?

வேதத்தின் முதல் மணமகள் யார்? அவளது திருமணம் எப்படி நடந்தது?

அடுத்து... நாம் பார்க்கப் போவது பெண்களின் வாழ்க்கையில் முக்கிய தருணமான திருமணம்.

வேதத்தில் சில இடங்களில் விவாஹம் என்றும் பாணிக்ரஹணம் என்றும் குறிப்பிடப்படும் திருமணம் மிகவும் தடபுடலாக நடத்தப்பட்டிருக்கிறது.

முதலில்... விவாஹம் என்றால் என்ன அர்த்தம் என்று தெரிந்துகொள்வோம். ஏனென்றால், இன்று வரையும் திருமணப் பத்திரிகைகளுக்கு ‘விவாஹ சுபமுகூர்த்த பத்திரிகை’ என பெயரிட்டு அச்சடிக்கிறார்கள். விவாஹம் என்றால் Tribal வார்த்தை. அதாவது மலைப்பிரதேச பழங்குடியினர் வார்த்தை.

இதற்கு தூக்கிக்கொண்டு ஓடுதல் என்று அர்த்தம். இந்த அர்த்தத்தை நியாயப்படுத்த வேண்டும் என்பதற்காகவே திருமணங்களில் பெண்ணின் உறவினர்கள் பெண்ணை தூக்கிக்கொண்டு போவது என்ற ஒரு சடங்கை திணித்திருக்கிறார்கள்.

சரி... நாம் வேத திருமணத்துக்குப் போவோம். திருமண நடவடிக்கைகள் எப்படி ஆரம்பிக்கின்றன. தரகரை அனுப்புகிறது வேதம். ‘முதலில் நீ போய் பெண்ணை பார்த்துவிட்டு வா’ என்று.

“ப்ரதக் மந்தா திய ஸானஸ்ய வரேபி வராதுகாசுப்ர தீததா ஆஸ்மா சுமிந்த்ராஉபயம் ஜீஹோஷதீ...” என போகும் இந்த வேத மந்த்ரம்...

தரகர் எப்படி பெண் பார்க்க செல்லவேண்டும் என்று வலியுறுத்துகிறது. நீ மிக பகட்டான ஆடம்பர ஆடைகளை அணிந்து பார்ப்பதற்கு பணக்காரன் போன்ற தோரணையுடன் பெண் பார்க்கச் செல்லவேண்டும்.

இல்லையென்றால், மாப்பிள்ளை வீட்டாரை பிச்சைக்காரன் என நினைத்துப் பெண் கொடுக்காமல் இருந்து விடுவார்கள் என மாப்பிள்ளை வீட்டாரின் பிரதிநிதியாக தரகரை வரையறை செய்து வைத்திருக்கிறது வேதம்



அவர் பார்த்து பேசிவிட்டு வந்தபின் அடுத்தது பெண்ணும், பையனும் பார்த்துக் கொள்கிறார்கள். பரஸ்பர பார்வை பரிவர்த்தனம், பிறகு கை பிடிக்கிறார்கள். அதாவது Mutual Meeting. அதாவது பாணிக்ரஹணம். எங்கே பார்த்துக் கொள்கிறார்கள்? மணமேடையில்?

அப்போது பெண்ணிடம் சொல்கிறார்கள்...தொஷ்டா அஸ்பை துவாம்பதிம்தொஷ்டா சகஸ்ரமாஹம் ஷிஹீதீர்க்கமாயு க்ரேனோவதாம்...

ஏ... பெண்ணே இவன்தான் உனக்கென தெய்வத்தால் அனுப்பி வைக்கப்பட்டவன். இனி இவன்தான் உனக்கு எல்லாம். இவன்தான் உன் கணவன். இவன் சொல்படிதான் இனி உன் சொர்க்கம். இவனை தெய்வத்தின் உத்தரவின் பேரில் நீ திருமணம் செய்துகொள்வாயாக.

நீ இவனோடு எதுவரைக்கும் வாழவேண்டும் என்றால்...“க்ருப்ணாபிதே சுப்ரஜா அஸ்த்வயாமயாபத்ய ஜலதஷ்டிம் யதாஸஹா” நீ கிழவியான பிறகு கூட உனக்கு இவன் தான் துணை என்கிறது வேதம். பொதுவாக திருமணம் இப்படி நடந்திருக்கிறது.

வேதத்தின் முதல் மணமகள் யார்? அவளது திருமணம் எப்படி நடந்தது?

ரிக் வேதத்தின் 10-ஆவது மண்டலத்தில் முதல் திருமணம்பற்றிய தகவல்கள் கொட்டிக் கிடக்கின்றன.சூர்யா என்கிற உஷஸ் என்பவள் சோமராஜனை காதலிக்கிறாள். அதாவது சந்திரனை காதலிக்கிறாள். அவனையே திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறாள். ஆனால், இதை தன் அப்பனிடம் எப்படிச் சொல்வது என்று தவித்துக் கொண்டிருக்கிறாள்.

இந்த நிலையில்தான் சூர்யாவின் தந்தை அவளுக்கு திருமண ஏற்பாடுகளை ஆரம்பித்து விட்டான். எப்படி? உலகெங்கும் உள்ள ராஜாக்களுக்கு அழைப்பு விடுக்கிறான். அவர்களுக்கு ஒரு பந்தயம்.

அதாவது சூர்யாவை திருமணம் செய்துகொள்ள விரும்பும் ராஜாக்கள் தங்களது ரதங்களோடு வந்துவிடவேண்டும். அங்கே அனைத்து ராஜாக்களுக்கும் ரதப் பந்தயம் நடக்கும். குறிப்பிட்ட தூரத்திலுள்ள இலக்கை எந்த ராஜாவின் ரதம் முதலில் அடைகிறதோ அவருக்கு சூர்யா மணப்பெண்ணாக கிடைப்பாள்.

இப்படியாக... அனைத்து ராஜாக்களும் அந்த பந்தயத்துக்கு அழைக்கப் பட்டிருந்தார்கள். சூர்யாவை அடைந்தே தீருவது என்ற ஆசையோடு ஒவ்வொரு ராஜாவும் தங்கள் ரதங்களோடு வந்திருந்தனர்.

அந்த இடமே வண்ண மயமாக இருந்தது. பல தேசத்து குதிரைகள் பூட்டப்பட்ட ரதங்கள் அலங்காரமாய் அணிவகுத்திருந்தன. அந்தக் கூட்டத்தில் சூர்யாவை காதலித்துக் கொண்டிருக்கிற சோமராஜாவும் தன் ரதத்தோடு வந்திருந்தார்.

சூர்யாவுக்கும் பதற்றம் பரவிக் கிடந்தது. நமது நாயகன் பந்தயத்தில் முந்தி வந்து நம்மை கைப்பிடிப்பானா? என்ற எதிர்பார்ப்புடன் இருந்தாள் சூர்யா.

பந்தயம் ஆரம்பித்தது. ராஜமுரசு அறையப்பட்டதும் அனைத்து ரதங்களும் தயாராயின. சூர்யாவை பரிசுப் பொருளாக அடையவேண்டும் என்ற ஆசையில் ராஜாக்கள் தங்கள் ரதங்களில் கட்டப்பட்டிருந்த குதிரைகளை முடுக்க ஆரம்பித்தனர்.



இவர்களுக்கிடையே அஸ்வதி ராஜாவும் அழகான சூர்யாமேல் ஆசைப்பட்டான். ஏன் அவன் ஆசைப்படக் கூடாது என்கிறீர்களா? அவன் ரதத்தில் கட்டப்பட்டிருந்தவை குதிரைகள் அல்ல, கழுதைகள்.

குதிரைகள் ரதங்களோடு தனது கழுதை ரதத்தையும் வேகமாக செலுத்தினான் அஸ்வதி ராஜா.சூர்யா... தன் அரண்மனை மாடத்திலிருந்து இந்தப் பந்தயத்தை உற்று கவனித்துக் கொண்டிருந்தாள். தன் சோமராஜா முந்தவேண்டும் என்று அவள் தியானித்துக் கொண்டிருக்க...யாருமே எதிர்பாராத வகையில்.

**40திருமணம் நடக்கும் வீட்டில் மாட்டைத்தான் வெட்டுகிறார்கள்.**

பெண்ணுக்கு சீதனமாக இன்னொரு பெண். கல்யாண வீட்டில் மதுவகையுடன் மாட்டிறைச்சியும்.

சீதனம் என்றால் நகைகள், வாசனை வஸ்துக்கள் போன்ற ஜடப் பொருள்கள் மட்டும்தானா?பெண்ணுக்கு இன்னொரு பெண்ணையே சீதனமாக கொடுப்பது.

திருமணத்துக்கு முதல்நாள் மதுவர்க்கம் என்னும் மாப்பிள்ளை அழைப்பு நிகழ்ச்சியின்போது ஒருவன் கூவி வேண்டுகிறான். அவன் இப்படிக் கூவுவதற்கு காரணம் என்ன? அவர்கள் எதை வெட்டுகிறார்கள்."விவாஹே கௌஹவ...க்ருஹே கௌஹவ... திருமணம் நடக்கும் வீட்டில் மாட்டைத்தான் வெட்டுகிறார்கள்.

சூர்யாவை பரிசாக பெறுவதற்காக நடந்த அந்த ரதப் பந்தயத்திலே.. யாருமே எதிர்பாரத வகையிலே....பல குதிரை ரதங்களை பின்னால் தள்ளிவிட்டு வெகு வேகமாக முன்னேறியது கழுதைகள் பூட்டப்பட்ட ரதம்?

ஆமாம். பல குதிரை ராஜாக்களை தோற்கடித்து அஸ்வதி ராஜா முதலிடத்திலேயே வந்துவிட்டான். பந்தயக்களமே ஸ்தம்பித்துவிட்டது. இவ்வளவு குதிரை பூட்டிய ரதங்களை எப்படி கழுதை பூட்டிய ரதம் முந்தி வந்தது என எல்லாருக்கும் ஒரே ஆச்சரியம். அதே நேரம் பத்தயத்தை பார்த்துக்கொண்டே இருந்த சூர்யா, அஸ்வதி ராஜாவின் வெற்றியைப் பார்த்து திகைத்து விட்டாள். அவள் பிரேமித்த சோமராஜா தோற்றுப்போனதால், அவனை கைப்பிடிக்க முடியாததென்று அவளுக்கு உறுதியாக பட்டுவிட்டது.

அடுத்த க்ஷணத்திலிருந்தே அஸ்வதி ராஜாவுக்கு சூர்யாவை திருமணம் செய்ய ஏற்பாடுகள் மளமளவென ஆரம்பித்தன. தான் பிரேமித்த சோமராஜா தன் கைகழுவி போய்விட்டானே என சூர்யாவின் கண்கள் சமுத்திரமாகின. கன்னப் பிரதேசங்கள் உப்பளமாயின.

இந்த நிலையில், அஸ்வதி ராஜா ஜெயித்தது போலவே மறுபடியும் யாரும் எதிர் பார்க்காத ஒரு காரியம் சம்பவித்து, அஸ்வதி ராஜாவே சூர்யாவை அழைத்தான். தேவீ சோமராஜா மீதான உள் பிரேமை எனக்குத் தெரியும். பந்தயத்தில் கலந்துகொள்ளத்தான் நான் வந்தேன். நானே எதிர்பார்க்காமல் உனது மணாளன் ஆகிவிட்டேன்.

இப்போதும் ஒன்றும் ஆகிவிடவில்லை. நீ உன் இஷ்டப்படி சோமராஜாவையே திருமணம் செய்துகொள். எனக்கு இதில் பூரண இஷ்டம் என யாருமே எதிர்பாராத வகையில் சூர்யா சோமராஜாவை ஜோடி சேர்த்து வைத்தான் அஸ்வதி ராஜா. இப்படித்தான் வேதத்தின் முதல்



திருமணமே மிக கோலாகலமாக நடந்தது வேதப்படி பெண்களை திருமணம் செய்து கொடுக்கும்போது சீதனம் ரொம்ப முக்கியமானது.

இனி அவளுக்கு எதை செய்யப்போகிறாய். அதனால் மொத்தமாக அவளுக்கு செய்ய வேண்டியதை செய்துவிடு என்கிறது வேதம்.அதனால், பெண்ணுக்காக ஆபரணங்கள் வஸ்திரங்கள், வாசனை திரவியங்கள் என பல விலை மதிப்பற்ற பொருள்களை பெண்ணுடன் சேர்த்து அனுப்புவார்கள்.

சீதனம் எவ்வளவு இருக்கும் என்பதை யூகிப்பதற்காக ஒரு வேத மந்த்ரம் பாருங்கள்

'ஏ கந்தர்வாஹா அப்சரஸ்ய தேவிஹிஏஷீ விருஷ்ஹேசு ஆஷதே ஷிவாஸ்தே'

ஏ, தேவதையே கந்தவர்களே எங்கள் பெண்ணை திருமணம் செய்து அனுப்புகிறோம். அவளுக்காக சீதனங்களை வண்டி வண்டியாக அனுப்புகிறோம். அவை அனைத்தும் அவளோடு பத்திரமாக போய்ச்சேரவேண்டும். எல்லாமே விலை மதிப்பற்ற பொருட்கள் என்பதால் பேய்கள், பிசாசுகள் அவற்றை அண்டாமல் அபகரித்துச் சென்றுவிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள் என வேண்டுகிறது அந்த வேத மந்த்ரம்

சீதனம் என்றால் நகைகள், வாசனை வஸ்துக்கள் போன்ற ஜடப் பொருள்கள் மட்டும்தானா? இன்னாரு புதிய சீதனத்தையும் நமக்கு அறிமுகப்படுத்துகிறது வேதம். அதன் பெயர் அனுதேயி. அனுதேயி என்றால் என்ன பொருள்? அதன் பயன் என்ன? நீங்கள் கேட்பது புரிகிறது. அனுதேயி என்றால் ஜடப் பொருள் அல்ல. அது இயங்கும் உயிர் பொருள். மணப்பெண் மணமுடித்து புகுந்த வீட்டுக்கு செல்லும் போது கூடவே இந்த உயிர்ப் பொருளும் செல்லும். அவள் சொன்ன வேலைகளைச் செய்யும். அப்படி என்ன சீதனம் அது என யோசிக்கிறீர்களா?

அதாவது அனுதேயி என்றால் பின் தொடர்ந்து வந்து சொன்னதை செய்பவர். அதாவது இங்கே இன்னொரு பெண் . ஆமாம். பெண்ணுக்கு இன்னொரு பெண்ணையே சீதனமாக கொடுப்பது. முதல் மணமகளான சூரியாவுக்கு இதுபோல ரைபி என்னும் பெண்ணை சீதனமாகக் கொடுத்து அனுப்பி வைத்திருக்கிறார்கள். மணப்பெண்ணோடு தோழி என்ற பெயரில் அனுப்பி வைக்கப்படும். இந்த சீதனப் பெண் தொடர்ந்து மணப் பெண்ணின் புகுந்த வீட்டில்தான் இருக்கவேண்டுமா? அவளுக்கென்று தனி வாழ்க்கை அமையாதா?

அதாவது அவளுக்குத் திருமணம் நடக்காதா? என்றெல்லாம் அந்த சீதனப் பெண் அனுதேயியை மையமாக வைத்து நாம் கவலைகளை கேள்விகளாக எழுப்பினால்.... அதற்கு வேதம் பதில் சொல்கிறது. என்ன சொல்வது? அவளைப்பற்றி ஏன் யோசிக்கிறீர்கள்? இதெல்லாம் திருமணம் முடிந்த பிறகு நடக்கும் சமாச்சாரங்கள்.

இங்கே இன்னொரு முக்கியமான திருமணத்துக்கு முதல் நாள் நடக்கக்கூடிய ஒரு விஷயத்தை விலாவாரியாகச் சொல்லவேண்டும்.அந்த விஷயத்துக்குப் போவதற்கு முன் விசேஷமாய்

இந்த மந்த்ரத்தைத் தெரிந்துகொள்ளுங்கள்.
"மாதா முத்ராணாம் துஹிதா பசூனாம்ஸ்வஸ் ஆதித்யானாம் அமிர்த ஸ்யனா பிஹிப்ரனுபோகம் சிதுஹே ஜனாயோமாகா பனாகாம் அதிது வசிஷ்ட்

நான் உங்கள் எல்லோருக்கும் சொல்கிறேன். ஏன் திருமணம் என்னும் புனிதமான



விஷயத்தை இப்படி ரத்தக் களறியாக்குகிறீர்கள்”

பாவம் அவையெல்லாம். அவற்றை ஏன் கொன்று குவிக்கிறீர்கள்?. அவற்றை நாம் தாயாக எண்ணி புனிதமாக வழிபட வேண்டும். அதைவிட்டுவிட்டு அவற்றின்மேல் வாள் வைப்பதா?

நிறுத்துங்கள். திருமணத்துக்கு முதல்நாள் மதுவர்க்கம் என்னும் மாப்பிள்ளை அழைப்பு நிகழ்ச்சியின் போது ஒருவன் கூவி வேண்டுகிறான். அவன் இப்படிக் கூவுவதற்கு காரணம் என்ன? அவர்கள் எதை வெட்டுகிறார்கள்.“விவாஹே கௌஹவ...க்ருஹே கௌஹவ...திருமணம் நடக்கும் வீட்டில் மாட்டைத்தான் வெட்டுகிறார்கள்

**41.**கல்யாணங்களில் பொருந்தாத மந்திரங்கள்.

திருமணத்தில் மாடு வெட்டுகிறார்களா? ஆமாம்... வேதம் வகுத்துத் தந்த திருமணத்தில் முக்கியமான அம்சம் கோமாமிசம் தான்.

மாப்பிள்ளை அழைப்பு என்ற திருமணத்துக்கு முதல் நாள் நிகழ்ச்சியில் மது வர்க்கம் என்றொரு சடங்கு. இதிலும் மறுநாள் திருமணச் சடங்குகளிலும் ரிஷிகளும், கோமாமிசமும் அவஸ்யம் என்கிறது வேத விதி.

பக்கத்தில் ஒரு கிரகத்தில் திருமணம் நடக்கிறது. யாகங்களும் மந்த்ர ஒலிகளும் பூமியிலிருந்து வானத்தை நோக்கி சத்தமிட்டு புறப்படுகின்றன. திரவியங்களின் வாசனை நாசிக்குள் நாட்டியமாடுகிறது. இப்படிப்பட்ட சுகந்தமான சூழ்நிலையில் அந்தக் கிரகத்தின் பக்கத்தில் இரண்டு சிறுவர்கள் பேசிக்கொள்கிறார்கள்.

“என்னடா அங்கே மடமடன்னு சத்தம் கேட்கிறதே?” “உனக்குத் தெரியாதா? பக்கத்து கிரஹத்திலே கல்யாணம் ரிஷிகள் நிறையபேர் போயிருக்கிறார்கள் பாவம்... இன்று கன்றுக் குட்டிகள் தப்பிக்க முடியுமோ? அவைகளை வெட்டும் சத்தம்தான் மடமடயாதே... (அதாவது மடமடன்னு கேட்கிறது)” என்கிறான் மற்றவன்.

இது ஒரு வேதக்கதை அதாவது கல்யாண காரியங்களிலே கன்றுக்குட்டிகளையும் கறி சமைத்திருக்கிறார்கள்.

ஆனால்.. இன்று நடக்கும் திருமணங்களிலும் அறிந்தோ அறியாமலோ(?) வாத்யார்கள் (கல்யாணம் நடத்தி வைப்பவர்கள்) மாடு வெட்டும் சடங்குக்குரிய மந்திரங்களை ஓதுகிறார்கள். ஆனால்... ‘மது வர்க்க’த்தில் கோமாமிசத்துக்குப் பதில் வாழைப்பழத்தைக் கொடுக்கிறார்கள்.

அப்படியானால் அந்த மந்த்ரம் எதற்கு? மாட்டை வெட்டச் சொல்லும் மந்த்ரத்தை நீங்கள் சொல்லும்போது மாடு வெட்டப்பட வேண்டுமே! அப்படி செய்யாத பட்சத்தில் அந்த மந்த்ரத்தை கல்யாணச் சடங்கிலிருந்து வெட்டிவிடலாமே?

இதேபோல... ‘கௌஹவ...கௌஹவ என சொல்லிக்கொண்டே இன்னொரு கல்யாண சடங்கையும் நடத்துகிறார்கள். கல்யாண தினத்தன்று... கோமாமிசம் சாப்பிடவேண்டிய சடங்குக்கான மந்த்ரத்தை சொல்கிறார்கள்.

அந்த நேரத்தில் பெண்ணும் மாப்பிள்ளையும் தேங்காய் உருட்டி விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.ஏன் இந்த முரண்பாடு? காலத்தின் மாற்றத்தால் சடங்குகளை மாற்றிக் கொண்ட பிராமணர்கள்...மந்த்ரங்களை மட்டும் இன்னும் விடாப்பிடியாய்



பிடித்திருக்கிறார்கள்.

இது பிராமணர்களின் கல்யாணங்களில் மட்டுமல்ல... மற்ற ஜாதியினரின் கல்யாணங்களிலும் இந்த பொருந்தாத மந்த்ரங்கள்தான்போற்றப்படுகின்றன. மாட்டு மாமிசம் தின்பதற்கும், தேங்காய் உருட்டுவதற்கும் என்ன சம்பந்தம்?இதற்கான மேலும் சில மந்த்ர உதாரணங்களைப் பிறகு பார்க்கலாம்.

இப்படியாக கல்யாணம் நடக்கிறது. பெண்ணானவள் புருஷன் வீட்டில் எப்படி நடந்துகொள்ளவேண்டும்.

“பரித்வா கிர்வனோ க்ரஹஇமாபவந்து விஷ்வதஹாவ்ருத்தாயும் அனிவ்ருத்தயாஜீஷ்டா பவந்து ஜீஷ்டாயா?......அடியே... உனக்கு நாங்கள் கொடுக்கும் சீதனத்திலே மிக உயர்ந்த மெல்லிய, அழகுக்கு அழகு சேர்க்கக்கூடிய ஜரிகை வஸ்திரங்கள் இருக்கலாம்.

அவற்றை நீ அணிந்தால் உனக்கு அலங்காரமாக இருக்கலாம். ஆனால்... இவையெல்லாம் ஒருநாள் மக்கிவிடும், மடிந்துவிடும், கிழிந்துவிடும்.ஆனால்... என்றென்றும் கிழியாத வஸ்திரம் உனக்கென்று உள்ளது. புகுந்த வீட்டில் புருஷனும்... மற்றவர்களும் உன்னைப் புகழ்ந்து பேசவேண்டும்.

அவர்கள் உன்னை மெச்சிக்கொள்ளும் புகழ்மொழிகள்தான் உனக்கு உண்மையான ஆடை. அதனால் புகுந்த வீட்டில் அவர்கள் சொன்னபடி நீ நடந்து அந்த ஆடையை அணிந்துகொள்.இப்படியாக பெண்களுக்கு நிறைய அறிவுரைகளை அள்ளித்தரும் வேதம்... திருமணத்துக்குப் பிறகு அவளை எப்படி நடத்தவேண்டும், நடத்தக்கூடாது என்பதற்கு அகஸ்தியர் மூலமாக ஒரு கதையை சொல்லியிருக்கிறது.

அகஸ்திய முனிவர் ரொம்ப குள்ளமானவர். அவர் லோபாமுத்ரை என்னும் மங்கையை பார்த்ததும் அவளை அடைந்தே தீரவேண்டும் என்று அவருக்குள் உயரமாக உதித்தது ஆசை. நேராக அந்தப் பெண்ணின் தந்தையிடமே போனார் அகஸ்திய முனி. ‘உன் பெண்ணை பார்த்தேனப்பா... அவளையே கல்யாணம் செய்துகொள்ள ஆசைப் படுகிறேனப்பா’... எனக்கூற...தந்தையோ, அகஸ்திய முனியை கொஞ்ச நேரம் பார்த்தார். ‘என் பெண்ணிடமே கேட்டு, அவளுக்கு இஷ்டமா, இல்லையா என தெரிந்துகொள்ளப்பா...’ என சொல்லிவிட்டார்.

இப்படியே இந்த உருவத்திலேயே போனால் லோபாமுத்ரை நம்மை ஏற்றுக்கொள்வாளா? தன்னையே ஒருதடவை பார்த்துக் கொண்டார் அகஸ்தியர். கடைசியில் தன் குள்ள உருவத்திலிருந்து சில மந்த்ரங்களைச் சொல்லி தன்னை அழகனாக மாற்றிக் கொண்டார் அகஸ்தியர்.

லோபாமுத்ரையிடம் போனார் பேசினார். அகஸ்தியரின் வாளிப்பிலும், வார்த்தைகளிலும் மயங்கிய லோபாமுத்ரா அவர் கழுத்தில் மாலையைப் போட்டாள். தன் மணாளனாக்கிக் கொண்டாள்.அகஸ்தியருக்கு சந்தோஷம். மறுபடியும் லோபாவின் அப்பாவிடம் ஓடினார். ‘உன் பெண்ணை கல்யாணம் செய்துவிட்டேன் பார்’ என்றார்.கல்யாணம் ஆன பிறகுதான்... தன் கணவன் அகஸ்தியரின் நிஜ உருவத்தை தரிசித்தாள் லோபாமுத்ரை.... பிறகு...?

**42.உடலுறவு சமயத்தில் தேவதைகளே உதவுங்கள்.**



நான் அவளோடு உடலுறவு கொள்ளும் பொழுது தேவதைகளே நீங்கள் உதவ வேண்டும். திருமணத்தில் சொல்லப்படுகின்ற ஒரு மந்திரம்

மரியாதை போய்விடும். அப்படிப்பட்ட மந்த்ரம் அது

திருமணம் முடித்த அன்பர்களே உங்களின் எத்தனை பேரின் திருமண சடங்கில் இந்த மந்திரம் ஓதப்பட்டது?

மணமுடிக்க இருக்கும் அன்பர்களே இதெல்லாம் உங்களுக்கு வேண்டுமா?

லோபாமுத்ரை திருமணத்துக்குப் பிறகுதான் தன் கணவன் அகத்திய முனியின் சுய ரூபத்தையே தெரிந்து கொண்டாள். குள்ள ரூபம், தாடியும் மீசையுமாய் ரோமக் காடாய் முகம்.இப்படிப்பட்ட ஒருத்தர்... அழகானவர் போல் நம்மை ஏமாற்றி விட்டாரே என லோபாமுத்ரைக்குள் அழுகையும் ஆத்திரமும் பொங்கின. ஆனால்.. ஸ்த்ரி தர்மப்படி புருஷனுக்கு பணிவிடைகள் செய்வதுதானே பத்தினியின் கடமை.அதன்படி.. தன் புருஷன் அகத்தியனுக்கு பணிவிடைகள் செய்வதையே வேலையாகக் கொண்டு பதிவிரதையாக வாழ்ந்து வந்தாள் லோபா.

காலை எழுந்தவுடன் ஸ்நானம் செய்வது... பிறகு மந்திரங்கள் தொடர்பான ஆராய்ச்சியில் ஈடுபடுவது பிறகு ஆகாரம் புசிப்பது... மறுபடியும் தியானம்... மந்த்ரம்... பிறகு இரவு நெடுநேரம் தீப ஒளியில் ஏதேனும் மந்த்ரங்கள் இயற்றிக் கொண்டே இருப்பது... பிறகு தூங்கிக் கொண்டே இருப்பது... பிறகு தூங்கி விடுவது இதுதான் அகத்தியனின் வாழ்க்கை முறை.வேண்டி விரும்பி திருமணம் செய்து கொண்டவளைப் பற்றி அகத்தியன் சிந்திக்கவே இல்லை லோபாவும் தன் புருஷன் தன்னையும் கவனிப்பான் என காத்திருந்தாள் கைங்கர்யம் செய்தபடியே.

இப்படியே காலம் ஓடிக் கொண்டிருக்க.. மந்த்ரங்கள், சிஷ்யர்கள், கமண்டலம்.. என வாழ்ந்த அகத்தியனுக்கு ஒரு நாள்தான்... ‘இதுவரை லோபாவைப் பற்றி நாம் சிந்திக்கவே இல்லையே... அவளை ஒரு வேலைக்காரியாக மட்டுமே பயன்படுத்திக் கொண்டேனே தவிர...ஒரு புருஷனாக பத்தினிக்கு தரவேண்டிய சுகங்களை, அந்தஸ்தை நாம் தரவே இல்லையே.. பேரழகியை திருமணம் செய்து கொண்டு பாராமல் விட்டு விட்டோமே...’ என அகத்தியனுக்குள் அடுக்கடுக்காய் எண்ணங்கள் உதித்தன.

லோபா முத்திரையின் லோக வாழ்வைப் பற்றி அகத்தியன் நினைத்துப் பார்த்தது... கண்கெட்ட பிறகு சூர்ய நமஸ்காரம் என்பார்களே அதுபோல ஏனென்றால்... இருவருக்கும் 80 வருடங்கள் ஓடிப்போய் விட்டன.அழகு ஆட்சி செய்த லோபாவின் மேலே காலம் தன் கட்டளைகளைப் பிறப்பித்து விட்டது. அழகான அவளது முகத்திலும், சருமத்திலும் காலதேவன் தன் விளக்கத்தை சுருக்கங்களாக எழுதினான். கருகருவென்ற அவளது வசீகரமான கேஸத்திலே வெள்ளையடித்து விட்டான்.லோபாமுத்ரை என்ற பேரழகியின் மீதே காலதேவன் தன் முத்திரையை பதித்துவிட்ட போது... அகத்தியர் எப்படியிருப்பார்?நரை கூடி கிழப்பருவம் எய்தி விட்டார்.

இப்படிப்பட்ட நிலையில்தான் லோபாமுத்ரை பற்றிய நினைவு வர... அவளிடம் ஓடிப்போனார் அகத்தியர்.‘தேவி... அம்மா நான்தான் உன் ஆம்படையான் வந்திருக்கேன் என அவளது தோளைத் தொட லோபாமுத்ரை தன் புருஷனிடம் இப்போது தான் வாய் திறந்தாள்.



“உன்னாலே என் ஜென்மாவே பாழாய் போச்சு. என் அழகு வீணாப்போச்சு இப்போது வந்திருக்கிறீரே என்ன பிரயோஜனம்?... இது நியாயமா?...” என பொங்கியழுதாள் லோபாமுத்ரை.“நான் பண்ணிய மந்த்ரங்கள் எல்லாம் உனக்காகத்தானே தேவி”... என அகத்தியன் சமாதானம் சொல்ல... “மந்த்ரங்களுடனா நான் குடித்தனம் நடத்த முடியும்?... என் மணாளன் நீயா?... மந்த்ரங்களா?... என பதில் பேசுகிறாள் லோபாமுத்ரை.

அகத்தியமுனி அப்படியே நிற்கிறார்... இந்தக் காட்சியை அகஸ்தியரின் சிஷ்யர்கள் பார்த்து விடுகிறார்கள். அவர்கள் வழியே தான் இந்த வேதக்கதையே வெளியே வருகிறது.அதாவது... பெண்ணை திருமணம் செய்து கொண்டு அவளுக்கு கொடுக்க வேண்டிய சுகங்களை கொடுக்காவிட்டால் அது மகாபாவம் என்பதை வலியுறுத்துவதற்காக இந்தக்கதை.

சரி... திருமணத்தில் வாத்யார்கள் அர்த்தம் தெரியாமல் ஓதும் மந்த்ரங்களுக்கு மேலும் உதாரணம் சொல்கிறேன் என போன அத்யாயத்தில் சொல்லியிருந்தேனல்லவா.

அத்தகைய ஒரு மந்த்ரத்தைப் பாருங்கள்.
“தாம்பூஷன் சிவதமாம் ஏவயஸ்வயஸ்யாம் பீஜம் மனுஷ்யா பவந்த்தீயான ஊரு உஷதி விஸ்ரயாதையஸ்யா முஷந்தஹா ப்ஷரே பஷேபம்...”...

இது வேதத்தில் சொல்லப்பட்ட மந்த்ரம். இதை கல்யாண மேடையிலே பெண்ணையும், மாப்பிள்ளையையும் உட்கார்த்தி வைத்து சத்தமாக சொல்கிறார் வாத்யார். இந்த மந்த்ரத்தின் அர்த்தம் புரிந்தால்... அந்த வாத்யாரை நீங்கள் வாத்சாயணர் என்றுதான் அழைப்பீர்கள்.

அப்படி என்ன சொல்கிறது இந்த மந்த்ரம்?

நான் அவளை கட்டிப்பிடிப்பேன். (அவளோடு உறவு கொள்ளும் பொழுது) அப்போது எங்களது அந்தரங்க பாகங்களை சரியாக பொருந்தச்செய்யுமாறு... தேவதைகளே நீங்கள் உதவ வேண்டும்

.இந்த மந்த்ரத்தின் அர்த்தத்தை இதைவிட நாகரீகமாக சொல்ல முடியாது. விளக்கமாக நான் சொல்லியிருப்பேன் என்றால்... என் மீதும் என் வயதின் மீதும் உங்களுக்கு இருக்கும் மரியாதை போய்விடும். அப்படிப்பட்ட மந்த்ரம் அது.

என் இஷ்டமித்ரர் ஒருவருடைய மகளின் கல்யாணம் சமீபத்தில் நடந்தது. அந்த பெண் மகாபுத்திசாலி. சமஸ்கிருதம் பயின்றவள் அவள் மணமேடையிலே உட்கார்ந்திருக்கும் போது...வாத்யார் இந்த மந்த்ரத்தை உரக்கச் சொல்ல...

“ஸ்வாமீ... நிறுத்துங்கோ” என்றாள் அவள். வாத்யார் வாயடைத்து விட்டார்.“இதுக்கு என்ன அர்த்தம் தெரியுமோ?... பொண்ணும் மாப்ளையும் துணியில்லாம செய்யுற காரியத்தை... நீங்க பல பேர் முன்னாடி சொல்றேளே...”

“வாத்யார் அதன்பிறகு அந்த மந்த்ரத்தை சொல்லவில்லை. இதை ஏன் சொல்கிறேன் என்றால், வாத்யார்கள் சடங்குகள் என்ற பெயரில் இன்ன அர்த்தம் என்றே தெரியாமல்... பல மந்த்ரங்களை உச்சரித்து வருகிறார்கள் என்பதை சுட்டிக் காட்டத்தான்.



இதுபோல் இன்னொரு மந்த்ரம்“விஷ்ணுர் யோனி கர்ப்பயது தொஷ்டா ரூபானி பீமிசதுஆசிஞ்சது ப்ரஜாபதிதாதா கர்ப்பந்தாது...” இதன் அர்த்தம் இன்னும் ஆபாசம்.

**43.**ஆபாச திருமண மந்திரங்கள். உடலுறவின் போது...
ஆணும், பெண்ணும் உடலுறவு கொள்ளும்போது எல்லாம் சரியாக நடக்கிறதா என்பதை கண்காணிக்கிறார்கள்.

உடலுறவை கண்காணிக்கும் தேவதைகள்.பெண்ணானவளின் அந்தரங்க பாகம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இதன் ஒவ்வொரு பகுதியிலும் ஒரு தேவதை உட்கார்ந்திருக்கிறது.

'விஷ்ணுர் யோனி கர்ப்பயது...' எனத் தொடங்கும் இந்த மந்த்ரத்தின் அர்த்தம்தான் என்ன?

பெண்ணானவளின் அந்தரங்க பாகம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. யோனி, மத்யமம், உபஸ்தம் என மூன்றாகப் பிரிக்கப்பட்டிருக்கும். இதன் ஒவ்வொரு பகுதியிலும் ஒரு தேவதை உட்கார்ந்திருக்கிறது.

அதாவது, விஷ்ணு, தொஷ்டா, தாதா ஆகிய தேவதைகள் இம்மூன்று பாகங்களிலும் உட்கார்ந்திருக்கிறார்கள்.

இவர்கள்தான்... ஆணும், பெண்ணும் தேக ஸம்பந்தம்உடலுறவுகொள்ளும்போது எல்லாம் சரியாக நடக்கிறதா என்பதை கண்காணிக்கிறார்கள்.

அதாவது... நாம் தேக ஸம்பந்தம் கொள்வதை கூட விஷ்ணு உள்ளிட்ட தேவதைகள் அருகில் இருந்து, இன்னும் சொல்லப்போனால் அந்த இடத்திலேயே இருந்து கவனிக்கிறார்கள்.

இவ்வாறு கவனிக்கும் தேவதைகள் விஷ்ணு, தொஷ்டா, தாதா ஆகிய சக்திகள் அவளுக்கு கர்ப்பத்தை உண்டாக்க அருள்புரிய வேண்டும்... என்கிறது இந்த மந்த்ரம்.

நாம் பெண் என்றால் தெய்வம் என்கிறோம். ஆனால், பெண்ணின் ஓர் உறுப்பிலேயே மூன்று தெய்வங்கள் எல்லை பிரித்து உட்கார்ந்து கொண்டிருக்கின்றன என்கிறது இந்த மந்த்ரம்.

இதை நீங்கள் பெண்மையின் உயர்வாகவே எடுத்துக் கொள்ளலாம். 'அந்தரங்கம்' எல்லாம் 'அந்தரங்கன் அறிவான்' என கண்ணதாசன் சொல்லி வைத்ததற்கு முதல் முதன் முன்னோடியாக விளங்கியிருக்கிறது என்றும் வைத்துக் கொள்ளலாம்.இங்கே முக்கியமானதொன்று... வேத திருமணங்கள் பெரும்பாலும் கர்ப்பாதானம்ம என்றே அழைக்கப்பட்டிருக்கின்றன.

விவாஹம் என்றால் தூக்கிக் கொண்டு ஓடுதல் என்றும், பாணிக்ரஹணம் என்றால் கைப்பிடித்தல்என்றும் பார்த்திருக்கிறோம். வையெல்லாம் எதற்காக? கர்ப்பாதானம் செய்து... குழந்தைகள் பெற்று மகிழ்ந்து வாழத்தானே. அதனால்தான் திருமணத்தை கர்ப்பாதானம் என்றே குறிப்பிட்டது வேதம்.

இதற்காகவே கணவனுக்கும், மனைவிக்கும் மணமேடையில் நிகழும் உரையாடலாக வேதம்



இப்படி பதிவு செய்திருக்கிறது.

அவள் கேட்கிறாள்.'மணாளா... நீங்கள் எனக்கு புருஷனாக கிடைத்தது எனது அதிர்ஷ்டம். இந்த கன்னி செய்த புண்ணியத்தால் உன்னை கைப்பிடித்தேன். நீ சம்பாதிக்கும் செல்வத்தையெல்லாம் வீட்டுக்கே கொண்டு வரவேண்டும். அதுபோல உனது இந்த்ரிய சந்தோஷத்தையும் நீ என்னிடம் மட்டுமே பகிர்ந்துகொள்ள வேண்டும். வேறு வேறு பெண்களை நாடி நீ போகக்கூடாது... என்ன சரியா?'' என்கிறாள்.

அவன் இதற்கு பதில் சொல்கிறான்.'நீ பெண் என்பதால் தெளிவாகவே இருக்கிறாய். நான் ஈட்டும் பொருள் அனைத்தையும் உன்னிடம்தான் ஒப்படைப்பேன்.

அதேநேரம்...இந்த்ரிய சந்தோஷத்தை உன்னுடன் தான் அனுபவிக்கவேண்டும் என்று நீ என்னை கட்டளையிடக் கூடாது. நீ வேண்டுமானால் அதற்கான அழகோடு எப்போதும் இரு. உன் அழகை நீ காப்பாற்றி வைத்திருந்தால் நான் உன்னை விட்டு விலகிச் செல்லவேண்டிய சந்தர்ப்பம் நேராது...'' என்கிறான் அவன்.

இதை தான்...'உதுத்தரம் மாரோஹந்திமுர்த்தானம் பத்யு ராரோஹ''கல்யாணம் செய்து போன பெண்... கணவனது தலையில் ஏறி உட்கார்ந்து கொள்ளவேண்டும்.

அதாவது... அவனது சிந்தனைகளில் எல்லாம் இவளே நிரம்பி இருக்கவேண்டும். அவனது மூளையில் இவளே முழுதும் இருக்கவேண்டும். அப்போது அவன் பிற பெண்ணை நாடிச் செல்லமாட்டான் அல்லவா? என்கிறது வேதம்.

கணவன் மூளைக்குள் தன்னை நிரப்பவேண்டும் என்றால் இவள் எப்படி குடும்பம் நடத்தவேண்டும்?

'ஸ்த்ரீனாஞ்ச பதிதேவானாம்தஷ்ஸ்ருஹா அனுகூலதா தத்பந்துஹீஅனுமிருத்யஸ்ஸ நித்யம் தத்வத தாரணம்சம்மார்ஜன அனுரே பாப்யாம்க்ரஹ மண்டல வர்த்தனாஹி ஆத்மானும்பூஷ்ஹேஸ்யதா''

கைப்பிடித்த நொடியிலிருந்து அவன்தான் உனக்கு தெய்வம். அவனை விட்டுவிட்டு வெளியே நீ எங்கேயும் போகக்கூடாது. வென்னீர் போடு, கால் பிடி, கைபிடி, தூங்கினால் விசிறி விடு... இப்படி செய்வதால்தான் அவன் மூளையில் நீ குடியேற முடியும்.

சரியப்பா... அவள் இப்படித்தான் வாழ்கிறாள்... கணவனின் தலையில் ஏறி உட்கார்ந்திருக்கிறாள். சந்தோஷமாக வாழ்க்கை போகிறது.

ஒருநாள்... வயதானதாலோ, தேகப் பிரச்சினைகளாலோ கணவன் தலை சாய்ந்து விடுகிறான். அதாவது மரணம் சம்பவிக்கிறது. குடும்பமே அழுகிறது. குழந்தைகள் ஒன்றும் தெரியாமல் தன் பிதாவின்மீது விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.

தன்மேல் பிரேமம் வைத்தவன், இப்படி பிரேதமாகக் கிடக்கிறானே என அந்த இளம்பெண் கண்களிலிருந்து நதிகளை பிரசவித்துக் கொண்டிருக்கிற நேரத்தில்... அவளுக்கு என்ன தேவை? ஆறுதல் மொழிகள்தானே...

'கவலைப்படாதேம்மா... அவன் விதி அவனை கொண்டு போய்விட்டது. உன்னை நம்பி



குழந்தைகள் இருக்கிறார்கள். பாவம், அவர்களை நீ தான் நல்லபடியாக வளர்க்கவேண்டும்... அழு... அழுதுவிட்டு உன் குழந்தைகளோடு சந்தோஷமாக இரு...''- இப்படித்தானே சொல்லவேண்டும்?

அவளுக்கு வேதம் ஒரு மொழியை வழங்குகிறது பாருங்கள்.

'பத்யுர் ஜனித்வம் அபி சம்ப பூவ...'இப்படி தொடங்கும் மந்த்ரத்துக்கு என்ன அர்த்தம்?

'உன் ஆம்படையான் இறந்துவிட்டான். பாவம்... இனி உன்னை யார் காப்பாற்றுவது? இனி நீ அவன் வீட்டிலேயே இருந்தால் பாரம்தானே? சுமைதானே? உன்னை ஆம்படையான் குடும்பத்தினர் எப்படி தாங்குவார்கள்? அதனால்...

தொடர்பு உள்ளவை...

ஸோம: ப்ரதமோ விவிதே கந்தர்வோ விவித உத்தர: த்ருத்யோ அகநிஷ்டே பதி: துரீயஸ்தே மனுஷ்யஜா:

பொருள் : ஸோமன் முதலில் இந்த மணப்பெண்ணை அடைந்தான். பிறகு கந்தர்வன் இவளை அடைந்தான். உன்னுடைய மூன்றாவது கணவன் அக்நி. உன்னுடைய நான்காவது கணவன் தான் இந்த மனித ஜாதியில் பிறந்தவன்.

விளக்கம்: திருமணமாகப் போகும் மணப்பெண் முதலாவதாக ஸோமன் என்பவனுக்கு மனைவியாக இருந்தாள். இரண்டாவதாகக் கந்தர்வன் என்பவனுக்கு மனைவியாக இருந்தாள். மூன்றாவதாக அக்நிக்கு மனைவியாக இருந்திருக்கிறாள். நான்காவதாகத் தான் இப்பொழுது கல்யாணம் செய்து கொள்ளும் மாப்பிள்ளைக்கு மனைவியாகிறாள்.
அதாவது இதற்கு முன் மூன்று கடவுள்கள் இந்தப் பெண்ணை அனுபவித்து விட்டு விட்ட பின்பு தான் இப்பொழுது நான்காவதாக இந்த மணமகன் இவளை மனைவியாக ஏற்றுக் கொள்கிறான் என்பது விளக்கமாகும்.

இந்தப் பொருளைத் தரும் மேற்கண்ட மந்திரத்தைத் தான் புரோகிதப் பார்ப்பான் கலியாணத்தை நடத்தி வைக்கும் பொழுது சொல்கிறான்.

மந்திரம்: உதீர்ஷ்வாதோ விஷ்வாவஸோ நம ஸேடா மஸேத்வா அந்யா மிச்ச ப்ரபர்வ்யகும் ஸஞ்ஜாயாம் பத்யா ஸ்குஜ!

பொருள்: விசுவாசு என்னும் கந்தர்வனே இந்தப் படுக்கையிலிருந்து எழுந்திருப்பாயாக. உன்னை வணங்கி வேண்டுகிறோம். முதல் வயதிலுள்ள வேறு கன்னிகையை நீ விரும்புவாயாக. என் மனைவியைத் தன் கணவனுடன் சேர்த்து வைப்பாயாக.

மந்திரம்: உதீர்ஷ்வாத பதிவதீ ஹ்யேஷா விஷ்வா வஸீந் நமஸ கீர்ப்பிரீடடே அந்யா மிச்ச பித்ரு பதம வ்யக் தாகும் ஸதே பாகோ ஜநுஷா தஸ்ய வித்தி

பொருள்: இந்தப் படுக்கையிலிருந்து எழுந்திருப்பாயாக. இந்தப் பெண்ணுக்குக் கணவன் இருக்கிறான் அல்லவா? விசுவாவசுவான உன்னை வணங்கிக் கேட்டுக் கொள்கிறோம். தகப்பன் வீட்டிலிருப்பவளும், இதுவரை திருமணம் ஆகாதவளுமான வேறு கன்னிகையை நீ விரும்புவாயாக. அந்த உன்னுடைய பங்கு பிறவியினால் ஆகிவிட்டது என்பதை நீ அறிவாயாக.



விளக்கம்: கலியாணம் நடந்து நான்கு நாள்கள் தம்பதிகள் ஒரே படுக்கையில் படுக்க வேண்டும். ஆனால் அந்த சமயத்தில் அவர்கள் உடலுறவு கொள்ளக் கூடாது. நான்கு நாள் கழிந்த பிறகு மேற்கண்ட மந்திரங்களைச் சொல்ல வேண்டும். அதாவது கலியாணமான அந்த மணப் பெண்ணானவள் கந்தர்வன் என்னும் கடவுளோடு ஒரே படுக்கையில் படுத்திருக்கிறாளாம். அந்தப் பெண்ணைக் கலியாணம் செய்து கொண்ட இந்த மணமகன் தன் மனைவியுடன் படுத்து சுகம் அனுபவித்துக் கொண்டிருக்கும் கந்தர்வன் என்னும் கடவுளிடத்தில் தன் மனைவியைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமாய்க் கெஞ்சுகிறான்என்பதாகும்.

ஆதாரம்: விவாஹ மந்த்ராத்த போதினி.
ஆக்கியோர்: கீழாத்தூர் ஸ்ரீநிவாஸாச்சாரியார் பி.ஓ.எல்., (பக்கங்கள்:முறையே: 22-59)
http://www.yarl.com/forum3/index.php?showtopic=38763

திருமணம் நடத்தி வைக்கும் புரோகிதப் பார்ப்பனர் சமஸ்கிருதமாகிய வடமொழியில் தான் திருமணத்திற்குரிய மந்திரங்களைக் கூறுவார். அப்படித் திருமணங்களில் கூறப்படும் மந்திரங்களில் ஒன்று.

மணப் பெண்ணைப் பார்த்துக் கூறுவதாவது:
சோமன் (சந்திரன்) முதலில் இவளை அடைந்தான். பிறகு கந்தர்வன் இவளை அடைந்தான். உன்னுடைய மூன்றாம் கணவன் அக்னி. உன்னுடைய நான்காம் கணவன் மனித ஜாதியில் பிறந்தவன்.

சோமன் உன்னைக் கந்தர்வனுக்குக் கொடுத்தான். கந்தர்வன் அக்னிக்குக் கொடுத்தான். அக்னி தேவன் இவளுக்குச் செல்வத்தையும் மக்களையும் கொடுத்து, பிறகு எனக்குத் தந்தான்.

இவ்வாறு அர்த்தம் கொண்ட கீழ்க்காணும் சமஸ்கிருத ஸ்லோகங்களை மணமகனின் சார்பில் புரோகிதர் சொல்லுவார்.

'ஸோம: ப்ரதமோ விவிதே
கந்தர்வோ விவித உத்தர:
த்ருதீயோ அக்நிஷ்டே பதி:
துரீயஸ்தே மநுஷ்யஜா.
'ஸோமோ (அ)தத் கந்தர் வாய
கந்தர்வோ (அ)தத் அக்நயே
ரயிஞ்ச புத்ராகும்ச அதாத்
அக்நிர் மஹ்யமதோ இமாம்

## அகலிகை - அருந்ததி

மற்றொரு சடங்கு அம்மி மிதித்து அருந்ததி பார்த்தல் என்பதாகும்.

கௌதம முனிவரின் மனைவி அகலிகை இந்திரனிடம் சோரம் போனதால் அவளைக் கல்லாகச் சபித்தார் அம்முனிவர் என்பதை வைத்து, கற்புக்கரசியாக வாழ வேண்டும் என்பதை நினைவூட்டவே அது என்று கூறப்படுகிறது!



கற்பிழந்தவள், சோரம் போனவளை அந்த நாளில் காட்டி, அச்சுறுத்தித்தான் மணப் பெண்ணைக் கற்பு நெறியில் நிற்கச் செய்ய வேண்டும் என்பது மிகவும் விசித்திரமான ஒன்றல்லவா?

அருந்ததி என்பது ஒரு நட்சத்திரம் என்று கூறி அதனைப் பட்டப் பகலில் அதுவும் பந்தலுக்குள் மணமகளை நிறுத்தி 'அருந்ததி பார்த்தாயா என்று கேட்பதும், 'ஆம் என்று பொய் சொல்லப் பழக்குவதும் மிகவும் வேடிக்கையான ஒன்று அல்லவா?

சூத்திரர்களுக்கு மண உரிமை இல்லை என்பதற்கு மற்றொரு நடைமுறை ஆதாரம் என்னவென்றால், பார்ப்பனப் புரோகிதர் வந்து நடத்தி வைக்கும் வைதீக பழைய திருமணங்களில், மணமகனுக்கு உடம்பில் பூணூல் அணிவித்து பிறகுதான் திருமணத்தை நடத்தி வைப்பார்கள்.

மற்றொரு வேடிக்கை. அத்திருமணத்திற்கு சாட்சி அக்னியும் மற்றும் முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் மற்றும் கின்னரர்களும், கிம்புருடர்களும் மணமக்களில் எவருக்காவது ஒரு சிறு விவகாரம் ஏற்பட்டு நீதிமன்றத்துக்கு அவர்கள் சென்றால், இவர்களில் எந்த சாட்சியினர் வருவார்களோ!

**44/1.இறந்தகணவனுடன் மனைவியையும் உயிருடன் எரித்துவிடு**

உன் கணவனோட நீயும் போய்விடேன். அவன் சிதையிலேயே உன்னையும் வைத்து எரித்து விடுகிறோம் சரியா?

இறந்தகணவனுடன் மனைவியையும்உயிருடன் எரித்துவிடு. வேதம்.
அதனால்...? ஆமாம்மா புகுந்த வீட்டுக்கு பாரமாக கண்ணெல்லாம் ஈரமாக இனிமேலும் நீ வாழவேண்டுமா? அதனால் உன் கணவனோட நீயும் போய்விடேன்.அவன் சிதையிலேயே உன்னையும் வைத்து எரித்துவிடுகிறோம் சரியா?

அவளாக பற்றவைத்துக் கொள்வதை தீக்குளித்தல் என்கிறோம்

வேதம் அவளை தீக்குளிப்பாட்டியது. கணவனை இழந்த கைம்பெண்ணுக்கு இதுதான் கடைசி வழியானது. இந்த சதிச் செயல்தான் சுருக்கமாக 'சதி' என அழைக்கப்பட்டது.

இதை எதிர்த்துதான் ராஜா ராம்மோகன்ராய் போன்றவர்கள் பிற்காலங்களில் போராடினார்கள். ஏன்... சில வருடங்கள் முன்பு கூடராஜஸ்தான் மாநிலத்தில் ரூப்கன்வர் என்ற ஸ்த்ரீயை கணவனை இழந்தவுடன் தீவைத்து தீர்த்துக் கட்டியிருக்கிறார்கள்.

வேதத்தீயின் வெளிச்சம் காலங்காலமாக கனலடித்துக் கொண்டிருப்பதற்கு இது ஓர் உதாரணம். பெண்களைப் பற்றிய பல வகையான அலசல்களை வேதத்தை மையமாக வைத்து நாம் இதுவரை பார்த்தோம்.

இதுபோன்று 'சதி'ச் செயல்களால் எரிக்கப்பட்ட பெயர் தெரியாத அப்பாவி ஸ்திரிகளிடம் நாம் மன்னிப்பு கேட்டுக் கொண்டு அவர்களின் ஆத்மா சாந்தியடைய வேண்டிக்கொள்வோம்.

இப்படி நாம் நினைத்தாலும் பொதுவாகவே பெண்களின் ஆத்மாவை சாந்தியடைய விடாது போலிருக்கிறது

**44/2.மகன்கள் தன்தாயையே கொச்சைப்படுத்தும் திதிமந்திரம்..**



தன் தாயையே சந்தேகப்படும்படியான மந்த்ரத்தை திவசம் செய்யும் போது, வாத்தியார் சொல்லச் சொல்ல 'மகன்'கள் திரும்பச் சொல்கிறார்கள் அர்த்தம் தெரியாமலேயே.

இனியொரு முறை திவசம் செய்யும்போது இந்த மந்த்ரத்தை உச்சரிப்பார்களா?

உதடுபடக் கூட இப்படியொரு அர்த்தத்தை அறிவிக்கக் கூடாதென்று எச்சரிக்க வேண்டியவர்களை எச்சரிப்பார்களா?

இன்னொரு மந்த்ரம். இன்றும்... அம்மாவுக்கு சிரார்த்தம், திவசம், திதி செய்கிறேன் என ஆற்றங்கரைகளிலும், கடற்கரைகளிலும் பவ்யமாய் கடமைகளை நிறைவேற்றும் மகன்களை நாம் பார்ர்க்கிறோம்.

ஒரு வாத்யாரை பணம் கொடுத்து அமர்த்தி... அவர் மூலமாக, தன்னை விட்டுப் பிரிந்த தன் தாய்க்கு வருஷாவருஷம் கண்ணீருடன் அஞ்சலி செலுத்தும் அந்த மகன்கள் இதன் வாயிலாக அம்மாவின் அன்பையும் ஆசிர்வாதத்தையும் பரிபூரணமாக பெறுவதாக நம்பிக்கையோடு செய்கிறார்கள்.

ஆனால்...? "என்மே மாதா ப்ரலுலோபசரதிஅனனவ் வ்ரதா தன்மேரேதஹாபிதா வ்ருந்த்தாம் ஆபுரண்யஹா அவபத்யதாம்..."

நான் யாருக்குப் பிறந்தேன். என் அப்பா யாரென தெரியாது. மற்றவர்கள் சொல்வதால் நான் இன்னாருக்குத்தான் பிறந்தேன் என்பதை நம்பவேண்டியுள்ளது.

ஆனால் என் அப்பா யார் என்பது இன்னும் தெரியவில்லை. அது அம்மாவுக்குத்தான் தெரியும். அப்படிப்பட்ட அம்மாவுக்கு என் அஞ்சலியை கொண்டுபோய் சேர்ப்பீர்.

இப்படிப்பட்ட அர்த்தத்தை தன் அம்மாவையே சந்தேகப்படும் படியான மந்த்ரத்தை, வாத்தியர் சொல்லச் சொல்ல 'மகன்'கள் திரும்பச் சொல்கிறார்கள் அர்த்தம் தெரியாமலேயே.

*இந்த அர்த்தத்தை விளங்கிக் கொண்டவர்கள் இனியொரு முறை திவசம் செய்யும்போது இந்த மந்த்ரத்தை உச்சரிப்பார்களா?*

*உதடுபடக் கூட இப்படியொரு அர்த்தத்தை அறிவிக்கக் கூடாதென்று எச்சரிக்க வேண்டியவர்களை எச்சரிப்பார்களா?*

இதுவரை வேதகாலத்தில் பெண்களின் உயர்ச்சி, தாழ்ச்சி, பொதுவான நிலைமைகள் என்று சகலத்தையும் பார்த்தோம். வேதத்தில் சாகித்யம் பெற்ற பெண்கள் இருந்திருக்கிறார்கள்.

சாபம் பெற்ற பெண்களும் இருந்திருக்கிறார்கள். சரி. அதற்கடுத்து வேதம் வகுத்த வரையறைகளை கட்டளைகளாக நெறிமுறைகளாக மாற்றியமைத்துத் தந்த மநுஸ்மிருதியில் பெண்கள் எப்படி வாழ்ந்தார்கள். எப்படி வாழவேண்டும் என்று சித்தரிக்கப்பட்டிருக்கிறார்கள்?



முதலில் மநுஸ்மிருதி என்றால் என்ன? மநு என்பவர் வகுத்த ஸ்மிருதிகள் அதாவது தர்ம நெறிகள் மது ஸ்மிருதி எனப்படும். மநு என்பவர் யார்? ஒரு மநு அல்ல இரண்டு மநு அல்ல கிட்டத்தட்ட பதினெட்டு மநுக்கள் இருக்கிறார்கள். மநு என்னும் பொதுவான பெயருக்கு கடவுளின் கட்டளைப்படி சிருஷ்டியின் போது பூமியை காக்க அவரால் நியமிக்கப் பட்டவர்தான் மநு என்கிறார்கள்.

அதாவது மனிதர்கள் இப்படித்தான் வாழவேண்டும் என்று நெறிகளை திட்டமிட்டு வகுக்கத்தான் கடவுளால் மநு அனுப்பப்பட்டார் மநு என்ற சொல்லில் இருந்துதான் மனுஷன் என்ற பதமும் வந்தது என்றொரு மொழிக் குறிப்பும் வழங்கப்பட்டு வருகிறது.

சரி... நாம் பார்க்கும்போது மநு யார்? வேதத்தை எளிமையாக்கி அவர் வகுத்த தர்மசாஸ்திரத்தில் பெண்களைப் பற்றி என்ன சொல்கிறார்?

உங்களுக்காக ஒரு காட்சியை கட்டவிழ்த்து விடுகிறேன். மனக்கண்ணால் அதைப் பாருங்கள். வீட்டு வாசலில் சின்னப் பெண்குழந்தை எட்டு வயதிருக்கும் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

விளையாடிக் கொண்டிருக்கிறாள். மரப்பாச்சி (மரப்பாச்சி என்றால் இன்றைய நகர நாகரிகம் வளர்ந்துவிட்ட சூழலில் உங்களுக்குப் புரிகிறதா. மரத்தால் செய்யப்பட்ட உருவப் பொம்மைகள் தான்) களை வைத்துக் கொண்டு மழலை மாறாத அந்தக் குழந்தை விளையாடிக் கொண்டிருக்கும் வேளையில்...திடீரென அந்தப் பெண் குழந்தையை...“வாம்மா... நேரம் ஆகிக்கொண்டே இருக்கிறது. சீக்கிரம் தயாராக வேண்டும். பார்... எல்லோரும் வந்துவிட்டர்கள்.

இப்போதே குளித்து முடித்து சீவி சிங்காரித்துக் கொண்டால் தானே தாமதம் ஆகாமல் சீக்கிரம் ஆரம்பிக்கலாம் வா.. வா...”என்று அழைக்கிறார்கள் அவளது அம்மாவும் அப்பாவும்.“இரும்மா.. விளையாடிட்டு இருக்கேன்... இன்னும் கொஞ்ச நேரம் விளையாடறேன்.”- ஆனால் மநுஸ்மிருதியின் விளையாட்டு இங்கேதான் ஆரம்பிக்கிறது.

**45.எட்டுவயதுப் பெண் மணமகளா? குழந்தைக்குக் கல்யாணமா?**
மகளை எட்டு வயதுக்குள் திருமணம் செய்து கொடுத்துவிடு.

எட்டு வயதுக்குள் பெண்ணுக்கு கல்யாணம் பண்ணாமல் அவள் ருதுவாகித்தான் கல்யாணம் பண்ணி வைக்கிறான் என்றால் தகப்பனுக்கு மிக அசிங்கமான குமட்டுகின்ற தண்டனை -- மநு.

எட்டுவயது பெண் குழந்தை மரப்பாச்சியை வைத்து விளையாடிக் கொண்டிருக்கின்றது. இடையில் மநு ஸ்மிருதி விளையாட ஆரம்பித்துவிட்டது என்றேனே.. மநு எப்படி விளையாடும்?...

மரப்பாச்சி வைத்து விளையாடிக் கொண்டிருந்த அந்த பெண்குழந்தையை வைத்துதான் மநு விளையாடியது!... என்ன சொல்கிறார் இவர்?... என்ற கேள்வி எழுகிறதா?...

ஆமாம்... விளையாடிய குழந்தையை சீவி சிங்கரித்து அம்மா கூப்பிடுகிறாளே எதற்கு? தலைவாரி பூச்சூடி உன்னை... பாடசாலைக்கு போ என்று சொன்னாள் உன் அன்னை என்ற அர்த்தத்திலா?



கிடையவே கிடையாது. அந்த எட்டு வயது சுட்டியை மணமேடைக்கு அழைத்துச் செல்கிறார்கள் எதற்கு?... மணப் பெண்ணின் பக்கத்தில் இப்போது சின்னச் சின்னக் குழந்தைகளை யெல்லாம் உட்கார்த்தி வைத்து அழகு பார்க்கிறார்களே... அதற்காகவா?...முற்றிலும் கிடையாது... மணப் பெண்ணே அந்த எட்டு வயது சுட்டிதான்.

என்னது... எட்டு வயதுப் பெண்தான் மணமகளா? குழந்தைக்குக் கல்யாணமா? இதுதா மநுவின் விளையாட்டு மநுவின் கட்டளைகள் முன் சின்னப் பெண் குழந்தைகள் வெறும் மரப்பாச்சிகள்.

பெண்கள் மீது மநு தொடுத்த முதல் போர் இங்குதான் ஆரம்பிக்கிறது.

வேதம் பெண்களை எவ்வளவு கட்டுப்பாடுகளுக்குள் வைத்திருந்தாலும் அவள் ருதுவான பின்னர்தான் திருமணம்.

மநுவர்க்கம் என்றெல்லாம் சடங்குகளைப் பின்னியது....ஆனால் மநு அப்படியல்ல... எட்டு வயதுக்குள்ளேயே பெண்களை கெட்டியாக பிடித்துக் கொண்டது மநு...ப்படி பெண்களுக்கு பொதுவான பெயர் க்ருஹிணி அதாவது வீட்டுக்காரி வீடுதான் அவள் உலகம்.

வீட்டுக்குள்தான் அவள் இருக்கவேண்டும். நான் முன்பு சொன்னேனே. வாசலில் விளையாடிக் கொண்டிருந்தாள் என்று. திருமணம் வரைக்கும் வீட்டு வாசலில் விளையாடலாம்.

அதன்பிறகு கல்யாணமாகி முழு க்ருஹிணி ஆன பின்னர் வீடுதான் அவள் சகலமும் கல்யாணத்தை மநு கன்னிகா தானம் என்கிறது. கன்னிகையை தானம் செய்தல் கன்னிகாதானம்.

கன்னிகா என்றால் அதாவது கன்னிகை என்றால்? மநு தர்மப்படி எட்டு வயது பெண்கள் அனைவரும் கன்னிகைகள், பின்... கன்னிகைகளுக்கு கல்யாணம் பண்ண வேண்டும்.

இன்னொருவன் கையில் பிடித்துக் கொடுக்கவேண்டும். அதாவது அவனிடத்திலே இந்த கன்னிகையை தானம் செய்யவேண்டும். இது கன்னிகாதானம்.இதைத்தான்...'அஷ்ட வருஷா பலேத் கன்யா...' என்கிறார் ஆதிபுருஷர் மநு.

இதில் இன்னொன்று... எட்டு வயது தான் கன்னிகைக்குரிய வயது. எட்டு வயது கொஞ்சம் தாண்டினாலும் அவள் கன்னிகைப் பருவத்தை கடந்து விடுகிறாள். அதனால்... அதன் பிறகு அவளுக்கு செய்வது கன்னிகாதானமல்ல. அதாவது கல்யாணமல்ல.

அதனால் எட்டு வயதுக்குள் அவளை இன்னொருத்தன் கையில் பிடித்துக் கொடு...கல்யாணத்தில் இப்போது நிச்சயதார்த்தம் என ஒரு சடங்கு வைக்கிறார்கள்.

சிலபேர் இதை நிச்சயதாம்பூலம் என்று சொல்கிறார்கள். ஏதோ ஒன்றை சொல்லிவிட்டுப் போங்கள் ஆனால்... இதன் அர்த்தம் என்ன? முன்பு எப்படி நடந்தது'... என்று தெரிந்து கொள்ள வேண்டாமா?...

கிராமப் புறங்களில் சந்தையிலே ஆட்டையோ, கோழியையோ, மாட்டையோ விற்பதாக வைத்து... பக்கத்திலே துண்டை கையால் மூடிக் கொண்டு விலை பேசுகிறார்கள் தெரியுமா? இதன் பேர் தான் நிச்சயதார்த்தம்.



இன்னொரு முக்யமான விஷயம். இந்த நிச்சயதார்த்தத்தில் மணப்பெண் மட்டும்தான் கலந்து கொள்வாள். மாப்பிள்ளைக்கு அங்கு வேலையே கிடையாது. இது வெறும் லௌகீகச் சடங்கு... அதாவது மந்த்ரத்துக்கு இடமே இல்லை.ஆனால்... இன்று நிச்சயதார்த்தம் என்ற பெயரில் திருமணத்துக்கு சமமான ஒரு சடங்கை create பண்ணிவிட்டார்கள்.

வாத்யார்களைக் கேட்டால் ' எல்லாம் பெரியவாள்' சொன்னது...' என்கிறார்கள்.என்னைக் கேட்டால் இப்போது கல்யாணம் பண்ணி வைக்கும் புரோகிதம் பண்ணி வைக்கும் வாத்தியார்களையெல்லாம் ஒரு சிறைக்குள் போட்டு... அதாவது மறைச்சிறை அதுதான் வேதச்சிறை.

அங்கே அவர்களுக்கு... உண்மையான சடங்கு சம்ப்ரதாயங்களைக் கற்றுத் தரவேண்டும். வேதத்தில்... ஸ்மிருதிகளில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்பதை அர்த்தத்தோடு விளக்கி அவர்களுக்குப் பயிற்சி கொடுத்து அதன்பிறகு அவர்களை வெளியே அனுப்பவேண்டும்.சரி சரி... நான் என்ன சொன்னேன்?

எட்டு வயதுக்குள் அவளை இன்னொருத்தன் கையில் பிடித்துக்கொடு. அப்படியா.. 'மநுபிரபோ என்னால் முடியவில்லை. என் பெண் குழந்தையை கட்டிக் கொள்ள எந்த பொடிப் பயலும் கிடைக்கவில்லை. அவளுக்கும் எட்டு வயது கடந்து விட்டது. இப்போது ருதுவாகி விட்டாளே...'இப்படியாக ஒரு ஏழைத் தகப்பன் மநுவிடம் மன்றாடுகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். மநுவிடம் வாய்வழியாக மனு போடுகிறான் எனக் கருதிக்கொள்ளுங்கள்.

அவனுக்கும்... அவனைப் போன்ற அப்பாக்களுக்கும் மநு பதில் தருகிறார்.

"பாணிக்கிரஹாப நிகா மந்த்ராஹாகன்யா ஸ்வே ப்ரதிக்ஷதஹா...நகன்யாஸீ..."

இது பதில் அல்ல தண்டனை. *எட்டு வயதுக்குள் பெண்ணுக்கு கல்யாணம் பண்ணவில்லை. அவள் ருதுவாகித்தான் கல்யாணம் பண்ணி வைக்கிறான். அவன் என்ன செய்ய வேண்டும் தெரியுமா?..*

**46.மகளுடைய மாதவிடாயை அருந்து????.**

மகளுடைய மாதவிடாயை அப்பாவாகிய நீ வீணாக்காமல் அருந்த வேண்டும்.

எட்டு வயதுக்குள் உன் மகளை திருமணம் செய்து கொடுக்காவிட்டால் ருதுவாகி கல்யாணமாகாமல் அவள் இருக்கும் காலம் வரை... உன் பெண்ணுடைய பஹிஷ்டை காலத்தில் அதாவது மாதவிலக்கு காலத்தில் வெளியேற்றப்படுமே கழிவு அதை அப்பாவாகிய நீ வீணாக்காமல் அருந்த வேண்டும். இப்படியொரு தண்டனையை பெறுகிறோமே என நீ வருந்த வேண்டும். அதற்காகத்தான் இந்த தண்டனை.

எழுதுவதற்கு என் பேனா கூசுகிறது. இப்படிப்பட்ட ஒரு கருத்தை சுமந்து கொண்டிருப்பதற்காக சமஸ்கிருத பாஷையே கூச்சப்பட வேண்டும்.

கொடுமையான தண்டனை... அதிலிருந்து தப்பிக்க 'வரும்படி' தருகின்ற பரிகாரம்.

இந்து மதம் எங்கே போகிறது ? பகுதி 46.



எட்டு வயதைத் தாண்டி, பெண்ணுக்கு கல்யாணம் செய்து வைக்கின்ற அப்பா... மநுவிடம் போட்ட மனு என்ன ஆனது?... இப்போது மந்திரி பிரதானிகளிடம் மக்கள் கொடுத்த மனு எப்படி குப்பைத் தொட்டிக்குப் போகிறதோ அதே மாதிரிதான்.

அதோடு நின்றால் பரவாயில்லை. கூடவே... நீ ஏனடா உன் பெண்ணுக்கு எட்டு வயது வரை கல்யாணம் செய்யாமல் இருந்தாய். கன்னிகா தர்மத்தை கால்களில் போட்டு மிதித்து விட்டாயே... இது பாவம் என்று உனக்குத் தெரியாதா? இந்த பாவத்துக்கு தண்டனை என்ன என்று உனக்கு தெரியாதா?... என மநு ஸ்மிருதி அந்த அப்பாவி அப்பாக்களை பார்த்து அதட்டுகிறது.

இக்கால அப்பாக்களுக்கு தெரியாமல் இருக்கலாம். அக்கால அப்பாக்களுக்கு மநு வகுத்த தண்டனைகள் தெரியும். அதனால் அவர்கள் ஆடிப் போயிருந்தார்கள். அந்த தண்டனையை அனுபவிப்பதை அவர்களால் கனவில் கூட நினைத்துப் பார்க்க முடியவில்லை.

அந்த அசிங்கத்தை செய்வதை விடவும் தங்கள் ஆயுளையே முடித்துக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்து விட்டார்கள் அந்த அப்பாக்கள்.அப்படிப்பட்ட அளவுக்கு அது என்ன தண்டனை?

“மாஸி மாஸி ரஜஸ்தஸ்யஹா
பிதா பிபதி ேகானிதம்...”

*இந்த ஸ்மிருதி விதியை எழுதுவதற்கு என் பேனா கூசுகிறது. இப்படிப்பட்ட ஒரு கருத்தை சுமந்து கொண்டிருப்பதற்காக சமஸ்கிருத பாஷையே கூச்சப்பட வேண்டும். அந்த விதியின் விளக்கத்தை உங்களுக்கு தமிழில் நான் சொல்லும்போது... தமிழின் தரம் கெட்டுவிடக் கூடாதே என நான் பயப்படுகிறேன்.*

அது என்னவென்றால்...அடே கையாலாகாத அப்பா... உன் பெண்ணை எட்டு வயதிலேயே இன்னொருவனுக்கு நீ பிடித்துக் கொடுக்கவேண்டும். தவறிவிட்டாய். அவள் இப்போது ருதுவாகி விட்டாள்.

ருதுவான பின் மூன்று வருஷத்துக்குள் நீ அவளுக்கு மணமுடிக்கவில்லையென்றால்... அவளாகவே சுயம்வரம் நடத்தி தன் கணவனை தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஆனாலும், ருதுவாகும் வரை நீ அவளை உன் வீட்டிலேயே வைத்திருப்பது எப்படிச் சரியாகும்?

*அதனால் உனக்கு இதோ தண்டனை. ருதுவாகி கல்யாணமாகாமல் அவள் இருக்கும் காலம் வரை... உன் பெண்ணுடைய பஹிஷ்டை காலத்தில் அதாவது மாதவிலக்கு காலத்தில் வெளியேற்றப்படுமே கழிவு அதை அப்பாவாகிய நீ வீணாக்காமல் அருந்த வேண்டும். இப்படியொரு தண்டனையை பெறுகிறோமே என நீ வருந்த வேண்டும். அதற்காகத்தான் இந்த தண்டனை.*

பெற்ற மகளிடம் அப்பா செய்ய வேண்டிய காரியமாக மநு சொன்னதை தெரிந்து கொண்டீர்களா? எழுதி முடித்தபின் என் பேனாவுக்கு குமட்டிக் கொண்டு வருகிறது. மரண தண்டனை விதித்து தீர்ப்பு எழுதிய பேனாவை முனை குத்தி முறித்துப் போட்டு விடுவதைப் போல... இந்த பேனாவையும் தூக்கி எறிந்து விடலாமா என தோன்றுகிறது.

அடப்பாவிகளா?... வறுமையாலோ, ஜாதக தோஷத்தாலோ.. பெண்ணின் குறைபாடுகளாலோ கல்யாணம் தாமதமாகி எத்தனை பெண்கள் வீட்டில் இருக்கிறார்கள். ருதுவான பிறகு தான்



கல்யாணமே பண்ணவேண்டும் என்பது பொதுவான விழிப்புணர்வாளர்களின் கருத்து.

அதையும் தாண்டி மகளின் மாத விலக்கை பருகச் சொல்கிற மநு எத்தனை கடுமை?... கொடுமை?... எரிகின்ற தீயில் எது நல்ல தீ என்பது மாதிரி... இந்த தண்டனையிலிருந்து தப்பிக்க இன்னொரு பரிகாரத்தையும் அருள்கிறார் மநு. அப்படியா? என்ன பரிகாரம்?...

உன் மகள் ருது காலத்தில் அவளது ப்ரம்மஹத்தி தோஷத்தை சாப்பிடவேண்டும் என்று சொன்னேன் இல்லையா?...

அதிலிருந்து நீ தப்பிக்க வேண்டுமானால் அவளுடைய ஒவ்வொரு பஹிஷ்டையின் (மாதவிடாய்) போதும் ஒரு பசுவை பிராமணனுக்கு தானம் பண்ணிவிடு. இந்த கோதானம் தான் உனக்கு பரிகாரம்.

அதாவது... மகள் ருதுவாகி கல்யாணம் ஆகும் வரை அவளுக்கு எத்தனை பஹிஷ்டை நேருகின்றதோ... அத்தனை பசுக்களை தானம் பண்ணவேண்டுமாம். இப்போது புரிகிறதா... எங்கு போய் எங்கு வருகிறார் மநு என்று?

அந்த கோதானம் பண்ணுகிற செலவில் கல்யாணத்தையே நடத்தி விடலாம் என்கிறீர்களா?

கொடுமையான தண்டனை... அதிலிருந்து தப்பிக்க ‘வரும்படி’ தருகின்ற பரிகாரம். சரி.. கோதானம் கொடுத்தோ, கொடுக்காமலோ கல்யாணம் ஆகிவிட்டது.

அடுத்த ஒருவருஷம் வரை... அவளும் அவனும் தினமும் வீட்டில் ஔபாசனம் பண்ணவேண்டும். அதென்ன ஔபாசனம்

அக்னி காரியம் தம்பதிகள் தினமும் அக்னி வளர்த்து பண்ணவேண்டிய ஹோமம் இந்த ஒரு வருடம் வரை... அவள் கணவன் வீட்டில் இருந்தாலும்... கணவனுக்கு பணி விடைகள் செய்தாலும்... ஒரே மஞ்சத்தில் படுத்தாலும் தேக ஸம்பந்தம் கொள்ளக்கூடாது.

ஒரு வருஷம் கழித்து ஔபாசன கடமைகளை முடித்த பின்னர்தான் சாந்தி கல்யாணம்.

இதற்கிடையில்... ஒரே மஞ்சத்தில் படுத்திருக்கும் இருவரும் ஒன்றுசேரக் கூடாது என்பதற்காக மஞ்சத்தில் அவளுக்கும் அவனுக்கும் இடையே ஒரு தர்பை (புல்)யை கிள்ளிப் போடுவார்கள். அந்த தர்பை தான் கந்தர்வன். அவன்... இருவரும் இணையாமல் பார்த்துக் கொள்வானாம். இப்போது இன்னமும் சிலர் சாஸ்திரத்துக்காக இதைத் தொடருகிறார்கள் என்பது ஹாஸ்யம்.

இப்பழக்கம் ஆதிகாலத்தியது. க்ருஹ சூத்திரம் சொல்வது. இதன்படி, வகுத்தவர்களாலேயே நடக்க முடியவில்லை. என்ன ஆனது?... அந்த ஒரு வருஷம்... 6 மாசங்களானது... அப்போதும் கஷ்டம்... என்னடா இவ்வளவு நாள்கள் ஆகிறதே என்று... கொஞ்சமாய் குறைந்து மூன்று மாதங்கள் ஆனது.
அடுத்தடுத்து வந்த தலைமுறையினருக்கு மூன்று மாதமே பெருங்காலமாக இருந்தது. அப்புறம் பார்த்தார்கள். 15 நாள்கள் ஆக்கினார்கள். அதுவும் தேய்ந்து 7 நாள்களானது.

பின் கல்யாணம் ஆகி 3 நாள்கள் கழித்து... இப்போது காலையில் கல்யாணம் ராத்திரி சாந்தி கல்யாணம்.



நமது சௌகரியத்துக்கேற்ப சாஸ்திரத்தை கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆனதை போல் ஆக்கி விட்டோம் என்பதற்காக சொல்ல வந்தேன்.

சரி... மநு சொன்னபடி பால்ய கல்யாணம் பண்ணிக் கொண்டவர்கள் யாரையாவது காண்பிக்க முடியுமா?

**47பிராமணபெண்ணும் ஒரு சூத்திரச்சிதான். கல்யாணத்தின்போது சீதைக்கு வயது ஆறேதான்.**

பெண்களும் சூத்திரர்களும் ஒன்றுதான்.பிராமண பெண்ணும் ஒரு சூத்திரச்சிதான். அதனால் அவளுக்கு வேதத்தை படிக்கும் அருகதை கிடையாது. வேதத்தை அவள் தொடக்கூடாது. அவள் கண்படக்கூடாது. வேதம் ஓதும் ஓசைகூட அவள் காதில் படக்கூடாது.

அதனால் பெண்களுக்காகவும், சூத்ரர்களுக்காகவும் புராணங்கள் சொல்லி வைத்திருக்கிறார்கள். அதை கேளுங்கள். வேதத்தின் பக்கம் வராதீர்கள்.

கல்யாணத்தின்போது சீதைக்கு வயது ஆறேதான்.

மநு தர்மப்படி எட்டு வயசுக்கு முன்பே கல்யாணம் செய்து கொண்ட ஒரே ஒரு ஜோடியையாவது காட்ட முடியுமா?

என் காலத்தில் என் கண்ணெதிரே எத்தனையோ பெண்களுக்கு மநு மணங்கள் நடந்திருக்கின்றன.

அவர்களை எனக்குத் தெரியும். உங்களுக்குத் தெரியுமோ? தெரிந்திருக்க வாய்ப்பில்லையே?

அப்படியென்றால் எல்லோருக்கும் தெரிந்த மிகப் பிரமாண்டமான ஒரு ஜோடியை பிடித்து உங்களுக்கு காட்டவேண்டும். அதுவும் மநுமணம் செய்துகொண்டதாக , அதாவது பால்ய திருமணம் செய்துகொண்ட ஜோடியாக இருக்கவேண்டும். அல்லவா?

சரி, இதோ உதாரணம். ராமர் சீதா தெரியுமா? அவர்கள்தான்.சற்று முன்பே சொன்னேனே. பெண் குழந்தை மரப்பாச்சியை வைத்து விளையாடிக் கொண்டிருக்கும். கூப்பிட்டு... கல்யாணம் பண்ணி வைத்துவிடுகிறார்கள் என்று. அதேபோல்தான் ஜனக மகாராஜனின் புத்திரியான சீதாதேவி விளையாடிக் கொண்டிருந்த பருவத்திலேயே கல்யாணத்தை முடித்துவிட்டார்கள்.

கல்யாணத்தின்போது சீதாவுக்கு 6 வயது. ராமனுக்கு 12 வயது.என்ன சொல்கிறார் இவர். கம்பராமாயணத்தலே கம்பர் வேறு மாதிரியல்லவா சொல்லியிருக்கிறார்.

“ராமரை சீதை பார்த்த போது, சீதையின் தேகம் வெட்கத்தாலும் வெப்பத்தாலும் சூடேறியது. அவள் படுத்திருந்த பஞ்சு மஞ்சம் இந்த சூடு தாங்கமுடியாமல் எரிய ஆரம்பித்தது. விரகச் சூடு தாங்காமல் அவளது பொங்கிய மார்பகம் அனல் கக்கியது.

சீதை தன் கழுத்தில் போட்டிருந்த கருகமணி மாலைகள் இந்த சூடு தாங்க முடியாமல் அறுந்து உதிர்ந்து, கீழே உருண்டோடுகின்றன. ராமனை... இப்படியாக சீதையை



பாதித்தாள். அவனது கனவுகளை சோதித்தாள்" என்றல்லவா கம்பர் எழுதியிருக்கிறார்.

அப்படிப் பார்த்தால் சீதைக்கு கல்யாண பயத்தில் வயதுக்கு வந்த வயதாகத்தானே இருக்க முடியும் என்று நமக்கு நியாமான சந்தேகம் எழலாம்.

கம்பர்.. தமிழ்ச் சூழலில் கல்யாண பருவத்தில் சீதையை குழந்தையாக காட்டவேண்டாம் என நினைத்திருக்கலாம்.
ஆனால், வால்மீகி ராமாயணத்தில்,

தோஷாத் தாரக்தியாம்பதி
சிந்தையா மான தர்மாத்மா
சோபாத்யாய சபாந்த்த வஹா

என்கிறார் ராமன். சின்னப் பிள்ளையாக இருக்கும்போது அவனுக்கு 12 வயது ஆகும்போதே அவனது கல்யாணத்தைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தார் தசரத சக்கரவர்த்தி.

விஸ்வாமித்ரரோடு ராமன் ஜனகராஜனின் அரண்மனைக்கு வரும்போது தனுஸ் அதாவது வில்லை ஒடிப்பவர்களுக்கு சீதையை திருமணம் செய்து தருவேன் என்கிறான் ஜனகன். ராமன் வில்லை ஒடித்தான். ஒடித்துவிட்டு நான் சீதையை கல்யாணம் செய்வதற்காக வில்லை ஒடிக்கவில்லை என் பலத்தை நிறுவுவதற்காகவே ஒடித்தேன் என சொல்கிறான். அதன்பிறகு தசரதன் சொல்லி பிறகு ராம சீதா கல்யாணம் நடக்கிறது.

கல்யாணம் எப்படி வேண்டுமானாலும் நடக்கட்டும். ஆனால், கல்யாணத்தின்போது ராமனுக்கு 12 தான். சீதைக்கு வயது ஆறேதான். இதுதான் வால்மீகி காட்டும் வயது.

வனவாசத்தின்போது சீதாதேவி ஆஞ்சநேயரிடம் சொல்கிறாள்.
"அஷ்டாதஸ வருஷானி மம ஜென்மணி கன்யதே
நான் என் 18-ஆவது வயதில் வனவாசம் செய்ய வேண்டியதாயிற்று. எனது 6-ஆவது வயதில் கல்யாணமாகி 12 வருடம் ராமரோடு வாழ்ந்தேன். அதன்பிறகுதான் காடு புகும்படி விதி விளையாடிவிட்டது." என சீதாதேவி ஆஞ்சநேயரிடத்திலே சொல்கிறார்.

இன்னொரு இடம் சீதா அக்னிப் பிரவேசம் தீக்குளிக்கும் முன்பு ராமனைப் பார்த்து கேட்கிறாள்.
'நப்ரமாணி கிரதப்மாணி
பால்யே பாலேன பீடிதஹ்"
ராமா என்னையே நீ சந்தேகப்படுகிறாயே?

குழந்தைப் பருவத்திலேயே என் கையை இறுக்கமாக பிடித்தவனாயிற்றே.
அப்படியிருந்துமா என்னை நீ புரிந்துகொள்ள வில்லை... என்கிறாள்.
இதிலிருந்து சீதாதேவியின் கல்யாணம் அவளது 6 வயதில் அதாவது மநு ஸ்மிருதிக்கு கட்டுப்பட்ட கல்யாணமாகவே நடந்திருக்கிறது என்பது புரிகிறது. உதாரணம் சொல்லியாகிவிட்டது.

கல்யாணம் என்றதுமே இக்காலத்தில்
"மாங்கல்யம் தந்து நானே நவஜீவன கேது நாம்"
என்ற Trade Mark மந்த்ரம்தான் பலருக்கு ஞாபகம் வரும். இதற்கு என்ன அர்த்தம்?



“அடியே இந்த புனிதமான நூலை உன்னுடைய கழுத்தில் கட்டுகிறேன். இது இருந்தால்தான் உன்னை என் மனைவி என்று இந்த ஊர் - உலகம் நம்பும். அதற்காகத்தானே தவிர வேறெதற்காகவும் இல்லை.” இதுதான் இந்த மந்த்ரத்தின் அர்த்தம்.

நான் சில பல அத்யாயங்களுக்கு முன்னரே சொல்லியிருந்தேனே. பனை ஓலையில் பெண்ணின் பெயரை எழுதி இவள் இவனுக்கு அடிமை என எழுதி அதை நூலில் கோர்த்து கழுத்தில் கட்டுவார்கள். பனை - தால் அதனால்தான் அதற்கு தாலி என்று பெயர் வந்தது என சொல்லியிருந்தேன்.

அப்படிப்பட்ட Symbol தான் தாலி. அதாவது ஊருக்கு தெரியவேண்டும். நீதான் என் மனைவி என்று. அதற்காக கட்டுகிறேன் என்பதுதான் அதன் அர்த்தம். இப்பழக்கம் பிற்காலத்தில் வந்தது. இந்த மந்த்ரமும் பின்னால் சேர்ந்ததுதான்.

மநு-ப்படி கல்யாணம் ஆன பெண்களும், இப்போது கல்யாணம் ஆகாத பெண்களும் ஒன்றுதான். அடுத்ததாக பொதுவாகவே பெண்களுக்கு வித்யா ரீதியாக என்ன வாய்ப்புகளை கொடுத்தது மநு?....

வேதத்தில் பெண்கள் அத்யயனம் செய்ததையும் சம்ஸாதம் நடத்தியதையும் பார்த்தோம். ஆனால், மநு உறுதியாக உரத்துச் சொன்னது.

பெண்களும் சூத்திரர்களும் ஒன்றுதான். பிராமண பெண்ணும் ஒரு சூத்திரச்சிதான். அதனால் அவளுக்கு வேதத்தை படிக்கும் அருகதை கிடையாது. வேதத்தை அவள் தொடக்கூடாது. அவள் கண்படக்கூடாது. வேதம் ஓதும் ஓசைகூட அவள் காதில் படக்கூடாது.

அதனால் பெண்களுக்காகவும், சூத்ரர்களுக்காகவும் புராணங்கள் சொல்லி வைத்திருக்கிறார்கள். அதை கேளுங்கள். வேதத்தின் பக்கம் வராதீர்கள்

**48/1.பெண்களுக்கு கல்வி கூடாது. வெளியில் செல்லவும் கூடாது.**
ஆக... மநு-ப்படி பெண்கள் எல்லாருமே சூத்ர ஜாதிதான். பிராமணப் பெண்கள், வைஸியப் பெண்கள், க்ஷத்ரியப் பெண்கள், சூத்திரப் பெண்கள் என்றெல்லாம் பேதம் கிடையாது.

அதனால்... சூத்ரன் வெளியே உழைப்பதைப்போல சூத்ரச்சியான பெண்கள் வீட்டுக்குள்ளேயே உழைக்கவேண்டும்

இத்தொடரில் முதல் சில அத்தியாயங்களில் நான் சொன்னது ஞாபகம் வருகிறதா? வேத காலத்தில் ஆரியர்கள் இந்தியாவுக்குள் வரும்போது உடன் வந்த பெண்களின் எண்ணிக்கை மிகக்குறைவு என்று குறிப்பிட்டிருந்தேன். இன்னும் சொல்லப்போனால் பெண்களே வரவில்லை என்றும் கருதலாம்.

அப்படிப்பட்ட நிலையில்...

இங்குள்ள எல்லா பெண்களையுமே சூத்திரர்களாக பாவித்தது மநு. இன்றுகூட... என்னை சந்தித்து வேத விளக்கங்கள் பெற வரும் பிராமணப் பெண்களிடம் 'நீ சூத்ரச்சி... உன் அம்மா சூத்ரச்சி... உன் பெண்ணும் சூத்ரச்சி...' என்று கூறுவேன்.

உடனே அவர்கள் மெல்லியதாக கோபப்பட்டு 'எப்படி?' என்பார்கள். நமது ஸ்மிருதியிலேயே



இதுதான் விதி என சொன்னதும் 'அப்படியா?' என்ற ஒரு வார்த்தையோடு அடங்கிப் போய் விடுகிறார்கள்.

ஆக... மநு-ப்படி பெண்கள் எல்லாருமே சூத்ர ஜாதிதான். பிராமணப் பெண்கள், வைஸியப் பெண்கள், க்ஷத்ரியப் பெண்கள், சூத்திரப் பெண்கள் என்றெல்லாம் பேதம் கிடையாது. அதனால்... சூத்ரன் வெளியே உழைப்பதைப்போல சூத்ரச்சியான பெண்கள் வீட்டுக்குள்ளேயே உழைக்கவேண்டும்.

அதாவது...
'ஸ்த்ரீனாந்த சூத்ர ஜாதினாம்...''
பெண்கள் அனைவரும் சூத்ர ஜாதி.
'நஸ்த்ரீ சூத்ர வேத மத்யதாம்...'

அதனால்... பெண்களும், சூத்ரர்களும், வேதங்களை ஓதக்கூடாது. வேத ஓசையை கேட்கக்கூடாது. யாகங்கள் நடந்தால்... அதில் ஓதப்படும் வேத மந்த்ரங்களை கேட்காமல் இருப்பதற்காக புடைவையால் காதை மூடிக் கொள்ளவேண்டும்.

பெண்களுக்கு கல்விக்கான வாய்ப்பே கிடையாது. அவர்கள் வெளியில் போகவும் முடியாது அப்புறம்...?

'ஸ்த்ரீதாம் உபயநயனஸ்தானே
விவாஹம் மநு ரப்ரவீத்...''

அதாவது பெண்களுக்கு உபநயனம் உள்ளிட்ட எவ்வித மந்த்ர சம்ஸ்காரங்களும் கிடையாது.

**48 – 2.பூணூல், உபநயனம் என்றால் என்ன? மந்த்ரங்கள்ஓதி பணம் பண்ணுவதற்காகத்தான்.**
பூணூலை மையமாகவைத்து கயிறுவிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

பூணூல் போட்டவன்தான் பார்ப்பனன் என்றும் இந்த நூலை மையமாக வைத்து கயிறு விட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இதையும் சடங்காக்கி மந்த்ரங்கள் ஓதி பணம் பண்ணுவதற்காகத்தான்

இந்து மதம் எங்கே போகிறது ? பகுதி
உபநயனம் என்பது பிராமண ஆண்களுக்கு நடக்கும் முக்கியமான சடங்கு என்றும், பூணூல் போட்டவன்தான் பார்ப்பனன் என்றும் இந்த நூலை மையமாக வைத்து கயிறு விட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

உண்மையில் பூணூல் என்ற பழக்கமே கிடையாது. முற்காலங்களில் யாகம் பண்ணும்போது வஸ்திரத்தை குறுக்காக அணியவேண்டும் என்ற விதி இருந்தது. வஸ்திரம் சரியாக வரவில்லை என்பதால் அதை சிறிய அளவில் நூலாக்கி போட்டுக் கொண்டார்கள்.

இதை நான் முன்பே கூறியிருக்கிறேன். அப்படியும் யாகம் பண்ணும்போதுதான் அதற்கு வேலையே தவிர மற்ற சமயங்களில் கிடையாது.

பிறகு... இந்த உபநயன சடங்கு எப்படி வந்தது? உபநயனம் என்றால் என்ன? என்னடா



இவர்... பெண்களைப்பற்றி சொல்லிக் கொண்டிருக்கும்போது இடையில் ஏன் ஆண்களைப்பற்றி பேசுகிறார் என்று நினைக்காதீர்கள். பெண்கள் சம்பந்தப்பட்ட விஷயம்தான்.

சந்தர்ப்பம் வாய்க்கும்போதே சில விஷயங்களை தெளிவுபடுத்திட வேண்டும். உபநயனம் உள்ளிட்ட எதுவும் பெண்களுக்கு கிடையாது என மநு சொல்லியிருக்கும்போது...

உபநயனம் என்றால் என்ன என்று தெரிந்தால் தானே மநு சொல்வதை புரிந்துகொள்ள முடியும். சரி! உபநயனம் என்றால் என்ன?

இப்போது உபநயன சுபமுகூர்த்தம் என்று ஆண் மகனுக்கு முதல் கல்யாணம்போல பெரியதாக விழா நடத்துகிறார்கள்.

உண்மையில் உபநயனம் என்றால்... பிராமணப்பையனை பள்ளிக் கூடத்துக்கு அனுப்புதல் என்று அர்த்தம். என்னது...?

இப்போது இருப்பதைப்போல அப்போதெல்லாம் பள்ளிக்கூடங்கள் கிடையாது. அதனால் வேத பாண்டித்யம் பெற்ற ஒரு ஆச்சாரியரிடம் அதாவது ஆசிரியரிடம் பையனை அனுப்பி வைப்பார்கள். வேதக் கல்வி கற்பதற்காக.
அந்த ஆச்சாரியர் அச்சின்னப்பையனை கையைப் பிடித்து அழைத்துச் செல்வார். இதற்குப் பெயர்தான் உபநயனம்.

அதாவது ஆசிரியர் மாணவனை கையைப்பிடித்து அழைத்துச் செல்வதுதான்.

இந்த சமயத்தில் அந்தக் குழந்தைப் பயலுக்கு நன்றாக ஸ்நானம் பண்ணி வைத்து, வஸ்திரம் கட்டிவிட்டு, இடுப்பில் 'பெல்ட்' (அந்த காலத்தில் துணியாலேயே) கட்டிவிட்டு குருகுலத்தில் சேர்த்துவிடுவார்கள்.

அப்போது அவனது அப்பா... 'பயலே... இனிமே நீ இந்தப் பக்கம் வரக்கூடாது. எல்லா கல்வியையும் கற்கும்வரை உனக்கு இந்த வீட்டு ஞாபகம் வரக்கூடாது.
பார்க்காமல் ஆச்சாரியரோடு போ...'' என்று பையனை வழியனுப்பி வைப்பார்.

அந்தச் சின்னப்பையனும் வீட்டை மறந்து கல்விக்காக ஆசிரியர் கையை பற்றிக்கொண்டு நடப்பான்.
இதுதானப்பா ஒரிஜினல் உபநயனம். இப்போது என்ன நடக்கிறது?

பள்ளியில் படித்துக் கொண்டிருக்கிற பையனை லீவு போடச் சொல்லி வீட்டுக்கு வரவழைத்து உபநயனம் பண்ணுகிறார்கள். உபநயனம் என்றாலே வீட்டுப் பக்கம் வராதே என்று பையனை பாடசாலைக்கு அனுப்புவதுதான். ஆனால்... நடைமுறையில் அப்படியே முரண்பாடாகி விட்டது.

காரணம்...? இதையும் சடங்காக்கி மந்த்ரங்கள் ஓதி பணம் பண்ணுவதற்காகத்தான்.

இப்போது இங்கே பெண்ணை அழைத்து வருகிறேன் பாருங்கள். உபநயனம் உள்பட எந்த மந்த்ர சடங்கும் பெண்ணுக்குக் கிடையாது என்றால் என்ன அர்த்தம்?

பெண்களை பள்ளிக்கு அனுப்பக்கூடாது. உபநயனம் என்றால் பள்ளிக்குப் போவதுதானே?



ஆனால்... இன்று எல்லா ஜாதி பையன்களும், பெண்களும் உபநயனம் பண்ணிக் கொள்கிறார்கள். ஆமாம்... பள்ளிக்குப் போய் பாடம் படிக்கிறார்களே!

பெண்கள் வாழ்வில் அடுத்த கட்டமாய்.

**49.விதவைகளுக்கு மொட்டையடி. விதவைகளின் மறுமணம் விபசாரம்?**
கணவனை இழந்த பெண் என்றால்... அவளை இறந்த கணவனது சிதையிலேயே வைத்து தீர்த்துக்கட்டு என உத்தரவிடுகிறது மநு ஸ்மிருதி.

விதவைகளாகி மறுமணம் முடிக்க நினைத்தால்?... இதை விபச்சாரம் என்னும் அடைமொழிக்குள் வைத்துப்பார்க்கிறது மநு.

கணவனை இழந்த பெண்கள், மிகச்சிறு வயதிலேயே விதவைகளாகி விடும்போது... சிதைக்கு போகாமல் தப்பித்த பெண்களும் உண்டு.

கணவனை இழந்த அவள் மேல் வேறெந்த ஆணுக்கும் ஆசை வரக்கூடாது என்பதற்காக உடனடியாக அவளுக்கு மொட்டையடிக்கப்பட்டது.

(மொட்டை பாப்பாத்தி என கேள்விப்பட்டிருப்பீர்களே. இப்பொழுது விளங்குகிறதா?)

கல்வியும் கிடையாது... மந்த்ரங்கள் வழியே கூட அதை பெறக்கூடாது. 8 வயசிலேயே கல்யாணம் பண்ணிக்கொண்டு நான்கு சுவர்களுக்குள் நன்கு குடித்தனம் நடத்து.

“இதுதான் மநு தர்மம் பெண்களுக்கு சொன்னது.
வேதத்தில் ‘சதி’ பற்றி பார்த்தோமே... வேதமே அப்படி சொல்கிறதென்றால் மநு சும்மா விடுமா?... வேதத்தை விட இன்னும் தெளிவாக சொல்கிறது.

“சிதா வாரோஹணம் பிரம்மச்சர்யம்...”

கணவனை இழந்த பெண் என்றால்... அவளை அவனது சிதையிலேயே வைத்து தீர்த்துக்கட்டு என உத்தரவிடுகிறது மநு ஸ்மிருதி மநு மணம் முடித்து இதுபோல் கணவனை இழந்த பெண்கள், மிகச்சிறு வயதிலேயே விதவைகளாகி விடும்போது... சிதைக்கு போகாமல் தப்பித்த பெண்களும் உண்டு.

ஆனால்... அவர்களது வாழ்க்கையிலும் பயங்கர கட்டுப்பாடுகள் பின்னப்பட்டன. கணவனை இழந்த அவள் மேல் வேறெந்த ஆணுக்கும் ஆசை வரக்கூடாது என்பதற்காக உடனடியாக அவளுக்கு மொட்டையடிக்கப்பட்டது.

‘உலகை ஆற்றுப்படுத்தும் அழகுதான் பெண்’ என்றது வேதம். அந்த அழகை மொட்டையடித்து அவலட்சணமாக்கி அழுவதை வேடிக்கை பார்த்தது மநு.

விர... அந்த விதவைப்பெண் வேறெந்த ஆணிடமும் பேசக்கூடாது, பழகக்கூடாது அவளது கண்களை கட்டுப்பாட்டால் கட்டிப் போட்டனர்.

இதையும் மீறி... வயதின் ஆட்சியால் வாலிபத்தின் தூண்டுதலால் மிக இளமையான வயதில்



கணவனை இழந்த பெண்களுக்கு ஆண் துணை வேண்டுவது இயற்கையின் விதி. இதை இப்போது மறுமணம் என்கிறோம்.

ஆனால் மநு மணத்தில் மறுமணம் ஏது? ஒரு பெண், கணவனை இழந்த பின்பு... ஆறுதலுக்காகவும், வாழ்க்கை நடத்திட வழி வேண்டியும் இன்னொரு ஆணை அணுகினால் அது கிட்டத்தட்ட விபச்சாரம் ஆகி விடுகிறது என்கிறது மநு. இதற்கும் தண்டனை உள்ளது. அதற்கு முன் விதவைகளுக்கு மொட்டை போடுதல் என்ற தண்டனை பற்றி இன்னும் சில விளக்கங்களை சொல்லி விடுகிறேன்.

விதவைகளுக்கு மொட்டையடிக்கக் கூடாது என்று வடகலை வைணவர்கள் வலியுறுத்தினார்கள். அதெல்லாம் இல்லை மொட்டையடித்தே ஆக வேண்டும் என்பது தென்கலைக்காரர்களின் தரப்பு வாதம்.

இந்த இடத்தில் வடகலை, தென்கலை என இரண்டு பிரிவுகள் பற்றி உங்களுக்கு கேள்வி வரலாம். அப்படி என்றால் என்ன?
பிரம்மத்துவம் எனப்படும் கடவுள்தன்மை பெருமாளின் துணைவியான பிராட்டி அதாவது தாயாருக்கு உண்டா என்ற பிரச்சினை விவாதமாக எழுந்தது.

அப்போது... பெருமாளுக்கு துணையாக இருக்கிறாரே தவிர பிராட்டிக்கு மோட்சம் வழங்குவதில் பங்கு கிடையாது. உதவும் சக்தி கிடையாது. வெறும் சிபாரிசு மட்டும்தான் செய்யமுடியும் என்பது தென்கலைகாரர்களின் வாதம். பெருமாளின் துணைவிக்கே சக்தி இல்லை என்றவர்கள் சாதாரண ஸ்த்ரீ... அதுவும் கணவனை இழந்த ஸ்த்ரீக்கு என்ன சொல்வார்கள். மொட்டையடிக்க வேண்டும் என்று சொன்னார்கள்.

வடகலைக்காரர்களோ... பிராட்டிக்கு மோட்சம் வழங்குவதில் குறிப்பிட்ட பங்கு இருக்கிறது என்று நம்பினார்கள். அதனால் பெண்மைக்கு முக்யத்துவம் கொடுத்து... விதவைகளுக்கு மொட்டையடிக்கக் கூடாது என்றார்கள். இந்த ஒரு விஷயத்தின் அடிப்படையில் மட்டுமல்ல... பல விஷயங்களின் அடிப்படையில் கருத்து வேறுபாடு கொண்டவர்கள் தான் வடகலை, தென்கலை என்று பிரிந்தார்கள்.

அது இருக்கட்டும்... மநு மணம் முடித்த பெண்கள், விதவைகளாகி மறுமணம் முடிக்க நினைத்தால்?... இதை விபச்சாரம் என்னும் அடைமொழிக்குள் வைத்துப்பார்க்கிறது மநு.

அவளுக்கு ஒழுக்கம்தான் முக்யம். ஒரு ஆணுக்கு வாழ்க்கைப்பட்டவள் இன்னொரு ஆணோடு வாழ்வதா?... பிடி அவளை... அவளது படுக்கையோடு சேர்த்து அவளை சுற்று ஆமாம் அப்படியே தீ வை. எந்த படுக்கையில் விபச்சாரம் என்னும் அபச்சாரத்தை செய்தாளோ... அதிலேயே வைத்து அவள் எரிக்கப்பட வேண்டும் என மநு தன் கட்டளைகளில் கொள்ளிக்கட்டைகளை கொண்டு வருகிறார்.

வேதம் பெண்களை எப்படிப்பார்த்தது... மநு பெண்களை எப்படிப் பார்த்தது?... என்று இதுவரை பார்த்துவிட்டோம். சாதாரண மனித பெண்களை இப்படி நடத்தியிருக்கிறார்கள். அப்படியென்றால் தெய்வப்பெண்களை?... அதாவது பெண் தெய்வங்களை எப்படி பார்த்தார்கள்?

இது ஒரு சுவாரஸ்யமான கேள்வி. சற்று முன்புதான் மோட்சம் வழங்குவதில் பிராட்டி அதாவது பெண் தெய்வத்தின் பங்கு பற்றி சில விஷயங்களை பார்த்தோம்.



கோவில்களில் பெருமாளை பார்த்திருப்பீர்கள். பெருமாளுக்கு வலது பக்கமும், இடது பக்கமும் பூதேவி, நீளாதேவி என இரண்டு பெண் தெய்வங்கள் இருப்பார்கள். ஆனால்... பிராட்டி எனப்படும் தாயார் தனிக்கோவில் நாச்சியாராகத்தான் இருப்பார். அதாவது அவருக்கென்று தனி சன்னதி இருக்கும். அங்கே தான் இருப்பார்.

கோவில்களில் உற்சவம் நடப்பதை பார்த்திருப்பீர்கள். பெருமாள் வாகனங்கள் புடைசூழ வெளியே வருவார்.

முதலில் அன்னபட்சி வாகனத்தில் வெளியே வருவார். கருடன் மீதேறி ஊர் சுற்றுவார். சூரியபிரபை என்னும் வாகனத்தில் புறப்பட்டு கடைத்தெருக்களை பார்வையிடுவார். பிறகு குதிரை வாகனம்... கடைசியில் தேர், ஊர்கூடி இழுக்க உள்ளே படாடோபமாக அமர்ந்திருப்பார் பெருமாள்.

ஆண் தெய்வமான பெருமாள் இப்படி ஊர் சுற்றி உலகம் சுற்றிவிட்டு வர... பெண் தெய்வமான பிராட்டியார்?

**50தாசிகளுடன் கடவுள் - வருடாவருடம்.....**
வருடாவருடம் தாசிகளுடன் இரவு முழுதும் தங்கியிருந்துவிட்டு திரும்பும் கடவுள் பெருமாள்..

பெருமாளுக்குப் பிராட்டியாரை பார்த்துப் பார்த்துப் பழகிப் பழகி அலுத்துப் போய்விடுகிறது. அதனால் என்ன நினைக்கிறார் என்றால்... கொஞ்ச நேரம் வெளியே போய் சுற்றிவிட்டு வரலாமே என்றுதான்.

இந்த உற்சவத்திலே இன்னொரு விசேடம் ஆண் மகன் எங்கே வேண்டுமானாலும் போவான். ஆனால்... பெண்ணானவள் அதையெல்லாம் சகித்துக் கொள்ளவேண்டும்.

தெய்வங்களிடையிலேயே இப்படித்தான் நடக்கிறது

இந்த உற்சவம் நடக்கும்போது எல்லாரும் கையெடுத்து சேவிக்கிறார்கள். இதில் சேவிக்க என்ன இருக்கிறது?

ஆமாம். ஆண் தெய்வமான பெருமாள்... வாகனங்களில் ஏறி, ஊர் சுற்றுவார். ஆதிசேஷ வாகனத்தின் மீதேறி கம்பீரமாக வருவார். பின் அனுமார் வாகனம்... அடுத்தது யானை வாகனம். அம்பாரியில் ஜம்மென உட்கார்ந்து வீதிகளை மேளதாள வாத்தியங்களை ஜோராக ரசித்தபடி ஆடியபடி... சுற்றி வருவார் பெருமாள்.

அப்படியென்றால் பெண் தெய்வமான பிராட்டி? அதற்குமுன் பெண் தெய்வம் வந்த கதையைப்பார்ப்போம்...வேதத்தில் கடவுளுக்கு உருவம் இல்லை. நீ வேண்டுமானால் அவருக்கு உருவம் இருப்பதாக நினைத்துக் கொள். ஆனாலும் நீ நினைப்பதால் நினைத்து வடிப்பதால் கடவுள் உருவத்துக்குள் அடங்கமாட்டார் - என்றது வேதம்.

ஆனாலும்... உலகின் அனைத்துப் பகுதிகளிலும் தோன்றிய வழிபாட்டு முறைகள்படி (Humanistic Worship) அதாவது மனித உருகொண்டு தெய்வத்தை வணங்கும் கலாச்சாரம் உருவானது.

அதிலும் ஆண் உருவங்கள்தான் முதலில் வழிபடப்பட்டன. பிறகு... இந்த ஆணுக்கு ஒரு



பெண் துணை வேண்டாமா? என யோசிக்க ஆரம்பித்தனர். அதன் பிறகுதான் பெண் தெய்வங்கள்! இது ஒரு பக்கம் என்றால்... சிறுசிறு குழுக்கள் தத்தமது பகுதிகளில் 'அம்மன்' என அழைக்கப்படும் பெண் தெய்வங்களையும் வணங்கி வந்தனர்.

இதுபற்றி பிறகு பார்ப்போம். ஆண் தெய்வம், பெண் தெய்வத்தை வைத்து பல வழிபாட்டு முறைகளை வகுத்தனர் ஆகமக்காரர்கள். அவர்களே... விஷ்ணுவின் மனைவியான லட்சுமி அவருடைய மார்பில் இருக்கிறார் என்றார்கள்.

இதன் பிறகு...உற்சவம், திருவிழா என்றெல்லாம் தெய்வத்துக்கும் கொண்டாட்டங்களை குறித்து வைத்தார்கள்.

அதில் ஒன்று சொல்கிறேன் பாருங்கள். இந்த உற்சவத்துக்கு பேர் பாரிவேட்டை உற்சவம். இன்னொரு பெயர் மட்டையடி உற்சவம் என்றும் சொல்வார்கள். இன்றும் திருக்கண்ணபுரம், சிறீரங்கம், கீழையூர் போன்ற முக்கிய வைணவத் திருத்தலங்களில் இந்த உற்சவத்தை கோலாகலமாகக் கொண்டாடுவார்கள்.

அப்படி என்ன உற்சவம்? வருடாவருடம் மாட்டுப் பொங்கலன்றும் மறுநாளும் இந்த உற்சவம்.

குதிரை வாகனத்தில் கிளம்புகிறார் பெருமாள். மேளதாளம் முழங்குகிறது. நாதஸ்வரம் இசைக்கிறது. குதிரை வாகனம் ஆடிஆடி சென்று கொண்டிருக்கிறது. குதிரைமீது இரண்டு பக்கமும் கால்களை போட்டுக் கொண்டிராமல்... 'சைக்கிள் கேரியர்'-ல் நாம் உட்கார்ந்து போவோமே அதுபோல் இரண்டு கால்களையும் ஒரே பக்கத்தில் போட்டுக்கொண் போகிறார் பெருமாள்.

கொஞ்சதூரம் போன பிறகு... மேளம் நிறுத்தியாகி விட்டது. நாதஸ்வரத்தை எடுத்து அதற்கான துணியுறையில் போட்டு விடுகிறார் வித்வான், ஏன்?

அது தாசிகள் வசிக்கும் தெரு. அங்கே போகும்போது யாருக்கும் தெரியக்கூடாது என்று தான் வாத்தியத்தையும் நிறுத்திவிட்டனர். அங்கே போன பிறகு பெருமாளை இறக்கி வைக்கிறார்கள். இரவு அங்கே உள்ள ஒரு மண்டபத்தில் தங்குகிறார்.

இது உற்சவத்தில் வரும் காட்சிகள். ஏன் இந்த காட்சிகள்?

பெருமாளுக்குப் பிராட்டியாரை பார்த்துப் பார்த்துப் பழகிப் பழகி அலுத்துப் போய்விடுகிறது. அதனால் என்ன நினைக்கிறார் என்றால்... கொஞ்ச நேரம் வெளியே போய் சுற்றிவிட்டு வரலாமே என்றுதான்.

குதிரைமேல் ஏறுகிறார். கொஞ்ச தூரத்தில் இருக்கும் தாசிகள் தெருப்பக்கம் போகிறார். இவர் வெளியே போனாரே எங்கே இன்னும் காணோம் என நினைத்துக் கொண்டிருக்கிறார் பிராட்டி. இரவு ஆகிவிட்டது. ஊரெல்லாம் அடங்கிவிட்டது. அப்படியும் பெருமாள் கோயிலுக்குத் திரும்பவில்லை. இரவு முழுதும் தாசிகளுடன் தங்கியிருந்துவிட்டு... மறுநாள் காலை ஆசுவாசமாகப் புறப்படுகிறார் பெருமாள்.

இதன்பிறகு மறுபடியும் அந்த உற்சவக் காட்சிகளை சொல்கிறேன் பாருங்கள்.காலையில் அதே குதிரையில் ஏறி... கோயிலுக்கு வருகிறார்.



ஆடிவரும் குதிரையோடு அப்படியே விடுவிடுவென கோயிலுக்குள் பெருமாள் நுழைவதற்காக வர... கோயில் வாசலில் எதிரே வழியை மறித்துக்கொண்டு நிற்கிறார் பிராட்டி.

“எங்கேய்யா போயிட்டு வந்தீர்?” இது பிராட்டியின் கேள்வி.
அதையெல்லாம் காதில் போட்டுக்கொள்ளாமல் மறுபடியும் உள்ளே நுழைய... மறுபடியும் தடுக்கிறார் பிராட்டி. இருவரும் எதிரெதிரே ஒருவரை ஒருவர் முறைத்துக் கொண்டு நிற்க.... இப்படியே நேரம் ஓடிக் கொண்டிருக்க... அப்போதுதான் சமாதானத்துக்காக வருகிறார் அங்கே ஒரு தூதுவர்.

அப்படியும் பிராட்டியார் சொல்கிறார். “கற்பூரம் காட்டும்போது பார்த்தேன். இன்னமும் காயாத ஈர சந்தனம் அவர் மார்பிலே ஒட்டிக் கொண்டிருக்கிறதே... அந்த சந்தன வாசனை வேறு ஏதோ ஒரு அந்நிய வாசனைபோல் உள்ளது. அவர் எங்கே போய்விட்டு வந்தார்? எனக்கு சந்தேகமாக இருக்கிறது. அவரை உள்ளேவிட முடியாது...” - பெருமாள் மீது சந்தன வாசனை. இதனால் பிராட்டிக்கு சந்தேக வாசனை. ரொம்ப நேரத்துக்குப் பிறகு... நம்மாழ்வாரின் சமாதானத்துக்குப் பிறகு பெருமாளை உள்ளே விடுகிறார் பிராட்டி. இது உற்சவம்.

இந்த உற்சவம் நடக்கும்போது எல்லாரும் கையெடுத்து சேவிக்கிறார்கள். இதில் சேவிக்க என்ன இருக்கிறது? ஆனால், இங்கு ஞாபகப்படுத்த ஒன்று இருக்கிறது.

வேதத்தில் ஒரு வாக்கியம் வருகிறது என்று கூறியிருந்தேனே...

கணவன் - மனைவியிடம் சொல்கிறான்... “நீ உன்னை எப்போதும் அழகானவளாக உன்னை வைத்துக் கொண்டிருந்தால் நான் வெளியே ஏன் போகப்போகிறேன்?” என்று. இதே போல்தான் பெருமாள்... இந்த உற்சவத்தில் பிராட்டியாரிடம் சொல்கிறார். குடும்பத்தில் குழப்பம் ஏற்படுத்தும் இந்த உற்சவத்தை குடும்பத்தோடு வந்து சேவிக்கிறார்கள்.

இந்த உற்சவத்திலே இன்னொரு விசேடம் ஆண் மகன் எங்கே வேண்டுமானாலும் போவான். ஆனால்... பெண்ணானவள் அதையெல்லாம் சகித்துக் கொள்ளவேண்டும்.
தெய்வங்களிடையிலேயே இப்படித்தான் நடக்கிறது

**51.தன்னுடைய"அதை" மட்டும்அனுப்பி இல்லறசுகம்!!!. முடியுமா உங்களால்?**
“அது” மட்டும் விர்ரென பறந்துபோய் ஆனந்தமாக கலவி அனுபவித்து விட்டு திரும்பியதாம்.
.
நள்ளிரவிலும் பிராட்டியை சேரவேண்டும் என்ற ஆசை ரங்கநாதனுக்கு வந்தது. உடனே தன் அங்கத்தை (ஆண் குறி)அனுப்பி ரங்கநாயகி சன்னதிக்குள் சென்று இச்சையை தீர்த்துக்கொண்டு விடுகிறார்’ என்பதை குணரத்ன கோசத்திலேயே குறிப்பிட்டிருக்கிறார் பராசரபட்டர்.

பெண்ணை ஆண் எப்படி வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் த போகத்துக்காக இஷ்டப்படி பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற போதனையையும் தெய்வங்களிடமிருந்தே ஆரம்பித்து விட்டனர்.

தெய்வங்களிலேயே பெண் தெய்வங்களுக்கு எவ்வளவு கட்டுப்பாடுகள் பாருங்கள்.

பாரி வேட்டை படித்திருப்பீர்கள். அதாவது ஆண் தெய்வம் கோவிலை விட்டு எங்கு வேண்டுமானாலும் செல்லலாம். ஆனால் இதை சகித்துக் கொண்டு பெண் தெய்வங்கள்



கோயிலுக்குள்ளேயே தான் இருக்கவேண்டும்.

ஆமாம்... பெருமாள் இத்தனை வாகனங்களில் ஊர்விட்டு ஊர், தெருவிட்டு தெரு என 'புறப்பாடு' நடத்திக் கொண்டிருக்க தனிக்கோவில் நாச்சியாரான தாயார் நிலை என்ன தெரியுமா?"

நம் கணவர் ஜம்மென்று இப்படி ஊர் சுற்றுகிறாரே... நாம் சுற்ற முடியாதா?" என ஒருவேளை பிராட்டி நினைத்தால்..."ஓ... நீங்களும் சுற்றலாமே...ஆனால் உங்கள் கணவரான பகவானை மட்டும் சுற்றுங்கள். அதுவே ஊரைச் சுற்றியது போல் ஆகிவிடும்"... என பெண் தெய்வத்துக்கே கட்டளை போடுகிறது நமது ஆண் சாஸ்திரம்.

அதனால்... இன்றும் பெருமாள் கோவில்களில் தனிக்கோவில் நாச்சியாரான பிராட்டிக்கு 'புறப்பாடு' என்றால் கோயில் பிரகாரத்தை சுற்றி வருவதுதான் அதற்குமேல் எங்கேயும் வெளியே போகக்கூடாது என்பதுதான் பொது விதி. இன்னும், விதிவிலக்காக சிற்சில இடங்களில் சில ஸ்தலபுராணங்களை முன்வைத்து பெண் தெய்வமான பிராட்டி வெளியே தலைகாட்டும் உற்சவங்களும் அபூர்வமாக நடக்கின்றன.

அதாவது... தெய்வங்களிலேயே பெண் தெய்வங்களுக்கு எவ்வளவு கட்டுப்பாடுகள் பாருங்கள்.

இதெல்லாம் எதற்கு? தெய்வ விஷயத்திலேயே இப்படித்தான் இருக்கிறது. பெண் தெய்வம் படிதாண்டக்கூடாது என சாஸ்திரம் கோடு போட்டு வைத்திருக்கிறது.

அப்படியானால் மனித தர்மத்தில் பெண்கள் நிலைமை எப்படி இருக்கவேண்டும் என்பதை எடுத்துக் காட்டுவதற்குத்தான் இதெல்லாம்.இதெல்லாம் இருக்கட்டும்...

பெண்ணை ஆண் எப்படி வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் தன் போகத்துக்காக இஷ்டப்படி பயன்படுத்திக் கொள்ளலாம் என்ற போதனையையும் தெய்வங்களிடமிருந்தே ஆரம்பித்து விட்டனர்.

அந்த போதனையை சொல்லும் ஒரு காட்சியை உங்களுக்கு சொல்கிறேன்.இப்போது நாம் ஸ்ரீரங்கம் கோவிலுக்குச் சென்றால் என்னென்ன தரிசிப்போம்?

படுத்துக் கொண்டிருக்கும் ரங்கநாதனை சேவிப்போம். பின் ரங்கநாயகியை வழிபடுவோம். ஸ்ரீராமானுஜரை சேவிப்போம். இப்படி ஒவ்வொரு சன்னதியாய் போய் சேவித்து வருவோம்.

ஆனால்... ஒரு பக்தர் இரவு நேரத்தில் பகவானை சேவிப்பதற்காக வந்திருக்கிறார். அர்த்த ஜாமம் எல்லாம் ஆகி சன்னதியை பூட்டி... சாவிக்கொத்தை மாட்டிக் கொண்டு அர்ச்சகர்கள் சென்றாகி விட்டது. அமைதியே உருவான ரம்யமான ராத்திரி அது.

அப்போது... ரங்கநாதன் சன்னதியிலிருந்து திடீரென ஒரு விசேஷ வெளிச்சம். பகவான்தான் காட்சி தரப்போகிறாரோ என்னவோ என அந்த பக்தர் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டே இருக்கிறார்.

சிறிது நேரம் கழித்து... ரங்கநாதன் சன்னதிக்குள்ளிருந்து ஒரு பொருள் மட்டும் விர்ர்...ரென வெளியே வருகிறது.

அப்படியே வானத்தின் வழியாக பறந்து போய் ரங்கநாயகியின் சன்னதிக்குள்



நுழைகிறது. அந்த பக்தர் இதையும் பார்க்கிறார்.

கொஞ்சநேரம் ஆனது... மறுபடியும் ஒரு விசேஷ வெளிச்சம். இப்போது... ரங்கநாயகி சன்னதிக்குள்ளிருந்து அந்த பொருள் கிளம்பி... வந்த வழியே திரும்பி பழையபடி ரங்கநாதன் சன்னதிக்குள் வந்தடைகிறது. முன்னால் இருந்த இடத்திலேயே சென்று சேர்ந்து விடுகிறது.

சரி... அது என்ன பொருள் என்கிறீர்களா? அந்த பக்தரை கேட்டால் சொல்வார் அல்லவா?

சொல்வது என்ன எழுதியே வைத்திருக்கிறார். அந்த பக்தர் வேறு யாருமல்ல... ராமானுஜரின் வலது கையான கூரத்தாழ்வானின் மகன் பராசரபட்டர்தான்.

பராசரபட்டர் தான் அருளியிருக்கும் குணரத்ன கோசத்தில் இந்த காட்சியை சாதித்திருக்கிறார். சரி...

பறந்து போனது என்ன?

‘அது... ரங்கநாதனின் ஆனந்த நாடி... (ஆண் குறி )அதாவது தேக சம்பந்தம் வைத்துக்கொள்வதற்கு உபயோகப்படுகிற அங்கம்.

நள்ளிரவிலும் பிராட்டியை சேரவேண்டும் என்ற ஆசை ரங்கநாதனுக்கு வந்தது. உடனே தன் அங்கத்தை (ஆண் குறி)அனுப்பி ரங்கநாயகி சன்னதிக்குள் சென்று இச்சையை தீர்த்துக்கொண்டு விடுகிறார்’ என்பதை குணரத்ன கோசத்திலேயே குறிப்பிட்டிருக்கிறார் பராசரபட்டர்.

இந்தக் கதை எதற்கு? விட்டலாச்சார்யா கதைபோல இருந்தாலும்...‘ஆணின் போகத்துக்குத்தான் பெண். அவளை எந்நேரமும் எப்படியும் உபயோகப்படுத்த ஆணுக்கு உரிமை உள்ளது’ என்பதைத்தான் இப்படி ரங்கனின் அந்தரங்கத்தையே பார்த்ததாக விளக்கியிருக்கிறார் பட்டர்.

இதை பெருக்காரணை சக்ரவர்த்தி ஆச்சார்யர் எழுதிய ‘மும்மத்தஸாரம்’ என்னும் புஸ்தகத்தில் நீங்கள் தமிழிலேயே தரிசிக்கலாம்.

“ஸ்ரீரங்கநாதன் தனது ஆனந்த நாடிகளைக் கொண்டு ஸ்ரீரங்கநாயகியுடன் ஆனந்தமாக கலவியை அனுபவிக்கிறான் என்று ஸ்ரீபராசரபட்டர் ஸ்ரீ குணரத்ன கோசத்தில் எப்படி சாதித்தார்?...” என்று கேட்கிறார் சக்ரவர்த்தி ஆச்சார்யர்.

இதைப் பார்த்துவிட்டு வைதீகர்கள் பலர் வேதனைப்பட்டார்கள். இப்படி எழுதியதை தமிழிலும் மொழிபெயர்த்து விட்டாரே என்று.

இதையே சக்ரவர்த்தி அய்யங்கார் என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தபோது... இக்காட்சி இடம் பெற்றால்,பெண்ணடிமைத்தனம் ஆபாசமாக சித்தரிக்கப்படுகிறது என்ற பேர் வருமே என்பதற்காக... அந்த ஆனந்த நாடி பகுதியை மட்டும் வெட்டி எடுத்துவிட்டார்கள்.

இப்படியெல்லாம் பெண்களை போகப்பொருளாகக் காட்டுவது வைணவம் மட்டும்தானா... சைவமும் இதற்கு சளைத்ததல்ல..



**52/2தெய்வங்களில் மேல்தரம்? கீழ்தரமா ?**
விஷ்ணு, சிவன் உள்ளிட்ட தேவதைகள் வேதம் வகுத்த தேவதைகளாம். மற்ற தேவதைகள் எல்லாம் கிராம தேவதைகளாம். அவை... கீழ்த்தரமான தேவதைகளாம். ஏனென்றால், அவற்றை வணங்குபவர்கள் உழைக்கும் மக்கள், சூத்திரர்கள். அதனால்தான் கிராம தேவதை!

என்னைக் கேட்டால் கிராம தேவதைகள் என்று சொல்வோரை உதைக்கவேண்டும்.

அதென்ன கிராம தேவதை, சர்க்கிள் தேவதை, ஜில்லா தேவதை என நீங்களே வகைப்படுத்துவது...?

இந்து மதம் எங்கே போகிறது ? பகுதி 52. – 1.

வைணவத்தில் பிராட்டி... சைவத்தில் அம்பாள். இந்தப் பெயர் வேறுபாடுதானே தவிர பெண் தெய்வங்களை அடிமையாக வைத்திருத்தலே இரண்டு சமயங்களிலும் பக்தி யுக்தியாக பேணப்படுகின்றன. பெண்கள் சைவம் எப்படி திருவிளையாடல் பண்ணியது என்பதை பிறகு பார்ப்போம்.

அதற்குமுன்... காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி போன்ற அம்பாள்கள் கோயிலை விட்டு வெளியே வந்து நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?

இன்றும் ‘அத்வைதம்’ என பேச்சுக்குப் பேச்சு பேசும் காஞ்சி சங்கராச்சாரியார்கள் எங்கெங்கே போய் வருகிறார்கள்? சென்னை, பம்பாய், காசி, டில்லி என டூர் அடித்து கோர்ட் வரைக்கும் போய்விட்டார்கள். ஆனால்... அவர்கள் பூஜிக்கும் காஞ்சி காமாட்சியம்மன் கோயில் பிரகாரத்தைத்தாண்டி வெளியே வந்திருக்கிறாளா என விசாரித்துப் பாருங்களேன்.

இதுபோல் தெய்வங்களிலேயே ஆண் - பெண் ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்தி வைத்திருந்த ஆகம சம்பிரதாயங்கள்... தெய்வங்களில் வர்க்க பேதங்களையும் வகைப்படுத்தி வைத்திருக்கின்றன.

அதென்ன? விஷ்ணு, சிவன் உள்ளிட்ட தேவதைகள் வேதம் வகுத்த தேவதைகளாம். மற்ற தேவதைகள் எல்லாம் கிராம தேவதைகளாம். அவை... கீழ்த்தரமான தேவதைகளாம். ஏனென்றால், அவற்றை வணங்குபவர்கள் உழைக்கும் மக்கள், சூத்திரர்கள். அதனால்தான் கிராம தேவதை!

என்னைக் கேட்டால் கிராம தேவதைகள் என்று சொல்வோரை உதைக்கவேண்டும்.

அதென்ன கிராம தேவதை, சர்க்கிள் தேவதை, ஜில்லா தேவதை என நீங்களே வகைப்படுத்துவது...?

“சமேத விஷ்வா வசஸாபதிந்தவஹா ரெகஹ விபுஹீஅதிதித் ஜனானாம் தம் வர்த்தனிஹீயது வாவ்ருதே ஏகையித் பூரி...”

அந்தந்த பகுதியில் வாழும் மக்கள் அந்தந்த மண்ணுக்கேற்ற வகையில்... தங்கள் வாழ்க்கை முறைக்கு ஏற்ற வகையில் தங்கள் தெய்வங்களை சிருஷ்டித்துக் கொண்டார்கள்.



இது பெரும்பாலும் பெண் தேவதைகளாகவே அமைந்தன. ஏனென்றால்... பெண் வீட்டிலேயே இருந்து சகலத்தையும் கவனித்துக் கொள்வதுபோல பெண் தேவதைகளை நிறுவி வைத்தால் நாம் வெளியே போனாலும் நம் ஊரிலேயே நமது பகுதியிலேயே தங்கியிருந்து பாதுகாக்கும் என்பது வாழ்க்கையிலிருந்து அவர்களுக்குக் கிடைத்த நம்பிக்கை.

அவரவர் பகுதியில் அவரவர் தெய்வத்தை சிருஷ்டிக்கிறார்கள். அதனால் ‘கிராம தேவதை’ என்ற பதமே தவறானது.

முதன்முதலில் வெளிச்சத்தை மனிதன் வணங்கினான் என்று முன்பே பார்த்தோம்.அதேபோல் இருட்டைக் கண்டும் பயந்து வணங்கினான். இருட்டுக்குள்ளும் கடவுள் இருக்கிறது என்று நம்பினான்.

அதுதான் காளி. கருங்கல்லைத்தான் முதலில் காளி என்று வணங்க ஆரம்பித்தான். காளி என்றால் கருப்பு என்று அர்த்தம். பிறகு அந்தக் கரிய கல்... கரிய உருவமானது. காளியம்மாள் ஆனது. பின் காளியாத்தா ஆனது.

இதேபோல் வேளாண் தொழில் செய்து வந்தவர்கள் காளியை பச்சையாக பார்த்தார்கள். பண்பாடு வளர வளர... அவரவர் வாழ்க்கை முறைக்கேற்ப தங்களது தெய்வங்களை வடிவமைத்துக் கொண்டார்கள்.

இப்படிப்பட்ட காளி, மாரி போன்ற தேவதைகள் எல்லாம் ஆகமத்துக்குக் கட்டுப்பட்டவை அல்ல. அதனால் அவை வெளியே வரக்கூடாது என்றெல்லாம் நிபந்தனைகள் கிடையாது.

ஏனென்றால், அந்த தேவதைகள் இருப்பதே... ஊருக்கு வெளியே எல்லைப் புறத்திலே காவலுக்காகத்தானே.பிற்பாடான காலங்களில் இவைகளையும் ஆகமத்துக்கு உட்படுத்தினார்கள்

**பகவானுக்கும் பசிக்கும். குளிரும். திருஷ்டி படும். சளி பிடிக்கும்.**

அதாவது... பகவானுக்கு பசிக்கும். அவன் சாப்பிட்டால்தானே நமக்கு அனுக்ரஹம் செய்வான்.

எனவே, அவனுக்கு, அவளுக்கு (தெய்வங்களுக்கு) தினமும் முறையாக நைவேத்யம் படைக்கவேண்டும் என்றார்கள்.

பகவானுக்கு குளிரும். அதனால் குளிர்காலத்தில் கடவுள் சிலைகளுக்கு கம்பளி ஆடை.

பிராமணர்கள். அதன் பிறகு சிலைக்கு நைவேத்யம் வழங்கும் வழக்கம் வருகிறது.

அதாவது ஆகமத்துக்கு அப்பாற்பட்ட தேவதைகளையும் பூஜிக்கத் தொடங்கிய பிராமணர்கள் நைவேத்யத்தை கட்டாயமாக்கினார்கள்.

அதாவது... பகவானுக்கு பசிக்கும். அவன் சாப்பிட்டால்தானே நமக்கு அனுக்ரஹம் செய்வான். எனவே, அவனுக்கு, அவளுக்கு (தெய்வங்களுக்கு) தினமும் முறையாக நைவேத்யம் படைக்கவேண்டும் என்றார்கள்.

இங்கே ஒரு முக்கியமான விஷயம்... தினமும் பகவானுக்கு வழக்கமாகப்படைக்கும் நிவேதனம் வேறு. விசேஷ காலங்களில் ஒவ்வொரு விசேஷத்துக்கும் ஒவ்வொரு வகை



நைவேத்யம்.

பெருமாள் கோயில்களில் சொல்கிறேன் கேளுங்கள். காலையில் தினமும் நடக்கும் காலசந்தி என்ற பூஜைக்கு தயிர்ச்சாதம், மதியம் உச்சிகாலம் எனப்படும் பூஜைக்கு சாதம், குழம்பு, கூட்டு, பொரியல், இத்யாதிகள். இதற்குப் பெயர் அலங்காரத்தளிகை.

அதாவது நாம் சாப்பிடும் மதியச்சாப்பாட்டை பகவான் சாப்பிட்டால் அதற்குப் பெயர் அலங்கார தளிகை. பெருமாள் வெளியே வாகனங்களில் சுற்றி விட்டு கோயில் திரும்புவார் என்று சொன்னேன் இல்லையா?

அப்போது ஊரெல்லாம் திருஷ்டி போட்டிருக்கும் என கருதப்பட்டு... பெருமாளுக்கு திருஷ்டி கழிப்பதற்காக 'திருவந்தி காப்பு' என்றொரு விசேஷம்.

இதில் பால், பழம், பயத்தம்பருப்பை ஊற வைத்து செய்த வடைப் பருப்பு, தோசை எல்லா நைவேத்யம் செய்து திருஷ்டி கழிப்பார்கள்.

இதுதவிர அமாவாசை, ஏகாதசி காலங்களில் ஒரே நைவேத்யம் உப்புமா. இதுதவிர அய்ப்பசி மாதம் மூல நட்சத்திரம் அன்று... பால் புடலங்காய்... அதாவது பாலில் புடலங்காயை ஊற வைத்து செய்யப்படும் இனிப்பான உணவு.

வைகாசி விசாகம் அன்று பால்மாங்காய். இதுவும் அதுபோலவே ஓர் இனிப்பு. நாச்சியார் திருமொழி சாத்துமறை திருநாளன்று அக்காரவடிசில் அதாவது சர்க்கரைப் பொங்கல். இதுதவிர புளியோதரை போன்ற புகழ் பெற்ற உணவு வகைகள் திருவிழாக்களில்.

பெருமாள் கோயிலைப்போன்று சிவன் கோயில்களில் உணவுக்கு இந்த அளவு முக்கியத்துவம் இல்லை. அங்கே 'சம்பா' சாதம் தான் முக்கியம். அதாவது மிளகு, ஜீரகம், பொடியோடு நெய் ஊற்றி சாதம் பிசைந்து படைப்பார்கள்.இவ்வளவு கேட்டு உங்கள் நாக்கில் உமிழ் நீர் ஊறுகிறதா? இவையெல்லாம் நிர்மால்யம். அப்படியென்றால்...?

**53.**பகவானின் சாப்பாட்டுப்பட்டியலை பார்த்தீர்களா**?...**
பார்த்தீர்களா பெண் தெய்வங்கள் படும் பாட்டை?... பெண் தெய்வத்தை வெளியே விடுவதில்லை.

மோட்சம் கொடுக்கும் சக்தி பெண் தெய்வத்துக்கு இல்லை. ஆண் தெய்வம் சாப்பிடும் சாப்பாட்டை சாப்பிடும் பேறு கூட பெண் தெய்வத்துக்கு இல்லை.

பகவானின் போஜனப் பட்டியலை பார்த்தீர்களா?... காஞ்சிபுரம் வரதராஜப்பெருமாள் நித்யப்படி (தினந்தோறும்) சாப்பிடும் இஷ்டமான போஜனம் இட்லி நாம் சாப்பிடும் சாதாரண இட்லியல்ல.

குடலை இட்லி, அப்படியென்றால்?...பெருமாள் கோவில்களில் துளசி பறிப்பதற்கென்றே 'குடலை' என அழைக்கப்படும் ஒரு நீண்ட கூடை வைத்திருப்பார்கள். நீண்ட உருளை வடிவில் இருக்கும் இந்த கூடை...இதே போன்று ஒரு பாத்திரம் செய்து... அதில் மாவை ஊற்றி வேகவைத்து வெளியே எடுத்தால் அதுதான் குடலை இட்லி.சரி... இவ்வளவு நளபாகங்களை சொல்லியாகிவிட்டது.

இத்தனை நளபாகங்களும் நிர்மால்யம் என்றது ஆஹமம்



அப்படியென்றால்?...பாஞ்சராத்ர ஆகமம் சொன்னது...

“சொரூபாம் பிரதிமாம் விஷ்ணோஹோப்ரஸன்ன வதனே க்ஷணாம் க்ருத்துவாஆத்மன ப்ரீதிகரீம் சொர்ண ரஜதா திபிதாமர்ச்சயேது தாம்ப்ரணமேது தாமே விசிந்தேதுவிஷதீ அபாஸ்த தோஷஸ்துதாமேவ ப்ரம்ம ரூபிணிம்....”

வேத வழிமுறைகளை கர்மாக்களை புத்தர் வேகமாக வீரியமாக அடித்து புரட்டி போட்ட காலத்துக்குப் பிறகு...“உனக்கொரு புதுவழி சொல்கிறேன் கேள்.

விஷ்ணுவை பிரதானமாக்கி உனக்கு பிடித்தமான உருவத்தை சிறிய அளவில் தயார் செய்து கொள். அது கல்லாக இருக்கக்கூடாது. தங்கத்திலேயோ வெள்ளியிலேயோ செய்ததாக இருக்கவேண்டும். அதை நீ தனியே வைத்து பூஜை செய்து கொள்...” என்றது.

இதன் பிறகு தென்னாட்டில் பெரிய பெரிய கோவில்களையும்... சிலைகளையும் பார்த்தவர்கள் ‘இது நன்னா இருக்கே... இதுக்கும் நாங்களே பூஜை பண்றோம்...’ என்று வந்தனர். பிறகுதான் பகவானுக்கும் பசிக்கும் அவனுக்கு நைவேத்யம் செய்யணுமே என்று சொல்லி... இவ்வளவு நளபாகங்களை கண்டுபிடித்தனர்.

சரி... நிர்மால்யம் என்றால் என்ன என்று இன்னும் சொல்லவில்லையே?... பகவானுக்கு இத்தனை விதம் விதமான பட்சணங்கள், பலகாரங்கள் இத்தியாதிகளை நைவேத்யம் பண்ணுகிறீர்களே...

அவன் அதை சாப்பிடுகிறானா?... அவன் முன்னால் வைத்துவிட்டு அதை கொஞ்ச நேரத்திலேயே எடுத்து வந்து விடுகிறீர்களே?... அதற்குள் அவன் அதை ஸ்வீகரித்துக் கொண்டிருப்பானா?...எடுத்துக் கொண்டு போய் என்ன செய்கிறோம்?

பகவானின் பேரைச் சொல்லி நாம் சாப்பிடுகிறோம். இன்றும் கூட பெருமாள் கோவில்களில் உத்ஸவத்தின் போது புளியோதரையில் காரமில்லை, உப்புமாவில் உப்பில்லை என்று பெரிய சண்டையே நடக்கிறது.

இதெல்லாம் எதற்கு?.... பகவான் சாப்பிட்டதை நாம் ஏன் சாப்பிட வேண்டும்?... அது எச்சிலாயிற்றே?... அவன் எச்சில் செய்ததை நான் சாப்பிடுவதாவது... அதை தூக்கிப் போடுங்கள். தூர தூக்கிப்போடுங்கள். அதை உபயோகப்படுத்தாதீர்கள். இதுதான் நிர்மால்யம்.

அதாவது ‘எச்சிலை சாப்பிடாதே’ சாப்பிட்டால் உனக்கு நிர்மால்ய தோஷம். ஆகமம் சொன்னபடி சிலை செய்து, பூஜித்தவர்கள் இந்த விஷயத்தை கேட்டவுடன் ‘அடிமடியில் கைவைக்கிறதே’ என்று நினைத்தார்கள்.

அப்படியென்றால் நாம் எப்படி பிழைப்பது?... யோசித்தனர் அதெல்லாம் முடியாது என்றனர். பகவானின் எச்சில்தானே அதை சாப்பிட்டு விட்டுப் போகிறோம். விடுங்கள் என்று அன்னக்கொடி பிடித்தனர்.

இதைத்தான் வேதாந்த தேசிகன் தனது ‘பாஞ்சராத்ர ரட்சை’யிலே சொல்லியிருக்கிறார். இவ்வளவு பட்சணம் பலகாரம் பண்ணி பகவானுக்கு படைத்துவிட்டு அதை நிர்மால்யம் என்று தூக்கிப் போட்டால் எப்படி?...



அது சரிப்பட்டு வராது.எனவே பெருமாள் கோவில்களில் இந்த நிர்மால்யம் சரிப்பட்டு வராது. பெருமாளுக்கு படைத்தவற்றை சாப்பிடுவதால் நிர்மால்ய தோஷம் வராது.

சிவன் கோயில்களில் வேண்டுமானால் நிர்மால்ய (எச்சில்) தோஷம் இருக்கட்டும். இங்கே வேண்டாம்...” என்கிறார் வேதாந்த தேசிக ஸ்வாமி... அதாவது இதன் உள்ளர்த்தம் என்ன?

பெருமாள் கோவில்களில் தான் வகை வகையாய் நைவேத்யங்கள் படைக்கப்படுகின்றன.

சிவன் கோவில்களில் இப்படி வகை வகையாய் சுவை சுவையான பதார்த்தங்களுக்கு முக்கியத்துவம் இல்லை.

எனவே சிவன் கோவில்களில் வேண்டுமானால் எச்சில் தோஷம் என கருதி அதிகபட்சம் சம்பா சாதம்தான். அதை ஒதுக்கி விடலாம்.

ஆனால் சுவையான ‘சப்பு’ கொட்டி சாப்பிடும் பெருமாள் கோவில் பதார்த்தங்களை எப்படி நிர்மால்யம் என்று தூரப் போட முடியும்?...இப்போது புரிகிறதா?

சரி... எதற்கு இதைச் சொல்ல வந்தேன். நாம் தெய்வங்களிலும் பெண் தெய்வங்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளைப் பற்றி பார்த்து வருகிறோம் அல்லவா?... சாப்பாட்டு விஷயத்தில் கூட அது பின்பற்றப்படுகிறது என்பதை சொல்லத்தான் இவ்வளவு விஷயங்களையும் விளக்கினேன்.

அதாவது பெருமாளுக்கு நிவேதனம் செய்யப்படும் நைவேத்யத்தை பிராட்டிக்கு நைவேத்யம் செய்யக்கூடாது. அது ஆண் தெய்வமான பெருமாளுக்கு மட்டும்தான். அவர் சுவைக்க மட்டும்தான்.

பிராட்டிக்கு தனித்தளிகைதான். இன்றும் திருக்கண்ணபுரம் பெருமாள் கோவிலுக்கு போய்ப் பாருங்கள்.

பெருமாளுக்கு செய்த தளிகையை தாயாருக்கு அதாவது பெண் தெய்வமான பிராட்டி பக்கம் கூட கொண்டு போக மாட்டார்கள். பொருளாதார வசதியில்லாத பெருமாள் கோவில்களில் மட்டும்தான் தவிர்க்க முடியாமல் பெருமாளுக்கும் தாயாருக்கும் சாப்பாட்டு சமாச்சாரம் சமமாக இருக்கிறது.

பெண் தெய்வத்தை வெளியே விடுவதில்லை. மோட்சம் கொடுக்கும் சக்தி பெண் தெய்வத்துக்கு இல்லை. ஆண் தெய்வம் சாப்பிடும் சாப்பாட்டை சாப்பிடும் பேறு கூட பெண் தெய்வத்துக்கு இல்லை. பார்த்தீர்களா பெண் தெய்வங்கள் படும் பாட்டை?.

**54.சிவனின் சிந்திய இந்திரியம். முருகன் யார்?**
முருகன் பரமசிவனுக்கும், பார்வதிக்கும் பிறந்தவர் இல்லை.

சிவனின் மன்மத புயல் கிளம்ப பார்வதி விலகிக் கொள்ள... சிவனின் உயிர்த்துளிகள் சேரவேண்டிய இடத்துக்குப் போய்ச் சேரவில்லை.. முடிவு?? !! அதன் பெயர்தான் ஸ்கந்தன். இப்போது புரிகிறதா?

சுத்த தமிழ்க்கடவுளான முருகனை, பிராமணர்கள் கந்தனாக்கி விட்டார்கள்.



சுப்ரமண்யனாக்கி விட்டார்கள். ஏன்... பரமசிவன் - பார்வதியின் மகனாக்கி விட்டார்கள்

சைவத்தில் இது மட்டுமல்ல மொழி பேதமும் உண்டு. முருகன் அழகான தமிழ்ப்பெயர். இச்சொல்லின் பொருளே அழகு என்றுதான் அர்த்தம். சுத்த தமிழ்க்கடவுளான முருகனை, பிராமணர்கள் கந்தனாக்கி விட்டார்கள். சுப்ரமண்யனாக்கி விட்டார்கள். ஏன்... பரமசிவன் - பார்வதியின் மகனாக்கி விட்டார்கள்

சமஸ்கிருதக்காரர்கள்.அப்படியென்றால் முருகன் பரமசிவனின் மகன் இல்லையா? இல்லை என்பது தமிழ் பதில். ஆமாம் என்பது சமஸ்கிருத பதில்.

எப்படி என்று கேட்டால் பெயர்க்காரணங்களை வைத்தே எளிதில் கூறிவிடலாம். முருகன் என்றால் அழகன். அதாவது தொன்மையான பழந்தமிழ் சங்க இலக்கியத்தில் பரிபாடல் நூலில் முருகன் என்ற தமிழ்க் கடவுள் பெயர்தான் வழங்கப்பட்டிருக்கிறது.

சரவணபவ, கந்தன்... இவையெல்லாம்...? அர்த்தம் சொல்கிறேன்.பரமசிவனுக்கும், பார்வதிக்கும் பிறந்தவர் இல்லை முருகன். இது தமிழ் பதில் என்று சொன்னேன்.அப்படியென்றால் சமஸ்கிருத பதில் என்ன? கந்தன், சரவணபவ என்றெல்லாம் சொல்கிறோமே? என்றெல்லாம் கேட்கிறீர்கள்.

வடமொழிக் கதையை தான் இங்கே வாசித்துக்காட்ட வேண்டியிருக்கிறது. பரமசிவனும், பார்வதியும் தங்களது லோகத்தில் லயித்திருக்கிறார்கள். இருவரும் பேசிக் கொண்டிருக்கும்போது... பார்வதியின் மீது மோகனம் பொங்குகிறார் பரமசிவன். பார்வதியை நெருங்குகிறார்.
பார்வதிக்கு அப்போது என்ன வேலையோ? இல்லை ஸ்வாமி... இப்போது வேண்டாம். நான் தயாரில்லை... என்கிறார்.

பரமசிவனுக்குள்ளோ மன்மதப்புயல், பார்வதியை பார்க்கப் பார்க்க சுற்றிச் சுழன்று அவரை தாக்குகிறது. பார்வதி மீது மன்மத தாண்டவம் ஆடிட மிகத்தயாராக இருக்கிறார். ஆனால்... சக்திக்கு சம்மதமில்லை.பார்வதியை துரத்துகிறார் பரமசிவன். நாதனின் வேட்டையிலிருந்து தப்பிக்க நழுவி ஓடுகிறார் பார்வதி. பரமசிவனாயிற்றே... விடுவாரா? பார்வதியை வளைத்து தன் கைகளின் எல்லைக்குள் இழுத்து விட்டார்.

‘தேவி... உன்னை சுகிக்க சித்தமாயுள்ளேன்... தேக சம்பந்தம் கொள்ள தாகமாயிருக்கிறேன். ஏன் நீ விலகிச் செல்கிறாய்? என்னாயிற்று உனக்கு?’ - பார்வதியை ஒரு கொடிபோல சுற்றிக்கொண்டு பரமசிவன் விரகதாபத்தோடு வினா கேட்கிறார்.

‘இல்லை நாதா... இப்போது வேண்டாமே...’ - மறுபடியும் அவளது பதில் இதுதான்.பகவானாக இருந்தாலும் தன் பாகங்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. முழுதாக பார்வதியை இறுக்கி கட்டியணைத்தவர்... அவளது ஆடைகளையும் அகற்ற ஆரம்பிக்கிறார்.

‘ஸ்வாமி... நாதா...’ கெஞ்சுகிறார் பார்வதி. ஆனால்... இதையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாமல் சுகத்துக்கான போருக்கு தான் மட்டுமே தயாராகி விட்டார் சிவன்.

பார்வதியின் ஒவ்வொரு பாகங்களையும் தன் கட்டுக்குள் பரமசிவன் வைத்திருக்க... இப்போதும் சக்தி சம்மதிக்கவில்லை. சிவனுக்கோ தாங்க முடியவில்லை. மன்மதக் கோபம் அவருக்குள் கொந்தளித்தது. பார்வதி மீது பாய்ந்து படர்ந்தார்.



ஆனால்... பார்வதியோ... சரியாக அந்த க்ஷணத்தில் தன் உடலை சற்று விலக்கிக் கொள்ள... பரமசிவனின் உயிர்த்துளிகள் போய்ச் சேரவேண்டிய இடத்துக்குப் போய்ச் சேரவில்லை.

பார்வதி விலகிவிட்டதால் பரமசிவனின் ரேதஸ் (இந்த்ரிய துளிகள்) அப்படியே ஆகாயத்திலிருந்து கீழே விழுந்தன. அந்த உயிர்த்துளிகள் அப்படியே கங்கையில் வந்து விழுந்தன. சிவபெருமானின் சொத்தாயிற்றே.... கங்கை நீரோட்டத்தோடு வேக வேகமாக பயணித்தன.

கங்கா மேலே சவாரி செய்த அந்தத் துளிகள்... கங்கைக்கரையோரம் படர்ந்திருந்த ஒரு நாணல் காட்டுக்குள் சென்று தேங்க...அப்படியே அது குழந்தையாக அவதரித்தது.

நாணலுக்கு சமஸ்கிருதத்தில் பெயர் சரம். காட்டுக்கு வனம். சரவனம்... - நாணல் காட் பின் உருவானவன் - என்பதால் சரவணன் - இப்போது சரவணன் என்று அழைக்கப்படுகிறான் முருகன்.சமஸ்கிருதத்தின்படி, சரவணன் இப்படித்தான் அவதரித்தான். பெயர் தரித்தான்.

கந்தன் என்றால்...? அதை கந்தன் என்று சொல்லக்கூடாது. உண்மையான சரியான சமஸ்கிருதப் பெயர் ஸ்கந்தன்.சரி... ஸ்கந்தன் என்றால்? இப்போது ஒரு வடமொழி கதை வாசித்தீர்களே... அதற்குள் வரும் மூலப் பெயர்தான் இது.

அதாவது... ஆணுடைய உயிர்த்துளிகள் பெண்ணுடைய பாகத்தில் சேராமல் வழிதவறி விழுந்தால்... அதன் பெயர்தான் ஸ்கந்தன். இப்போது புரிகிறதா?

முதலில் ஸ்கந்தன். அதன் பிறகுதான் சரவணன்... இப்படித்தான் சிவனுக்கு சரவணன் 'பிறந்தான்' என்கின்றன சமஸ்கிருத காவ்யங்கள். ஆனால்... அழகானவன் என்ற அர்த்தத்தில் அவனை ஒரு மலைக்கடவுளாக வணங்குகிறது தமிழ்க்குடி.

முருகனை ஸ்கந்தன், சரவணன் என கருத தமிழ் இடம் கொடுக்காது.  தவிரவும் ஆபாசமான காரணங்களை வரையறுத்திருக்கிறது சமஸ்கிருதம்.

இப்படிப்பட்ட ஸ்கந்தன், சரவணனுக்கு சுப்ரமணியர் எனவும் ஒரு பெயர். இதன் அர்த்தம் உயர்ந்த பிராமணன். இப்போது புரிகிறதா? முருகனை சிவனின் மகனாக்கியது போலவே... கணபதியையும் மகனாக்கி விட்டார்கள். கணபதி யார்?

**55."அதை" காட்டிஜெயித்த சிவன். இதுதான் சிதம்பர ரகசியமோ என்னவோ?**
சிவபெருமானும் காளியும் போட்டி நடனமாட...சிவன் வேண்டுமென்றே காலை தூக்கி ஆணுறுப்பை வெளிக்கொண்டு வந்து தெரியும்படியாக்கி... சிவபெருமானின் திட்டம் பலித்து ஜெயித்துவிட்டார்.

இதுதான் சிதம்பர ரகசியமோ என்னவோ?இப்படி' ஜெயித்த பிறகுதான் சிவனுக்கு நடராஜன் என்னும் நாமமே உண்டானது.இதற்கு நடனத்தில் ராஜா என்று அர்த்தம்.

பெண் தெய்வங்கள் இந்த பாடுபடுவது வைஷ்ணவ சம்ப்பிரதாயத்தில் மாத்திரம்தானா? சைவத்தில் எப்படி? உங்களுடைய இந்தக் கேள்விக்கு பதில்கூற நாம் சிதம்பரம் வரை போகவேண்டும். சிதம்பரம் நடராஜ பெருமானை எல்லாரும் அறிந்திருப்பீர்கள். உங்களில் சிலபேர் அவரது ஆலயத்துக்குச் சென்று தரிசனமும் செய்திருப்பீர்கள்.



இந்த ஸ்தலத்துக்கு விசேஷமே சிவபெருமானான நடராஜ பெருமானின் நர்த்தனம் தான். ஒருநாள்... மிகப்பழைய காலத்தின் அழகான நாள்... சிதம்பரத்தில் ஒரு போட்டி நடனப்போட்டி. கலந்து கொள்பவர்கள் யார், யார்?

பரமசிவன், தில்லை காளி. யாரிந்த தில்லை காளி? சிவபெருமானுடன் நடனப்போட்டி போட வந்தவள். மிகச் சிறந்த நர்த்தன நாட்டியக்காரி. இயற்கையிலேயே ஆண்களை விட பெண்கள்தான் நடன அசைவுகளிலும் இசைத் துடிப்புகளிலும் அழகாக இழைவார்கள். புருஷர்கள் ஆடும்போது ஏற்படும் ரசனையை விட ஸ்தீரிகள் நர்த்தனமாடும் போது அதிகபட்ச அழகு மிளிரும். இது இயற்கையின் ஏற்பாடு. அதிலும், தில்லைகாளி நடனப்பயிற்சி பெற்றவள் பின் சொல்ல வேண்டுமா?

அவளது சலங்கை ஒலி கேட்டு காற்றே ஆடிப்போகும். அவளது நடனத்துக்கு போட்டியாக ஆட வருபவர்களே ஆடிப்போய் விடுவார்கள். இப்படிப்பட்ட தில்லை காளிதான் சிவபெருமானின் நடனப் போட்டிக்கு வந்தாள். ஏற்பாடுகள் நடந்தன.

இரண்டு மேடைகள் எதிரெதிரே. அதில்தான் சிவபெருமானும் காளியும் நடனமாட வேண்டும். கூட்டம் கூடியிருக்கிறது. ஆட்டம் தொடங்க இருக்கிறது. போட்டியில் யார் ஜெயிப்பார்கள் என கூடியிருந்தவர்களிடையே ஒரு கிசுகிசு நுழைந்து நெளிந்து கொண்டிருந்தது.

தொடங்கியாகி விட்டது. தனது ஆர்ப்பாட்டமான அசைவுகளோடு ஆட ஆரம்பித்தாள் காளி. அவளது பாதங்கள் சலங்கைகளை ஒலியோடு சுருதி சேர்த்தன. காளியின் கைவிரல்கள் காற்றில் நடனச் சித்திரங்கள் தீட்டின.

மறுபக்கம் சிவன் தனது தாண்டவத்தை ஆரம்பித்தார். சிவனின் தாண்டவத்தை அய்ந்து வகையாக அவரது அடியார்கள் போற்றுவர். அற்புத தாண்டவம், அநவாத தாண்டவம், ஆனந்த தாண்டவம், பிரளய தாண்டவம், சங்கார தாண்டவம், இங்கே சிவன் ஆடியது ஆனந்த தாண்டவம். காளியின் நடன அசைவுகளும் நர்த்தன நுட்பங்களும் பார்ப்பவர்களை வசீகரித்தன.

சிவனின் தாண்டவம் காளியின் தாண்டவம் முன்பு தோற்றுவிடும் நிலைமை...பார்த்தார் சிவபெருமான், ஒரு பெண்ணிடம் நான் தோற்பதா?

அவள் கால்கள் செய்யும் நடனம் அவருக்குள் கலவரம் செய்தது. ‘ஆஹா... சிவபெருமானை தில்லை காளி ஜெயித்துவிட்டாளே’ என குரல்கள் கிளம்பப் போகிற நேரம்... இனியும் இவளை ஆடவிடக்கூடாது என முடிவுகட்டிய சிவன்... தன் இடதுகாலை சற்றே தூக்கினார்.

நடனத்தின் ஒருவகைதான் என நினைத்து ஈடுகொடுத்து ஆடிக்கொண்டிருந்தாள் காளி. சிவனின் இடது கால் இன்னும் எழும்பியது, ஆமாம்... இன்னும் உயரமானது. கொஞ்சம் கொஞ்சமாக இடது காலை விலக்கி எடுத்துச் சென்ற சிவபெருமானின் திட்டம் பலித்தது.

வலதுகாலை ஊன்றி இடது காலை உயர விலக்கிக்கொண்டே போக... சபையே ஒருகணம் அதிர்ந்தது. ஏன்?...வேண்டுமென்றே சிவனின் சிஷ்டம் (அதாவது ஆணுறுப்பு) வெளியே தெரியும்படியானது. இதற்காத்தான் இடது காலை விலக்கி தூக்கியிருக்கிறார்



சிவன்.வெற்றியின் விளிம்பில் நடனமாடிக் கொண்டிருந்த தில்லை காளி இக்காட்சியை பார்க்கவேண்டிய கட்டாயம் நேர்ந்துவிட்டது. பொட்டென அவளது நர்த்தனம் நின்றது தலைகுனிந்தாள். தனக்கு முன் ஒரு ஆண் இப்படிப்பட்ட கோலத்தில் நிற்பதை எந்தவொரு பெண் பார்த்துக்கொண்டே தன் வேலையை தொடருவாள்? காளியின் நர்த்தனம் நின்றதா? நிறுத்தப்பட்டது.

ஆனால், சிவபெருமான்... தொடர்ந்து தாண்டவமாடிக்கொண்டே இருந்தார். ஆக... சிவன் ஜெயித்தார் என்றாகிவிட்டது. வலதுகாலை ஊன்றி இடது காலை தூக்கி சிஷ்டத்தை (ஆணுறுப்பை) வெளிக்காண்டு வந்து... ஜெயித்துவிட்டார். இதுதான் சிதம்பர ரகசியமோ என்னவோ?

‘இப்படி’ ஜெயித்த பிறகுதான் சிவனுக்கு நடராஜன் என்னும் நாமமே உண்டானது.

இதற்கு நடனத்தில் ராஜா என்று அர்த்தம். இதை நானாகச் சொல்லவில்லை. நடராஜ மகாத்மியம் என்னும் புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது சிதம்பரம் சொல்லும் செய்தி என்ன?ஆணிடம் பெண் போட்டி போடக்கூடாது. அப்படியே திமிராக போட்டி போட்டாலும் ஜெயித்துவிடக்கூடாது. அவளை தோற்கடிக்க ஆண் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். தோற்றவள் காளி.

நான் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். காளி... ஆகமத்துக்கு அப்பாற்பட்ட காவல் தெய்வம். இங்கேதான் முக்கியமான இன்னொன்றைக் கவனிக்க வேண்டும். “Siva is a hig class God. „But Kali is low class rural God” என்று சொல்லி காளி ஒதுக்கப்பட்டாள். எங்கே...?

இன்னமும் நீங்கள் சிதம்பரம் நடராஜர் கோயிலுக்குப் போய் தில்லை காளி எங்கே என்று கேளுங்கள். கோயிலுக்கு வெளியே வடக்கு நோக்கி கை காட்டுவார்கள்.

கிட்டத்தட்ட 1 கிலோமீட்டர் தூரத்தில் சிதம்பரத்தின் எல்லையில் ஒரு சின்ன கோயிலுக்குள் கோபமாக உட்கார்ந்திருப்பாள் காளி.

‘அதாவது ஆணுக்கு பெண் போட்டி போட முடியாது. போட்டியிட்டால் இப்படித்தான் விரட்டப்படுவாள்’ என்று நமக்கு நடராஜர் மூலம் சொல்லாமல் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

இன்னும் சிதம்பரம் கோயிலில் அர்ச்சனையில் ஈடுபடும் தீட்சிதர்கள் அக்காளியை திரும்பிக்கூட பார்ப்பதில்லை.

இவ்வாறு தெய்வங்களுக்கிடையிலேயே ஆண்... பெண் பேதம் போற்றி வளர்க்கப்பட்டிருக்கிறது. அதோடு வர்க்கமொழி பேதமும் பின்பற்றப்பட்டிருக்கின்றன.

**56/1.பார்வதி குளிப்பதை மறைந்து பார்த்த சிவன். விநாயகன் பரமசிவன் தான்.**
குறும்பு, லீலைகள் என்பவையெல்லாம் மனிதர்களுக்கு கற்றுக்கொடுத்ததே தெய்வங்கள் தானோ என நினைக்கும் அளவுக்கு பகவத் சிலுவிஷமங்கள் புராணங்களில் நிறைந்து கிடக்கின்றன.

விநாயகன் வேறு யாரும் அல்ல. பரமசிவன் தான்.



‘டேய்... குளிப்பது உன் பத்தினியாக இருந்தாலும் எட்டிப் பார்க்காதே. பார்த்தால் என் கதிதான் உனக்கும்’ என்று பரமசிவன் ஆண்களிடம் சொல்வதற்குத்தான். இது கதை.

முருகன் என்ற பேருக்கும் ஸ்கந்தன், சரவணன் என்ற பேர்களுக்கும் இடையே நிலவும் மொழி, கலாச்சார வேறுபாட்டைப் பார்த்தோம்.

அப்படியென்றால் முருகனின் அண்ணான விநாயகர், கணபதி யார் என்கிறீர்களா? அண்ணன், தம்பி, தங்கை, அக்கா, மச்சினன் என தெய்வங்களுக்கிடையே உறவு வைத்ததெல்லாம் Humanistic Worship -ஆல் வந்தது.சரி... கணபதிக்கு வருவோம்.

கணபதி முருகனின் அண்ணன், சிவனின் மூத்த மகன் என்றுதான் பரவலாக நம்மவர்கள் பேசி வருகிறோம். நம்பி வருகிறோம்.

ஆனால்... சமஸ்கிருதக் கதைகள் இதற்கும் வேட்டு வைக்கின்றன. என்ன கதை? பரமசிவனின் மனைவியாகிய பார்வதி, ஒருநாள் ஸ்நானம் பண்ணிக் கொண்டிருக்கிறாள்.

குறும்பு, லீலைகள் என்பவையெல்லாம் மனிதர்களுக்கு கற்றுக்கொடுத்ததே தெய்வங்கள்தானோ என நினைக்கும் அளவுக்கு பகவத் சிலுவிஷமங்கள் புராணங்களில் நிறைந்து கிடக்கின்றன

சரி... சிவன் இங்கு என்ன செய்கிறார்? பார்வதி தேவி தண்ணீர் கொட்டிக் கொட்டி குளித்துக் கொண்டிருக்கிறாள். சிவனுக்கு ஒரு நப்பாசை. நம் தேவி எப்படி குளிக்கிறாள் என்பதை அவள் அறியாமல் பார்க்கவேண்டும். அதாவது... ஒருபெண் குளிப்பதை அவளுக்குத் தெரியாமல் இன்னொரு ஆண் (கணவனே என்றாலும் தெரியாமல் பார்க்கிறானல்லவா?) பார்த்தால் எப்படி இருக்கும் என்பதை பரீட்சித்துப் பார்க்க ஆசைப்பட்டார் சிவன்.

அதுபோலவே பார்வதி தேவி ஜலக்கிரீடை செய்யும்போது மறைந்து மறைந்து நின்று தேவியின் தரிசனத்தை அவருக்கே தெரியாமல் பெற்றுக் கொண்டிருந்தான் பரமசிவன்.

‘சகல லோகங்களையும் கண்காணிக்கும் சக்தி பெற்ற’ பராசக்திக்கு தான் குளிப்பதை இரண்டு கண்கள் திருட்டுத்தனமாக பார்ப்பது தெரிந்திருக்காதா என்ன?உணர்ந்தாள்.

தான் தன்னந்தனியாக குளித்துக் கொண்டிருப்பதை யாரோ ரசம் சொட்ட பார்த்துக் கொண்டிருப்பதை தன் சக்தியால் தெரிந்துகொண்ட பார்வதி திடுக்கிட்டாள். பெண் தெய்வம் என்றாலும் பெண் தானே?

உடனே... அவசரமாக தனது கச்சைகளையும், வஸ்திரங்களையும் பதறியபடியே உடுத்திக்கொண்ட பார்வதி, தன்னைப் பார்த்தவனை தேடினாள். டேய்... யாரங்கே? பராசக்தியின் ஸ்நானத்தை ஒளிந்து பார்க்கும் அளவுக்கு துணிச்சல்காரன் யார்?

என கோபத்தில் பார்வதிதேவி சத்தம்போட... பட்டென்று வெளியே வந்த சிவன்... ‘தேவி... யாம்தான் ஒரு சின்ன திருவிளையாடல்... அதற்குப் போய் ஏன் இப்படி கோபப்படுகிறாய்? சாந்தம்... சாந்தம்...’ என்கிறார்.

எது ஸ்வாமி திருவிளையாடல் ஒரு பெண் குளிப்பதை இன்னொரு ஆண் மறைந்து நின்று கண்களால் சுகிப்பது உங்கள் திருவிளையாடல் என்றால்... என் திருவிளையாடலையும்



கொஞ்சம் பாருங்கள்.

சக்தியும் தன் திருவிளையாடலை அரங்கேற்றினாள். “மனைவியென்றும் ‘பாராமல்’ நான் குளித்ததைப் பார்த்த நீர்... யானைத் தலையனாகவும், மனித உடம்பாகவும் மாறக் கடவுவது...” என கோபத்தால் சாபமிட்டாள்.

அந்த க்ஷணத்திலேயே பரமசிவன் அவ்வாறே ஆனார். அதாவது யானை முகத்துடனும் மனித உடம்பாகவும் புது வடிவம் பெற்றார். அதாவது... விநாயகன் வேறு யாரும் அல்ல. பரமசிவன்தான் என்கிறது இக்கதை.

இன்றும் ஆற்றங்கரை, குளத்தங்கரைகளில் எல்லாம் விநாயகர்கள் நிறைந்திருப்பதை பார்த்திருப்பீர்கள்.அது எதற்கு என்றால்...?

‘டேய்... குளிப்பது உன் பத்தினியாக இருந்தாலும் எட்டிப் பார்க்காதே. பார்த்தால் என் கதிதான் உனக்கும்’ என்று பரமசிவன் ஆண்களிடம் சொல்வதற்குத்தான். இது கதை.

**56/2.வேதப்படி கணபதி கடவுள் இல்லை.?? மிருகங்களை வழிபடுதல்.**
இவர் வேதத்திலேயே வருகிறார். இவர்தான் உலகத்தின் தொடக்கம், என்றெல்லாம் பின்னர் ‘பிள்ளையார் சுழி’ போட்டார்கள்.

அதெல்லாம் கிடையாது. வேதத்தில் கணபதி... என்ற சொல் வருகிறது. அவர் யாரென்றால்...?

வேதப்படி கணபதி கடவுள் இல்லை?.

மிருகங்களை வழிபடுதல்.
இந்து மதம் எங்கே போகிறது ? பகுதி 56 – 2.

வரலாற்று ரீதியாக பார்த்தோம் என்றால், நான் முன்பே சொல்லியிருக்கிறேன். உலகத்தின் பல்வேறு பகுதிகளில் பரவியிருந்த வழிபாட்டு முறைகளில் முக்கியமான இரண்டாவது வழிபாட்டு முறை Totamism Worhip அதாவது மிருகங்களை வழிபடுதல்.

அப்படியாகத்தான் ‘ஒரு காலத்தில் காட்டுக்குள் வாழ்ந்த மக்கள் வித்தியாசமான, பெரிய உருவம் கொண்ட யானைகளை பயந்து வழிபடத் தொடங்கினார்கள்.

நாம் மனித உடலில் யானைகளை வைத்ததுபோல்... எகிப்தில் பல மிருகங்களை வழிபட்டு வருகின்றனர். இதுதான் கணபதியின் வரலாற்றுக் கதை.

கணபதி என்றவுடன்... இவர் வேதத்திலேயே வருகிறார். இவர்தான் உலகத்தின் தொடக்கம், என்றெல்லாம் பின்னர் ‘பிள்ளையார் சுழி’ போட்டார்கள்.

அதெல்லாம் கிடையாது. வேதத்தில் கணபதி... என்ற சொல் வருகிறது. அவர் யாரென்றால்...? ரிக்வேதத்தின் இந்த மந்த்ரத்தைப் பாருங்கள்.

“கணானந்தவா கணபதிஹிம் ஷவாமஹேகவிகம் கவினாம் உபமஸ் ஸ்ரவஸ்தமம்தேஷ்டராஜம் ப்ரம்மனாம் ப்ரம்மனாஸ்பதி”



வேதத்தில், வேதகாலத்தில் மக்கள், ரிஷிகள் எல்லாம் கூட்டம் கூட்டமாய் போவார்கள்.

அப்போது அவர்கள் தங்களுக்குள் ஒரு தலைவனை தேர்ந்தெடுத்துக் கொண்டு அவன் சொல்படி நடப்பார்கள். அதாவது Leader of the Group.கணபதி என்றால் இதுதான் அர்த்தம். அந்த சிறுசிறு கூட்டங்களின் தலைவர்கள்தான் கணபதிகள்.

இதுபோல் வேதம் நிறைய கணபதிகளைக் காட்டுகிறது.

'ஏ... தலைவா... உன் தலைமையில் நாங்கள் நடந்தால் எங்களுக்கு எல்லாம் கிடைக்கும். செல்வம் பெருகும்...' என தங்கள் தலைவனை போற்றிப் புகழ்வதுதான் இந்த மந்த்ரம். இந்த Leader of the Group- அய்த்தான் பிற்காலங்களில் கணபதி என்ற கடவுள் ஆக்கிவிட்டார்கள்.

வேதப்படி கணபதி கடவுள் இல்லை.

பெண்கள் விஷயத்தில் நமது கடவுளர்களின் கண்ணியத் தன்மையையும் இந்த கண்ணியத் தன்மையாலேயே இன்னொரு கடவுள் உதித்ததையும் கண்டோம்.

இதையெல்லாம் எதற்கு சொல்கிறேன் என்றால்... நமக்கெல்லாம் ஒழுக்கத்தையும் சத் நெறிகளையும் வழங்க வேண்டிய தெய்வங்கள் எப்படி சித்தரிக்கப்பட்டிருக்கின்றன என்பதை உணரத்தான்... **உணர்ந்து விட்டீர்களானால்...**

**57. & 58 நவராத்திரி நதிமூலம், ரிஷிமூலம், உண்மையான மூலம்.**

இதுதானப்பா கொலுவின் ரிஷி மூலம், நதிமூலம் உண்மையான மூலம் எல்லாம்.

நவராத்திரியின் ஜோடிக்கப்பட்ட கதை புராணக்காரர்கள் பல ஜோடனைகள் பண்ணி கொலுவின் உண்மையான தத்துவத்தையே கொன்றுவிட்டார்கள்.

ஆண் இல்லாமல் பெண் வாழ முடியாது. சாதிக்க முடியாது' என்று சொல்வதுதான் கொலு(!) தத்துவம்.

சில பல அத்தியாயங்களாக பெண்கள், பெண் தெய்வங்கள் ஆகியோருக்கு நமது சம்ப்ரதாயம் சபித்து வைத்த அநியாயங்களை யெல்லாம் விஸ்தாரமாகவே பார்த்தோம். அவற்றைப் படித்து விட்டு... சில ஸ்திரீகள் என்னிடம் 'இப்படியா ஸ்வாமீ... அப்படியா ஸ்வாமீ... என ஆச்சரியத்தை கொட்டினார்கள். அனுபந்தமாக ஒரு கேள்வியையும் கேட்டனர்.

பெண் தெய்வங்கள் கூட படாதபாடு படறாள்னு சொன்னீர்கள். ஆனா... பெண் தெய்வங்களுக்காகவே பிரத்யேகமாக நவராத்திரி கொண்டாடுகிறோமே... நான்கூட எங்க ஆத்துல நவராத்திரி 9 நாளும் கொலு வைக்கிறேனே... இது பெண் தெய்வத்துக்கு பெரிய விசேஷம்தானே..." என்றாள் அந்த சின்னப்பெண்.'அப்படி வா வழிக்கு...' என்று சொல்லிவிட்டு நவராத்திரி கொலுபற்றி அவளிடம் விளக்கத் தொடங்கினேன். அதை நீங்களும் கேளுங்கள்

நவராத்திரி, கொலு என்பதெல்லாம் பெண் தெய்வங்களான பார்வதி, லட்சுமி, சரஸ்வதி ஆகியோர்களின் ஆராதனைக்காக விசேஷமாக நடத்தப்படுகிறது என்பது இப்போது



பொதுவான நம்பிக்கை. ஆனால்... இதன் நதிமூலம், ரிஷிமூலத்தைப் பார்த்தால் விஷயமும் வேறு. விசேஷமும் வேறு. அந்த ரிஷிமூலத்தை பார்ப்பதற்கு முன்பு... நவராத்திரியின் ஜோடிக்கப்பட்ட கதையைப் பார்த்து விடுவோம்.

மகிஷாசுரன் என்றொரு அரக்கன் எருமைத்தலையை உடையவன். தேவர்களுக்கு பெரும் துன்பங்கள் கொடுத்துக் கொண்டிருந்தவன். காரணம் அவன் பெற்றிருந்த ஒரு வரமாம். 'என்னை கொல்ல முடியுமானால் அது ஒரு பெண்ணால்தான் நடக்கவேண்டும் என்பதுதான் வரம். அதாவது... பெண்ணால் என்ன செய்ய முடியும்? பெண் தெய்வங்களே கோயிலை விட்டு வெளியே வருவதில்லை. பிறகு எப்படி நம்மை அழிக்க முடியும்-என்ற நினைப்பு நம்பிக்கை அப்போது தேவர்களிடம் நிலவி இருந்ததால் அந்த அரக்கன் அப்படியொரு வரத்தை கேட்டான்.

தெய்வங்களும்... 'பெண்கள்' மீது வைத்திருந்த அபிப்ராயத்தாலோ என்னமோ வரம் கொடுத்துவிட்டன. பெண்தானே நம்மை அழிக்கவேண்டும். எந்த பெண்ணால் அது முடியும்?... என்ற திமிரில் கொடுமைகள் செய்ய ஆரம்பித்து விட்டான். இது சிவனின் மனைவி பராசக்திக்கு எட்டியது. "பெண்தானம்மா அவனை அழிக்க வேண்டும். அது எப்படி முடியப் போகிறது.உன்னால் அவனை அழிக்க முடியுமா?..." என்று பராசக்தியிடம் மற்ற தேவ, தேவதைகள் பிரார்த்திக்கிறார்கள்.

பராசக்தி யோசிக்கிறாள். 'நம்மால் முடியுமா?...' பக்கத்து வீட்டு பெண்கள் (!) போன்ற லட்சுமியிடமும், சரஸ்வதியிடமும் ஆலோசிக்கிறாள்.அவர்கள் சொல்கிறார்கள். 'நமக்கு ஏது அவ்வளவு பலம்?... இறந்து போனவர்களுக்கு மோட்சம் கொடுக்கக்கூட வக்கில்லாதவர்கள் நாம். நம்மால் எப்படி ஒரு அரக்கனை கொல்லமுடியும்?..."...என பெண் தெய்வங்களே தங்களைப் பற்றி தாழ்வு மனப்பான்மையோடு பேசுகின்றன.

சரி பிறகு?... என்ன செய்வது? அப்போது ஒரு கருத்து அங்கே உதிக்கிறது. அரக்கனை அழிக்க வேண்டுமென்றால் ஆண்களின் பலம் வேண்டும். ஆனால், பெண்ணால்தான் அவன் அழிவான் என அவன் தலையில் வரம் விதி வரைந்திருக்கிறது. அப்படியென்றால் என்ன செய்யலாம். தேவர்கள் அத்தனை பேரின் பலத்தையும் நாம் வாங்கிக் கொள்ளவேண்டும். அதன் மூலம் மகிஷாசுரனை அழிக்கவேண்டும்.

...என பெண் தெய்வங்களின் ஆலோசனைக் கூட்டத்தில் முடிவெடுக்கப்பட்டது. இந்த இடத்தில் வேதம் சொன்ன ஒரு உண்மையை இங்கே உங்களுக்கு சுட்டிக்காட்டி... புராணத்தை அதனுடன் ஒப்பிட்டுக் காட்ட பிரயாசைப்படுகிறேன்.

வேதம் என்ன சொன்னது?..."ஸ்த்ரீனாம் த்விகனம் ஆஹாரம்புத்தீஸ் சாபிசதுர் குணம்..." இதை வேதத்தில் பெண்களைப் பற்றிப் பார்க்கும் போதே உங்களுக்கு சொல்லியிருக்கிறேன். அதாவது... பெண்கள் ஆண்களைவிட இரண்டு மடங்கு அதிகமாக சாப்பிடுவார்கள். அதனால் அவர்கள், 4 மடங்கு புத்தியும், பலமும் ஆண்களைவிட அதிகமாக பெற்றிருப்பார்கள் என்றது வேதம்.

ஆனால்... புராணத்தில் நடக்கும் பெண் தெய்வங்களின் 'Meeting'-கில் என்ன நடக்கிறது?'ஆண்களின் பலத்தைப் பெற்றால்தான் நாம் பலமாக முடியும். அதன் மூலமாகத்தான் நாம் அசுரனை அழிக்க முடியும்...' என்று பேசுகிறார்கள்.

அதாவது 'கொடுத்த' பலத்தை புராணம் பலவீனமாக்கியது.
சரி... விஷயத்துக்கு வருவோம். அனைத்து தேவாதி தேவர்களின் புஜபலம், பராக்கிரம பலம்



அனைத்தையும் பெற முடிவு செய்தாள் பராசக்தி. பிரம்மா, விஷ்ணு, சிவன் மற்றும் இந்திரன் உள்பட அனைத்து தேவர்களின் ஆற்றலையும் கேட்டாள் பராசக்தி. நீங்கள் உங்களது அனைத்து பலத்தையும் கொடுத்தால்தான்... நான் அந்த அரக்கனை அழிக்க முடியும். பெண்ணாகிய என்னால் தனித்து இயங்க முடியாது. உங்கள் கூட்டணி எனக்கு வேண்டும். தாருங்களேன் என்கிறாள்.

என்ன செய்வது?... வரம் கொடுத்து மாட்டிக் கொண்டவர்களாயிற்றே. தங்கள் பலத்தை கொடுத்தார்கள். அனைத்து ஆண் தெய்வங்களின் பலத்தையும் உறிஞ்சிய பராசக்தி அந்த அரக்கனை அழித்தாள். உடனே தேவர்களெல்லாம் பராசக்தியை போற்றிப் புகழ்ந்து துதிபாடியிருக்க வேண்டுமே... எங்களைக் காப்பாற்றினாய் என்று அவளின் தாழ் பணிந்திருக்க வேண்டுமே... ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. அந்த பராசக்தி பெண்ணை யாரும் போற்றவில்லை புகழவில்லை. காரணம்...எல்லா பலத்தையும் கொடுத்துவிட்டார்களே...

அதனால் தேவர்கள் அனைவரும் அதுவரைக்கும் அப்படியே அசைவற்று பொம்மைகளாய் நின்றார்கள்...அந்த பொம்மைகள்தான்...

58 -- கடந்த அத்தியாயத்தில் சொன்ன பொம்மைகளை நினைவுக்கு இழுத்து வாருங்கள்.அதைத்தான் கொலு... கொலு... என்று கொண்டாடுகிறார்கள். அதாவது... 'பெண்ணால் எதையும் தனித்துச் செய்ய முடியாது, ஆண்களின் உதவியோடு தான் அவள் காலந்தள்ள முடியும்' என்ற கருத்தைச் சொல்வதுதான் கொலுவின் உள்ளே குடியிருக்கும் நீதி.

சரி... இந்தப் புராணக் கதையை வைத்து பின்னிப்பின்னி பின்னர் செய்தது தான் கொலு பண்டிகையா?

இந்தப் புராணக் கதையின் மேல்தான் கொலு பொம்மைகளை நிறுத்தி வைத்தார்கள். அதாவது தேவர்களெல்லாம் பொம்மைகள் ஆகிவிட்டனர். அவர்களை நாம் வழிபட்டு, பராசக்தியின் புகழைப் போற்றவேண்டும் என்று அய்தீகம் வகுத்தனர்.பின்னர் இந்த கொலு கலாசாரத்தில் ஒரு பாகப் பிரிவினை போட்டி வந்தது. யாராருக்கு...? பார்வதி, லட்சுமி, சரஸ்வதி. யாரை அதிகம் போற்றுவது என்பதுதான் பிரச்சினை. அதையும் இங்கேயே முடிவெடுத்து விட்டார்கள்.

லட்சுமிக்கு மூன்று நாள், சரஸ்வதிக்கு மூன்று நாள், பராசக்திக்கு மூன்று நாள் சரியான பாகப் பிரிவினைதான்.

பிறகு... இதற்கு நைவேத்யத்தையும் நிர்ணயித்து விட்டார்கள். அதானே... விடுவார்களா. முதல் நாள் வெண்பொங்கல் படைக்கவேண்டும். இரண்டாம் நாள் புளியோதரையாம். மூன்றாம் நாள் சர்க்கரைப் பொங்கல். நான்காம் நாள் கதம்பசாதம். அதாவது பலதரப்பட்ட காய்கறிகளைப் போட்டு பண்ணப்படும் சாதம். அய்ந்தாம் நாள் தயிர் சாதம். ஆறாம் நாள் கொஞ்சம் வித்தியாசமாகத் தேங்காய் சாதம். ஏழாம் நாள் எலுமிச்சை சாதம். எட்டாம் நாள் பாயாசம் வை. ஒன்பதாம் நாள் மறுபடியும் சர்க்கரைப் பொங்கல் பண்ணு... என்றெல்லாம் நவராத்திரியின் பெயரைச் சொல்லி நவ நைவேத்யங்களையும் படைத்து விட்டார்கள்.

இதிலே இன்னொன்று... தினமும் சுண்டல் கடலை வேறு சேர்த்து விட்டார்கள். எனக்கொரு சந்தேகம்.. இந்த புளியோதரை, தயிர் சாதமெல்லாம் சாப்பிட்டுவிட்டு அரக்கர்களை அழிக்க முடியுமோ என்னமோ?



இப்படியாக வருஷத்துக்கு 9 நாள்கள் கொண்டாடப்படும் நிகழ்ச்சியைத்தான் கொலு என்கிறார்கள். கொலு... என்பதற்கு என்ன அர்த்தம் சொல்லப்படுகிறது என்றால்... இதுதான். ஆனால்... கொலுவின் நதிமூலம், ரிஷிமூலமே வேறு. நாம் கொண்டாடும் கொலு... நமது வாழ்க்கை முறையிலிருந்து வந்ததுதான். ஆனால்... புராணக்காரர்கள் பல ஜோடனைகள் பண்ணி கொலுவின் உண்மையான தத்துவத்தையே கொன்றுவிட்டார்கள்.

கொலுவுக்கும், பராசக்திக்கும் சம்பந்தம் இல்லை. கொலுவுக்கும், லட்சுமிக்கும் சம்பந்தம் இல்லை. கொலுவுக்கும், சரஸ்வதிக்கும் சம்பந்தமே இல்லை. பிறகு இதெல்லாம் எப்படி வந்தது?

அரக்கனை சொல்லி... அவனை அழிப்பதற்கு காரணம் சொல்லி... அதற்காக ஒரு கதையையும் சொல்லி - இன்று 9 நாள்கள் நவ நைவேத்யம் படைப்பதுதான் மிச்சம்.

அப்படியென்றால், கொலுவுக்கு என்னதான் அர்த்தம்? இதற்குப் பதில் காண மன்னர் காலத்துக்கு நாம் செல்லவேண்டும். அதாவது, பழங்கால தமிழ் மன்னர்கள் யுத்தத்துக்கு தயாராவதற்கு முன் பல விஷயங்களை சிந்திப்பார்கள். இப்போது போன்று அப்போதெல்லாம் நினைத்த உடனே பீரங்கிகளையும், யுத்த தளவாடங்களையும் தயாரித்துக் கொண்டு யுத்தத்தில் இறங்கிவிட முடியாது. சீதோஷ்ண நிலையை பொறுத்து தான் யுத்த தந்திரமே வகுக்கப்படும். ஏனென்றால், இயற்கையை அனுசரித்து வாழ்ந்த, வாழவேண்டிய கட்டாயத்தில் இருந்த காலம் அது.

அதில் மழைதான் மிக முக்கியமான அம்சம். எத்தனை பெரிய மன்னனாக இருந்தாலும் மழைக்காலத்தில் போர் தொடுக்க யோசிப்பான். ஏனென்றால்... காயும் சூரியனை தாங்கிக் கொண்டு போர் நடத்திவிட முடியும். ஆனால்... பேயெனக் கொட்டும் மழைக்குள் திட்டம், தந்திரம், தாக்குதல், வியூகம் எல்லாமே தலைகீழாக மாறிப் போய்விடக்கூடிய காலம் அது. இத்தனை காரணங்களால்... மன்னர்கள் தங்கள் சேனைகளையும், யுத்த தளவாடங்களையும் மழைக்காலத்தில் பத்திரப்படுத்தி வைப்பார்கள். வரிசையாக அவற்றை நிறுத்தி வைத்திருப்பார்கள். அதை பார்ப்பதற்கே ஒரு கம்பீரமாக, அழகாக வசீகரமாக இருக்கும்.

தனக்கு வெற்றி தேடித்தரும் செல்வங்கள் இவைதான் என்பதால்... படைத்தளபதியும், சேனாதிபதிகளும் அந்தப் போர் ஆயுதங்களை பழுது நீக்கி, புதிதாக்கி யுத்தத்துக்கு தயார் ஆவார்கள். வெற்றித் தேடித் தரவேண்டும் என்று வீரத்தோடு தங்கள் படைக்கலங்களுக்கு வணக்கம் செலுத்துவார்கள். மழை மெல்ல முடிந்ததும்... பதுங்கியிருந்த புலி பாய்வதுபோல பாய்ந்து எதிரிகளை வெல்வார்கள். இதுதானப்பா கொலுவின் ரிஷி மூலம், நதிமூலம் உண்மையான மூலம் எல்லாம்.

இதைப் பார்த்த பிராமணர்கள் தான்... இந்த தத்துவம் நன்றாக இருக்கிறதே. இதை பகவான் பெயரைச் சொல்லி பயன்படுத்தினால் இன்னும் நன்றாக இருக்குமே? என யோசித்தார்கள். உண்டானது நவராத்திரி. 9 நாள் முடிந்ததும்... வெற்றிக்காக போருக்கு புறப்படுவதை விஜயதசமி ஆக்கினார்கள்.

இதில் லட்சுமி எங்கிருந்து வந்தாள்? பார்வதி எங்கிருந்து வந்தாள்? சரஸ்வதி எங்கிருந்து வந்தாள்? பெண் தெய்வங்களின் புகழ் பாடுகிறேன் என்று சொல்லியே... 'ஆண் இல்லாமல் பெண் வாழ முடியாது. சாதிக்க முடியாது' என்று சொல்வதுதான் கொலு(!) தத்துவம்.

இந்த கொலு தத்துவத்தை செயல்படுத்துவதில் கூட நமக்குள் பற்பல வேறுபாடுகள்.



சிவனின் பெண்டாட்டி பார்வதி, விஷ்ணுவை பொம்மையாக்குவதா? அதை நாம் பண்டிகையாகக் கொண்டாடுவதா? என்று வைஷ்ணவர்கள் மத்தியில் ஒரு சங்கல்பம். எனவே, இன்றும் கொலு வைப்பதை வைஷ்ணவர்கள் சம்பிரதாயப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளவில்லை. இத்தனை கதைகளும் ஒரு உண்மையும் கொண்டதுதான் கொலு. அடுத்து?

**59,60,61.தெய்வங்களிடம் எதற்கு ஆயுதம்? பகவானின் ஆயுதப்பட்டியல்**
பகவான் சர்வ சித்தன் என்கிறபோது... அவனுக்கு ஆயுதங்கள் எதற்கு? சாதி உணர்வு கடவுளுக்கும் உண்டு... வேண்டும் என்று வலியுறுத்துகிறது

தன்னந்தனியாக நிற்கின்ற அய்யனாரில் இருந்து தேவிகள் புடைசூழ நிற்கிற சிவன், நாராயணன் வரை எல்லா கடவுள்களும் கையில் சுத்தி, அரிவாள், சூலம், வேல், வில், அம்பு என 'ரவுடியிஸம்' போலவே நிற்பதை பார்க்கிறோம்.

இவர்களுக்கு ஆயுதம் வேண்டுமா? ஏன் வேண்டும்?

. **59.** கொலு தத்துவம் பற்றி பார்த்து முடித்தோம். கொலு என்பது உண்மையில் பெண்தெய்வங்களைப் போற்றிப் புகழ்வதற்கா? அல்லது பெண் தெய்வங்களை சிறுமைப்படுத்தும் சடங்கா என்பதை விளக்கிக்கொண்டிருப்பீர்கள்.

ஒருவேளை.... இது பெண்களைப் போற்றிப்புகழும் சடங்கு என்றே வைத்துக் கொண்டாலும்... கொலு, கோயில்களில் வைக்கப் படுவதில்லை. அவரவர் வீட்டுக்குள்ளேயே வைத்துக்கொள்ள வேண்டும் என்பதுதான் அய்தீகம்.

ஒருவேளை பெண்களைப் போற்றினாலும் வீட்டுக்குள்ளேயே வைத்துப் போற்றிக்கொள்... வெளியே வேண்டாம்' என்று சொல்லாமல் சொல்கிறதோ என்னவோ?

சரி... கொலுவின் ரிஷிமூலமாக நாம் பார்த்தோமல்லவா? மன்னர்கள் தங்கள் படைகளை, படைக்கலன்களை வழிபாடு செய்வார்கள் என்று அந்த செய்கையிலிருந்து நம்பிக்கையாக, வழக்கமாக உருமாறியதுதான் ஆயுத பூஜை.மன்னன் மட்டுமன்றி அவனது தேசத்திலுள்ள பிரஜைகளையும் அவன் செய்ததை பின்பற்றினார்கள்.

மன்னனுக்கு போர் செய்வது ஒரு தொழில். அதனால் அவன் யுத்த தளவாடங்களை வழிபட்டான். அதுபோல்... ஒவ்வொரு பிரஜையும் தான் என்ன தொழில் செய்கிறானோ அந்த தொழில் செய்ய பயன்படும் உபகரணங்களை வைத்து வழிபாடு செய்தான்.

அந்தக்காலத்தில் பிராமணர்களுக்கு என்ன தொழில்? இந்தக் கேள்விக்கான பதிலை நாம் இத்தொடரின் 11-வது அத்தியாயத்திலேயே பார்த்திருக்கிறோம். அதாவது... யஜனம், யாஜனம் இரண்டுதான் பிராமணர்களின் தொழில் மந்திரம், ஹோமம், யாகம் ஆகியவற்றை பண்ணுவது, பண்ணுவிப்பது இதுதான். அப்படியென்றால் ஆயுதபூஜை என்று எதை வணங்க முடியும்?

யோசித்துப் பார்த்தார்கள் ஆயுத பூஜையை அப்படியே சரஸ்வதி பூஜையாக்கிவிட்டார்கள். இந்த இடத்தில் இன்னொரு கிளைக் கேள்வி முளைக்கிறது.

ஆயுதம் என்பது மனிதர்களுக்குத் தானே தேவையாக இருந்தது. இருக்கிறது.



தெய்வங்களிடமும் எதற்கு ஆயுதம் இருக்கவேண்டும். பகவான் சர்வ சித்தன் என்கிறபோது... அவனுக்கு ஆயுதங்கள் எதற்கு?

நாம் இன்னும் தன்னந்தனியாக நிற்கின்ற அய்யனாரில் இருந்து தேவிகள் புடைசூழ நிற்கிற சிவன், நாராயணன் வரை எல்லா கடவுள்களும் கையில் சுத்தி, அரிவாள், சூலம், வேல், வில், அம்பு என 'ரவுடியிஸம்' போலவே நிற்பதை பார்க்கிறோம்.

இவர்களுக்கு ஆயுதம் வேண்டுமா? ஏன் வேண்டும்? இதற்கான பதிலை வேதத்திலிருந்து தொடங்கி பார்த்தால் நமக்குத் தெளிவான பதில் கிடைக்கும்.

வேதத்தில் தெய்வங்களை இரண்டு வகையாக பிரித்துப் பார்த்திருக்கிறார்கள் ரிஷிகள்.

"ருத்ரோவா ஏஷஹ அக்னிஹிதஸ்யைதே தனுவஸ் கோரான்யசிவான்ய யச்சதயதுசத ருத்ரியஞ்ஜோதி யதேவாஸ்து கோராதனுதாம்தேன சமயதீ யத்வஸோர் தாதாம் தியோதீயைவாஸ்ய சிவாகனு தாந்தனே ப்ரினாதீ..."

இந்த வேத மந்த்ரம் என்ன சொல்கிறது. தெய்வத்தின் இயல்பைச் சொல்கிறது. அதாவது "Character of God" வேதகாலத்தில் ரிஷிகள் யாகம் பண்ணுவதற்கான ஏற்பாடுகள் செய்துகொண்டிருக்கும் போது... பெருங்காற்று காதை கிழிக்கும், மனசை உலுக்கும் சத்தத்தோடு அடிக்கிறது. ரிஷிகள் பயந்து சாகிறார்கள்.

'அய்யோ ருத்ரன் வந்துவிடுவானே... அவன் கொலைகார தேவதையாச்சே... எல்லாவற்றையும் துவம்சம் பண்ணிவிடுவானே...' என அலறுகிறார்கள்.

உடனே, ருத்ரனை நினைத்து...ருத்ரா உன் கோபத்துக்கு ஒரு நமஸ்காரம்ருத்ரா என் கோரத்துக்கு ஒரு நமஸ்காரம் ருத்ரா உன் குரூரத்துக்கு ஒரு நமஸ்காரம் உனக்குப் பயந்து உன்னைப் போற்றுகிறோம். நீ இங்கே வராதே. ஓடிப்போய்விடு...' என்று ருத்ரனை விரட்டுவதற்காகவே அவனை போற்றுகிறார்கள்.

அந்த வேதமந்திரம் விளக்குவது இதைத்தான்.அதாவது ருத்ரன் பார்க்கவே கோரமாக கொடூரமாக இருப்பான். அவனது வேலை மக்களுக்கு கெடுதல் செய்வதுதான். 'ருத்ராஹா குரூரஹா' என்றது வேதம். ருத்ரன் அயோக்கியன்.'சக்ஸ்ரானி, சகஸ்ரஸ்ய ருத்ரானி பூம்யாம்'

அதாவது இந்த லோகத்தில் ஆயிரமாயிரம் ருத்ரர்கள், (அயோக்கியர்கள், கொடுமைக்காரர்கள்) இருக்கின்றனர். அதனால்? "அந்த ஏவ ருத்ரன் நிரவதேதே..." 'சயனம்' என்றொரு யாகத்தை நடத்த எல்லா ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருக்கும் போது ருத்ரன் தலையை விரித்துப்போட்டுக் கொண்டு கையில் தனுஸ்... பாணத்தோடு வருகிறான்.

இங்கேதான் கவனிக்கவேண்டும்.வேதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் ஒரே ஆயுதம் தனுஸ்-பாணம் தான். இது ருத்ரனின் கையில் இருக்கும். அதை எடுத்துக்கொண்டு அவன்... யாகத்தை குலைப்பான். சோகத்தை உருவாக்குவான். சத்(நல்ல) விஷயங்கள் செய்து கொண்டிருக்கும் இடத்தில் வில்லை எடுத்துக்கொண்டு வந்து எல்லாரையும் விரட்டுகிறான்.

இப்படியெல்லாம் ருத்ரன் தாண்டவம் ஆடும் முன்னமேயே... அவனை மந்த்ரம் மூலம் போற்றி மந்த்ரத்தால் அடித்து விரட்டு என்பதைத்தான் 'அந்தத ஏவ ருத்ரன் நிரவதேதே....' என்கிறது வேதம்.இப்படிப்பட்ட, அயோக்கியன், திருடன், குரூரன், பெருங்காற்றின் தகப்பனார்



என்றெல்லாம் வர்ணிக்கப்பட்ட ருத்ரன் கையில் தனுஸ்-பாணம் (வில், அம்பு) என்ற ஆயுதம் இருந்தது. அதே நேரம் ருத்ரனுக்கு இன்னொரு சாந்த வடிவமும் இருக்கிறது. அன்பே உருவான, கருணையே சொரூபமான அவன்?....

**60.** வேதத்தில் கொடுமைக்காரனாக சித்தரிக்கப்பட்ட ருத்ரனின் இன்னொரு வடிவான சாந்தரூபன், கருணை சொரூபன் யார்?...விஷ்ணு !

வேதம், அழகு என்பதை அத்புதம் என்னும் வார்த்தையால் வடித்துக் கொடுக்கிறது. அது பிற்பாடு நம் பாஷையில் அற்புதம் என்று மயங்கி மருவிற்று. 'சதசத்பதி அத்புதம்....' என்கிற மந்த்ர வார்த்தைகள் விஷ்ணுவை Leader of the Society ஆக சித்தரிக்கின்றன.சமுதாயத்தின் தலைவனான நீ அழகாக சாந்தமாக இருக்கிறாய் என்கிறது வேதம்.

இன்னொரு இடத்தில்...'தொம்ஹி சத்யோ அத்புதஹா தாதா வாஜஸ்ய'....அதாவது நீ உண்மையான அழகுள்ளவனாய் இருக்கிறாய் என்று அர்த்தம்.

வேதப்படி கடவுளுக்கு உருவம் இல்லையென்றீர்களே... பிறகு எப்படி ஆயுதம், அழகெல்லாம் வந்தது? என உங்களுக்கு சந்தேகம் முளைக்க வேண்டும். அதே வேதம்தான்...'நீ நினைத்தால் கடவுளுக்கு உன் இஷ்டப்படி உருவம் கற்பிதம் செய்துகொள்' என்று கூறியிருக்கிறதே!

சரி... வேதம் சொன்னதுபோல் ருத்ரனுக்கு வில்-அம்பு ஆயுதம். ருத்ரன் போன்ற கொடுமைக்காரனே வில்-அம்பு மட்டும்தான் வைத்திருந்தான் என்றால்... சாந்த சொரூபி... கருணை வடிவான விஷ்ணுவுக்கு பட்டு பீதாம்பரம், ஜொலிக்கும் நகைகள் மட்டும்தானே உடைமைகளாக இருக்கவேண்டும்.

ஆனால்... ருத்ரன் போன்ற குரூரனுக்கே இல்லாத வகையில் பஞ்சாயுதம் தரித்திருக்கிறார் விஷ்ணுபஞ்சு ஆயுதமா?... ஆமாம் ஆயுதங்களுக்கு பஞ்சமில்லை. ஆமாம் விஷ்ணுவின் கைகளில் அய்ந்து ஆயுதங்கள்.சங்கு, சக்கரம், கதை, சாரங்கம், கட்கம்! ஒவ்வொன்றாய் விளக்குகிறேன்.

சங்கு... அந்தகாலத்தில் Premetive Culture காலத்துப் பழக்கப்படி சண்டை போடச் செல்லும்போது... 'நாம் சண்டைக்கு தயார்... புறப்படட்டும் நமது பரிவாரங்கள்' என்று சமிக்ஞை கொடுப்பதற்காகவும்... டேய்... என் படை கிளம்பி விட்டதடா... என எதிரிக்கு சவால் விடுவதற்கும்தான் சங்கு ஊதுவார்கள். அதேபோல் எல்லாம் முடிந்தபின்னரும் சங்கை ஊதி முடிவை தெரிவிப்பார்கள்.

சண்டை ஆரம்பித்து முடியும் வரை உபயோகப்படும் சங்குதான் சாந்த சொரூபியான விஷ்ணுவின் முதல் ஆயுதம்.அடுத்தது சக்கரம்...வேதத்தில் முக்யத்துவம் கொடுத்து கூறப்பட்டுள்ள அக்னியின் அம்சம்தான் இந்த சக்கரம். சக்கரத்தை ஏவினால் அதிலிருந்து கக்கப்படும் நெருப்பு எதிரியைக் கொளுத்தி வேகவைத்து சாகவைத்துவிடும்.

இதுதான் அழகான விஷ்ணுவின் அடுத்த ஆயுதம். சக்கரத்துக்கு இன்னொரு விசேஷம் உண்டு. அதை அய்ந்து ஆயுதங்கள் பற்றி விளக்கி விட்டு தனியாகச் சொல்கிறேன். மூன்றாவது ஆயுதம் கதை (Gadha). இதுவும் Premetive Culture காலத்து... அதாவ ஏறத்தாழ காட்டுமிராண்டிகள் பயன்படுத்திய ஆயுதம்தான். பெரிய மரக்கட்டை அடித்தால் ஒரே அடியில் மோட்சம்தான். அப்படிப்பட்ட கட்டைதான் இது.



இன்றும் செய்தித்தாள்களில்.... 'உருட்டுக் கட்டையால் அடித்து ஒருவர் பலி' என்று கொட்டை எழுத்தில் செய்தி பிரசுரம் பண்ணுகிறார்களே. அந்த உருட்டுக் கட்டைதான்.

கிராமப்புறங்களில் சுக்குமாந்தடி என பயத்தோடு அழைக்கப்படும் ஆயுதம் தான் கதை (Gadha). நான்காவது சாரங்கம் அதாவது வில்... இதுவும் பழங்காலத்தில் காட்டில் உள்ளவர்கள் வேட்டையாடப் பயன்படுத்திய ஆயுதம்.

அய்ந்தாவது கட்கம், 'தனியாய் போன ஸ்த்ரீயை கத்தியை காட்டி தங்கச் சங்கிலி பறித்தான் திருடன்' என்று News paper களில் வாசிக்கிறோமே... கத்திதான் கட்கம்.இப்படியாக அய்ந்து ஆயுதங்களை தாங்கிக் கொண்டிருப்பவர்தான் ருத்ரனின் சாந்த வடிவமான விஷ்ணு.

இதில் சக்கராயுதத்துக்கு மட்டும் பெரிய விசேஷம் உண்டு என குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? அது என்ன விசேஷம்? பகவான் விஷ்ணுவின் சங்கல்பம்தான் சக்கரம். அதாவது, சுதர்ஸனர் என மரியாதையாக அழைக்கப்படும் ஆயுதம். பகவான் நாராயணன்தான் நினைப்பனவற்றை எல்லாம் செய்து முடிப்பதற்காகவே சுதர்ஸனரை வைத்திருக்கிறார். பகவான் எண்ணியதை எல்லாம் சுதர்ஸனர் (சக்கர ஆயுதம்) நடத்தி முடிக்கிறார்.

இவ்வாறு... ஒரு ஆயுதத்துக்கு இவ்வளவு அந்தஸ்து தந்துள்ளது. நமது சம்ப்ரதாயம்.சுதர்ஸனருக்கு இன்னொரு சீரும் சிறப்பும் உண்டு.என்ன?...

"யஸ்மின் விண்யஸ்யபாரம் விஜயினீஜகதாம் ஜங்கமஸ்தாவரணாம் லக்ஷ்மி நாராயணாக்யம் மிதுனம் அனுபவதீ உதிஉதாரன் விஹாரான்ஆரோக்கியம் பூதிமாயுஸீம்க்ருதமிஹ பஹீனா..." சுதர்ஸன ஸதகம் என்றும் புஸ்தகத்தில் இடம் பெற்றிருக்கும் கடைசி ஸ்லோகம் இது. இதை பண்ணியவர் சுரநாராயண ஜீயர்.

சரி... இந்த ஸ்லோகம் என்ன சொல்கிறது? நாராயணன் பல காரியங்களைக் கவனித்து வருகிறார். இதனாலேயே தன் மனைவியான லட்சுமியோடு அதிக நேரத்தை அவரால் செலவிட முடிகிறதில்லை.

ஆனால்... பகவான் தன் பத்தினியான லட்சுமியோடு உல்லாசமாக பொழுது போக்குவதற்கு... Relax செய்வதற்காக லட்சுமியோடு தனியாகச் செல்லும்போது எல்லா பொறுப்புகளையும் தன் முக்கிய ஆயுதமான சுதர்ஸனரிடம் தான் கொடுத்து விட்டுப் போகிறார்.

இதைவிட விசேஷம்... இந்த சுதர்ஸன ஆயுதத்தின் கையில் 16 ஆயுதங்கள் இருக்கின்றன.என்னது? ஆயுதத்தின் கையிலும் ஆயுதங்களா?

**61.** என்னது ஆயுதத்தின் கையில் 16 ஆயுதங்களா? அப்படியென்hல் சுதர்சனர் என்ற சக்கராயுதத்துக்கு எவ்வளவு முக்கியத்துவம் பாருங்கள். அந்த ஆயுதத்தை அது இது என்று குறிப்பிடாமல் அவர் இவர் என்ற மரியாதை விகுதியுடன் அழைக்கின்றனர். ஆமாம் சக்கரத்தாழ்வார் என நாமகரணம் சூட்டப்பட்டது சுதர்சனத்துக்கு. சமஸ்கிருதத்தில் அப்படியே சுதர்சனர் என்று மரியாதை கலந்து பெயர் சூட்டினார்கள்.

பெருமாளின் கையில் இருக்கும் சுதர்சனரின் கையில் 16 ஆயுதங்கள். பெருமாளுக்கே பஞ்சாயுதம்தான். ஆனால் இவருடைய ஆயுதத்துக்கு 16 ஆயுதங்கள்.



என்னென்ன என்று பார்ப்பதற்கு முன்னர்... பெருமாள் சுதர்சனத்தை கையில் வைத்துக்கொண்டு செய்த சாகசங்களில் ஒரு சிலவற்றைப் பார்த்துவிடுவோம்.

பவுண்டரக வாசுதேவன் என்னும் மன்னன். காசியை ஒரு காலத்தில் ஆண்டவனாம். அவனுக்கு தன் பெயரின் மேல் அலாதி பற்று. அந்தப் பற்று கொஞ்சம் கொஞ்சமாக கர்வமாயிற்று. கர்வம் தலைக்குள் ஏறி உட்கார்ந்து கொண்டு அவனை அழிச்சாட்டியம் பண்ண வைத்தது. அவன் என்ன நினைத்தான் என்றால் என் பெயரில் வாசுதேவன் என்று வருகிறது. அதனால் வாசுதேவனாகிய விஷ்ணு நான்தான். நானே கடவுள். என் முன் அந்த விஷ்ணு கைகளில் பஞ்சாயுதம் தரித்துக் கொண்டு நிற்கக்கூடாது. அவன் கடவுள் அல்ல. இந்த உலகத்தை ரட்சிக்க வந்த கடவுள் நானே.

அதனால்... அடே விஷ்ணு... உன்னுடைய சங்கு சக்கரத்தை நீ விட்டுவிட வேண்டும். என்னிடம் ஒப்படைத்து விடவேண்டும். ஏனென்றால் உண்மையான வாசுதேவன் உண்மையான விஷ்ணு நான்தான் என கர்வம் தலைக்கேறி குதித்தான் வாசுதேவன்.

விஷ்ணு பார்த்தார்... சங்கு - சக்கரத்தையா கேட்கிறாய்? முதலில் சக்கரத்தை தருகிறேன் வைத்துக்கொள்... கையில் அல்ல... கழுத்தில் வாங்கிக்கொள் என தனது சக்கராயுதத்தை ஏவினார் விஷ்ணு. அந்த சக்ராயுதம் பவுண்டரக வாசுதேவனின் கழுத்தில் இறங்கியது. "நான்தான் கடவுள், உன் ஆயுதத்தைக் கொடு'' என்றவனுக்கு தன் சக்ராயுதத்தைக் கொடுத்து அவன் உயிரை எடுத்தார் விஷ்ணு.

இது ஒரு சாகசம் என்றால்... இன்னொன்று... விஷ்ணுவாகிய கிருஷ்ணன் சம்பந்தப்பட்டது.

சிசுபாலன். இவன் யாரென்றால்... சேதி நாட்டு அரசன். இவன் கிருஷ்ணனோடு விரோதம் புரிந்தே வந்தான். கிருஷ்ணரை திட்டிக் கொண்டே வந்தான். விஷ்ணுவாகிய கிருஷ்ணர் நூறு திட்டுவரை பொறுத்துக் கொள்ளலாம் என்று இருந்தார். சிசுபாலனின் திட்டு மொழிகளும் நூறை கடந்தன.

கடைசியாய் "போடா இடைப்பயலே...'' என கிருஷ்ணரின் ஜாதிப் பெயரை சொல்லி திட்டினானாம் சிசுபாலன். அதுவரை பொறுத்த கிருஷ்ணன் சாதிப் பேரை சொல்லி திட்டுகிறாயே...? என கோபப்பட்டு - சுதர்சனத்தை தன் சக்ராயுதத்தை எடுத்தார்... சிசுபாலனின் தலையை கழுத்திலிருந்து கத்தரித்து கீழே விட்டெறிந்தார்.

இந்த சிசுபாலன்தான், வைகுண்டத்தின் துவாரபாலகர்களில் ஒருவராம். விஷ்ணுவே இவனுக்கு மோட்சம் அளிக்கிறாராம். எப்படியென்றால்... 'டேய்... நீ என் நண்பனாக இருந்து தாமதமாக மோட்சம் பெறுகிறாயா?அல்லது எனக்கு எதிரியாக மாறி உடனே மோட்சம் பெறுகிறாயா? எது வசதி...?'' என சிசுபாலனிடம் கேட்டாராம் விஷ்ணு. எதிரியாகவே இருந்து சீக்கிரம் மோட்சம் பெற்று விடுகிறேன் என்கிறான் சிசுபாலன்.

ஆக... கடவுளின் நண்பர்களைவிட எதிரிகளுக்குத்தான் மோட்சம் விரைவில் கிடைக்கும் என்பதை விஷ்ணுவே சொல்லியிருக்கிறார். இது பாகவதத்தில் வருகிறது.

தவிர, சாதி உணர்வு கடவுளுக்கும் உண்டு... வேண்டும் என்று வலியுறுத்துகிறது இக்கதை.

கூடவே சக்கராயுதத்தின் சாகசத்தையும் காட்டுகிறது. சக்கராயுதத்தைப்பற்றி இன்னொரு குறிப்பும் உண்டு. இந்திரனுடைய வஜ்ராயுதம் ததீசு முனிவருடைய எலும்பை எடுத்து



உடைத்து செய்யப்பட்டது. அந்த மனித எலும்பு ஆயுதத்துக்கு சக்தி கொடுத்ததே இந்த சக்கராயுதம்தான்.

சரி... சக்கராயுதத்தின் சாகசக் கதைகளைப் பார்த்தோம். 16 ஆயுதங்கள் என்று சொன்னீர்களே... அது என்ன என்று கேட்கிறீர்களா?

பகவான் விஷ்ணுவின் ஒரு ஆயுதமான சக்கரத்தின் இரு பக்கம் எட்டெட்டு கைகளிலும் தலா 8 ஆயுதங்கள். இதைப்பற்றி வேதாந்த தேசிகனே 'சோடஸ ஆயுத ஸ்தோத்ரம்'' என்று பண்ணியிருக்கிறார். அதாவது 16 ஆயுதங்கள் பற்றிய ஸ்தோத்தரம். ஆயுத ஸ்தோத்திரத்தில் என்னென்ன ஆயுதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன?

சுதர்சனத்தின் வலது கைகளை முதலில் பார்ப்போம்.
1. சக்கரம் 2. மழு 3. குந்தம் (ஈட்டி) 4. தண்டம் (தடி) 5. அங்குசம் 6. சதாமுகாக்னி (ஒரே நேரத்தில் நூறு வாய்களிலிருந்து அக்னி உமிழும் ஆயுதம்) 7. மிஸ்க்ரிஸம் (கத்தி) 8. வேல்.

இவையெல்லாம் வலது கைகளில் உள்ள ஆயுதங்கள்.
அப்புறம் இடது கையில், 1. பாஞ்ஜ சண்யம் (சங்கு) 2. சாரங்கம் (வில்) 3. பாசம் (கயிறு) 4. கலப்பை 5. வஜ்ராயுதம் 6. கதை (குண்டாந்தடி) 7. உலக்கை 8. திரிசூலம்.
மொத்தம் எட்டெட்டும் பதினாறு ஆயுதங்கள் ஆயிற்றா...?
பதினாறும் பெற்று பகவான் பெருவாழ்வு வாழ்வது இதுதானோ...?

வேதத்தில் சாந்த சொருபியாக காட்டப்பட்ட விஷ்ணு என்ற பகவானை இப்படி பட்டறைக்காரர் போல ஆயுதம் தரிக்க வைத்துவிட்டார்களே...யார்...? ஏன்...?

**62,63,64.**பிராமணர்கள் அனுபவித்த ராஜபெண்கள். யாகங்கள் ஏன்? கூலி எவ்வளவு?
மன்னர்களுக்காக யாகம் நடத்திவிட்டு சம்பளமாக ராணிகளையும் ராஜகுமாரிகளையும் அழைத்துச் சென்று ராஜசுகம் அனுபவித்து விட்டு திரும்ப அரண்மனைக்கு அனுப்பிய பிராமணர்கள்.

யாகங்களின் பட்டியல். பிராமணர்களுக்கு யாகங்களுக்கான சம்பளம் என்னென்ன?

பாவம் என்றால் என்ன? நாம் ஒரு பதார்த்ததை வாங்கி சாப்பிடுகிறோம் என்றால்... அந்த பதார்த்தம் வேறு எவனோ வாங்கி சாப்பிட வேண்டியது. அதை அவனுக்கு கிடைக்காமல் நாம் சாப்பிட்டு விட்டோம். அதனால் அதுவும் பாவம்தான்.

நாம் இப்போது சுவாசித்துக் கொண்டிருக்கிற காற்று... வேறு யாருக்கோ கிடைக்க வேண்டியது. அதை நாம் சுவாசித்து விட்டோம். அதனால் அதுவும் பாவம்தான்.

இந்த லோகத்தில்.. நீங்கள் பஸ் பிரயாணம் மேற்கொள்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் உட்கார இடம் கிடைத்து உட்கார்ந்து பயணம் செய்கிறீர்கள். இது ஒருவகை பாவம்தான்.பக்கத்தில் பலபேர் நின்று கொண்டிருக்கும்போது நீங்கள் உட்கார்ந்திருப்பது பாவம்தானே. நின்று கொண்டே வந்தாலும் அதுவும் பாவம்தான். ஏனென்றால் நீங்கள் இன்னொருவர் நிற்க இருந்த இடத்தில்தானே நிற்கிறீர்கள்?

பாவத்தை நிவர்த்தி செய்ய வேண்டுமானால், பிராமணன் இடத்தில் போய் யாகம் செய் என்கிறது வேதம்



**62.** பதினாறு (ஆயுதங்களும்) பெற்று பெருவாழ்வு வாழ்ந்து வரும் பகவானின்... ஆயுதப்பட்டியலை தரிசித்தோம்.

எல்லாம் வல்லவனான அன்பால் ஆகப்பெற்ற... வேதத்திலேயே சாந்தவடிவம் கொண்டவன் என சொல்லப்பட்ட விஷ்ணுவுக்கு ஏன் இத்தனை ஆயுதங்கள்?

விஷ்ணுவை விடுங்கள்... மற்ற எல்லா தெய்வங்களும் அன்பை போதிக்கின்றன என்றால் ஏன் ஆயுதங்களுடன் சேவை சாதிக்கின்றன.

இங்கேயும் Humanistic Worship தான் காரணமாகிறது. அதாவது... முதன் முதலில் பயம் வந்த பிறகுதான் மனிதன் கடவுளை நம்பினான். நம்மை யாராவது அழித்து விடுவார்களோ என இருதயத்துக்குள் துடித்த அந்த முதல் படபடப்புதான் கடவுளைப் படைத்தது. ஏனென்றால் Primitive Culture அதாவது காட்டுமிராண்டி காலத்துக்கு, நாகரிகத்துக்கு முந்தைய மனிதர்கள் idol worship உருவ வழிபாடு செய்யும் போது வெறும் உருவத்தோடு கடவுளை விட்டுவிடவில்லை.

நம்மை பாதுகாக்க வேண்டும் என்றால்... இவர் வெறும் கையோடு இருந்து என்ன பயன்? அதனால் அவர் கையில் நாம் பயன்படுத்தும் ஆயுதங்களைக் கொடுப்போம். அதை அவர் வைத்திருந்தால் நம்மை பாதுகாப்பார் என்று நினைத்தார்கள்.

சக்கராயுதம் வேதத்தில் அக்னியாக சொல்லப்பட்டிருக்கிறது. சங்கு முதலான மற்ற எல்லா ஆயுதங்களுமே மக்கள் பயன் படுத்தியவைதான்.கடவுளுக்கு ஆயுதங்களைக் கொடுத்தவர்கள் நாகரிகமடையாத Primitive காலத்து மனிதர்களே.

புராணங்களில் இந்த ஆயுதங்கள் அதிக அந்தஸ்து பெற்றன. தீயவர்களை அழிப்பதற்காக பகவான் பற்பல ஆயுதங்களைப் பயன்படுத்துவார். இந்த இடத்தில் இன்னொரு முக்கிய விஷயத்தை உங்களுக்குச் சொல்லவேண்டும்.ஆரம்பகால ஆயுதங்கள் எல்லாமே தங்கத்தினால் செய்யப்பட்டவை. தங்கம் அன்று தங்கு தடையின்றி கிடைத்ததாம்.

வேதத்திலேயே தங்கத்தின் முக்கியத்துவம் நிறைய சொல்லப் பட்டிருக்கிறது. 'வேதத்தில் பெண்கள்' பகுதியிலேயே... பெண்கள் உடல் முழுவதும் தங்க நகைகள் தகதகக்க வந்தார்கள் என்று குறிப்பிட்டிருந்தேன். உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா?

அதேபோல... வேதத்தில் தங்கம் இன்னொரு பெரிய விஷயத்துக்கும் பயன்படுத்தப்பட்டது.என்ன விஷயம்? அதற்கு முன்...

வேதத்தில் யாகங்கள் முக்கியமானவை. இந்த யாகங்களை பிராமணர்கள் பண்ணி வைக்கவேண்டும். பிராமணர்கள் Manthra labours. அதாவது மந்திரத் தொழிலாளர்கள்.

வேதத்தில் 6 அங்கங்கள் இருக்கின்றன.

வேத சொற்களின் உச்சரிப்பைப்பற்றி சொல்லும் சிக்ஷா என்பது முதல் அங்கம். மொழியியலைப் பற்றி சொல்வது வ்யாகரண அங்கம். யாப்பு இலக்கணம்பற்றி கூறுகிறது சந்தஸ அங்கம். சொற்பிறப்பு பற்றி சொல்வது நிருப்தம். ஜோதிஷம் பற்றி சொல்லாது ஜோதிஷ அங்கம். வேதத்தில் கூறப்பட்ட யாகங்களை எப்படி எப்படி செய்யவேண்டும் என்று சொல்வது கல்பம் என்னும் அங்கம்.



இப்படியாக யாகங்களை அனல் முன் நின்று மந்த்ரங்களை ஓதி சும்மாவா சொல்லிக் கொடுப்பார்கள். அதற்கு Charge வேண்டாமா? Fees வேண்டாமா? சம்பளம் கொடுக்கவேண்டும் அல்லவா? இதற்குப் பெயர்தான் தட்சணை. அதாவது யாகங்களுக்கு கொடுக்கவேண்டிய சம்பளம்தான் தட்சணை!

அசுவமேத யாகம் பற்றி இக்கட்டுரைத் தொடரின் முற்பகுதியில் நான் சொல்லியிருந்தேன். அதில் மன்னர்களுக்காக அஸ்வமேத யாகம் நடத்திவிட்டு... அதன் பின்னர் மன்னர் வீட்டுப் பெண்களான ராணிகளையும், ராஜகுமாரிகளையும் தங்களோடு அழைத்துச் சென்று விடுவார்கள். ராஜ பெண்களோடு ராஜ சுகம் அனுபவித்து விட்டு திரும்ப அரண்மனைக்கு அனுப்புவார்கள் யாகம் நடத்துபவர்கள்.
இப்படியாக...ஒவ்வொரு யாகத்துக்கும் தட்சணை இன்னது என நிர்ணயிக்கப்பட்டுள்ள நிலையில்... வித்தியாசமான யாகம் சத்திரயாகம்.அதென்ன சத்திரயாகம்?

பலர் கூடிப் பல நாள்கள், பல வருடங்கள் லோக சேமத்துக்காக செய்யப்படுகிற வேள்வி. ஒவ்வொரு யாகத்துக்கும் அக்னி குண்டம் வளர்த்து அதில் பல பொருள்களை ஆகுதி செய்வார்கள். அதுபோல... இந்த யாகம் பண்ணும் எஜமானர்கள் என்னென்ன பொருள்களை அர்ப்பணிக்க வேண்டும்?

வீடு, ஆஸ்ரமம், இருப்பிடம் எல்லாவற்றையும் கொடுக்கவேண்டும். யாகம் பண்ணுபவருக்கு கொடுக்கும் தட்சணையையும், நன்கொடையையும் யாகத்துக்கே அர்ப்பணிக்கவேண்டும்.

இந்த யாகத்துக்காக அர்ப்பணிக்கப்பட்ட வீடுகள், ஆஸ்ரமங்கள், மாளிகைகள்தான் எல்லோராலும் உபயோகப்படுத்தப்படும். யார் வேண்டுமானாலும் அங்கு வசிக்கலாம். சத்திர யாகத்துக்காக அர்ப்பணிக்கப்பட்ட வீடுகள், இருப்பிடங்கள், ஆஸ்ரமங்கள்தான் சத்திரங்கள் என அழைக்கப்படுகின்றன. இந்த சத்திர யாகத்துக்கு மட்டும்தான் தட்சணை கிடையாது.

சரி... தங்கம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தவர்... எதற்கு திடீரென்று தட்சணைபற்றி பேசிக் கொண்டிருக்கிறார் என நீங்கள் நினைக்கலாம்.சம்பந்தம் இருக்கிறது. வேதத்தில் தங்கத்தின் முக்கியத்துவம்பற்றி சொல்லியிருந்தேன் அல்லவா?

யாகங்களுக்கும் அந்த முக்கியத்துவம் உண்டு. யாகம் செய்பவர்களுக்குத் தட்சணையாக தங்கம் மட்டும்தான் கொடுக்கவேண்டும். மற்ற உலோகங்களை கொடுக்கக் கூடாது.

விலை மதிப்பற்ற... தங்கம்தான் தட்சணைக்கு தகுந்தது என 'சொர்ண'த்தை மட்டுமே தட்சணையாக வரையறுத்திருக்கிறது வேதம்.அதற்கும் ஒரு காரணம் இருக்கிறது. பிரம்மா ருத்ரனை படைத்தபோது....

முதன் முதலில் உலகத்துக்குப் பிரவேசித்த அந்தக் குழந்தை 'ங்கே...' என அழுததாம். சாதாரண அழுகையல்ல. பயங்கரமான அழுகை. ரோதனம் என்றால் அழுவது. தொடர்ந்து அழுதுகொண்டே இருந்ததால் அவனுக்கு ருத்ரன் என பெயர்.

அந்த ருத்ரனின் கண்ணீர் இருக்கிறதே...

**63.** ருத்ரன் பிறந்ததிலிருந்தே அழுது கொண்டிருப்பதை பற்றி சொன்னேன். யஜுர் வேதத்தின் முதல் காண்டத்தின் 5-ஆம் பட்சத்தில்தான் ருத்ரனின் கண்ணீர்த் துளிகள்



காட்டப்பட்டிருக்கின்றன.

ருத்ரன் அழுதால் என்ன சிரித்தால் என்ன என சும்மா விட்டுவிட்டு போய்விட முடியாது. தட்சணையைப்பற்றி சொன்னீர்கள். பிறகு தங்கத்தைப்பற்றி சொன்னீர்கள்? இப்போது திடீரென ருத்ரனின் கண்ணீர் எதற்கு...? என்று நீங்கள் கேட்கலாம். ருத்ரன் அழுதது ஒரு வகையில் பிராமணர்கள் சிரிக்கத்தான்.

ஏன்...? எப்படி...? ரன் அழுது அந்த கண்ணீர் வருகிறது இல்லையா...? அது அப்படியே உறைந்து உலோகமாக மாறிவிட்டது. என்ன உலோகம்...? வெள்ளியாக மாறிவிட்டது. அதாவது **ருத்ரனின் கண்ணீர் தான் வெள்ளி.**

ருத்ரன் எப்படிப்பட்டவன் என்பதை நாம் முதலிலேயே பார்த்தோம். 'கொடூரமானவன், வம்புகள் செய்பவன், வதம் பண்ணுபவன், ஆக அவன் அயோக்கியன்' என்று சொன்ன வேதம்.

ருத்ரனின் கண்ணீர்தான் வெள்ளி. அதனால் அந்த வெள்ளியை யாகம் செய்து வைக்கும் பிராமணர்களுக்கு தட்சணையாக கொடுக்கக் கூடாது. வெள்ளியை தட்சணையாக வாங்கவும் கூடாது. அதனால் தங்கத்தை மட்டுமே தட்சணையாக வாங்குவது என்றது வேதம்.

இன்றும் யாக, ஹோமங்களுக்கு வெள்ளிப் பொருள்களை பிராமணர்கள் தட்சணையாக வாங்குவதில்லை. பணம் அல்லது தங்கம். இப்போது புரிகிறதா... ருத்ரனின் அழுகை யாகம் செய்யும் பிராமணர்களை சிரிக்க வைத்தது எப்படி என்று.

வெள்ளியை விட தங்கத்தின் மதிப்பு அதிகம் என்று அறிந்தே வேதக்காரர்கள் தங்கத்தை தாங்கிப் பிடித்து வெள்ளியை ஓரங்கட்டினார்கள். வெள்ளி கொடுக்காதே, தங்கம் மட்டுமே கொடு என சும்மா சொன்னால் கேட்பார்களா? அதனால்தான் ருத்ரனை அழ வைத்தார்கள். அப்போது விழிகளில் இருந்து கண்ணீரை வெள்ளியாக விழ வைத்தார்கள்.

தட்சணைக்கு இன்னும் ஒரு அந்தஸ்து உண்டு... பாகவதத்தில் ஒரு மேற்கோள் சொல்லப்படுகிறது.

அதாவது பகவான் யக்ஞயம் என்றால் தட்சணை என்பது பகவானின் பத்தினி போன்றது. இன்னும் சொல்லப் போனால்... யாகம் நடந்து கொண்டிருக்கிறது. அந்த யாகம் தான் பகவான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்படியானால் பகவானின் பத்தினி இருக்கிறாளே அவள்தான் தட்சணை.

இன்னும் விஸ்தாரமாக சொல்லப்போனால்... பத்தினியின்றி பகவான் எப்படியோ, அதுபோல்தான் தட்சணை இல்லாத யாகம். தட்சணையை எப்படியாவது வாங்கியே தீரவேண்டும் என்பதால்... 'பகவானின் பத்தினி' என்ற அந்தஸ்து வழங்கப்பட்டிருக்கிறது.

இதைத்தான் ப்ரம்ம சூத்திரக்காரர்.... யாகத்தின் சம்பளம் என்று குறிப்பிட்டார். யாகம் முடிந்துதான் தட்சணை கொடுக்கவேண்டும். ஆனால், நான் தட்சணை பற்றிய தகவல்களை முன்கூட்டியே கொடுத்துவிட்டேன்.

யாகங்களின் முக்கியத்துவம் என்ன? பிராமணர்கள் ஆயுள் முழுதும் செய்து கொண்டே இருக்கவேண்டிய தொழில்தான் யாகம். யாக சாலையில்தான் பிராமணர்கள் நடந்து செல்லவேண்டும்.



நாட்டின் ராஜாவிலிருந்து... அன்று கடையனாக மதிக்கப்பட்ட விவசாய கூலித் தொழிலாளர்கள் வரை அனைவருக்காகவும் பிராமணன் தட்சணை வாங்கிக் கொண்டு யாகம் செய்வான்.

யாகத்தின்போது ராஜாவே, ப்ராம்மணனைப் பார்த்து பணிந்து அமர்ந்திருப்பான். ஏன் என்றால்...

"தஸ்மாது சோமராஜா னாஹா
ப்ராம்மணாஹா...'' இப்படியென்றால் என்ன?

"உங்களுக்கெல்லாம் என்று ஒரு ராஜா இருப்பான். அவன் உங்களை கட்டியாண்டு வருவான். ஆனால்... எங்களுக்கு ராஜா இவன் அல்ல. இந்த க்ஷத்ரிய ராஜாவுக்கு நாங்கள் கட்டுப்பட்டவர்கள் அல்ல. நாங்கள் ப்ராமணர்கள். இந்த ராஜாவை விட மேலானவர்கள்.

அதனால் உங்கள் ராஜா எங்களுக்கு கீழே தான். எங்கள் ராஜா, சோமராஜா தான்'' என்றுதான் அந்த சின்ன மந்த்ர வாக்கியத்துக்கு அர்த்தம்.

இப்படியாக ராஜாவே கீழ்ப்படிந்தவன் என்றால்... மற்றவர்களைப் பற்றி எண்ணிப் பாருங்கள்.

யாகம் நடத்தும்போது என்ன எதிர்பார்க்கிறார்கள்? உலக நன்மைக்காக நடத்துவார்கள். புத்ர பாக்யம் வேண்டுமென்று சில யாகங்கள் உண்டு.

யாகங்களின் பெரும்பாலான முக்கியத்துவம்... நமது பாவங்களை தொலைக்கத்தான். (பாவங்களை பற்றி உங்களுக்கு நிறைய சொல்ல வேண்டியுள்ளது. அடுத்து சொல்கிறேன்).

அக்னி ஹோத்ரம் என்னும் யாகம் தனக்காக பண்ணிக் கொள்வது. இதற்கு தட்சணை தனக்குத்தானே கொடுத்துக் கொள்வதுதான்.

தர்ஷம்பூர்ணமாசம் எனப்படும் ஒரு யாகம் அமாவாசை, பவுர்ணமியை அடிப்படையாக வைத்து செய்யவேண்டிய ஒரு யாகம்.

தர்ஷம் என்பது அமாவாசை. பூர்ணம் என்றால் பவுர்ணமி. இந்த யாகத்து தட்சணை என்ன தெரியுமா?

அன்வாஹார்யம். அதாவது சாப்பாடு தான் தட்சணை.
இதுபோல் இன்னும் பல யாகங்கள். இன்னும் பல தட்சணைகள்.

யாகங்களை ஒரே ஒரு ஆள் மட்டும் நடத்த முடியாது. குழுக்குழுவாய் தான் நடத்துவார்கள். அதனால் தட்சணையும் 'க்ஷரடம' ஆகத்தான் இருக்கும்.

100 பசுக்கள், 1000 பசுக்கள், 100 கன்றுக்குட்டிகள், 1000 கன்றுக்குட்டிகள் என தட்சணைகள் தங்கத்தைத் தவிரவும் நிறைய உண்டு.யாகம் முடிந்ததா...? அவருக்கு 1000 நிஷ்கத்தை கொடப்பா. நிஷ்கம் என்றால்...

**64.** நிஷ்கம் என்றால்?
நாணயம் தங்க நாணயம் Vedic மற்றும் Post Vedic கால கட்டங்களில் புழக்கத்திலிருந்த



தங்க நாணயத்துக்கு பெயர் தான் நிஷ்கம்

யாகம் முடிந்த உடன் தங்கத்தாலான பொருள்களை மட்டுமல்ல.. இதேபோன்ற நிஷ்கங்களையும் வாங்குவார்கள்.

ஸ்வாமிக்கு 1000 நிஷ்கம் கொடுங்கோ என குரல் வரும் அரசர்கள் நடத்தும் யாகம் என்றால் நிறைய நிஷ்கம்கள் கிடைக்கும். மற்றவர்களின் யாகம் என்றால்... நிஷ்கத்தை கூட்டிக் குறைத்துக் கொள்வார்கள்.

சரி... யாகங்கள் பாவத்தை தொலைக்க நடைபெறுகின்றன என்று சொல்லி இதைப்பற்றி விரிவாகவே பார்ப்போம் என்று சொல்லியிருந்தேன்.

**பாவம் என்றால் என்ன?** பகவானை போல இதுவும் நம்மை சூழ்ந்திருக்கிறது. அதாவது நாம் செய்யும் ஒவ்வொரு செயலுமே பாவம்தான்.

நாம் ஒரு பதார்த்ததை வாங்கி சாப்பிடுகிறோம் என்றால்... அந்த பதார்த்தம் வேறு எவனோ வாங்கி சாப்பிட வேண்டியது. அதை அவனுக்கு கிடைக்காமல் நாம் சாப்பிட்டு விட்டோம். அதனால் அதுவும் பாவம்தான்.

நாம் இப்போது சுவாசித்துக் கொண்டிருக்கிற காற்று... வேறு யாருக்கோ கிடைக்க வேண்டியது. அதை நாம் சுவாசித்து விட்டோம். அதனால் அதுவும் பாவம்தான்.

இந்த லோகத்தில்.. நீங்கள் பஸ் பிரயாணம் மேற்கொள்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் உட்கார இடம் கிடைத்து உட்கார்ந்து பயணம் செய்கிறீர்கள்.

இது ஒருவகை பாவம்தான். பக்கத்தில் பலபேர் நின்று கொண்டிருக்கும்போது நீங்கள் உட்கார்ந்திருப்பது பாவம்தானே. நின்று கொண்டே வந்தாலும் அதுவும் பாவம்தான். ஏனென்றால் நீங்கள் இன்னொருவர் நிற்க இருந்த இடத்தில்தானே நிற்கிறீர்கள்?

இப்படி பாவம் பலவகைப்படும். நம்மை சுற்றி பாவசக்தி வாழ்ந்து கொண்டிருக்கிறது. அதனால் அந்த பாவத்தை போக்க நாம் யாகம் செய்யவேண்டும்.

யாகத்தை பிராமணர்கள் செய்யும்போது பாவம் அக்னியாகும் . அதில் யாகம் செய்கையில் பாவங்கள் எல்லாம் யாகம் செய்கின்ற பிராமணன் இடத்திலே வரும். கூடவே தட்சணை வாங்குகிறார்களல்லவா, அதுவும் பாவம்தான். இப்படிப்பட்ட பாவங்கள் எல்லாம் வேத மந்தரங்களை உச்சரிக்கும்போது அழிந்துவிடும்.

அதனால்தான்... பாவத்தை நிவர்த்தி செய்ய வேண்டுமானால், பிராமணன் இடத்தில் போய் யாகம் செய் என்கிறது வேதம்.

கிறிஸ்தவமும் கிட்டத்தட்ட இப்படித்தான். கிறிஸ்தவத்துக்கு பல்லாயிரம் ஆண்டுகள் முன்பே வேதம் பாவ மன்னிப்பை பாவ நிவர்த்தியை வழங்கியிருக்கிறது. இந்த விஷயம்



தெரியாமல் இப்போதைய பெரியவர் ஜெயேந்திரர்....

கிறிஸ்தவம் என்ன கிறிஸ்தவம்?... பாவத்தை செய்துவிட்டு என்ன பாவத்தை வேண்டுமானாலும் செய்துவிட்டு, அதை நிவர்த்தி செய்து கொள்ளலாம் என்று சொல்கிறது. அப்படியென்றால் பாவம் செய்யலாம் என சொல்கிறதா? என்று கேள்வி கேட்டவர்.

பிராமணர்கள் சந்தியா வந்தனம் என்று ஒரு சடங்கு செய்து கொண்டிருக்கிறார்கள் என்று முன்பு பிராமணர்களின் தொழில்பற்றி நான் குறிப்பிட்டிருந்தேன். ஞாபகம் இருக்கிறதா? அதற்கு யாகங்களுக்கும் பெரிய தொடர்பு உண்டு. சந்தியா வந்தனம் காலை மதியம் மாலை 3 வேளையும் செய்யவேண்டும் என்பது பிராமணர்களின் அனுஷ்டானம்.

காலையில் செய்கிறார்கள். பிறகு மாலையில் தான் செய்கிறார்கள். அப்போது மதியம்? அதை காலையிலேயே சேர்த்துச் செய்துவிடுகிறார்கள். ஏனென்றால் மதியம் அவர்கள் ஆபிஸ் போய்விடுகிறார்கள். அல்லது வேலை நிமித்தம் இருந்து விடுகிறார்கள். இதில் காலையில் 'அஸ்னம்' எனப்படும் மந்த்ரத்தை கவனியுங்கள்.

'ஸவர்யச்ச மாமன்யுச்ச மன்யு
பதயச்ச மன்யுக்ரு தேப்ய:
பாபேப்யோ ரக்ஷந்தாம்
யத்ராத்ரியா பாபம் அகார்ஷம்
மனஸா வாசா
ஹஸ்தாப்யாம் பதப்யாம்
உதரேண சிச்ஞாராத்திரி
ஸ்த தவலும்பது யத்கிஞ்ச துரிதம்மயி
இதமஹம் மாம் அம்ருதயோனௌ
ஸவர்யே ஜ்யோதிஷி ஜவஹோபி ஸ்வாஹா...''
இதிலே காலையிலே விரைவில் எழுந்து சூரிய உதயத்துக்கு முன் சூரியனை வேண்டும் காட்சி.

அப்படி என்ன வேண்டுகிறார்கள்...
சூர்ய தேவனே நான் உலகத்தின் சட்டதிட்ட சம்ப்ரதாயங்களை மீறி செய்த பாவங்களை நீதான் ரட்சிக்க வேண்டும்.

ராத்திரி பொழுது போயிற்று. அந்த போதிலே நான் நிறைய பாவங்கள் செய்திருக்கலாம். மனஸா மனதால் பிறருக்கு தீங்கு நினைத்திருந்தால் அறுவும் பாவம். வாசா வாக்குகளால் பிறரை புண்படுத்தி பாவம் செய்திருக்கேன். ஹஸ்தாப்யாம் கைகளால் அடுத்தவர்களுக்கு கஷ்டம் கொடுத்து பாவம் செய்திருக்கலாம். பத்ப்யாம் கால்களால் உயிர்களை மிதித்து வயது முதிர்ந்தவர்களை தீண்டி பாவம் இழைத்திருக்கலாம்.

உதரேண ராத்திரி வேறு யாராவது சாப்பிட வேண்டிய சாப்பாட்டை நான் அபகரித்து வயிற்றால் பாவம் செய்திருக்கலாம்.

சிச்ஞா என்னுடைய ஆணுறுப்பால் ஸ்திரிகளுக்கு ஏதாவது இடைஞ்சல்கள் கொடுத்து, ஒழுக்கத்தை மீறி தேக ஸம்பந்தம் வைத்துக் கொண்டு அதனால் பாவம் செய்திருக்கலாம். கடந்துபோன ராத்திரியில் நான் இத்தனை பாவங்களை செய்திருக்கலாம். அப்படி செய்த பாவங்களை நீ ரட்சித்து எனக்கு பாவ நிவர்த்தியை தரவேண்டும்.



இதுதான்... காலையில் எழுந்ததும் சூர்ய தேவனிடத்தில் பிராமணன் வைக்கும் முதல் விண்ணப்பம்.

**65.பிராமணர்களின் பாவமன்னிப்பு வேண்டுதல். தெரியுமா?**
என் ஆண் உறுப்பு, கை, கால், வாய், மனசு... வரை ராத்திரி செய்த பாவங்களையெல்லாம் பனித்துளியை எப்படி போக்குவாயோ அதேபோல போக்கிவிடு...' என்று வேண்டினான்.

புத்தி கெட்டு நான் பாவம் பண்ணி விட்டேன். சூதாட்டம் போன்ற பாவங்களைக் கூட பண்ணிவிட்டேன். என் பாவங்களையெல்லாம் நிவர்த்தித்து என்னை ரட்சிப்பாய் வர்ணா..."

எச்சில் பொருள்கள், புனிதம் கெட்டவர்களிடமிருந்து வாங்கி வந்த தானங்கள் ஆகியவற்றால் எனக்கு வரும் பாவங்களை நிவர்த்தி செய்யவேண்டும்..." என வேண்டுகிறான் பிராமணன்.

**65.** பாவ மன்னிப்பு பற்றி பார்த்து வருகிறோம்.
சந்தியா வந்தனத்தில் காலையில் எழுந்திருந்து சூரியதேவனிடம் என்ன வேண்டினான்...?

'கை, கால், வாய், மனசு... ஆண் உறுப்பு வரை ராத்திரி செய்த பாவங்களையெல்லாம் பனித்துளியை எப்படி போக்குவாயோ அதேபோல போக்கிவிடு...' என்று வேண்டினான். இது காலை நேரத்து வழக்கம். சரி... ராத்திரி செய்த பாவங்களை காலையில் போக்கிக் கொள்ள இந்த மந்த்ரம். சந்தியா வந்தனத்தில் அடுத்து மதியானம் ஒரு 'அஸனம்' பண்ண வேண்டும்.

இதை இப்போது தீவிர வைதீகத்தில் இருக்கும் ஒரு சிலர்தான் உச்சி வேளையிலேயே பண்ணுகிறார்கள். மற்ற பெரும்பாலான பிராமணர்கள், இதை காலையிலேயே சேர்த்து 'two in one' பாணியில் பண்ணிவிட்டுப் போய்விடுகிறார்கள். சரி... மதிய மந்த்ரம் என்ன சொல்கிறது...

"ஆப புநந்து ப்ருதிவீம் ப்ருத்வீ
பூதா புநாதுமாம் புநந்து ப்ரஹ்மணஸ்
பதி ப்ரஹ்மபூதா புநாது மாம்
யதீச்சிஷ்டம் அபோஜ்யம் யத்வா
துஸ்சரிதம் மம ஸர்வம் புனந்துமாம்
ஆப அஸதாம்ச ப்ரதிக்ரஹம் ஸ்வாஹா"

இதற்கென்ன அர்த்தம்...?
"அய்யா தேவதைகளே... நான் (பிராமணன்) காலை கிளம்பி பல இடங்களுக்கும், கிரகங்களுக்கும் (வீடு) ஹோமம் பண்ணி வைக்கப் போகிறேன். யாகம் பண்ணி வைக்கப் போய் வருகிறேன்.

அப்போது... எனக்கு முன்பின் தெரியாதவர்கள் கொடுக்கிற சாமான்களையெல்லாம் தானமாக வாங்கிக் கொள்கிறேன். அவர்களில் சிலர் எனக்குக் கொடுத்த தானங்கள் எச்சில் படுத்தப்பட்டதாக இருக்கலாம்.

ஒருவேளை அவர்கள் புனிதம் கெட்ட கீழ் வர்ணத்தவர்களாக இருக்கலாம். அவர்களிடமிருந்து தானம் வாங்கினால் எனக்கு பாவம் ஆயிற்றே...நானும் தெரியாமல் வாங்கி வந்து வீட்டில் போட்டிருப்பேன். அதனால்... அந்த எச்சில் பொருள்கள், புனிதம்



கெட்டவர்களிடமிருந்து வாங்கி வந்த தானங்கள் ஆகியவற்றால் எனக்கு வரும் பாவங்களை நிவர்த்தி செய்யவேண்டும்...” என வேண்டுகிறான் பிராமணன்.

அதாவது ஒரே நாளில் இரண்டாவது முறையாக பாவ மன்னிப்பு கோருகிறான். அடுத்து... மாலை....

மறுபடியும் காலையில் சொன்ன பாவ மன்னிப்பு மந்த்ரத்தையே.... கொஞ்சம் மாற்றி திரும்பச் சொல்கிறான்.

அதாவது....‘அக்னி தேவா... காலையில் கேட்டதைத்தான்’ இப்போதும் கேட்கிறோம். காலையிலிருந்து மாலைவரை நான் கையால், காலால், வயிறால், வாக்கால், என் ஆணுறுப்பால் ஏதேனும் அறிந்தும், அறியாமலும் பாவம் செய்திருந்தால் என்னை அப்பாவங்களில் இருந்து நிவர்த்தி செய்வாயாக...’ என்கிறான்.

இப்படியாக ஒரு நாளைக்கு மூன்று முறை அஸனம் செய்து மன்னிப்பு கேட்கிறான். அதாவது... அஸனம் என்றால் நீரை சிறிது சிறிதாக எடுத்துக்கொண்டு... அதில் வேத மந்த்ரங்களை சொல்லி புனிதப்படுத்தி அந்தத் தண்ணீரை உட்கொண்டு வேண்டுவது.

இதுபோல காலை, மதியம், மாலை மூன்று வேளைகளிலும் மன்னிப்பு கேட்பதோடு... உபஸ்தானம் என்ற வேண்டுதலும் உண்டு. சந்தியாவந்தனத்தில் வருண உபஸ்தானம் முக்கியமானது.

அதாவது... மழைக்கு பொறுப்பு வகிக்கும் தேவதையான வருணனிடம் வேண்டுவது. அதென்ன...?கொஞ்சம் பெரிய மந்த்ரம்

“இமம்மே வருண ச்ருதீஹவம்
அத்யாச ம்ருடய த்வாமவஸ்யு:
ஆசகே தத்வாயாமி
ப்ரஹ்மணா
வந்தமானது ததாசாஸ்தே
யஜமான ஹவிர்பி:
அஹேட
மான: வருணேஹபோதி
உருசம்ஸமான: ஆயு:
ப்ரமோஷீ:
யச்சித்திதே விசோயதா
ப்ரதேவ வருண
வ்ரதம் மினீமஸி
த்யவித்யவி யத்கிஞ்
சேதம் வருணதைவ்யே ஜனபித்ரோஹம்
மனுஷ்யா: சரமாஸி அசித்தீயத்வ
தர்மா யுயோபிம மானஸ்தஸ்மாத்
ஏனஸோ தேவரீரிஷ: கிதவாஸ:
யத்ரிரிபு நதீவி யத்வாஹா ஸத்யம்
உதயந் நவித்ம ஸர்வாதா விஷ்ய
சிதிரேவ தேவ அதாதேஸ் யாம
வருணப் ரியாஸ.”



ஹே... வர்ணா நான் ரொம்ப கஷ்டப்படறேன். like ordinary people I am also committed sins. சாதாரண மக்களைப் போல நானும் தவறு செய்துட்டேன். நீ லோக வாழ்க்கைக்குனு ஒரு கோட்பாடு வைத்திருக்கிறாய். நான் அதை மீறிவிட்டேன். புத்தி கெட்டு நான் பாவம் பண்ணி விட்டேன்.

சூதாட்டம் போன்ற பாவங்களைக் கூட பண்ணிவிட்டேன். என் பாவங்களையெல்லாம் நிவர்த்தித்து என்னை ரட்சிப்பாய் வர்ணா...”

இந்த சந்தியா வந்தன மந்த்ரங்கள் எல்லாம் வேத மந்த்ரங்கள். வேதங்களில் யாகத்தின் போது சொல்லப்படும் மந்த்ரங்கள். பிராமணர்கள் வேத கர்மாக்களை பெருமளவு குறைத்துக் கொண்டு விட்டதால் தான், அந்த மந்த்ரங்களை சந்தியா வந்தனத்தில் வைத்தார்கள். அதனால் இவ்வேத மந்த்ரங்களை சொல்லும்போது பாவங்கள் அகலும் என்பது நம்பிக்கை. இது வேதம் சொன்னது.

பாவ மன்னிப்பு நமது வேதத்திலேயே பல்லாயிரம் வருஷங்கள் முன்பு சொல்லப்பட்டிருக்கும் போது... கிறிஸ்தவர்களின் பாவ மன்னிப்பு பழக்கத்தை ஜெயேந்ததிரர் போன்றவர்கள் தூற்றுகிறார்கள் என்றால்... அவர்கள் வேதம் தெரியாதவர்கள்.

**66 -67,ஏன்சாமி! வீட்லபேசற தமிழ்லயே பகவான்ட்டயும் பேசுங்களேன்**

“ஏங்காணும்... இப்படி திடீர்னு தமிழ்ல அர்ச்சனை பண்ணுன்னா எப்படி? எங்களுக்குனு சம்ப்ரதாயங்கள் இருக்கு. அனுஷ்டானங்கள் இருக்கு. அது எல்லாத்தையும் தமிழ்ல பண்ண முடியாதே...” என குரல் கொடுத்தனர்.

“ஏன் சாமி... வீட்ல பேசும்போது உங்க மனைவிகிட்ட மகள்கிட்டயெல்லாம் சமஸ்கிருதத்துலயா பேசறீங்க. அதுபோல... பகவான்ட்டயும் தமிழ்லயே பேசுங்களேன்...”

அவனை வழிபடும் முறைகள் பலவிதம் என்றாலும் எல்லாம் சரியே.... அதனால் அவன் பெயரால் யாரும் யாரையும் தூஷிப்பதோ, நிந்திப்பதோ கூடாது...”

**66.** வேதம் அறியாதவர்கள் மற்ற மதத்தை துவேஷிப்பார்கள் என்பதை பாவ மன்னிப்பு மந்த்ரங்கள்மூலம் பார்த்தோம். இதை நான் உங்களிடம் சொல்லிக் கொண்டிருக்கும் போது தமிழ் பேப்பர்களையும், இங்கிலீஷ் பேப்பர்களையும் உற்றுப் பார்த்தேன். பெரிய பெரிய எழுத்துகளில் ஒரு செய்தியை முக்கியத்துவம் கொடுத்து பிரசுரம் பண்ணியிருந்தார்கள்.

அது என்னவென்றால், சிறீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பாவத்தைப் போக்க ராமேஸ்வரத்துக்குப் போய் வந்தார் என்று ஒரு செய்தியைப் படித்தேன்.

ஒன்று பாவ மன்னிப்பையே துவேஷித்த ஸ்வாமிகள் இன்று தனக்காகவே பாவ நிவர்த்தி செய்யப் போகிறார் என்றால் அதை என்னவென்று சொல்வது.

இன்னொன்று... இந்த நேரத்தில் எனக்கு ஞாபகத்துக்கு வருகிறது. அதாவது ப்ரம்மசூத்திரக்காரர் படைத்த ப்ரம்ம சூத்திரத்தில் முக்கியமான வரி வருகிறது.

“பஹிஸ்து உபயதாபி ஸ்பிரு தேஹே ஆசாரஸ...”



என்று போகும் இந்த சூத்திரம் சொல்வது என்ன?

ரிஷிகள், சந்நியாசிகள், யதிகள், ஞானிகள் பாவம் பண்ணினால் அவர்களுக்கு அந்தப் பாவத்திலிருந்து விமோசனம் கிடையாது. ப்ராயசித்தம் கிடையாது. அவர்கள் செய்த பாவம் பாவம்தான். அது தீராது, போகாது என்கிறார் ப்ரம்ம சூத்ரக்காரர்.

மூத்தோர் சொல் அமிர்தங்கள் இப்படியிருக்க பாவ மன்னிப்பை அடிப்படையாக வைத்து மற்ற மதங்களை தூஷிப்பது வேதத்துக்கே அடுக்கவில்லை அதர்வண வேதம் சொல்கிறது பாருங்கள்:
“சமேத விஷ்வா வசஸா
பதிந்திவிபு யயேஹ
விபுஹீ யயேஹ
விபுஹீ அதிதிஹி தனனாம்
சபூர்யஹா நூதனம் ஆளவாசதீ
திம்வர்த்தனிஹி அனுவாவ்ருத்தே
ஏகையித் பூரி...”

மக்களே ஒன்று கூடுங்கள். கடவுள் ஒருவன்தான். அவனை யார் கூப்பிடுகிறார்களோ... அவர்களின் வீட்டுக்கு போவான். அவன் பழைமைக்கும், பழைமையானவன். புதுமைக்கும் புதுமையானவன். கடவுள் ஒருவன் என்றாலும், அவனை வழிபடும் வழிகள் லோகத்தில் பல்வேறு பட்டதாக இருக்கின்றன.

அவனை வழிபடும் முறைகள் பலவிதம் என்றாலும் எல்லாம் சரியே.... அதனால் அவன் பெயரால் யாரும் யாரையும் தூஷிப்பதோ, நிந்திப்பதோ கூடாது...”

இது அதர்வண வேதம் சொல்லும் அறிவுரை.
இந்த வேத மந்த்ரம் அறியாதவர்கள்தான் அல்லது அறிந்தும் அறியாததுபோல இருப்பவர்கள்தான் பிற மதங்களை தூஷிப்பார்கள். பாவத்தை சம்பாதிப்பார்கள்.

பாவம் பற்றி விஸ்தாரமாகவே பார்த்தாயிற்று. அடுத்து உங்களுக்கு ஒரு சம்பவத்தை சொல்கிறேன். அதிலிருந்து நாம் அடுத்துப் பார்க்கப் போகும் தலைப்பு என்னவென்று உங்களுக்கும் புரிந்துவிடும்.

சுமார் 30 - 40 வருடங்களுக்கு முன்பு கும்பகோணத்துக்கு பக்கத்திலேயே உள்ள நாச்சியார் கோயிலில் இந்து சமய அறநிலையத்துறை அதிகாரிகள் ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

திடீரென இந்தக் கூட்டம் கூட்டப்படவில்லை. அந்தக் காலத்தில் கோயில்களில் முழுக்க முழுக்க சமஸ்கிருத மந்த்ரங்களே அனுஷ்டானத்தில் இருந்து வந்ததால்... தமிழும் ஒலிக்க வேண்டும். வழிபாடுகள் தமிழிலும் நடைபெறவேண்டும் என்று குரல்கள் ஒலிக்கத் தொடங்கின.

அப்போது அறநிலையத்துறை ஆணையராக கே.எஸ். நரசிம்மன் இருந்தார் என்று ஞாபகம் (தொண்ணூறை கடந்துவிட்ட போதிலும் வேதத்தில் உள்ளவற்றையே ஞாபகப்படுத்தி விட முடிகிறது. ஆனால், மிகச் சமீபத்தில் நடந்தது சட்டென ஞாபகத்துக்கு வரமாட்டேன் என்கிறது).



முக்கியமான அதிகாரிகள் நாச்சியார் கோயிலில் கூடியிருந்தனர்.கும்பகோணம் உப்பிலியப்பன் கோயிலிலிருந்து சிறீ ராமதேசிகாச்சார் ஸ்வாமிகளும் மற்ற அர்ச்சகர்களும் வந்திருந்தனர். அந்தக் கூட்டத்தில் அடியேனும் அமர்ந்திருந்தேன். துணை ஆணையர்தான் கூட்டம் கூட்டப்பட்ட காரணத்தை விளக்கினார்.

"தமிழ்லயும் அர்ச்சனை பண்ணணும்னு முடிவெடுத்திருக்கோம். அதனால தமிழ்ல எப்படி எப்படி அர்ச்சனைகள் செய்யலாம்னு எழுதிக் கொடுங்கோ" என கேட்கிறார்.

இதைக் கேட்ட உடனேயே... அர்ச்சகர்கள் தரப்பில்...
"ஏங்காணும்... இப்படி திடீர்னு தமிழ்ல அர்ச்சனை பண்ணுன்னா எப்படி? எங்களுக்குனு சம்ப்ரதாயங்கள் இருக்கு. அனுஷ்டானங்கள் இருக்கு. அது எல்லாத்தையும் தமிழ்ல பண்ண முடியாதே..." என குரல் கொடுத்தனர்.

அப்போது அதிகாரிகளில் ஒருத்தர்...
"ஏன் சாமி... வீட்ல பேசும்போது உங்க மனைவிகிட்ட மகள்கிட்டயெல்லாம் சமஸ்கிருதத்துலயா பேசறீங்க. அதுபோல... பகவான்ட்டயும் தமிழ்லயே பேசுங்களேன்..." என்று இடைச்செருகல் செய்தார்.

துணை ஆணையர் என்னிடம் கேட்டார். அப்போது நானும் தமிழ் அர்ச்சனைகளை ஆதரித்து... ஒரு பேப்பரை எடுத்து அவர்களிடம் கொடுத்தேன்.அவர்கள் படித்துப் பார்க்கத் தொடங்கினார்கள்.

**67.** 'நாச்சியார்கோவிலில் நடந்து கொண்டிருக்கும் மீட்டிங்பற்றி சொல்லிக் கொண்டிருந்தேன் இல்லையா?

சம்பவத்தைச் சொல்கிறேன். நீங்கள் அடுத்து பார்க்கப்போகும் 'சப்ஜெட்டை முடிவு செய்துகொள்ளுங்கள் என்றும் கூறியிருந்தேன்.ஆம்... நாம் பார்க்கப்போவது வழிபாட்டில் தமிழ் எப்படிப்பட்ட நிலைமையில் இருக்கிறது என்பதைத்தான்.

மறுபடியும், நாச்சியார் கோயில் மீட்டிங்கில் கலந்து கொள்ளலாம் வாருங்கள். துணை ஆணையர் 'நாங்கள் கோயில்களில் தமிழில் அர்ச்சனை பண்ணுவதென்று முடிவெடுத்துள்ளோம். அதனால் நீங்கள் இனிமேல் தமிழில் அர்ச்சனை செய்யவேண்டும் என கூற...எப்படி? எப்படி? தமிழில் அர்ச்சனை செய்வது எப்படி? என மொழிப் போர் நடத்த ஆரம்பித்தார்கள் சில பட்டாச்சார்யார்கள்.

ஆனால், அதிகாரிகளோ... ஏன்? தமிழில் அர்ச்சனை நடத்த முடியாதா? தமிழில் அர்ச்சனையை இதுவரை யாரும் எழுதவில்லையா? அப்படியானால் நீங்களே எழுதிக் கொள்ளுங்கள். இதை நாங்கள் கூட்டம் கூட்டும் முன்பே சொல்லியிருந்தோமே... எழுதி வந்துள்ளீர்களா என கேட்டனர்.

சில பட்டாச்சார்யார்கள் தாங்கள் எழுதி வந்ததை எடுத்துக் கொடுத்தனர். தமிழில் அர்ச்சனை செய்வது நடைமுறை சாத்தியமற்றது என்பதை வலியுறுத்தும் வகையில் அவர்கள் எழுதி வைத்திருந்ததை கொடுத்தனர். இது அதிகாரிகளுக்கு திருப்தியை தரவில்லை.

நானும் அந்த மீட்டிங்கில் இருந்தேன் அல்லவா, என்னிடம் தமிழ் அர்ச்சனை கேட்டார்கள். நானும் எழுதி வைத்திருந்ததை எடுத்துக் கொடுத்தேன். என்னவென்றால்...



"உயர்வு அற உயர் நலம் உடையவன் போற்றி...
மயர்வு அற மதிநலம் அருளினன் போற்றி...
அயர்வு அற அமரர்கள் அதிபதி போற்றி...

இப்படியாக செந்தமிழில் நாராயணனை போற்றும் நாமங்கள் 108 எழுதிக் கொடுத்தேன். இது நானாக யோசித்து எழுதவில்லை. தமிழ் அர்ச்சனை என்றதுமே என் நினைவுக்கு வந்தவர்கள் ஆழ்வார்கள்.

நான் எழுதிக் கொடுத்தது நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியில் தொடங்கி சில பாசுரங்களை "சஹஸ்ரநாமம் பாணியில் எடுத்துக் கொடுத்ததுதான்.

சஹஸ்ரநாமம் என்றால்...?

இன்னும் பல பிராமணர்களின் வீடுகளிலும் விஷ்ணு பக்தர்களின் வீடுகளிலும் டேப் ரெக்காடர்களில் ஒலித்துக் கொண்டிருக்கிறது சஹஸ்ரநாமம். பல பிராமணர்கள் நேரம் கிடைக்கும் போதெல்லாம் சஹஸ்ரநாமம் சொன்னால் புண்ணியம் என்ற கொள்கை முடிவில் இருக்கிறார்கள்.

அதாவது பகவானின் ஆயிரம் பெயர்களைக் கூறி அவனைப் போற்றிச் சொல்வதுதான் சஹஸ்ரநாமம். ஆயிரம் நாமங்கள். அதாவது சமஸ்கிருத நாமங்கள். அதுதான் சஹஸ்ரநாமம்.

"சுக்லாம் ப்ரதரம் விஷ்ணும்" என்ற தனியனோடு ஆரம்பமாகி...
"விஸ்வம் விஷ்ணும் வஷட்காரோ பூத பவ்ய பவத் பிரபுஹு..."
என ஆரம்பிக்கும் விஷ்ணு சஹஸ்ரநாமம் "பல ஸ்ருதி' என்ற சஹஸ்ரநாமத்தைப்பற்றி மற்ற க்ரந்தங்கள் சொல்லியுள்ள புகழுரையோடு முடிகிறது. இதைத்தான் பெருமாள் கோயில்களில் அர்ச்சனைக்காக பயன்படுத்துகிறார்கள்.

இதற்கு... தமிழ் அர்ச்சனை, தமிழ் பூஜை செய்யவேண்டும் என்றுதான் நான் ஆழ்வார்களில் தலைமையும் பெருமையும் உடையவரான காரிமாறன் என இலக்கிய பக்தர்களால் அழைக்கப்படும் நம்மாழ்வாரின் பாசுரங்களை தமிழில் நாம அர்ச்சனைக்கு எழுதிக் கொடுத்தேன்.

இதைப் படித்துப் பார்த்த அதிகாரிகளுக்கு பரம இன்பம். தமிழில் இவ்வளவு இனிமையான கருத்து அடர்த்தியுள்ள பக்தி கானங்கள் இருக்கும்போது ஏன் சமஸ்கிருத பாஷையை கட்டிக்கொண்டு நாம் அழவேண்டும்?

இதுபோல் நாலாயிர திவ்ய பிரபந்தம் தரும் நல்ல தமிழ் சொற்கோவைகளுடன் தமிழிலேயே இறை பூஜைகள் செய்யலாமே என்றனர். அப்படியே ஆகட்டும் என பணித்தனர்.

அதன்படி ஆழ்வார்களின் அருளிச் செயல்களின் அடிப்படையில் நான் எழுதிக் கொடுத்த 108 தமிழ் நாம வழிபாட்டு மொழிகள்... அப்போதே அர்ச்சகர்களின் எதிர்ப்போடு... 30-40 வருடங்களுக்கு முன்பு கும்பகோணம் சாரங்கபாணி பெருமாள் கோயிலில் அரங்கேற்றப்பட்டது.

சமஸ்கிருத சஹஸ்ரநாமம் கேட்டே பழக்கப்பட்டுப்போன சாரங்கபாணி பெருமாள்... அன்றுதான் தன் இனிய தமிழ் நாமங்களை - அர்ச்சனை போற்றி பாணியில் கேட்டு



மகிழ்ந்தார்.

தாத்தாச்சாரியாரே... இப்ப திருப்தியா? என கேட்டார் என்னிடம் ஒரு அதிகாரி. நான் சொன்னேன், "பெருமாளைக் கேட்டுப் பாருங்கோ, டபுள் திருப்தினு சொல்வார்" என்று. அவர் மகிழ்ந்து சிரித்தார். இது ஒன்றும் விளையாட்டுக்குச் சொல்லவில்லை. மொழி விளையாட்டைப் பற்றித்தான் சொல்ல வேண்டியிருக்கிறது.

அன்று சாரங்கபாணி கோயிலில் அரங்கேறிய தமிழ் அப்போதே பல கோயில்களிலும் அரங்கேறியதா? இன்னும் பல கோயில்களில் தமிழில் அர்ச்சனை பண்ணுங்கோ என்றால் நம்மை ஏற இறங்க பார்க்கிறார்களே. இவ்வளவு இனிமையான கருத்து அடர்த்தியுள்ள பக்தி கானங்கள் தமிழில் இருந்தும்... "தமிழிலும் அர்ச்சனை செய்யப்படும்" என்று கோயில்களில் போர்டு வைத்திருக்கிறார்களே.... இந்த 'உம்' ஏன் வந்தது? உம்...?

**69தமிழை கட்டிப்போட்ட சமஸ்கிருதம். பூசையில் சூழ்ச்சி.**

தமிழன் வெளியே நிறுத்தப்பட்டான். சமஸ்கிருதர்கள் உள்ளே சென்றார்கள்.

சமஸ்கிருதம் எப்படி தமிழை கட்டிப் போட்டது?.. அந்த காலத்தில். வேதம் தமிழ் தேசத்தையே ஆக்கிரமித்தது. எங்கும் வேதம். எதிலும் வேதம்.

இந்த சிலைக்கு ஏன் வெறும் பூ போட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?... இந்த சிலையில் வேதம் சொன்ன தேவதைகளை நாங்கள் வர வைத்து காட்டுகிறோம். அவர்கள் கண்ணு தெரியாத தேவதைகள். அஸரீரிகளாக இருப்பார்கள். அவர்களின் காதில் விழுமாறுவேத மந்த்ரங்களை நாம் உரத்து உச்சரித்தால் இந்த சிலைக்குள் எங்கள் வேதத்தின் தேவதை வரும்..."

நாலாயிர திவ்ய பிரபந்தம். இந்த சொற்களிலிருந்தே தமிழை அந்த காலத்தில் சமஸ்கிருதம் எப்படி கட்டிப் போட்டிருந்தது என்பதை அறியலாம்?

ஆன்ற தமிழ் மறை, ஐந்தாவது வேதம், திராவிட வேதம் என்றெல்லாம் போற்றிப் புகழப்படும் தமிழ் ஆழ்வார்களின் அருளிச் செயலான நாலாயிரம் இறைப் பாட்டுகளை திவ்யம் - (தூய்மை) ப்ரபந்தம் - (திரட்டு) என்ற இரு சமஸ்கிருத சொற்களால்தான் நாம் இன்றளவும் அழைத்து வருகிறோம்.

இனிமேலாவது... "அழ்வார்களின் நாலாயிர அருளிச் செயல்' என இந்த புனித நூலுக்கு தமிழ் தலைப்பு கொடுக்கலாம். சரி...

சமஸ்கிருதம் எப்படி தமிழை கட்டிப் போட்டது?...அந்த காலத்தில்... வேதம் தமிழ் தேசத்தையே ஆக்கிரமித்தது...

எங்கும் வேதம்... எதிலும் வேதம். அதாவது இங்கே உள்ள சிலைகள், நுட்பமான சிற்பங்களை பார்த்த பிராமணர்கள்...

"இந்த சிலைக்கு ஏன் வெறும் பூ போட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?.. இந்த சிலையில் வேதம் சொன்ன தேவதைகளை நாங்கள் வர வைத்து காட்டுகிறோம். அவர்கள் கண்ணுக்கு தெரியாத தேவதைகள். அஸரீரிகளாக இருப்பார்கள்.



அவர்களின் காதில் விழுமாறு வேத மந்த்ரங்களை நாம் உரத்து உச்சரித்தால் இந்த சிலைக்குள் எங்கள் வேதத்தின் தேவதை வரும்..."என்றார்கள்.

தமிழன் முதலில் சிலைக்கு பூ தான் போட்டுக் கொண்டிருந்தான்.அதுதான் நமது வழிபாடு என்று முன்பே நான் சொல்லியிருந்தேன்.

நம்மாழ்வாரின் திருவாய்மொழி (2940) தமிழ்ச் செய்யுளைப் பாருங்கள்."நாடாத மலர் நாடிநாள்தோறும் நாராயணன் - தன்வாடாத மலர் - அடிக்கீழ்வைக்கவே வகுக்கின்று...வீடாடி வீற்றிருத்தல் வினை அற்றது என் செய்வதோ?...ஊடாது பனி வாடாய்...! உரைத்து ஈராய் எனது உடலே..."

அதாவது... இறைவனிடம் தனது எண்ணத்தை தெரிவிக்கும்படி... நாரைகள், அன்னங்கள், குயில்கள், மகன்றில்கள் (மரங்கொத்தி இனத்தைச் சேர்ந்த வளைந்த மூக்குடைய கடற்கரை பறவை), சிறிய குருகுகள் (கொக்குகள்), வரி வண்டுகள், இளங்கிளிகள், நாகணவாய் பறவைகள் ஆகியவற்றிடம் தூது செல்ல கேட்டுக் கொண்டே வரும் ஆழ்வார்...அடுத்து தூதாய் அனுப்ப பனிக்காற்றை தேர்ந்தெடுக்கிறார். வாடைக்காற்று வீசும் வேளையில்... அவ்வாடையிடம் வேண்டுகோள் வைக்கிறார்.

அதாவது பாட்டு தான் ஆழ்வாருடையது. பறவைகளையும், வண்டுகளையும், பனிக்காற்றையும் இங்கு தூதாக அனுப்புவது தலைமகள்.

அதாவது இறைவனைப் பிரிந்த தலைமகள். "வாடைக்காற்றே... வாடைக் காற்றே... இங்கே வா. என் பெருமானிடம் எனக்காக நீ போய் அவனிடம் ஒன்று சொல்வாயாக. இப்படி என்னைப் பிரிந்து அவனும், அவனைப் பிரிந்து நானும் இருப்பது நல்வினையாகாது என்று சொல்லு...உலகில் இத்தனை உயிர்களை, ஜீவன்களை, மனிதர்களை அவன்தான் படைத்தான்.

உலகில் உள்ள பல்வேறு வகை பூக்களை பறித்து நாள்தோறும் நாராயணனின் வாடாத பூமலர் திருவடிகளில் மெல்ல மெல்ல இட்டு வழிபடுவதற்காகவே அத்தனை பேரையும் படைத்தான். நான் மட்டும் அப்படி செய்யமுடியாத வகையில் பிரிவது என்ன நியாயம்?... அவனிடம் போய் நீ சொல்லு. என்னை ஏற்கவில்லையாயின்... நீ மறுபடி வந்து என் சதைகளை பிய்த்தெறி எலும்புகளை உடை... என் உடலை அறுத்தெறிந்துவிடு பனிக்காற்றே" எவ்வளவு அழகான இலக்கியம் பாருங்கள். தலைமகள் பனிக்காற்றிடம் சொல்வதாக ஆழ்வார் அருளுகிறார்.

அந்த பனிக்காற்று இன்றும் வீசிக் கொண்டிருக்கிறது. இந்த பாடல் மூலம் நமக்கு அந்த காற்று என்ன சொல்கிறது?...

"பூக்களை பறித்து தினமும் பூ+செய் பூசை செய்வது தான் தமிழர் பண்பாடு "என்று.

இந்தப்பண்பாட்டில்தான் குறுக்கே வந்தார்கள் பிராமணர்கள். "முதலில் நீ பூ போட்டுக் கொண்டே இரு... நான் வேதம் சொல்கிறேன்....' என்று வெளியே நின்றார்கள்.

காரணம்... நீ பகவான் பக்கத்தில் நின்று எதாவது சொன்னால் அவன் மேல் எச்சில் தெறிக்கும். அதனால் நீ பூ போட்டபடியே இரு. நான் சத்தம் போட்டபடியே இருக்கிறேன் "



இதற்கு பெயர் அத்யயன பட்டர். கொஞ்சநாள் ஆனது. அத்யயன பட்டரே உள்ளே வந்து விட்டார். உள்ளே என்றால்?... கர்ப்ப கிரகத்துக்குள். இனி நான் பார்த்துக் கொள்கிறேன். வெளி வேலைகளைப் பார்.அடுத்து... ஆகமக்காரர்களின் ஆதிக்கம்.

அவர்கள் முழு முதல் சமஸ்கிருதக்காரர்கள் ஆனதால். தமிழன் வெளியே நிறுத்தப்பட்டான். சமஸ்கிருதர்கள் உள்ளே சென்றார்கள். தமிழ் பூக்களை தூவி சமஸ்கிருத அர்ச்சனை நடத்தினார்கள்.

இப்படி "சமஸ்கிருத சர்க்கார்' நடந்து கொண்டிருந்த காலகட்டத்தில் தான்... நமது தமிழ் பக்தி இலக்கியத்தை முன்னிறுத்துவதற்காக ... ஆங்காங்கே ஆழ்வார்கள் தோன்றினார்கள்.

5-ம் நூற்றாண்டு முதல் பத்தாம் நூற்றாண்டு வரையிலான காலங்களில்...இவர்கள் தங்களது மிகச்சிறந்த பக்தி மற்றும் தமிழ்ப்பாசம், தமிழறிவு காரணமாக நாராயணனை போற்றி அதேசமயம் வேதக் கருத்துக்களையும், வடமொழி கதைகளையும் உள் வாங்கி தமிழிலேயே பாடல்களை இயற்ற ஆரம்பித்தனர். இந்த 12 அழ்வார்கள் தங்களது பாடல்களை குறிப்பிட்ட கோயில்களில் குடி கொண்டுள்ள பெருமாள் மீது சாற்றிப் பாட... அந்த திருத்தலங்கள் தமிழ் பாடப் பெற்றதால் புனிதமாயின. அதாவது திவ்ய தேசமாயின. அப்படியிருந்தும்

**69,70.கடவுளை காலையில் எழுப்பனுமா? சுப்ரபாதம் பாடி?.**

Good Morning. கடவுளுக்கு காலை வணக்கம் செலுத்தி அவரை எழுப்புவது தான் சுப்ரபாதம்.சுப்ரபாதம் ஏன் தமிழில் இல்லை?...

சுப்ரபாதம் என்றால் என்ன அர்த்தம்?... அது ஒரு வடமொழிப் பெயர். அதாவது இப்பொழுது நற்பொழுதாகட்டும் என்று அர்த்தம்.
சமஸ்கிருத கைதிகளாக இருக்கும் சிலபேர் தமிழை நீசபாஷை என ஒதுக்கித் தள்ளியிருக்கிறார்கள்.

தமிழ் நீச பாஷையா?... இறைவனின் நேச பாஷையா?...

**69**. ஆழ்வார்கள் தமிழில் பாடியதால் கோயில்கள் புனிதமாகின என்று பார்த்தோம். ஆனால்... அதே ஆழ்வார்கள் பாடிய அதே கோயில்களில் கூட...

காலை வேளைகளில் ஒலிக்கிறதே வடமொழி சுப்ரபாதம்! சுப்ரபாதம் என்றால் என்ன அர்த்தம்?... அது ஒரு வடமொழிப் பெயர். அதாவது இப்பொழுது நற்பொழுதாகட்டும் என்று அர்த்தம். இன்னும் உங்களுக்கு மாடர்ன் ஆக சொல்ல வேண்டுமென்றால் Good Morning. கடவுளுக்கு காலை வணக்கம் செலுத்தி அவரை எழுப்புவது தான் சுப்ரபாதம்

அதாவது "Good morning to God and wake up him..." இன்று பற்பல கோயில்களிலும்... காலை வேளைகளில் ரம்யமான விடியல் போதில்... ஸ்பீக்கரில் போடுகிறார்கள் சுப்ரபாதத்தை. அந்த இசை கேட்கும்போதே நம்மை மயக்குகிறது. ஆனால் அதன் அர்த்தம் உங்களுக்குப் புரியுமா?... என்ன பாடுகிறார்கள் என்று தெரியாமலேயே... அதை நாம் திரும்பப் பாடி முணுமுணுக்கிறோம்.

தினமும் காலையில் அதை டேப் ரெக்கார்டரில் போட்டு விடுகிறோம். எம்.எஸ்.சுப்புலட்சுமி



தன் வசீகர குரல் வளத்தால்..."கௌசல்யா சுப்ரஜா ராமாபூர்வா சந்த்யா ப்ரவத்ததது..." என ஆரம்பிக்கிறார். அப்படியே விடியும்வரை கேட்கிறீர்கள்.

இது யார் எழுதியது?... இதன் அர்த்தம் என்ன?... தமிழ்நாட்டில் பற்பல பிராமணர் அல்லாதோர் வீடுகளிலும் இந்த சுப்ரபாதப் பாடல் ஒலித்து மயக்குகிறதே... இந்த சுப்ரபாதம் ஏன் தமிழில் இல்லை?...

திருப்பதி வெங்கடேசனை எழுப்பும் இந்த சுப்ரபாதம் ஏன் தமிழ்நாட்டின் குக்கிராமங்களில் கூட ஒலிக்கிறது?... என்றெல்லாம் உங்களுக்கு கேள்வி எழ வேண்டும்... அதற்கு பதில் உங்களில் பலருக்கு தெரியாது. இது சத்தியம்.

இந்த சுப்ரபாதத்தை அதாவது சமஸ்கிருத "Good morning' 'ஐ இயற்றியவர் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா. (மத விஷயங்களில் தன்னோடு வாதம் பண்ண வருபவர்கள் யாராக இருந்தாலும்... தன்னுடைய பயங்கரமான பிரதிவாதம் மூலம் அவர்களை தோற்கடித்து விடுவார் அண்ணா. அதனால்தான் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா என பெயர் பெற்றார்.) இவர் மணவாள மாமுனிகளின் சிஷ்யர். "ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி' என்று வாழ்த்தினாரே அதே மணவாள மாமுனிகளின் சிஷ்யர்தான் அண்ணா.

"கௌசல்யா சுப்ரஜா ராமாபூர்வா சந்த்யா ப்ரவத்தது..." என்ற இந்த முதல் வரிகள் வால்மீகி ராமாயணத்திலிருந்து உருவப்பட்டது அதாவது... விஸ்வாமித்ரர் ராமனை எழுப்புகிறார். "கௌசல்யை புண்ணியம் செய்து பெற்ற ராமா... அங்கே காட்டுப் பக்கம் அரக்கர்கள் அடாவடி செய்து தவ முனிவர்களுக்கு இடைஞ்சல் செய்கிறார்கள். நீ வந்து அவர்களை வீழ்த்து...' என ராமனை எழுப்பி அழைக்கிறார்

விஸ்வாமித்ரர்.இதை முதல் வரியாக போட்டு... வெங்கடேச சுப்ரபாதத்தை இயற்றியிருக்கிறார் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா.

இவர் இந்த சுப்ரபாதத்தை 14-ம் நூற்றாண்டில் இயற்றினார் என்கிறார்கள். ஆனால்... இதே போன்ற சுப்ரபாத வடிவத்தை நாம் இப்போது கேட்கிற சுப்ரபாதம் இயற்றப்பட்டதற்கு அறுநூறு வருஷங்கள் முன்னதாகவே... அற்புதமாக இயற்றியிருக்கிறார் தொண்டரடிப் பொடியாழ்வார் தமிழில்.

இனிய தமிழில் "திருப்பள்ளியெழுச்சி' என்றும் பெயர் கொண்ட அந்த பத்து முத்தான பாடல்களை (ஆழ்வார்கள் அருளிச் செயல் புத்தகத்தில் 917 முதல் 926 வரையிலான பாடல்கள்) சிலவற்றை மட்டும் உங்களுக்கு சொல்கிறேன்.

தொண்டரடிப் பொடியாழ்வார் காவேரிக் கரையில் படுத்திருக்கும் திருவரங்க பெருமாள் அரங்கநாதனை எழுப்புவதாக இந்த பாடல்களை இயற்றியிருக்கிறார். "கதிரவன் குணதிசைச் சிகரம் வந்துஅணைந்தான்; கனை இருள் அகன்றதுகாலை அம் பொழுதாய்மது விரிந்து ஒழுகின மாமலர் எல்லாம்வானவர் அரசர்கள் வந்து வந்து ஈண்டி எதிர்திசை நிறைந்தனர். இவரொடும் புகுந்த இருங் களிற்று ஈட்டமும் பிடியொடு முரசும்அதிர்தலில் அலை-கடல் போன்றுவிது எங்கும்அரங்கத்தம்மா. பள்ளி எழுந்தருளாயே...-இதுதான் தமிழ் திருப்பள்ளியெழுச்சியின் முதல் பாடல்.

கதிரவன் கிழக்கின் மேலே முளைத்து விட்டான். இரவின் இருள் அகன்றது... காலைப்பொழுது மலர்கள் பூத்து தேன் சொரிகின்றன. வானத்து தேவர்களும், மன்னர்களும், பக்தகோடிகளும் நீ பார்க்க தெற்குப் பக்கம் திரண்டிருக்கிறார்கள்.



அவர்கள் வந்த யானைத் திரள்கள் எழுப்பும் பிளிற்று ஓசையும்... யானைப் படையின் முரசு ஒலியும் எல்லா திசைகளிலும் எதிரொலிக்கிறதே அரங்கா... திருப்பள்ளியை விட்டு எழுக, அவர்களுக்கு காட்சி தருக...-என திருவரங்கத்து பெருமானை தமிழால் தட்டி எழுப்புகிறார் தொண்டரடிப் பொடியாழ்வார்.

இங்கே அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே... -என தன் இறைவனை அம்மாவென அழைக்கிறார் ஆழ்வார். இந்தப் பாடலில் பக்தி இல்லையா?... சுவை இல்லையா?... இலக்கியம் இல்லையா?... அல்லது உங்களுக்கு அர்த்தம் புரியவில்லையா?...இன்னும் ஒரு தமிழ் திருப்பள்ளியெழுச்சி கேளுங்கள்.கடி-மலர்க் கமலங்கள் மலர்ந்தன, இலையோகதிரவன் கனை கடல்முளைத்தனன், இவனோதுடியிடையார் சுரி குழல் பிழிந்து உதறிதுகில் எடுத்து ஏறினர்.

சூழ்புனல் அரங்காதொடை ஒத்த துளவமும் கூடையும் பொழிந்துதோன்றிய தோள் தொண்டரடிப்பொடி என்னும் அடியனை அளியன் என்று அருளி உன்அடியார்க்கு ஆட்படுத்தாய்! பள்ளி எழுந்தருளாயே!- சுற்றிலும் காவிரி நதி சூழ்ந்த அரங்கா. கடலிலே கதிரவன் தோன்ற... குளங்களில் தாமரைப் பூக்கள் சிரித்து மலர்ந்து மணக்கின்றன.சின்னச் சின்ன இடுப்புகளை பெற்ற பெண்கள் காவிரியில் குளித்து... தங்களின் நனைந்த கூந்தலை ஈரப்பதம் இல்லாமல் உலர்த்தி உதறி... தத்தம் அடைகளை உடுத்தி கரையேறுகிறார்கள்.

இப்படிப்பட்ட இளங்காலைப் பொழுதில் தொண்டரடிப் பொடியென்னும் நான் திருத்துழாய் (துளசி) மாலையும், பூக்குடலையும் தாங்கி காத்திருக்கிறேன். இந்த அன்பனை ஏற்று அருளி ஆளாக்க வேண்டும்.இந்த தமிழ்பாடலுக்கு என்ன குறைச்சல்....

**70.** - தொண்டரடிப் பொடியாழ்வாரின் தமிழ் திருப்பள்ளி எழுச்சிப் பாடல்கள் பத்தில்... முதல் மற்றும் கடைசி பாடல்களை எடுத்துக் காட்டினேன்.என்ன வர்ணனைகள்?... என்ன எதுகை மோனைகள்?... எவ்வளவு இனிமை வழிகிறது!

"கொழுங்கொடி முல்லையின் கொழுமலர்' என்ற இரண்டாவது பாடல், "சுடர் ஒளி பறந்தன சூழ்திசை எல்லாம்' என்ற மூன்றாவது பாடல், "மேட்டு இள மேதிகள்' என்ற 4-ஆம் பாடல், "புலம்பின புட்களும் பூம்பொழில்களின் வாய்' என்ற ஐந்தாம் அருளிச் செயல் "இரவியர் மணி நெடுந் தேரோடும்' என்ற ஆறாவது பாசுரம்."அந்தரத்து அமரர்கள் கூட்டங்கள்' என ஆரம்பிக்கும் ஏழாவது பாட்டு, வம்பவிழ் வானவர் வாயுறை வழங்க... -என்ற எட்டாவது பாட்டு... ஏதம் இல் தண்ணுமை எக்கும் மத்தளி... - என்று ஒன்பதாவது பாசுரம்...தொண்டரடிப் பொடியாழ்வாரின் இந்த பத்து பாடல்களும்... இன்று எங்கும் ஒலிக்கிற சுப்ரபாதப் பாடலுக்கு 600 வருடங்கள் முன்னரே ரங்கனை எழுப்பிய பாடல்கள்.

சுப்ரபாதத்தில் இன்னொரு "லாஜிக்'கும் இருக்கிறது. அதிலும் தமிழ்தான் வெற்றி பெறுகிறது

திருப்பதி வெங்கடாஜலபதி நின்று கொண்டிருக்கிறார். அவரை எழுப்புவது சரியாக இருக்குமா?... இங்கே திருவரங்கத்தில் அரங்கன் படுத்துக் கொண்டிருக்கிறார் இவரை எழுப்புவது சரியாக இருக்குமா?

படுத்துக் கொண்டிருப்பவரை எழுப்பும் வேலையை தமிழில் செய்தார் தொண்டரடிப் பொடியாழ்வார். கொண்டிருப்பவரை எழுப்பும் வேலையை சமஸ்கிருதத்தில் செய்தார் அண்ணா.

ஆனால்... நாமோ **logic** இல்லாத சமஸ்கிருத வெங்கடேச சுப்ரபாதத்தை தினந்தோறும்



காலையில் போட்டுக் கேட்கிறோம். ஆனால்... மறுபடியும் நான் அழுத்திச் சொல்வேன். இதே பொருளை 600 ஆண்டுகள் முன்கூட்டியே சொன்ன தமிழை தள்ளி வைத்து விட்டார்களே.

இன்றும் கோயில்களில் தினசரி சேவா காலத்தில் தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளியெழுச்சி ஒலிக்கிறது. ஆனாலும், சுப்ரபாதத்தை போல திருப்பள்ளியெழுச்சி என தமிழ் பெயரில் மாற்றி இனியாவது எவரேனும் அதற்கு நல்ல இசையமைத்து விடியற்காலையில் தமிழ் மணக்கச் செய்வார்களா?

சமஸ்கிருத கைதிகளாக இருக்கும் சிலபேர் தமிழை நீசபாஷை என ஒதுக்கித் தள்ளியிருக்கிறார்கள். தமிழ்தான் நமக்கு மட்டுமல்ல அரங்கனுக்கும் நேசபாஷை என்பதை இன்னொரு ஆழ்வாரின் வாழ்க்கையிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்.

அவர் திருப்பாணாழ்வார்... சோழ நாட்டிலே உறையூர் என்ற திருவூரில் பாணர் வம்சத்தில் பிறந்தவர். பாணர்கள் என்றால் "பாண்' என்னும் இசைக்கருவியை வைத்துக் கொண்டு மன்னர்களைப் பாடி பரிசுப் பொருள்களை பெற்று ஜீவனம் நடத்துபவர்கள்.

ஆனால்... நமது பாணரோ... திருவரங்கத்து பெருமாளையே நினைத்துப் பாடிக் கொண்டிருந்தார். சுற்றிலும் காவேரி சூழ்ந்த திருவரங்கத்தில் இருக்கும் ரங்கநாதனை தனது பாண் இசைக்கருவி மூலம் " ...' என இசைத்துக் கொண்டு பாடியபடி இருந்தார்.

ஆனால்... இவரைப் பார்த்த உயர் ஜாதியினர்களோ..."நீ தாழ்ந்த சாதிப்பயல் நீ எப்படியடா திருவரங்கத்துக்குள் நுழைய முடியும்... போடா' என துரத்தியடித்தார்கள். பாணரோ... நான் பெருமாளை பாடித்தான் தீருவேன் என்று செந்தமிழில் ரங்கனை உருகி ராகமிசைத்துக் கொண்டிருந்தார். இவரது தமிழிசையை... ரங்கனின் உயர்ஜாதி பக்தர்கள் காதில் போட்டுக் கொள்ளாமல் விரட்டியடிக்க... காவேரிக் கரையிலேயே நின்று கொண்டிருந்த பாணர் வாழ்வில் ஒரு அதிசயம் நடந்தது.

காவேரிக் கரையில் தனிமையில் நின்று அரங்கனை பாடிக் கொண்டிருந்த பாணர் முன்பு... ஒரு வைதீகர் ஆச்சாரமான வைதீகர் நின்றார். எங்களை மன்னிப்பீர் பாணரே... உங்களை இதுநாள் வரை திருவரங்கத்துள் அனுமதிக்காமல்... அரங்கனை தரிசிக்க விடாமல் பாவம் செய்தோம். உங்கள் தமிழை நாங்கள் மறுதலித்தோம்.

ஆனால்... பகவான் அரங்கநாதர் உங்கள் தமிழுக்காக தவம் இருக்கிறார்.உங்களது இனிய பாடல்களை அரங்கன் அவதானித்துக் கொண்டே இருக்கிறார். என்னை அழைத்து, " போய் நமக்கு அந்தரங்கரான பாண் பெருமாளை உம்முடைய தோளிலே தூக்கிக் கொண்டு வா... அவரை ஒதுக்கி வைக்க நினைக்காதீர் உடனே செல்' என கேட்டுக் கொண்டார்.

வாருங்கள் என் தோளில் ஏறிக் கொள்ளுங்கள். உங்களை சுமந்து அரங்கனிடத்தில் இறக்கி விடுகிறேன்" என்று பாணரை பார்த்து பணிவுடன் சொன்னார் அரங்கன் அனுப்பிய லோகசாரங்கர். பாணர் அதாவது திருப்பாணாழ்வார் லோகசாரங்கர் தோளில் ஏறி... திருவரங்கத்தை அடைய...அங்கே திருப்பாணாழ்வாரை பார்த்த அரங்கன்... அவருக்கு காட்சி தந்து இப்போது என் அருகில் தமிழ் பாடுங்கள் பாணாழ்வாரே..." என்று கேட்கிறார்.இந்த காட்சியை பார்த்து அனுபவித்து அமலனாதிபிரான் என பத்து பாசுரங்களை (927-936) பாடினார் திருப்பாணாழ்வார். ..இப்போது சொல்லுங்கள் தமிழ் நீச பாஷையா?... இறைவனின் நேச பாஷையா?



**71.**தமிழ் நேசபாஷையா**?** நீசபாஷையா**?**

தமிழ் உள்ளே போகக்கூடாது என்பதற்காக தெய்வத்தை வெளியே தூக்கிவருகிறார்கள்.

தமிழுக்கு என்ன நிலைமை?... தமிழ் இறைவனின் நேசபாஷையா? நீசபாஷையா?

இறைவனே காசு கொடுத்து எல்லார்க்கும் உணவு கொடுக்கச் சொன்னாராம்.

தமிழ் இறைவனின் நேச பாஷையா அல்லது நீசபாஷையா என்பதை திருப்பாணாழ்வாரின் வாழ்வியல் குறிப்பை அடிப்படையாகக் கொண்டு பார்த்தோம்.

திருப்பாணாழ்வாரின் தமிழை கேட்பதற்காக ஆளனுப்பி அவரை மரியாதையோடு தூக்கிவரச் சொன்னார் அரங்கத்துக்கு பெருமாள். ஆனால்... அப்பேற்பட்ட ஸ்ரீரங்கத்திலே படுத்துக்கிடக்கும் ரங்கநாதனுக்கு எதிரே நாலாயிரம் அருளிச் செயலை பாடுகிறார்களா**?**

ஒவ்வொரு திருமால் ஆலயத்திலும் வைகுண்ட ஏகாதசிக்கு முன் பத்துநாள் பின் பத்துநாள் ஆக இருபது நாள்கள் நாலாயிரம் ஆழ்வார்கள் அருளிச் செயலை பாடி ஒரு தமிழ்விழா நடத்துவார்கள். இது வருடா வருடம் நடக்கும்.

ஸ்ரீரங்கத்தில் எப்படி நடக்கும் என்றால்... மூலவரான ரங்கநாதன் படுத்தபடியே தமிழ் கேட்க காத்திருக்க... உற்சவரை அதாவது உற்சவ மூர்த்தியை வெளியே ஒரு மண்டபத்துக்கு தூக்கி வருவார்கள்.

அங்கே வைத்து நாலாயிரம் அருளிச் செயலையும் இசையோடு... பாடி முடிப்பார்கள். இதற்கு அரயர் சேவை என்று பெயர். இது முடிந்த பிறகு... அதாவது தமிழ்ப் பாடல்கள் முடிந்த பிறகு உற்சவரை மறுபடியும் தூக்கி உள்ளே கொண்டு போய் வைத்து விடுவார்கள்.

ஆக... தமிழ் உள்ளே போகக்கூடாது என்பதற்காக தெய்வத்தை வெளியே தூக்கிவருகிறார்கள்.

அதுவும்... தமிழுக்காக ஆழ்வாரை தூக்கிவரச் சொல்லி தமிழ் கேட்ட ரங்கநாதனுக்கு... நமது பூஜை புனஸ்காரங்கள் படி தமிழ் கேட்க வாய்ப்பில்லை. இதை நான்முன்பே பலதடவை வலியுறுத்தியபோதும்... வைணவ சமயவாதிகள் சிலர் எதிர்த்தனர்.ஆனால் என் நிலையிலும், தமிழின் நிலையிலும் மாற்றமே இல்லையே?

சரி வைணவத்தில் தமிழ் பார்த்தாயிற்று சைவத்தில்?... **"தென்னாடுடைய சிவனே போற்றி...என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி..."**என்ற தமிழ்க் கவிதையே சிவன் தென்னாட்டவன் அதாவது தமிழ்க் கடவுள்... ஆனாலும் எல்லா நாடுகளுக்கும் அருள் செய்வான் என தமிழ் நாட்டுக்காரனாக தத்துவப்படுத்தியிருக்கிறது.

திருவாசகத்துக்கு உருகார் ஒருவாசகத்துக்கும் உருகார் என்னும் அளவுக்கு சிவனுக்கும் தமிழுக்கும் Tight Relationship கொடுத்துள்ளார்கள். சிவனடியார்களும் நாயன்மார்களும் உதாரணத்துக்கு...இன்றைய வேதாரணியம்... அன்றைய திருமறைக்காடு... அங்குள்ள சிவன் கோயில்மணிவாசல் கதவு வேதங்களால் பூஜிக்கப்பட்டு அடைக்கப்பட்டு விட்டது.

என்னென்னமோ பண்ணி பார்த்து விட்டோம். திறக்கவே முடியவில்லை என சிவனடியார்கள் துன்புற்ற வேளை... திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் மணிக்கதவை



திறக்கவேண்டும்என முடிவு செய்தனர்.

திருநாவுக்கரசர் கோயில் வாசலிலேயே நின்று...'பண்ணினர் மொழியோள் உமைபங்கரோமண்ணினார் வலஞ் செய்ம்மறை காடரோகண்ணினால் உமைக் காணக் கதவினைதிண்ணமாக திறந்தருள் செய்ம்மினே..."என தமிழ்ப்பாடினார்.

தாமதமானது, மீண்டும்'அரக்கனை விரலால் அடர்த்திட்டநீர்இரக்க மொன்றிலீர் எம்பெருமானரேசுரக்கும் புன்னைகள் சூழ்மறைக்காடரேசரக்க இக்கதவம் திறம்பிம்பினோ..."இந்த இரண்டாவது தமிழ்ப் பாட்டு கேட்டதும் வேதங்களால் வெகுகாலம் மூடிக்கிடந்த சிவன் கதவு மணிக்கதவு மெல்லத் திறந்தது. இறைவனுக்கு தமிழ்ப் பாமாலைகள் சாத்திவழிபட்டனர். மகிழ்ச்சி பொங்கியது.

சரி, இரவாகிவிட்டது' கதவை அடைத்துவிட்டு நாளை திறக்க வேண்டும். மறுபடியும் திருஞான சம்பந்தர் 'சதுரமறைதான்...' என பதிகம் பாட கதவு மூடிக் கொண்டது.அன்றிலிருந்து தான் கதவு திறந்து சாத்தும் வகையில் மாறியது என்கிறார்கள்.

இந்தக் கதையை நாம் நம்பவேண்டாம் என்றாலும்கூட பல்லாண்டு காலம் வேதக்காரர்களால் பூட்டப்பட்ட கதவை தமிழ்பாடி திறக்கவேண்டும்' என்ற கருத்துருவே நமக்கு போதுமே. வேதம் அடைத்ததை தமிழ் திறக்கும் என்ற கருத்தை நிலை நிறுத்தவே இந்த கதையில் கதவுகொண்டு வரப்பட்டது.

இப்படியாக தமிழுக்கு முக்கியத்துவம் கொடுத்து எளிய...பலதரப்பினரும் புரிந்துகொள்ளத்தக்க தமிழ்ப் பாக்களை வளர்த்தது சைவம். முற்காலத்தில் காவிரி பொய்த்து பஞ்சம் பாசனம் நடத்தியபோது...இறைவனே காசு கொடுத்து எல்லார்க்கும் உணவு கொடுக்கச் சொன்னாராம்.

ஏனென்றால் அப்போதுதான் அடியார்களின் தமிழ் கேட்கலாம் என்ற அவாவில். இதை..."இருந்து நீர் தமிழோடு இசை கேட்கும் இச்சையால் காசுநித்தம் நல்கிறீர்" என்கிறார் சுந்தரர், மேலும்,"பாடலங்கார பரிசில் காசருணிபழுத்த செந்தமிழ் மலர் சூடி..." என்கிறார் சேந்தனார் திருவிசைப்பாவில்அதாவது... உணவுக்கு பஞ்சம் வந்தால்கூட தமிழுக்கும்... தமிழ்ப்பற்றுக்கும் பஞ்சம் வரக்கூடாது என்பதை 'சிவனை' மொழிந்தார்கள் சைவக்காரர்கள்.

இப்படியெல்லாம் தமிழோடு பின்னிப் பிணைந்திருக்கும் சிவபெருமானுக்கு...சிவன் கோயில்களில் நடக்கும் பூஜை புனஸ்காரங்களில் தமிழுக்கு என்ன நிலைமை?...

சிவாச்சாரியார் திருநீற்றுப் பட்டை அணிந்து கொண்டு... லிங்கத்தை நெருங்கிச் செல்வார். பூஜைகள் செய்வார். அவர் வாயில் தமிழ் இருக்காது சமஸ்கிருதம்தான் சொல்லும் இந்தநேரத்தில்... லிங்கத்திடமிருந்தும்... சிவாச்சாரியாரிடமிருந்தும் சற்றே தூரத்தில் நின்றுகொண்டு... வெளிப்புறமாக நின்றபடி ஓதுவார்கள் தமிழை.

தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, பெரியபுராணம், திருப்பல்லாண்டு ஆகிய பக்திப்பாடல்களில் இருந்து சில பாடல்களை ஓதுவார்கள். அவர்கள் பெயர்தான் ஓதுவார்கள்.

ஆக...இவர்கள் ஓதும் தமிழ் சிவாச்சாரியாருக்கோ... சிவலிங்கத்துக்கோ... அருகில் சென்று கணீரென கேட்காது.



நாம் பேருந்தில் செல்லும்போது நமக்குப் பிடித்த பாடல் எங்கோ திடீரென லேசாக ஒலித்து காதைவிட்டு மறையுமே... அதேபோலத்தான் சிவன் கோயில்களில் சிவனுக்கு தமிழ் கேட்கும்.

**72.**பிராமணர்கள் தமிழகத்திலேயே வாழக்கூடாதாம்**.?**

பிராமணர்கள் சமஸ்கிருதம் தவிர வேறு பாஷை எதுவுமே பேசக்கூடாது. பேசினால் பாவம்

பிராமணர்கள் வாழ வேண்டிய பகுதி ஆப்கானிஸ்தானாக இருக்கிறது.

“அடத்திருடா... நீ உட்கார்ந்திருப்பது காவிரிக் கரையில். உனக்கு தட்சணை கொடுப்பதும் காவிரிக்கரைக்காரன் தான். நீ எதற்கு கங்கைக்கும் யமுனைக்கும் இடையே இருந்தவர்களுக்கு வணக்கம் செலுத்துகிறாய்?

வேதத்தில் தான் தமிழ் கெட்ட பாஷை அதை பேசக்கூடாது என்றிருக்கிறது.

உன் தாய்மொழியை, உன் தாயை வேதம் கெட்டவள் என்கிறது.

நான் சொல்கிறவனை கும்பிடு என்கிறது. அதற்காக வேதம் சொன்ன எல்லாவற்றையும் செய்வாயா?

தமிழ் கெட்டவர்களின் கெட்டபாஷை ? தமிழ் தள்ளி வைக்கப்பட்டதற்கு காரணம் என்ன ?

வைணவத்திலும் சரி... சைவத்திலும் சரி... தமிழ் இப்படி தள்ளி வைக்கப்பட்டதற்கு என்ன காரணம்? இதற்கு வேதங்களில் இருந்துதான் பதில் கிடைக்கிறது.

சுக்லயஜுர் வேதத்தில் ஒரு மந்த்ரம் பாருங்கள்.

“தஸ்மாது ப்ராம்மணேனநம்லேச்சித வைநம அபபாஷித வை...”

இந்த சின்ன வரிகள் தேக்கி வைத்திருக்கும் கருத்துகள் பெரியவை. அதாவது தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே போர் நடந்தது. இதில் நான் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன்.

நல்லவனை தேவன் என்றும் கெட்டவனை அசுரன் என்றும் வேதம் சொல்லியிருக்கிறது என்று. இதன்படி இந்த போரில் சமஸ்கிருத பாஷை பேசிய தேவர்கள் ஜெயித்தார்கள்.

மிலேச்சபாஷை... அதாவது சமஸ்கிருதம் அல்லாத பாஷை பேசிய அசுரர்கள் தோற்றார்கள்.

எனவே, தெய்வீகமான பிராமணர்கள் சமஸ்கிருதம் தவிர மற்ற பாஷைகளெல்லாம் கெட்டவர்களின் கெட்ட பாஷை. மிலேச்ச பாஷை அதாவது தெய்வத் தன்மையற்ற பாஷை... என்கிறது வேதம்.

இப்படிப்பட்ட வேதத்தை எளிமைப்படுத்துவதற்காக அவதரித்த மநுவும் தன் பங்குக்கு



சொல்கிறார். "...தயோ ரேவ அந்ததம் கிரியோஹாதேவ நதியோஹா யதந்தரம்தம்தேவ நிர்மிதம் தேசம்ஆரிய வர்த்தம் விதுர் புதாஹா..."

அதாவது... விந்திய மலை, இமயமலை இந்த இரண்டு மலைகளுக்கு இடையேயுள்ள பகுதியும்... கங்கை, யமுனை நதிகள் பாயும்... இந்த நதிகளுக்கு இடையே உள்ள பகுதியும் தான் ஆரியவர்த்தம் என அழைக்கப்படும். இங்குதான் தெய்வீகத் தன்மையும் சமஸ்கிருத பாஷையும் நிலைத்து நிற்கும்.

அதனால்... இந்த பகுதியை தவிர... மற்ற பகுதிகள் தெய்வீகத்தன்மை இல்லாதவை.

இதே நேரம்... மநு இன்னொரு கருத்தையும் சொல்கிறார் பிராமணர்கள் வாழ வேண்டிய பகுதிகளாக... வகுத்துச் சொல்லும் போது, ப்ரும்மா வர்த்தம், ப்ரும்மரிஷி வர்த்தம் என்றெல்லாம் இமய மலைச்சாரல் பகுதிகளைக் குறிப்பிட்டிருக்கிறார். இதுவெல்லாம் இப்போது ஆப்கானிஸ்தானாக இருக்கிறது.

மநு சொல்படி, வேதச் சொல்படி பார்த்தால்... பிராமணர்கள் சமஸ்கிருதம் தவிர வே பாஷை எதுவுமே பேசக்கூடாது. பேசினால் பாவம்.

மேலும், அவர்கள் இமயமலை, விந்தியமலை, கங்கை, யமுனை பகுதிகளில்தான் வசிக்கவேண்டுமே தவிர வேறெங்கும் வசிக்கக் கூடாது

இதையெல்லாம் பின் பற்றும் பட்சத்தில் தமிழையும் ஒதுக்கட்டும். ஆனால்... பல ஆண்டுகளுக்கு முன், தான் வாழ்ந்திருந்த நிலப்பகுதியை மட்டுமே அறிந்த எவனோ பண்ணிவைத்த மந்த்ரத்துக்கு இன்றும் குருட்டுத்தனமாக கட்டுப்பட்டு வாழ்வதும் குருட்டுத் தனமானதுதானே.

ஒரு சுவாரஸ்யமான உதாரணம் சொல்கிறேன் பாருங்கள். கர்மாக்களில், யாகங்களில் ஒரு வேத மந்த்ரம் சொல்வார்கள்.

"நமோ கங்கா யமுனை யோஹேமத்யேயே வசந்தீ...தேமே ப்ரஸனினாத் மானாஹா"...

இந்த வேத மந்த்ரத்தை நமது காவேரிக்கரையிலோ... வைகைக்கரையிலோ... தாமிரபரணி ஆற்றின் கரையிலோ உட்கார்ந்து பிராமணன் உச்சரிக்கிறான். அவனும் கைகூப்பி அவனுக்கு எதிரே உட்கார்ந்திருக்கிறவர்களையும் கைகூப்பச் சொல்கிறான்.

இந்த மந்த்ரத்துக்கு என்ன அர்த்தம் என்று கேட்டால்..."கங்கை நதிக்கும் யமுனை நதிக்கும் இடையில் வசிக்கும் ரிஷிகளே மக்களே உங்களை வணங்குகிறேன்" என்பதாகும்.

"அடத்திருடா... நீ உட்கார்ந்திருப்பது காவிரிக் கரையில். உனக்கு தட்சணை கொடுப்பதும் காவிரிக்கரைக்காரன்தான். நீ எதற்கு கங்கைக்கும் யமுனைக்கும் இடையே இருந்தவர்களுக்கு வணக்கம் செலுத்துகிறாய்?

கேள்வி கேட்டால், 'வேதத்தில் இருக்கு நான் சொல்கிறேன்' என்பார்கள்.

வேதத்தில் தான் தமிழ் கெட்ட பாஷை அதை பேசக்கூடாது என்றிருக்கிறது.



உன் தாய்மொழியை, உன் தாயை வேதம் கெட்டவள் என்கிறது.

நான் சொல்கிறவனை கும்பிடு என்கிறது. அதற்காக வேதம் சொன்ன எல்லாவற்றையும் செய்வாயா?

வேதக்காரர்கள் அன்று... தாங்கள் வாழ்ந்த பிரதேச வாழ்வின் அடிப்படையில் தங்கள் நிலப்பகுதியை, நதிகளை, மலையை வணங்கு. அதாவது இயற்கை வழிபாடு. அதை விட்டுவிட்டு... காவேரிக்கரையில் நின்று கொண்டு கங்கையைக் கும்பிட்டால்? அந்த மந்த்ரத்தை மாற்றவேண்டும்.

*சென்னையில் இருக்கும் பிராமணர்கள்...“நமோ அடையாறு கூவம் யோஹேமத்யேயே வசந்தீ...” அடையாறுக்கும் கூவம் ஆற்றுக்கும் இடைப்பட்ட ரிஷிகளை வணங்குகிறேன் என சமஸ்கிருதத்தில் வேண்டாம் தமிழில் சொல்லுங்கள்.*

*சரி... நெல்லை, மதுரை போன்ற தென்ஜில்லாக்காரர்களா? தாமிரபரணிக்கும் வைகையாற்றுக்கும் இடையே உள்ளவர்களை வணங்குகிறேன்... என சொல்லிவிட்டு ஆரம்பியுங்கள். பிரமாதமாக காரியம் ஈடேறும்.*

*தஞ்சாவூர், திருச்சி... என காவேரி பாயும் ஊர்க்காரர்கள். காவேரியையும் கொள்ளிடத்தையும் கைகூப்பிவிட்டு... ஆரம்பிக்கட்டும்.*

“கங்கையிற் புனிதம் ஆய காவிரி நடுவுப்பாட்டு...” என திருமாலையில் சாதிக்கிறார் தொண்டரடிப் பொடியாழ்வார். “கங்கையைவிட தூயதான புனிதமான காவிரி சூழ்ந்த திருவரங்கம் என்கிறார்.

ஆனாலும்... நீங்கள் வேதம் சொன்னபடி கங்கையைத்தான் வணங்குவேன். காவிரியை வணங்கமாட்டேன் என்றால்...? -

**73.தமிழா!! ஜடமாகி போனாயா? இந்து மதம் எங்கே போகிறது ?**

‘ஜாதிவாதம்’ சொல்லி பல கூடாதுகளை உத்தரவாகப் பிறப்பித்துள்ளவனும் அதை பின்பற்றுகிறவனும் மனிதனே அல்ல ஜடம்தான். ஒன்றுக்கும் உதவாத ஜடம்தான்.

கடவுள் பெயரைச் சொல்லி... உடல் ரீதியாக தன்னைத்தானே நீ உன்னை வருத்திக் கொள்வாயானால் நீ மனிதனே அல்ல ஜடம் தான்.

ஆடி அமாவாசை, தை அமாவாசை, மஹாலய அமாவாசை, மகாமகம் என்ற காரணம் காட்டி... கூட்டம் கூட்டமாக போய் ஆற்றுக்குள் குளத்துக்குள் இறங்கி அழுக்கை கழுவுகிறோம் என்று சொல்லிக் கொண்டு, நதிகளையும், குளங்களையும் அழுக்காக்கி அதற்கு புனித நீராடல் என்றும் தீர்த்தவாரி என்றும் பெயர் கொடுத்து தண்ணீருக்கே மதச் சாயம் பூசி விட்டார்கள்

இந்து மதம் எங்கே போகிறது ? பகுதி - 73



காவிரிக்கரையிலே நன்றாக சம்மணம் போட்டு உட்கார்ந்துகொண்டு கங்கையைப் போற்றும் நமது 'அறியாமை'யை போன அத்தியாயத்தில் பார்த்தோம்.

இதோடு சமஸ்கிருதத்தைத் தவிர மற்ற மொழிகளை மிலேச்ச அதாவது Non Aryan பாஷை என்று சொல்லி... அவற்றை வேதம் மறுதலிக்கச் சொன்னதையும் பார்த்தோம்.

சமஸ்கிருத பாஷையைத்தான் போற்றுவோம், சமஸ்கிருதத்தில் சொன்னால்தான் கேட்போம் என்று ஒற்றைக்காலில் நிற்பவர்களுக்கு நானும் 'ஒற்றை ஸ்லோகம்' ஒன்று சொல்கிறேன்.

இதுவும் அந்த சமஸ்கிருதத்தில்தான் இருக்கிறது. அந்த ஸ்லோகம் சொல்கிறபடி நடப்பார்களா?

''வேத ப்ராமாண்யம் கஸ்ய மிதுகர்த்ரு வாதஹா ஸ்நானேதர்மேச்சா ஜாதிவாத அவலேபஹசந்தா பாரம்பஹா பாபஹானா யசஇதீஸத்வஸ்த ப்ரக்ஞாநாம் சஞ்சலிங்கானீ ஜாம்யே....''

இந்த சமஸ்கிருத கவிதை சாற்றும் பொருள் என்னவென்று விளக்குகிறேன் கேளுங்கள்.

மனிதன் உயிருள்ளவன், ஜீவன் உள்ளவன் சிந்திக்கவேண்டிய கடமை கொண்டவன். இப்படி சிந்தனையாளனாக இருக்க வேண்டிய... மனிதன் என்று வெறும் ஜடமாகி விட்டான். அதாவது குட்டிச்சுவர் போலவும், சாலையில் கிடக்கும் கல்லைப் போலவும் பயனற்ற ஜடமாகி விட்டான். ஏன் அவ்வாறு ஜடமானான்? சிந்னை சக்தி இழந்தான்? என்பதற்குக் காரணங்களை அடுக்குகிறது அந்த ஸ்லோகம்.

ஒவ்வொன்றாய் சொல்கிறேன்.

1. எதற்கெடுத்தாலும் வேதம் சொன்னதையே நம்பிக் கொண்டு... அதில் நல்லவை, கெட்டவை எது என்பதை அறியாமல் அப்படியே பின்பற்றுவது (வேத ப்ராமாண்யம்').

2. கஸ்யமிது கர்த்வாஹா...அதாவது நாம் எல்லோரையும் ஒருத்தன்தான் படைத்தான். அவன்தான் நமக்கு கர்த்தன், அதாவது காப்பாளன் என சும்மா நம்பிக் கொண்டிருப்பதால் மனிதன் ஜடமாகிறான்.

3. ஸ்நானே... இது ரொம்ப முக்கியமான வார்த்தை. சாதாரண காலை வேளைகளில் நாம் ஸ்நானம் செய்வது உடம்புக்கும், மனசுக்கும் புத்துணர்ச்சி கொடுப்பதற்காகவும், ஆரோக்கியத்துக்காகவும் தான். ஆனால்... இந்த குளிக்கும் விஷயத்தை கூட்டமாக சேர்ந்து போய் ஆற்றில் குளிக்க வைத்து அதற்கு புனித நீராடல் என்றும் தீர்த்தவாரி என்றும் பெயர் கொடுத்து தண்ணீருக்கே மதச் சாயம் பூசி விட்டார்கள்

சாயம் பூசினால் தண்ணீரில் போய் கழுவலாம். தண்ணீருக்கு சாயம் பூசிவிட்டால்...?

ஆடி அமாவாசை, தை அமாவாசை, மஹாலய அமாவாசை, மகாமகம் என்ற சில நாள்களை காரணம் காட்டி... கூட்டம் கூட்டமாக போய் ஆற்றுக்குள் இறங்கி, குளத்துக்குள் இறங்கி தீர்த்தமாடுகிறார்கள்.தங்களது அழுக்கை கழுவுகிறோம் என்று சொல்லிக் கொண்டு, நதிகளையும், குளங்களையும் அழுக்காக்கி விடுகிறார்கள்.

இதுபோன்று அன்றாட ஆரோக்கியப் பணிகளை குளியல் செய்வதில் மதத்தை



சம்பந்தப்படுத்துவதால் மனிதன் ஜடமாகிப் போனான்.

4. அடுத்ததாக ஜாதிவாத அவலேபஹ...அதாவது இவன் உயர்ந்த ஜாதி, இவன் தாழ்ந்த ஜாதி, இவன் தோள் பட்டையிலிருந்து பிறந்தான். அவன் தொடையிலிருந்து பிறந்தான். எனவே, இவனும் அவனும் ஒன்றாக முடியாது. இவன் கும்பிடும் இடத்தில் அவன் வரக்கூடாது. இவன் வசிக்கும் பகுதியில் அவன் நுழையக்கூடாது என 'ஜாதிவாதம்' சொல்லி பல கூடாதுகளை உத்தரவாகப் பிறப்பித்துள்ளவனும் அதை பின்பற்றுகிறவனும் மனிதனே அல்ல ஜடம்மதான். ஒன்றுக்கும் உதவாத ஜடம்தான்.

5. சந்தாபாரம் மனிதன் ஜடமாய் போய் விட்டதற்கான அடுத்த 'தகுதி' இது.அதென்ன?

இன்றும் சாதாரணமாக சாலைகளிலேயே நாம் பார்க்கிறோம். பலசாலியான ஒருவன்... குடும்பம் குட்டியோடு பக்திமானாக ஒவ்வொரு வீடாக, ஒவ்வொரு கடையாகப் போய் சாட்டையால் தன்னைத்தானே அடித்து துன்புறுத்திக் கொள்கிறான். முதுகு, மார்பெல்லாம் ரத்தக் கோடுகள் வழிகின்றன. கேட்டால் கோயிலுக்கு, எல்லாம் வல்ல கடவுளுக்கு வேண்டுதல் என்பான். நாக்கில் அலகு குத்திக் கொண்டு, ரத்தம் வழிய ஊர்வலம் வருகிறான்.

இதுபோல கடவுள் பெயரைச் சொல்லி... உடல் ரீதியாக தன்னைத்தானே நீ உன்னை வருத்திக் கொள்வாயானால் நீ மனிதனே அல்ல ஜடம்தான்.இவைகள்தான் அந்த சமஸ்கிருத ஸ்லோகத்தில் சொல்லப்பட்டுள்ள விஷயங்கள்.

எல்லாவற்றிலும் சமஸ்கிருதமே இருக்க விரும்பும் இன்றைய அர்ச்சகர்கள் சிலரிடம் போய்... 'இந்த ஸ்லோகத்தை சொல்லி பெருமாளுக்கு ஒரு அர்ச்சனை பண்ணிக் கொடுங்கோ' என்றால் 'பேஷாக பண்ணித் தரேன்' என்பார்கள். ஏனென்றால்... அவர்களுக்கு வடமொழி அறிவு அந்த நிலையில் தான் இருக்கிறது.

சமஸ்கிருதத்தில் சொன்னால் தான் ஒத்துக்கொள்கிறேன் என்பவர்கள்.... தர்மபாலர் என்பவர் எழுதிய 'பிரமாண வார்த்திகம்' என்னும் புத்தகத்தில் உள்ள மேற்கண்ட சமஸ்கிருத ஸ்லோகத்தை ஏற்றுக் கொள்வார்களா? முடியாது என்று சொல்வார்களே என்றால் ஏன்?

சமஸ்கிருதம் தேவ பாஷையாயிற்றே. அதில் சொன்னால் தெய்வமும் சொன்ன மாதிரியாயிற்றே.

ஒன்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். மொழி என்றால் அது கருவி. மனுஷாள் பேசிக் கொள்ள பயன்பட வேண்டியதுதான் மொழியே தவிர, அது ஒருவரை ஒருவர் ஏசிக்கொள்ள பயன்படக் கூடாது.

இது தாழ்ந்த மொழி, இது உயர்ந்த மொழி, இது தெய்வ மொழி... இது அசுர மொழி என்றால்... அந்த மொழியே நம்மைப் பார்த்து திட்டும். இதை விளக்கத்தான் தர்மபாலரின் ஸ்லோகத்தை சொன்னேன்.

**74,75.தமிழர்கள் விரதம் இருக்கக்கூடாது. இந்து மதம் எங்கே போகிறது ?**
விரதம் என்றால் என்ன ? விரதம் பற்றிய உண்மைகள் மலையேறி விட்டன.

சூத்ரச்சிகளாகவே கருதப்படும் அனைத்துப் பெண்களும், சூத்ரர்களும் விரதம்



இருக்கக்கூடாது...

விரதம் என்றால் என்ன ? இவைகளெல்லாம் எப்படி வந்தன? லௌகீக வாழ்க்கை இருக்கிறவர்கள் தான் அது வேண்டும். இது வேண்டும் என விரதம் இருக்கிறார்கள் என்றால்... எல்லாவற்றையுமே துறந்த சாமியார்களுக்கு எதற்கு விரதம்?

**74.** தர்மபாலரின் ஜடம் பற்றிய ஸ்லோகத்தை பார்த்தோம். ஐந்து தகுதிகள் சொல்லியிருந்தார் அல்லவா?அதில் ஒன்றை கொஞ்சம் விஸ்தாரமாக பார்ப்போமே.

கடவுள் நமக்கு அருளவேண்டும் என்பதற்காக நம் உடம்பை நாமே வருத்திக்கொண்டு நம்மை நாமேகஷ்டப்படுத்திக் கொள்வது என்று பார்த்தோமல்லவா அதில் ஒன்று விரதம்.

விரதம் என்றால் என்ன ? 'கடவுளே உன்னை எண்ணி நான் இன்று சாப்பிடாமலே இருக்கிறேன் என் உறுதிப்பாட்டை மெச்சி எனக்கு நீ அருள்செய்' என கடவுளிடம் ஒரு Demand வைத்து செயல்படுவது தான் விரதம்.

இன்றைய காலங்களில் நிறையபேர் விரதம் இருக்கிறார்கள். விரதங்களும் பலவகைப் பட்டதாக ஆகிவிட்டன.

கன்னிப் பெண்கள் தங்களது எதிர்காலக் கணவன் நன்றாக இருக்கவேண்டும். நல்ல கணவனாக வாய்க்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டு வரலட்சுமி விரதம் இருக்கிறார்கள். அதாவது அன்று முழுவதும் வயிற்றுக்கு சாப்பாடு போடாமல், எதிர்கால வாழ்க்கைக்கு நல்ல சாப்பாடு கிடைக்க வேண்டும் என வேண்டுகிறார்கள்.

கல்யாணம் ஆன குடும்பப் பெண்கள்... தீர்க்கசுமங்கலியாக தன் தாலி குங்குமம் நிலைத்து நிற்க வேண்டும் என்பதற்காக வரலட்சுமி விரதம் இருந்து தன்னைப் போல குடும்பப் பெண்களுக்கு ரவிக்கை துணிகளையும் லஞ்சமாக கொடுக்கிறார்கள். இது வரலட்சுமி விரதம் என்றால் விரதங்களில் முக்கியமான விரதம் ஏகாதசி.

ஏகாதசி அன்று சாப்பிடாமல் விழித்திருந்தால் நேரடியாக மோட்சத்துக்குப் போகலாம் என ஒரு கருத்தை நம்பிக் கொண்டு பலரும் ஏகாதசி விரதம் இருக்கிறார்கள். ஏகாதசி அன்று ஒருவாய் தண்ணீர்கூட குடிக்கக்கூடாது. சாதம் சாப்பிடக்கூடாது என்றெல்லாம் கட்டுப்பாடுகள்.

இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால்...
ஏகாதசி அன்று பெருமாளை வேண்டி உண்ணாவிரதம் இருக்கிறோம். ஆனால், அந்த நாளில் பெருமாளுக்கும் சாப்பாடு போடக் கூடாது என்கின்றன. நமது வாழ்த்துகள்.

ஆமாம்... ஏகாதசி அன்று மட்டும் பெருமாளுக்கு சாதம் நிவேதனம் செய்யாமல் உப்புமாவை நைவேத்யம் செய்கிறார்கள்.

இதேபோல் நம்மை விட்டுப் பிரிந்த பித்ருக்கள் நமது முன்னோர்கள் நம்மை ஆசிர்வதிக்க வேண்டும் என்பதற்காக அமாவாசையில் விரதம் இருப்பார்கள். குழந்தை பாக்யம் பெறவேண்டி வைணவர்கள் திருவோணத்திலும், சைவர்கள் முருகனுக்காக சஷ்டியிலும் விரதம் இருக்கிறார்கள்.



இன்னொரு புகழ்பெற்ற விரதம் பிரதோஷம் என்றால் என்ன என்பது தெரியாமலேயே பலர் சிவனைவேண்டி விரதம் இருந்து வருகிறார்கள்.

பிரதோஷம் என்றால் ராத்திரியின் முன்வேளை அதாவது ஆரம்ப ராத்திரி. இந்த வேளை சிவனுக்குஉகந்தது. இந்த நேரத்தில் சிவனை வழிபட்டு பலன் காண்பதுதான் பிரதோஷ வழிபாடு. சரி... இத்தனை விரதங்கள் பார்த்தோம்.

இவைகளெல்லாம் எப்படி வந்தன? அந்தக் காலத்தில் வேதத்தின் கர்மாக்கள், கட்டளைகள்படி யாகங்கள் போன்ற பெரும் செலவிலான வழிபாட்டு முறைகள் இருந்த நிலையில்...பூஜை, புனஸ்காரம் எதுவும் இல்லாமல் ஆடம்பரம், ஏற்பாடுகள் என எதுவும் இல்லாமல் நமக்கும் கடவுளுக்குமான தனிப்பட்ட காரியம் தான் இந்த விரதம்.

அதாவது புஸ்தகத்தில் இல்லை. பண்ணிவைக்க வாத்தியார் வேண்டாம். ஹோமம் வேண்டாம்.

விரதம் என்பது "Unpriscribed by the vedas and uncommitted to the veda tradition"... விரத வழிபாடு முறை என்பது வேதத்தால் வரையறுக்கப்படாதது... அதாவது வேத நாகரிகம் ஒத்துக்கொள்ளாதது. வேதம் சொல்வதை நீ கேட்கிறாய் என்றால் 'சாதம் வேண்டாம்' என விரதம் இருக்கக்கூடாது எப்படி?

தஸ்மாது ஆஹராமனுஷ்யா அசனமிச்சந்தேப்ராயதஸ்ச சாயஞ்ச்ச...என்று போகும் இந்த வேதவரிகள் விரதம் பற்றி சொல்லாமல் சொல்கின்றன.

ஒரு மனிதனுக்கு சாப்பாடு தான் முக்கியம். நீ தினமும் முறைப்படி ஒழுங்காக சாப்பிட்டால் தான் மனிதனாக வாழமுடியும். மிருகங்கள் எப்போது வேண்டுமானாலும் தின்னும். ஆனால், மனிதனாகிய நீ காலை இரவு என முறை வைத்து முறையாக சாப்பிடவேண்டும்.

நித்யப்படி இதைப் பின்பற்று என தினந்தோறும் நன்றாக சாப்பிடச் சொல்கிறது வேதம்.

இன்னொரு மந்த்ரம்..."அஸ்னாதி சப்ரானஏவ ஆதிதோ பவதீ..."டேய்... உனக்கு உயிர் தருவதே சோறு தான். நீ மிகப்பெரிய யாகங்களை செய்தாக வேண்டும். அதற்கு உனக்கு பலம் வேண்டும். அதனால் நீ நன்றாக சாப்பிடு. சாப்பிடாமல் இருந்துவிடாதே..என யதார்த்தமாக சொல்கிறது வேதம்.

வேதம் மறுத்தலித்த விரதத்தை மநுஸ்மிருதி என்ன செய்கிறது தெரியுமா? விரதத்துக்கும் ஒருவிரதத்தை வைக்கிறது.

'நா°தி ஸ்தீரீனாம்பரத் யக்ஞயஹாநவ வ்ரதம்நாப உபோஷனம்'
விரதம் இருக்கலாம் ஆனால்... சூத்ரச்சிகளாகவே கருதப்படும் அனைத்துப் பெண்களும், சூத்ரர்களும் விரதம் இருக்கக்கூடாது... என தனது ஆணையை நிறுவுகிறார் மநு.

லௌகீக வாழ்க்கையில் இருக்கிறவர்கள் தான் அது வேண்டும். இது வேண்டும் என விரதம் இருக்கிறார்கள் என்றால்... எல்லாவற்றையுமே துறந்த சாமியார்களுக்கு எதற்கு விரதம்?

ஒரு சாமியார் தன் ஆசிரமத்தில் உட்கார்ந்து நிஷ்டையில் இருந்தார். வெளியே மழை...என்னவென்று விசாரித்தால் சாமியார் சாதுர்மாஸ்ய விரதம் இருக்கிறார் என்றார் சிஷ்யர். எள்ளுதான் காய்கிறது என்றால் எலிப் புழுக்கை ஏன் காய்கிறது?



**75.** எள் இருக்கிறதே... அது எண்ணெய் ஆகவேண்டும் என்பதற்காக காயும் அதோடு சேர்ந்து எலிப் புழுக்கையும் காயும். ஆனால், எலிப்புழுக்கை காய்வதால் என்ன உபயோகம்?

அதுபோலத்தான்... உலகியல் வாழ்க்கையில் நாட்டம் உடையவர்கள், இது வேண்டும், இன்னது நடக்க வேண்டும் என்ற சுயநல, பொதுநல, கோரிக்கைகளோடு விரதம் இருக்கிறார்கள்.

ஆனால், சாமியார்கள், சந்நியாசிகள், துறவிகள், யதிகள் என அத்தனைபேரும் உலக வாழ்க்கையை, சுகதுக்கங்களை துறந்தவர்கள். அவர்களைப் பொறுத்தவரை, தேவைகள் எல்லாம் செத்துப் போய்விட்டன. இதை ஆங்கிலத்தில் 'Civil death' என்று சொல்வார்கள்.

இப்படிப் பட்டவர்கள் ஏன் விரதம் மேற்கொள்ள வேண்டும்? அவர்கள் இந்த சாதுர்மாஸ்ய விரதம் இருப்பதன் பின்னணி என்ன? இன்னும் சில சந்நியாசிகள் நாங்கள் சாதுர்மாஸ்ய விரதம் இருக்கிறோம் என்று கோர்ட்டுக்கு வராமலேயே...
இருக்கிறார்களே? அப்படியென்றால் ரொம்ப முக்கியமானதோ அந்த சாதுர்மாஸ்ய விரதம்?

இந்தக் கேள்விகளுக்கு விடைகாண... நாம் சந்நியாசிகளின் சில பக்கங்களை புரட்டிப் பார்க்கவேண்டும். அதற்கு முன் கீதையிலிருந்து பகவான் கிருஷ்ணர் அருளிய ஒரு ஸ்லோகத்தைப் பார்ப்போம்.

ஸ்யதஹ ப்ரவர்த்தினிபூதானாம் ஏனசர்வம்இதம்ததம் சொகர்மனாஹாதம்அப்யர்ச்ச சித்திம் விந்ததீ மானவஹா...

அதாவது உனக்கு மோட்சம் கிடைக்க வேண்டுமென்றால் நீ கண்களை மூடிக்கொண்டு தியானித்துக் கொண்டு இருக்காதே. ஓடு... இயங்கு இயங்கிக்கொண்டே இரு. run in the society. சமூகத்துக்குள் ஓடு...As you the part of the society, discharge your duty and contribute to the society.அதாவது உன்னால் முடிந்ததை சமூகத்துக்கு செய்துகொண்டே இரு. உன் கடமையை நிறைவேற்றுவதுதான் மோட்சத்துக்கு இட்டுச் செல்லும்.

இது கீதையில் கிருஷ்ணன் சொன்னது எல்லாருக்காகவும் சொன்னது. இதில் சில அம்சங்கள் சந்நியாசிகளுக்கும் பொருந்தலாம்.அதில் ஒன்றுதான்... ஓடு... ஓடு... ஓடிக்கொண்டே இரு...

அதாவது சந்நியாசிகள் பிச்சையெடுத்து சாப்பிடக் கூடியவர்கள். அவர்கள் இன்று ஒரு கிராமத்தில் தங்கி பிச்சையெடுத்து சாப்பிட்டார்கள் என்றால்... மறுநாள் அதே கிராமத்தில் பிச்சையெடுக்கக் கூடாது.

கதிரவன் கிழக்கில் தோன்றுகிறான். கதிர்கள் மெல்லப் பாய்கின்றன. அந்தக் கிராமத்தில் தங்கியிருந்த சாமியார் தனது தண்டம், துணிகளை சுருட்டிக் கொண்டு அவசர அவசரமாக கிளம்புகிறார். இது பழைய காலத்தில் நடந்த சம்பவம்.

ஏனென்றால்... ஒரு சந்நியாசி ஒரு கிராமத்தில் ஒரு ராத்திரிக்குமேல் தங்கக்கூடாது ஓடிவிடவேண்டும். அதாவது தினந்தோறும் சுற்றிக்கொண்டே இருக்கவேண்டும்.அதுவும் எப்படித் தெரியுமா

'வாகனஸ்தம் பதிந் திருஷ்ட்வா சசேர ஸ்நானமாஸ்யே...'... எதிரே மாட்டுவண்டி, குதிரை



வண்டி, அரச பல்லக்கு, தேர் முதலிய வாகனங்கள் ஏதேனும் வந்தால்... உடனே தலைமுழுகி அந்த 'வாகனத்தை பார்த்த பாவம்' போக்கிவிட்டு நடக்க ஆரம்பிக்கவேண்டும்.ஆக அர்த்தம் என்ன? நடந்தே சுற்றவேண்டும்.

அதுவும் ஒரு ராத்திரிக்குமேல் எந்த கிராமத்திலும் தங்காமல் சுற்றவேண்டும். இப்படிப்பட்ட 'ஒரு ராத்திரி ஒரு கிராமம்' என்ற கட்டுப்பாட்டுடைய சந்நியாசிகளை பரமஹம்ஸ பரிவ்ராசகர் என்று அழைப்பார்கள்.

அதாவது... சந்நியாசிகளால் 4 நிலைகள்...குட்டீஸன், பஹுவதஹன், ஹம்ஸன், பரமஹம்சன், முதல்நிலை, இரண்டாம் நிலை, மூன்றாம் நிலை என்ன வகைப்படுத்தப்பட்டு இந்நிலைகளில் கடைசி நிலையான உயர்ந்த நிலை உடையவர்கள் பரமஹம்ஸர்கள் தான்.சரி... இந்த வகைப்பாடுகள் இருக்கட்டும்.

சாதுர்மாஸ்ய விரதம் பற்றி பேசினோமே அது என்ன ஆனது?

சுற்றிக்கொண்டே இருக்கும் சந்நியாசிகள் வருடம் முழுவதும் சுற்றிக்கொண்டே இருக்க முடியுமோ? வெயில் காலத்தில் நிழல்களில் இளைப்பாறிவிட்டு நடக்கலாம். பல கிராமங்களை கடக்கலாம். ஆனால்... மழைக்காலங்களில்...?

இப்போது உள்ள மழைக்காலம் என்பது வேறு... அப்போதைய மழைக்காலம் வேறு. அப்போதெல்லாம் மழை பெய்யும், பெய்யும் பெய்துகொண்டே இருக்கும். இன்றைய மக்கள்தொகை போல அன்றைய மரங்கள் தொகை, இன்றைய மரங்கள் தொகை போல மக்கள் தொகை கேட்க வேண்டாமா? தூய்மையான பூமி... வள்ளலான வானம்.

மழைக்காலத்தில் வெளியே தலைநீட்ட முடியாது. பார்த்தார்கள் சந்நியாசிகள். இந்த மழையில் நடந்துபோய் சுற்றி பிச்சையெடுப்பது நடக்கிற காரியமல்ல, போடு டேராவை. மழை மாதங்களான 4 மாதமும் ஒரே பகுதியில் தங்கினார்கள். இதற்காகவே 'மழைக்கால 4 மாசமும் ஒரே இடத்தில் தான் தங்கவேண்டும்' என்ற பழக்கத்தை ஏற்படுத்தினார்கள். சாதுர்மாஸ்யம் என்றால் நான்குமாசம் என்று பொருள். இதையே பின்னாளில் சாதுர்மாஸ்ய விரதம் என ஆக்கிவிட்டார்கள்

அதாவது நாலுமாச விரதமாம். மழைக்காலத்தில் வெளியே போனால்... நடந்தே நாறிவிடுவார்கள். அதனால் 4 மாசம் வெளியே போகக்கூடாது என்று தங்களுக்குள் விதித்த கட்டுப்பாட்டை விரதம் ஆக்கிவிட்டார்கள்.

இன்றுகூட தஞ்சாவூர் ஜில்லாவில் ஆண்டிக்காடு என்ற கிராமம் உள்ளது.

இங்குதான் மழைக்காலத்தில் ஆண்டிகள், சந்நியாசிகள் எல்லாம் தங்கியிருப்பார்கள். மழைக்குப் பயந்து 4 மாசம் உட்கார்ந்திருப்பது தான் சாதுர்மாஸ்யம்.

மழை அதிகம் இல்லாத இந்தக் காலத்திலும் கோர்ட்டுக்குப் பயந்து சாதுர்மாஸ்ய விரதம் என்கிறார்கள்.சரி... விரதம் பற்றிய உண்மைகள் மலையேறி விட்டன. அடுத்து மலையேறப் போகும் உண்மைகள்

**76 to 82 - 1.திருப்பதியில் உள்ளது காளி சிலையா? திருப்பதியில் நடப்பதென்ன?**



பிராமணர்களால் காளியை சிவனாக்கி பின் திருப்பதி பெருமாளாக எவ்வெவ்வாறு மாற்றப்பட்டது?

ஆண் ஆகிய திருப்பதி பெருமாளுக்கு தலையை சீவி சிங்காரித்து அழகான பின்னல் ஏன்?

திருப்பதியில் உங்களை மொட்டை போடச்செய்து பிராமணர்களால் "மொட்டை" அடிக்கப்படுபவர்களே!. மொட்டை அடிக்கவேண்டியது ஏன்?

பெண்ணை ஆணாக மாற்றிய ஆன்மிக ஆப்பரேஷன்.

திருப்பதி பக்தர்கள் தப்பாக நினைத்துக் கொண்டு விடாதீர்கள். சிந்தியுங்கள்.

**76.** விரதங்கள்பற்றிப் பார்த்தோம். சாப்பிடாமல் தியானம் செய்வது வேதத்துக்கும், கீதைக்கும் எதிரானது என்பதையும் பார்த்தோம். இந்த விரதத்திலே இன்னொரு முக்கிய அம்சம்...இப்போதெல்லாம் குறிப்பிட்ட நாள்கள் விரதம் இருந்து ஒரு மண்டலமோ... இரண்டு மண்டலமோ விரதம் இருந்து... கூட்டம் கூட்டமாக பக்தர்கள் புறப்படுகிறார்கள். நடைபயணமாகவே உன்னை வந்து அடைகிறேன் என்று சொல்லி கால் கடுக்க நடக்கிறார்கள்...

பின் உடல் உயிர் எல்லாம் கஷ்டப்பட மலையேறுகிறார்கள். மலையிலே வீற்றிருக்கிற தெய்வத்தைப் பார்த்து வணங்கி தங்கள் விரதத்தை முடிக்கிறார்கள். விரதம் பற்றிய உண்மைகள் மலையேறி விட்டதாகச் சென்ற அத்தியாயத்தில் சொல்லியிருந்தேனல்லவா?

விரதம் இருந்து மலையேறுவது தொடர்பான உண்மைகளை இப்போது பார்க்கலாம்.

"தயோ ரேவ அந்ததம் கிரியோஹாதேவ நதியோஹா யதந்தரம்தம்தேவ நிர்மிதம் தேசம் ஆரியவர்த்தம் விதுர்புதாஹா...'' அதாவது இமயமலை, விந்தியமலைக்கு இடைப்பட்ட பகுதி தான் தெய்வப்பகுதி மற்றவை எல்லாம் மிலேச்ச பகுதி என்று மநு சொன்னார்.

ஆனாலும்... உலகின் அந்தந்த பகுதியில் வசிக்கும் மலை மக்கள் தத்தமது மலைகளை தெய்வத்தன்மை உடையதாக ஆக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

அதில் ஒன்று தான் இந்த தென்னிந்திய மலை. இந்த மலையில் ஏழு குன்றுகள் இருப்பதால் ஏழுமலை என்றும் அழைக்கப்படுகிறது.

இந்த மலை... மிக மிகப் பழங்காலத்தில் எப்படி இருந்திருக்கும்? சிந்தனை செய்யுங்கள். எங்கு பார்த்தாலும் காடு, மிக அடர்ந்த காடு, அதற்குள் வனவிலங்குகள் கூட்டம். இந்த இயற்கை அடர்த்திக்கு இடையே தான் அந்த மலைக்கே உரிய மலைவாசிகளும்... அதாவது **Hilltribes** மக்களும் அங்கே வசித்து வந்தார்கள்.

அவர்களுக்கு மலையை விட்டால் வேறெதுவும் தெரியாது. கீழே இறங்கி வருவதெல்லாம் அந்த காலத்தில் சாத்தியம் இல்லாத காரியம். வாழ்வோ, சாவோ... அந்த மலை மேல் தான்.காட்டில் விளைந்திருக்கும் பழங்களைப் பறித்துத் தின்றார்கள். காட்டு விலங்குகளை பிடித்து அடித்து மாமிசம் உண்டார்கள்.

ஆனாலும்... அம்மலை மக்களுக்கு தங்கள் வாழ்க்கையைப் பற்றிய பயம் போகவில்லை."என்னடா இது... கொடிய மிருகங்கள் எல்லாம் கொட்டம் அடிக்கின்றனவே.



உலகத்தின் உயரத்தில் இருந்தும் நமக்கு எப்போதும் பய வாழ்வுதானா?...''

மலைவாசிகளின் குழந்தைகளை மிருகங்கள் எப்போது கடித்துக் குதறும் என்பது தெரியாது. திடீர் திடீரென நடக்கும். அடர்ந்த காடுகளின் இருட்டே அவர்களுக்கு பயமாக இருந்தது.

பயம்தான் கடவுளை கண்டுபிடிக்க மனிதனுக்கு கிடைத்த முதல் சாவி என்பதை ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன்.

அந்த வாழ்க்கை பயத்தால் தான்... அந்த மலைவாசிகள் தங்களுக்கென ஒரு தெய்வத்தை வைத்துக்கொள்ள (Security God) விரும்பினார்கள்.முதலில் சூரியனை வழிபட்டார்கள், பிறகு விலங்குகளை வணங்கியவர்கள், பின்... idol worship முறையில் தங்கள் தெய்வத்தை அமைத்தனர்.அவர்களின் தெய்வம் எப்படியிருக்கும்? அவர்களை மாதிரியே தான் இருக்கும்.

மலைவாசிகளுக்கு அப்போது கடவுளுக்குத்தான் பஞ்சம். கல்லுக்கா பஞ்சம். தங்கள் மலையிலேயே கல்லெடுத்து... தங்களைப் போன்றே உருவமுள்ள கருப்பான சிலையை அமைத்தார்கள். அதுதான் காளி.

ஆமாம்... காளி என்றால் கறுப்பு. பெண் தெய்வங்களை அதிலும் Rural Gods பற்றி ஏற்கெனவே நாம் பார்த்த போது... ஊருக்கு பாதுகாப்புக்காக பெண் தெய்வத்தை வைத்தார்கள். ஆண் என்றால் அலைந்துகொண்டே இருக்கும் பெண் என்றால் வீட்டை ஒழுங்காக பார்த்துக் கொள்வது போல ஊரையும் ஒழுங்காகப் பார்த்துக் கொள்ளும் என்பதற்காக Primitive மக்கள் தங்கள் பகுதி பாதுகாப்புக்காக பெண் தெய்வங்களைப் படைத்தார்கள் என பார்த்தோம்.

அந்த வகையில்... தங்கள் மலையை மக்களை காப்பாற்றிக் கொள்ள... முதன் முதலாக மலைக்காளி உருவத்தை செய்து வழிபட ஆரம்பித்தனர்.

வேட்டைக்குச் செல்லும்போது ஆண்கள் வழிபடுவதும்... வேட்டைக்குச் சென்று வந்தபின்னர்... வேட்டையாடிய பொருள்களை காளியின் கால்களில் படையலிட்டு பிறகு எடுத்துச் செல்வதும் அவர்களது பழக்கமானது. இதனால் தானோ என்னவோ... இப்பழக்கத்துக்கு ஏற்றாற்போல அக்கற்சிலையை வடிவமைத்திருந்தனர்.

காளிக்கு இரண்டு கைகள். வலது கையை கீழ்நோக்கிக் காட்டும்படி வைத்து இடது கையை தன்னை நோக்கி தூக்கிக் காட்டுவாள் காளி.'எனக்கு காலடியில் படையல் இட்டால், உன்னை நான் காப்பேன்' என்பது, மலைவாசிகளின்'Tribes Tradition Dictionary' யில் இதற்கு அர்த்தமாக இருக்கலாம்.

இப்படியாக காளிக்கு படையலிட்டு பூசையிட்டு தங்களைக் காப்பாற்றிக் கொண்டு வந்து மலைமக்கள்... இதே காளியை மையமாக வைத்து கொண்டாட்டங்கள் நடத்தவும் தவறவில்லை.

காளிக்காக மலையெங்கிலும் உள்ள மலர் பறித்து... சூட்டி தங்களது உற்சாகப் பண்களை இசைத்துக் கொண்டாடவும் செய்தார்கள். இதெல்லாம் அவர்களது பயத்தைப் போக்கிக் கொள்வதற்காக ஒரு Entertainment.

இது போலவே பல நூறு வருஷங்களாக மலையில் இந்த காளி வழிபாடு தொடர்ந்து வந்தது.



வெளி மனிதர்களால் அந்த மலை தீண்டப்படாதவரை இந்த காளி வழிபாடு தான் மலைமேல் நடந்த ஒரே வழிபாடு. மலைக்காளியை ஒருபுறம் வையுங்கள்.

இந்த விஞ்ஞான யுகத்திலே... பகவத் சிருஷ்டியையே மாற்றிப் பார்க்க துணிந்து விட்டார்கள். அதாவது ஏதேதோ ஆபரேஷன்கள் செய்து ஸ்த்ரீயை புருஷாளாகவும், புருஷாளை ஸ்த்ரீயாகவும் மாற்ற முடியும் என்று சொல்கிறார்கள். ஆணைப் பெண்ணாகவோ, பெண்ணை ஆணாகவோ மாற்ற முடியுமா?

விஞ்ஞானம் முன்னேறாத அந்த காலத்திலேயே இந்த ஆபரேஷன் வெற்றிகரமாக நடந்துமுடிந்து விட்டதே... எங்கே?....எங்கே....? -- அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார்

**பகுதி – 77.** பெண்ணை ஆணாய் மாற்றும் ஆபரேஷன் பற்றி எழுதினேன் இல்லையா?... என்னடா இவர்,ஆன்மீக தொடரில் ஆபரேஷனை பற்றி எழுதுகின்றாரே என்று குழம்பாதீர்கள்.

அதாவது இது ஆன்மீக ஆபரேஷன். மலைமக்களின் பூர்வீக தெய்வமாக மலைக்காளி நிலைபெற்று வந்ததை சொன்னேன். பலநூறு ஆண்டுகளாக... வெளியாட்கள் மலையேறும் வரை காளிதான் அங்கே கடவுள்.

அப்படியென்றால் அந்தக் காளி... திருப்பதியில் அவதரித்த... ஏழுமலையிலே மலைமக்கள் பெற்றெடுத்து வணங்கிய காளி இன்று எங்கே?... இந்த கேள்வியின் பதிலில் தான் ஆன்மீக ஆபரேஷன் ஆரம்பமாகிறது.

பற்பல நூறு ஆண்டுகளுக்குப் பிறகு...மலையின் மேலே... மலைமக்கள் அல்லாதவர்கள் ஏற ஆரம்பித்தனர். மலைமக்கள் அல்லாதவர்கள் என்றால்..?. பிராமணர்கள் என்று வைத்துக் கொள்ளுங்களேன். மலையில் ஏறியவர்கள்... அந்தக் காளி சிலையை பார்த்தார்கள்.

காட்டு மலர்களை பறித்தும், வேட்டையாடிய மிருகங்களை படைத்தும் 'பூசெய்' செய்து வந்த மலைமக்களைப் பார்த்த பிராமணர்கள்... 'இப்படியா பூசை செய்வது?

நாங்கள் ஆகமம் தெரிந்தவர்கள். பூசையை எப்படி செய்ய வேண்டும் என்று எங்களுக்குத் தெரியும். நீங்கள் இவ்வாறு செய்வதால் காளிக்கு சக்தி கிடைக்காது. காளியின் அருளும் நமக்குக் கிடைக்காகது.அதனால்காளியை எங்களிடம் விட்டு விடுங்கள்" என்றார்கள் பிராமணர்கள்.. மலைமக்களுக்கு ஆச்சரியமாகிவிட்டது .

எங்கிருந்தோ மேலே ஏறி வந்து... நம் தெய்வத்தை கேட்கிறார்களே என்று. எல்லாரும் ஒன்றாகக் கூடினர். பலநூறு ஆண்டுகளாக நாம் வழிபட்டு வந்த தெய்வத்தை 'நாங்கள் வழிபடுகிறோம்' என்று சொல்கிறார்களே?... கொடுப்பதா வேண்டாமா... இதுதான் விவாதம்.கொடுப்போம்...

நம் காளிக்கு சக்தி அதிகம் கிடைக்கட்டும் என்றனர் சிலர். இல்லை... வேண்டாம் நம் காளியை நாமே வழிபடுவோம் என்றனர் சிலர்.உடனே இது நடக்கவில்லை. காலப் போக்கில்... நாளடைவில் அந்த காளிச்சிலை பிராமணர்களின் கைக்கு வந்தது.

இதுநாள் வரை நீங்கள் காளிக்கு பூஜை செய்திருக்கலாம். மலர்களையும், மாமிசங்களையும்



இனிமேல் படைக்கக்கூடாது. மலைமக்களின் காளிதேவியை தங்கள் கட்டுப்பாட் கொண்டு வந்து ஆகமவிதியில் வழிபாடுகளை ஆரம்பித்தனர் பிராமணர்கள். காளி தேவிக்கென மிக சின்னதாக ஒரு கோவிலும் கட்டப்பட்டது.

முற்றிலும் ஆஹம ரீதியிலான வழிபாடுகளை ஆரம்பித்த பிராமணர்கள் காளிதேவியை தங்களுக்குள் அடைத்தார்கள். ஆகமப்படி பெண் தெய்வங்கள் இருக்கும் கோ சிம்மத்தை ஸ்தாபித்து வைப்பார்கள். ஆண் தெய்வங்கள் இருக்கும் கோயில்களில் ரிஷபத்தை ஸ்தாபித்து வைப்பார்கள். இதன்படி… காளிக்கு பக்கத்தில் சிம்மத்தை ஸ்தாபித்தார்கள். இப்படியான காளியை தங்கள் வசம் எடுத்துக் கொண்ட பிராமணர்கள்…

'இனிமேல் நீங்கள் உள்ளே வரக்கூடாது. நாங்கள் பூஜை செய்கிறோம். நீங்கள் வெளியே நின்று வழிபட்டு விட்டு அப்படியே போய்விடுங்கள்.இது ஆகம ரீதியிலான காளி, உங்கள் பழைய காளி கிடையாது. நீங்கள் எப்படி வேண்டுமானாலும் வழிபடுவதற்கு.

நாங்கள் நடத்தும் வழிபாட்டு முறைகளை மீறினால்… காளிக்கு சக்தியற்றுப் போய்விடும். அதனால்… காளிக்கு நீங்கள் இதுவரை நடத்திய உற்சவங்கள், திருவிழாக்கள், படையல்களுக்கான பொருளை எங்களிடம் கொடுத்து விடுங்கள். நாங்கள் எல்லாவற்றையும்பார்த்துக் கொள்கிறோம்.

இதை சற்றும் எதிர்பார்க்கவில்லை மலைக்காரர்கள். இந்த ஆகம அதிரடியை தூக்கிச் சாப்பிடும் அளவுக்கு இன்னொரு மாற்றமும் கொஞ்ச காலத்தில் நடந்தது.

இதைத் தான் நான் ஆபரேஷன் என்று சொன்னேன். வழிபட வந்த மலைமக்கள்… தங்கள் காளியை பார்த்ததும் அதிர்ச்சியடைந்தனர். காரணம்?… நேற்று வரை பெண்ணாக இருந்த காளி… இன்று ஆணாக மாறிவிட்டாள். காளியின் கைகளில் நாகங்கள் சுருண்டிருந்தன. பொருத்தி வைக்கப்பட்டிருந்தன. அதாவது நாகக்காப்பு.என்ன இது?…

"நாங்கள் இந்த தெய்வத்தை ப்ராபகண்டா ஆக்கப் போகிறோம். இது சைவர்களின் தெய்வம்… சிவபெருமான். காளி கிடையாது…

"இப்போதுதான் பிராமணர்கள் தங்கள் அடிமடியை அவிழ்த்துக் கொண்டிருப்பதை மலைமக்கள் உணர்ந்தனர். போராடத் தொடங்கினார்கள். ஆயுதங்களை தூக்கினார்கள். ஆயுதங்களை பிராமணர்களின் அறிவு தோற்கடித்தது.

"இருங்கள். பொறுங்கள். இந்த தெய்வத்தால் உங்களுக்கும் பலன்கிட்ட வேண்டும். எங்களுக்கும் பலன் கிட்ட வேண்டும். உங்களின் பூர்வீக தொழில்களை கூறுங்கள்…

"வேட்டையாடுவது, தேனெடுப்பது, முடிமழிப்பது…" "என்னது?… கடைசியாய் என்ன சொன்னீர்கள்?…" "எங்களில் ஒரு பிரிவினர் அம்பட்டையர்கள். முடி மழிப்பது தான் எங்கள் வேலை…"

"சபாஷ்! இனிமேல் கோயிலுக்கு உள்ளே யார் வந்தாலும்… தரிசனம் செய்ய யார் வந்தாலும்… உங்களிடம் உட்கார்ந்து தலையைக் காட்டி முடிகளை மழித்துக் கொண்டுதான் உள்ளே வரவேண்டும்.

இது இன்று முதல் க்ரமம். அதற்கேற்ற தட்சணையை நீங்கள் வாங்கிக் கொள்ளவேண்டும். உள்ளே என்ன தட்சணையோ அதை நாங்கள் எடுத்துக்



கொள்வோம்.உங்களுக்கும் பலன் எங்களுக்கும் பலன். உங்களுக்கும் தட்சணை. எங்களுக்கும் தட்சணை உங்களுக்கும் அனுக்ரஹம். எங்களுக்கும் அனுக்ரஹம். ".

மலை மக்களான அம்பட்டையர்கள் காளியை வழிபடும் உரிமையை இழந்து வெளியே அமர்ந்து மொட்டையடிக்க ஆரம்பித்தார்கள். பிராமணர்கள் உள்ளே சென்று மலை மக்களுக்கு மொட்டையடித்தார்கள்.இந்த நிலையில்தான்

**78 .** இந் நிலையில்தான்...எந்த நிலையில் தான்.... திருப்பதி மலைக்காளியை பரமசிவனாகவும் சுப்ரமண்யனாகவும் சைவர்கள் மாற்றி விட்ட நிலையில் தான் இந்தத் தகவல் வைணவர்களுக்குக் கிடைக்கிறது. கொதித்தெழுந்தனர்.

வைணவத்திலகம் எம்பெருமானார் என்ற உயர்ந்த பட்டப்பெயர் கொண்ட சான்றோர் ராமானுஜர் தலைமையில் கொதித் தெழுந்தனர். மலைமீது அடுத்ததாக வைணவப்படை ஏறியது.

ஸ்ரீராமானுஜர் காலம் 11-ஆம் நூற்றாண்டு அதாவது சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு. தன்னுடைய மாமா திருமலைநம்பியிடம் ராமாயணம் கேட்பதற்காக திருப்பதிக்குப் போனார் ஸ்ரீராமானுஜர். அங்கே கீழே ராமாயணம் கற்றுக்கொண்டிருந்த போது தான்... மேலே மலையில் சிவபெருமானை வழிபடுகிற தகவல் அவருக்குக் கிடைத்திருக்க வேண்டும். தன்னுடன் பல வைணவர்களை அழைத்துக்கொண்டு மலையேறினார். அங்கேயோ... கோயில் கட்டி அதற்குள் இந்த காளியை சிவனாக்கி சைவர்கள் ஆதிக்கம் செலுத்தி வந்தனர்.

இந்த வைணவ-சைவ போரில் ஸ்ரீராமானுஜர் ஈடுபட்டதைப் பற்றி குருபரம்பரை என்றால் குரு என்றால் ஆச்சார்யர்கள் என்று முன்பே சொல்லியிருக்கிறேன். அதாவது... வைணவ சமய சம்பிரதாய ஆச்சாரியார்களின் வாழ்க்கைக் குறிப்புகளை தொகுத்தெடுத்து தரும் புஸ்தகம் தான் குருபரம்பரை. இந்த புஸ்கத்திலே தான் திருப்பதி மலை மேலே நடந்த அந்த சம்பவம் விளக்கப்படுகிறது.

ராமானுஜர் தன் தலைமையில் வைணவர்களை கூட்டிக் கொண்டு மலை உச்சிக்குச் சென்றதும் அங்குள்ள சைவர்கள் கோபத்தின் உச்சிக்குப் போனார்கள்.

'இங்கே எங்கே வந்தீர்கள்' இது எங்கள் கோயில், எங்கள் தெய்வம், மரியாதையாக இறங்கிப் போங்கள்' சைவர்கள் குரல் எழுப்பினர்.

ராமானுஜரும், அவரது அடியார் குழாமும் அசையவில்லை. இது பகவான் நாராயணன் எழுந்தருளியிருக்கும் கோயில். இங்கே இத்தனை காலமாக, நீங்கள் இருந்தது போதும். இனி மேலாவது இடத்தைக் காலி பண்ணுங்கள்...

வைணவர்கள் வாதம் செய்தனர்."முடியவே முடியாது பாருங்கள் அவர் கைகளில் பாம்புகள் சுருண்டிருக்கின்றன. அதனால் இவர் சிவன்தான்." தாங்கள்கொஞ்ச காலத்துக்கு முன்பு மாட்டிய நாகக்காப்புகளை ஆதாரமாக எடுத்து வைத்தனர்.

இரண்டு தரப்பிலும் வாதப்பிரதிவாதங்கள் வெடித்த நிலையில் எங்கிருந்தோ ஒரு மன்னனை அவர் பேர் தொண்டமான் சக்கரவர்த்தியாம். மன்னன் முன்னிலையில் அந்த 'பகவத் பஞ்சாயத்து' தொடர்ந்தது. (அந்த காலத்தில் மலைமேலே மன்னன் ஏது? அவன் ஏன் இங்கு வந்தான்? என்ற கேள்விகள் எனக்குள்ளும் எழத்தான் செய்கின்றன.



ராமானுஜர் வாய்திறந்தார். “சரி… நாம் இரண்டு தரப்பினரும்… இப்படி வாதப் பிரதி வாதங்கள் பண்ணிக் கொண்டே இருக்கிறோம்.இம்மலையில் இருப்பது பெருமாள்தான் என நாங்கள் அறுதியிட்டுக் சொல்லுவோம். நீங்களோ இதுசிவகிரி என்கிறீர்கள்.

இப்பிரச்சினையை நாம் பேசித்தீர்க்க முடியாததால்… பகவானே தீர்த்து வைக்கட்டும் நான் யார் பெருமாளா, சிவனா?…என அவனே தன் பதிலைச் சொல்லட்டும்” என்றார் ராமானுஜர்.

எம்பெருமானாரே… அவர் எப்படிச் சொல்லுவார்? எனக் கேட்டார் ராமானுஜரின் சிஷ்யர் ஒருத்தர். கூட்டத்தில் கொஞ்சம் சலசலப்பு. இத்தனை விவாதங்கள் நடந்துகொண்டிருந்த நேரத்தில் அம்மலைக்கே உரிய மலைமக்கள், இந்த பஞ்சாயத்தைப் பார்த்து சிரிப்பதா, அழுவதா எனத் தெரியாமல் விழித்தனர்.

சரி மறுபடியும் குரு பரம்பரைக்குச் செல்வோம். பகவானே எப்படி பதில் சொல்வார் என்ற கேள்விக்கு ராமானுஜர் பதில் சொன்னார். “பெருமாளின் முக்கியமான ஆயுதங்கள்…. சங்கு, சக்கரம், சிவனின் முக்கிய ஆயுதங்கள் மான், மழு, இந்த இரண்டு தரப்பு ஆயுதங்களையும் எடுத்து வாருங்கள். சாதகமான சூழ்நிலை வந்தால் எடுத்துப் பொருத்தி விடலாம். என்ற நம்பிக்கையில்… இரண்டு தரப்பினரும் தத்தமது பகவான்களின் ஆயுதங்களைக் கொண்டு வந்தனர்.

“இந்த இரண்டு தரப்பு ஆயுதங்களையும் சன்னதியில் விக்ரஹத்துக்கு கீழே வைப்போம். ராத்திரி சன்னதியை இழுத்துப்பூட்டிவிடுவோம். எல்லோரும் போய்விட்டு சூர்யோதய சமயத்திலே வருவோம். சன்னதியை திறந்து பார்ப்போம். விக்ரகம் சங்கு சக்கரத்தை சூடிக் கொண்டிருந்தால் அவர் பெருமாள். மான், மழுவை தரித்துக் கொண்டிருந்தால் சிவன். இந்த முடிவுக்கு கட்டுப்படுகிறீர்களா?” ….கேட்டார் ராமானுஜர்.

கூடிப் பேசினார்கள். ‘எல்லாம் பகவத் சங்கல்பம். சரி… இதுதான் சரி…’ எல்லோரும் சம்மதித்தனர்.

சங்கு சக்கரத்தையும், மான், மழுவையும் அந்த சன்னதிக்குள் கொண்டுபோய் வைத்தார்கள். ராத்திரி நேரம். கும்மிருட்டு உள்ளே யாராவது ஒளிந்திருக்கிறார்களா? ராத்திரி இருட்டோடு இருட்டாக உள்ளே இருந்து, தங்களுக்கு சாதகமான ஆயுதத்தை எடுத்து மாட்டிவிடுவார்களோ என்ற சந்தேகத்தில் நன்றாய் சன்னதியை ஆராய்ந்து வெளியேவந்தார்கள்.

சன்னதியை இழுத்துப் பூட்டினர்.உள்ளே விக்ரஹத்தைத் தவிர யாரும் இல்லை. இனி எல்லாம் அவன் தீர்ப்பு… கூட்டம் கலைந்தது. ராத்திரிப் பொழுது எதிர்பார்ப்போடு கரைய… சூர்யோதயம் நேர்ந்தது. வானம், பூமி வெளிச்சமாயின.
பகவான் யார்? அவன் தீர்ப்பு என்ன? ஆவலோடு கதவைத் திறந்தார்கள்… உள்ளே?
**79 ,** ராமானுஜரின் யோசனைப்படி… பெருமாள், சிவன் ஆகிய இருவரது இஷ்ட ஆயுதங்களையும் சந்நிதிக்குள் வைத்துப் பூட்டுகிறார்கள். மறுநாள் சூரியன் பிரவேசம் ஆவதற்கு முன்பே வாசலில் எல்லாரும் காத்திருக்க ஆரம்பித்தார்கள். அவர்களது நெஞ்சங்களில் ‘ஆண்டவன் தீர்ப்பு’ என்னவோ என்பதைஅறியும் ஆவல்.

சூரியன் பிரவேசித்த பிறகு… பூட்டு திறக்கப்பட்டது. கதவு விலக்கப்பட்டது. உள்ளே…தனது தோள்பட்டைகளில் சங்கு சக்கரம் தாங்கி ஜம்மென நின்றிருந்தது விக்ரஹம்.



காரணம், பெருமாளுக்கே உரிய நான்கு கைகள் இங்கே இல்லை. இரண்டு கைகள் தான். சக்கரம் சூடிக்கொண்ட சந்நிதியைப் பார்த்ததும் வைஷ்ணவர்கள் முகமெல்லாம் பூத்துப் போனது. சைவர்கள் முகமெல்லாம் செத்துப்போனது. இதற்கு இன்னொரு காரணமும் இருந்தது.

சங்கு சக்கரத்தை சூடிக் கொண்டதோடு நிற்கவில்லை பெருமாள். நேற்று ராத்திரி அங்கே வைக்கப்பட்டிருந்தன அல்லவா?... சிவனது மான், மழு மற்றும் சூலம் போன்ற ஆயுதங்கள். அந்த சிவ ஆயுதங்களெல்லாம் அடித்து நொறுக்கப்பட்டு தூள் தூளாகக்கிடந்தன.

பகவானின் சந்நிதியில் ஒரு பக்கா ரவுடி புகுந்தது போல... சிவனது ஆயுதங்கள் தூள் தூளாக சிதறடிக்கப் பட்டிருந்தன. இதைக் கண்டதும் வைஷ்ணவர்களுக்கு மேலும் கொண்டாட்டமானது. சைவர்கள் திரும்பிவிட்டனர். இந்த காரணத்தினாலேயே... ஸ்ரீராமானுஜருக்கு ‘அப்பனுக்கு சங்காழி அளித்தவர்’ என்ற பட்டப் பெயர் உண்டானது.

அப்பன் என்றால் திருப்பதி பெருமாள் என்று பொருள். அப்பனுக்கே அதாவது திருப்பதி பெருமாளுக்கே சங்கு, ஆழி அதாவது சக்கரம் வழங்கியவர் என்று அர்த்தம். இத்தனையும் குரு பரம்பரையில் குறிப்பிட்டுள்ளவை தான். இதுபோல... மற்ற சமயத்தவரிடமிருந்து வைணவத்தை போரிட்டு காப்பாற்றியவர் என்பதாக ராமானுஜர் மீதுராமானுஜ நூற்றந்தாதி... என்றொரு அந்தாதியே பாடியிருக்கிறார் திருவரங்கத்து அமுதனார்.

அதில் ஒரு பாடல் கேளீர்....‘தர்க்க சமணமும் சாக்கிய பேய்களும்-தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதமும் நிற்க குறும்பு செய் நீசரும் மாண்டனர் நீ நிலத்தே பொற்கற்பகம் எம் ராமானுச முனி போந்த பின்னே..

.‘‘அதாவது... வாதம் பண்ணும் சமணர்களும், புத்தமதம் என்னும் பேய்களும்... தாழ்சடையோனாகிய சிவபெருமானின் வழியை பின்பற்றும் சைவர்களும், கடும் சூனியவாதம் பேசுபவர்களும்... எல்லாமே பொய் என குறும்பு பேசும் அத்வைதிகளும்... செத்து ஒழிந்தனர். எப்போது?... எங்கள் ராமானுஜர் பிறந்த பிறகு...’என்கிறது இந்த அந்தாதி.

திருப்பதி மலையிலிருந்து திடீரென இறக்குவது போலிருக்கிறதே என எண்ணாதீர்கள். மேலே இன்னும் கொஞ்சம் செய்திகள் பாக்கியிருக்கிறது.

மலைமேல் உள்ள பகவான் தன் இஷ்டமான சங்கு, சக்கரத்தை சூடிக் கொண்டார் சரி... பிறகு எதற்கு சிவனுடைய ஆயுதங்களை அப்படி துவம்சம் பண்ணி சிறு சிறு துண்டுகளாக செய்யவேண்டும்?...

சங்கு, சக்கரத்தைச் சூடிக் கொண்டாலே... பெருமாள் என்பது அனைவர்க்கும் புரிந்து விடும். பிறகு எதற்கு... பகவான் நாராயணன் சிவபெருமானின்ஆயுதங்களை உடைக்க வேண்டும்.?... இப்படி உடைப்பதா தெய்வத்துக்கு அழகு?

...இந்தக் கேள்வியை கேட்கும் போதுதான் ‘செவி வழிச் செய்தி’ என்ற வகையில்... குருபரம்பரையை அடிப்படையாக வைத்து ஒரு செய்தி பரவியிருக்கிறது.

அதாவது முதல்நாள் ராத்திரி... இருதரப்பு ஆயுதங்களையும் உள்ளே வைத்துப் பூட்டி விட்டார்கள். உள்ளே மனுஷாள் யாரும் இல்லை என்று ஊர்ஜிதம் செய்து கொண்டுதான் எல்லாரும் சென்றார்கள். இதன்பிறகு... ராத்திரியில் ராமானுஜர் மறுபடியும் கோயிலுக்கு



வந்தார். எப்படி?... ஒரு பாம்பு வடிவம் எடுத்தாராம். பாம்பா?..
.
ஆமாம். ராமானுஜர் ஆதிசேஷனின் அம்சம் என்று அவருக்கு ரொம்ப காலம் முன்பு வாழ்ந்த நம்மாழ்வாருக்கு பெருமாள் பிரசன்னமாகி கூறியதாக அய்திக குறிப்பு உண்டு....

அதன்படியே... நம்மாழ்வார் தனக்குப் பின் வரப்போகும் ராமானுஜரைப் பற்றி... 'கலியும் கெடும் காண்மின்' என பாடி வைத்திருக்கிறார். இந்த வகைக்கு பவிஷ்யதாசார்யர் என்று பெயர். அதாவது தனக்குப் பின் வரும் ஆசார்யரைப் பற்றி அறிந்து போற்றுதல். இப்படியாக 'ஆதிசேஷனின் அம்சமாக ராமானுஜர் அவதரிப்பார்' என்று பெருமாளே...நம்மாழ்வாருக்கு சொன்னதாக அய்தீகம்.

அப்படிப்பட்ட... ஆதிசேஷனின் அம்சமாகிய ராமானுஜர்... அன்று ராத்திரி மறுபடியும் கோயிலுக்கு வந்தார். சந்நிதி பூட்டிக் கிடக்கிறது. உள்ளே இருதரப்பு ஆயுதங்களும் இருக்கின்றன. காலையில் சங்கு, சக்கரம், சூடிக் கொண்டு பெருமாளாகத்தான் அவர் காட்சியளிக்க வேண்டும் என முடிவு கட்டிய ராமானுஜர்... கோயிலை சுற்றிச் சுற்றி வருகிறார்.

உள்ளே போக ஒரே வழி... கோமுகைதான். அப்படியென்றால்?... உள்ளே உள்ள விக்ரஹத்துக்கு திருமஞ்சன நீராட்டு வைபவம் நடத்தும் போது அந்த நீர்மம்... வழிந்து வெளியே ஓடி வருமே... அந்த துவாரத்துக்கு பெயர்தான் கோமுகை. அது ஒன்றை தவிர சன்னதிக்குள் செல்ல வேறு வழியில்லை.

டக்கென... ஆதிசேஷனின் அம்சமான ஒரு பாம்பாக வடிவெடுத்த ராமானுஜர் அந்த துவாரம் வழியாக சன்னதிக்குள் சென்று விட்டார். கடகடவென சங்கையும், சக்கரத்தையும் எடுத்து விக்ரஹத்தின் தோள் பட்டையில் சொருகுகிறார். காரியம் முடிந்தது. மறுபடியும் பாம்பாகி வெளியே வந்து...ராத்திரியில் மறைந்து விட்டார்.

பிறகு... காலை எல்லாரோடும் வந்து திறந்து பார்க்கும் போது சங்கும் சக்கரம் சூடியபடி நிற்க... சிவ ஆயுதங்கள் உடைத்து நொறுக்கப்பட்டிருக்கின்றன. இதுதான் அந்த செவிவழிச் செய்தி...அப்படியென்றால்?...

**80.** குரு பரம்பரையை மையமாக வைத்து எழுந்த அந்த செவி வழிச் செய்தியைக் கேட்டீர்கள் அல்லவா? செவி வழிச் செய்தி என்றால், மறுக்கலாம், மறுக்காமலும் இருக்கலாம். தனியே மொட்டையாய் இந்தச் செய்தி முளைத்திருந்தால் இதை மறுதலித்து விடலாம். ஆனால், குரு பரம்பரையில் குறிப்பிட்டுள்ள நிகழ்வுகளை ஒட்டியது என்பதால் ரொம்பவும் புறக்கணித்துவிட முடியவில்லை.

இன்னொரு பக்கம்... ராமானுஜர், ஆதிசேஷன் வடிவம் கொண்டு கோமுகம் வழியாக உள்ளே சென்ற வைபவமும் ஒரிஜினல் குரு பரம்பரையில் இருக்கிறது. அதை விட்டு வைத்தால்... ராமானுஜர் நிரூபணம் செய்தது கேள்விக்குறி ஆகிவிடும் என்று... அச்சம்பவத்தை செவி வழிச் செய்தியாக மாற்றி விட்டார்கள் என்றும் ஒரு கருத்து கனமாக இருக்கிறது.

இப்படிப்பட்ட நிலைமையிலே... திருப்பதி மலையைப் பற்றிப் பேச நீர் யார்? உமக்கு என்ன பாத்யம் இருக்கிறது? என என்னிடம் சிலர் நேரடியாகவே வந்து கேள்வி கேட்கிறார்கள்.

இதற்குப் பதிலாகவும் திருப்பதி மலையைப் பற்றி இன்னொரு சுவாரஸ்யத்தையு சொல்கிறேன்.



ராமானுஜரின் மாமா திருமலை நம்பி என்று சொன்னேன் அல்லவா? அவர் மலை மேலே இருந்து பெருமாளுக்குக் கைங்கர்யம் பண்ணிக்கொண்டு வந்தாராம்.

அந்த மலையிலே செய்யக்கூடிய பெரிய கைங்கர்யம் பெருமாளுக்கு நித்யப்படி தீர்த்தம் கொண்டு வருவது தான். ஏனென்றால்... மலைமீது சிலச் சில குன்றுகளுக்கு இடைப்பட்ட ஆழப்பகுதியில் தண்ணீர் தேங்கியிருக்கும். அதை தேடிப்பிடித்து குடத்தில் எடுத்துக்கொண்டு வரவேண்டும். ரொம்ப கஷ்டமான காரியம். இதுபோல திருமலை நம்பி மலையில் தண்ணீர் எடுத்துக்கொண்டு சென்று பெருமாளுக்கு கைங்கர்யம் பண்ணி வந்தார்.

அன்றைக்கு என பார்த்து... சுற்று வட்டாரத்தில் எங்கேயும் தண்ணீர் இல்லை. ஆஹா... பகவானுக்கு எப்படியாவது கைங்கர்யம் செய்யவேண்டுமே என யோசித்த திருமலை நம்பி எங்கெங்கும் அலைந்தார். தண்ணீரே கிடைக்கவில்லை. ரொம்ப ரொம்ப அலைந்து கஷ்டப்பட்டு ஒரு குடம் தண்ணீரை மொண்டு விட்டார். (திருமலை நம்பி பட்ட கஷ்டத்தை உரைப்பதற்காக ஆகாசகங்கை போய் தண்ணீர் கொண்டு வந்தார் என்றும் சொல்வார்கள்.)

ரொம்ப சந்தோஷப்பட்டபடியே அந்தக் குட தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு திரும்பினார். அப்போது... ஒரு குன்றின் அந்தப் பக்கத்திலிருந்து... 'தாத்தா' என ஒரு சத்தம். பார்த்தார் திருமலை நம்பிகள். தாகத்தால் தவிக்கும் ஒரு நபர் நின்று கொண்டிருந்தார்.

'எனக்கு மிகமிக தாகமாக இருக்கிறது. வாய்க்குள் எச்சில்கூட வற்றிவிட்டது. கொஞ்சம் தீர்த்தம் தந்தீர்கள் என்றால் உங்களுக்கும் தன்யனாவேன். (நன்றிக்குரியவன் ஆவேன்) என கெஞ்சினார். அவரது கண்கள், கைகள் இரண்டும் திருமலை நம்பிகள் தண்ணீர் கொடுப்பார் என எதிர்பார்த்திருந்தன.

திருமலை நம்பிகள் திரும்பிப் பார்த்தார். இந்தக் காலத்தில் கிராமப் பகுதிகளில் எங்கெங்கோ அலைந்து ஒரு குடம் தண்ணீர் எடுத்து வருவதுபோலவும், நகரப் பகுதிகளில் லாரி வந்து நிற்கும் போது அடித்துப் பிடித்து ஒரு குடம் தண்ணீர் பிடித்தவன், எப்படிப் பார்ப்பானோ கிட்டத்தட்ட அதேபோல திரும்பிப் பார்த்தார்.

'மன்னிக்கணும் அய்யா.... இது பெருமாள் கைங்கர்யத்துக்கு எடுத்துக்கொண்டு போறேன். நானே ரொம்ப கஷ்டப்பட்டு பிடிச்சேன். உங்களுக்குக் கொடுக்க முடியாது.''என்னப்பா ஒரு மனுஷன் தவியா தவிக்கிறேன். எனக்குக் கொடுக்காம... பெருமாள், பெருமாள்னு சொல்றியே? இது உனக்கே நியாயமா? எனக்குத் தண்ணீர் தந்தால் ஒரு உயிரை காப்பாற்றின புண்ணியம் கிடைக்கும். அந்தக் கல்லுக்கு ஊற்றி என்ன பண்ணப் போறே?'' என்றார் அந்த தாகவாதி. திருமலை நம்பியோ 'முடியவே முடியாது' என சொல்லிவிட்டு நடந்தார்.

மீண்டும் தாத்தா... என குரல். இப்போது கொஞ்சம் வேகமாக ஒலித்தது... பார்த்தால் பெருமாள்தான் அந்த தாகவாதியாக வந்து தண்ணீர் கேட்டு சோதித்து இப்படி காட்சி தந்திருக்கிறார். இதையேன் நான் இப்போது சொல்கிறேன்? 'தாத' என்றால் சமஸ்கிருதத்தில் அப்பா என ஒரு அர்த்தம் உண்டு.

பெருமாளை பிரம்மனுக்கு அப்பா என்பார்கள். அப்படிப்பட்ட அப்பாவான பெருமாளே திருமலை நம்பியை 'தாத...' அதாவது அப்பா என அழைத்ததால்... திருமலை நம்பி அடியார்க்கு தாத்தா ஆனார். அவரது வம்சத்தினர் தாதாச்சாரியார்கள் ஆயினர்.

அதாவது...'பிதாமகஸ்ய அபி பிதாமஹாய பிராசேத்து ஆதேஸ பலப்ரதாய



ஸ்ரீபாஷ்யகாரஉத்தம தேசிகாய ஸ்ரீசைல பூர்ணாய நமோ நமஸ்தே...'- பிரம்மனுக்கு அப்பாவாகிய பெருமாளே திருமலை நம்பியை அப்பா என அழைத்ததால் அவரை நாம் போற்றுவோம் என்கிறது இந்த ஸ்லோகம்.

அதாவது திருமலை நம்பியின் வழிவழி வந்தவர்கள் 'தாத்தாச்சாரி' ஆகினார்கள். அடியேனும் அப்படி வந்தவன்தான் என என் குடும்பத்தினர் சொல்லியுள்ளார்கள்.

அதனால்... நானும் திருப்பதியைப் பற்றி பேச, எழுத பாத்யம் உள்ளவன்தான். இதற்காக மட்டும் அந்தக் கதையை நான் சொல்லவில்லை.

'மனிதனுக்கு உதவு. தெய்வத்தைப் பிறகு பார்' என தெய்வமே திருமலை நம்பிகளிடம் சொன்னது என்ற நீதியை உணர்த்தவே இதை நானிங்கு குறிப்பிட்டேன். அடுத்து... திருப்பதி மலையைப் பற்றி நாம் பார்க்கையிலே முக்கியமானவர் ஹத்தியராம் பாபாஜி. யார் இவர்? -அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார்.

**81.** திருப்பதி மலையின் 'கல்லின் கடவுள்' அதாவது மண்ணின் மைந்தன் என்று சொல்கிறோமே... அது போல இம்மலைக்கேயுரிய தெய்வம் காளி என்பதையும்... அவள் எவ்வெவ்வாறு மாற்றப்பட்டாள்என்பதையும் இதுகாறும் பார்த்தோம்.

சென்ற அத்யாயத்தின் முடிவில் ஹத்தியராம் பாபாஜி என்பவரை குறிப்பிட்டு அவர் முக்கியமானவர் என்றும் சொல்லியிருந்தேன். இவர் யார்?... திருப்பதியில் இவர் என்ன செய்தார்?... பேரைக் கேட்ட உடனே உங்களுக்கு அவர் எப்படிப்பட்டவராக இருந்திருப்பார் என யூகிக்க தோன்றும்.

ஹத்தியராம் ஒரு வடக்கத்தியர், வட இந்தியாவிலிருந்து அமைசியைத் தேடி அலைந்து... பரதேசியாய் சுற்றிச் சுற்றி திருப்பதிக்கு வந்து சேர்ந்தார்.

அப்போது இங்கே வேங்கடாஜலபதி கோயிலில் வழிபாடுகள் இயல்பாக அமைதியாக நடந்து கொண்டிருந்தன. பாபாஜி வேங்கடாஜலபதி மீது பக்தி செலுத்தினார்.

சன்னிதிக்கு பக்கத்திலேயே இருப்பார். கோயில் காரியங்களை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வார். கொஞ்ச நாளில்... இந்த ஆர்வத்தினாலேயே பாபாஜி... திருப்பதி கோயிலின் நிருவாகியாகவே மாறினார். சரி... இவர் என்ன அப்படி... பெரிதாக செய்துவிட்டார் என்கிறீர்களா?...

மலை மீது ஏறி... தெய்வத்தைப் பார்க்க வருகிறவர்கள் மொட்டையடிக்கும் பழக்கம் எப்படி வந்தது என்று உங்களுக்கு விளக்கினேன். ஞாபகம் இருக்கிறதா?...

மலைமக்களில் பூர்வீக குடிகளில் ஒரு பிரிவினரான அம்பட்டையர்களுடன்... பிராமணர்கள் போட்டுக் கொண்ட ஒப்பந்தத்தின் படி... 'உனக்கும் தட்சணை வேண்டும். எனக்கும் தட்சணை வேண்டும்...' என்று பேசிய பேரத்தின் படி... கோயிலுக்கு வருபவர்களுக்கு அம்பட்டையர்கள் மொட்டையடித்து வருமானம் பார்த்தார்கள்.

அந்த மொட்டையடிக்கும் பழக்கத்தை தனது காலத்தில் தீவிரமாக நடைமுறைப்படுத்தினார் பாபாஜி... கோயிலை ப்ராபகண்டா அதாவது பிரபல்யமாக்க வேண்டுமென்றால், இதுபோல ஏதாவது செய்யவேண்டும்... என நினைத்து இப்படிச் செய்தார்.



இந்த காலகட்டங்களில் தான் திருப்பதிக்கு ஜனங்கள் கொத்துக் கொத்தாக வரத் தொடங்கினர். இப்போது... புரட்டாசி மாசம்... திருப்பதிமலையே ஆடிப்போகும் அளவுக்கு பெருங்கூட்டம் கூடுகிறது. இந்த அளவு கூட்டம் அன்று இல்லையென்றாலும்... அந்தக் காலத்துக்கு ஏற்றவாறு... அப்போதைய சூழலுக்கு தக்கவாறு கூட்டம் வரத் தொடங்கியது .

இப்படிப்பட்ட நிலையில்தான்... சில பிராமணர்கள் பாபாஜியிடம் சென்றனர். 'விக்ரஹத்தின் கைகளில் பாம்பு இருக்கிறது. அதை எடுத்துவிட்டால் இன்னும் நன்றாக இருக்கும். அதே போல... அந்த பின்னலையும்... நீக்கி விட்டால்...' இதற்கு... 'பழையபடி தான் இருக்கும். எதையும் மாற்ற முடியாது'... என மறுத்துவிட்டாராம் பாபா. அதென்ன பின்னல்?...

இதற்குப் பின்னால் ஒரு சுவாரஸ்யமான கதை. இதை உங்களிடம் சொல்லக்கூடாது. கூடவே கூடாது என்று தான் நினைத்திருந்தேன். ஆனாலும்... கொஞ்சம் நெருடலுடனேயே சொல்கிறேன்.

பல வருடங்களுக்கு முன்பு...இஸ்ரேல் பாலஸ்தீன நாடுகள் பற்றி தான் உங்களுக்கு தெரியுமே... எப்போதும் ரத்தம் சிந்திக் கொண்டிருக்கும் மோதல் தேசங்கள். இஸ்ரேலியர்களுக்கும், பாலஸ்தீனியர்களுக்கும் யுத்தக் காற்றையே சுவாஸித்துக் கொண்டிருந்தனர். போர்ப்புழுதி படிந்த அந்த நித்யகண்ட பூமியில் உள்ளதுதான் ஜெருசேலம்.

திருப்பதி பற்றிப் பேசிக் கொண்டிருந்தவர் ஏதுக்கடா... ஜெருசேலம் போனார் என நீங்கள் யோசிக்கலாம். அந்த ஜெருசேலத்தில் ஜனித்த ஒரு ஸ்த்ரீக்கு இந்தியக் கோயில்களைப் பற்றி அறிய ரொம்ப அலாதியான ஆசை. அதுவும் திருப்பதி கோயிலை, பெருமாளை பார்க்கவேண்டும் என்கிற ஆசை. அந்த யூத இனத்தைச் சேர்ந்த யுவதிக்கு நம்மூர் இசையரசி எம்.எஸ். அம்மா அவர்களைத் தெரியும்.

அந்த அறிமுகம் மூலமாக திருப்பதி கோயிலுக்கு வந்தார். தனக்கு அவ்வப்போது வரும், சனாதன சமயம் பற்றி சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்வதற்காக வேதம் அறிந்த ஒருவரை தேடினார். அந்த யூத யுவதி.

உடனே... என்னைப் பற்றிய தகவல்களை அவருக்கு யாரோ கொடுக்க... என்னை அணுகினார். சரி என அவருடன் நானும் போனேன், திருப்பதி கோயிலுக்கு. அவர் மிலேச்ச மதத்தை சேர்ந்தவராயிற்றே எப்படி உள்ளே விட்டார்கள்?...

சிற்சில பராக்கிரமங்கள் நிகழ்த்திய பிறகுதான் உள்ளே போன அந்த யூதயுவதி... வேங்கடாஜலபதியை சுற்றிப் பார்க்க வேண்டும் என ஆசைப்பட...'கொஞ்சம்' சிபாரிசுகளுக்குப் பிறகுதான் அதற்கும் அனுமதி கிடைத்தது.

அப்போதுதானப்பா... நானும் பார்த்தேன். திருப்பதி பெருமாளுக்கு அழகான பின்னல். தலையை சீவி சிங்காரித்து பின்னல் செய்து போட்டிருந்தார்கள்.

இப்போது சரியா... அவள் மலைக்காளி தான் என்று நான் சொன்னது... நீ என்ன நேராகப் போய் பார்த்தாயா என்று யாரும் கேட்டுவிடக்கூடாதுஎன்பதற்காகத்தான் ரொம்ப ரொம்ப தயக்கத்துக்குப் பிறகு... அரை மனதோடு இந்த முழு உண்மையையும் உங்களுக்கு சொல்லிவிட்டேன்

வேங்கடாஜலபதி பெருமாளை இப்போதும் எக்கச்சக்கமான பக்தர்கள் அதீத



நம்பிக்கையோடு... வணங்கிச் செல்கிறார்கள். அவர்கள் நினைத்ததெல்லாம் நடந்து 'திருப்பதிக்கு போய் வந்தால் வாழ்வில் திருப்பம் நேருமடா' என்றெல்லாம் போற்றி புகழப்படுகிறது.

ஆனாலும்... திருப்பதியில் என்ன நடக்கிறது?...பணம் படைத்த முக்கியஸ்தர்கள் என்றால்... அவர்களை சற்றே கிட்டத்தில் நின்று பெருமாளை தரிசிக்க வைக்கிறார்கள். மற்றவர்களுக்கு 50 ரூபாய், 100 ரூபாய் என... பெருமாளைப் பார்க்க கட்டணம்.

அதுவும் பணம் இல்லாதவர்கள் என்றால்... 5 மணிநேரம், 8 மணிநேரம், ஏன் 24 மணிநேரம், 2 நாட்கள் என நின்று பார்க்க வேண்டிய கட்டாயம்... அதுவும்... பெருமாளுக்கு 15 அடி, 20 அடி முன்பே பக்தர்களை த 'நிறுத்தி' அப்படியே போய்க் கொண்டே இரு...' என்கிறார்கள். இப்படிவர்த்தகக் கடவுளாக மாறிவிட்ட வேங்கடாஜலபதியின் முந்தைய நிலைமையைதான் நான் உங்களுக்குச் சொன்னேன்.

அதாவது... மலையின் மைந்தர்கள், முதலில் காளியை வழிபட்டவர்கள் இன்று வெளியே உட்கார்ந்து மொட்டையடிக்கிறார்களே... இதை பெரிய பிஸினஸ்ஸாகவும் ஆக்கி விட்டார்களே... அந்த ஆதங்கத்தில்தான்... திருப்பதி பற்றிய இத்தனை திருப்பங்களையும் சொன்னேன். அடுத்து...
அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார்.

**82 - 1.** என்ன பார்த்தோம்...? திருப்பதியில் நான் பார்த்ததைப் பார்த்தோம். வெங்கடாஜலபதி விக்ரகம் குறித்த சர்ச்சைகளைப் பார்த்தோம். இதற்கு மேலும் சில ஆதாரங்களைக் கூட நாம் சேகரிக்க முடியும்.

பொதுவாகவே திருமாலுக்கு நான்கு கைகள். இரண்டு கையில சங்கு சக்கரமும் இன்னும் இரண்டு கைகள் எக்ஸ்ட்ராவாகவும் இருக்கும்.

ஆனால்... திருப்பதி பெருமாளுக்கு இரண்டே இரண்டு கைகள் தான். அந்த இரண்டு கைகளிலும் சங்கு சக்கரம் இல்லை. சங்கு சக்கரம் தோள்பட்டையில்தான் தொற்றிக்கொண்டிருக்கிறது. இந்த கை கணக்கும் சர்ச்சைக்கு கை கொடுக்கிறது.

அடுத்ததாக முக்கியமான இன்னொரு ஆதாரம்... திருப்பதி பெருமாளின் பக்கத்தில் பிராட்டியைப் பார்த்ததுண்டோ? இருக்க மாட்டாரே? ஏன் இல்லை?

மலையை விட்டு கீழே இறங்கி கொஞ்ச தூரம் பயணித்த பின் திருச்சானூர் என்னும் இடத்தில் தான் பத்மாவதித் தாயாரை காட்டுகிறார்கள். ஏன் பக்கத்தில் இல்லை?

பெண்ணுக்குப் பக்கத்தில் ஜோடியாக எப்படிப் பெண்ணை வைக்க முடியும்.

ஆமாம்... ஏற்கெனவே மேலே இருக்கும் விக்ரகமே மலைமக்களின் தாயாராக இருந்ததுதானே? அதனால் தான் மேலே... வெங்கடாஜலபதியானவருக்கு ஜோடியில்லை.

பின் கீழே திருச்சானூரில் பிராட்டி இருக்கிறார் என்ற கருத்துரு பரப்பப்பட்டது. இவைதான் இந்தச் சர்ச்சைக்கு ஆதாரங்கள். நமக்கு... இப்போது வெங்கடாஜலபதி ஆணா, பெண்ணா என்பது முக்கியமில்லை.

இருந்தாலும்... இன்றைக்கு உள்ளூர் குளிர்பானங்களான மாப்பிள்ளை விநாயகர்,



கோலிசோடா போன்றவற்றை வெளிநாட்டு பானங்கள் நசுக்கி நம் தண்ணீரையே பயன்படுத்தி சம்பாதிப்பது போல....**Local People** ஆன மலைமக்களின் காளியை மலையேறியவர்கள் மாற்றிவிட்டார்களே. அந்த உரிமைப் பிரச்சினைக்காகத்தான் இப்படிச் சொன்னேன்.

அதனால்... திருப்பதி பக்தர்கள் என்னை தப்பாக நினைத்துக் கொண்டுவிடாதீர்கள். பக்தி ஒன்றுதான்.'சரி... அடுத்து...?

**82 – 2 to 84.சபரிமலை அய்யப்பன் ரகசியங்கள். இந்து மதம் எங்கே போகிறது?**
ஆண்கடவுள் சிவனுக்கும் ஆண்கடவுள் பெருமாளுக்கும் பிறந்த சபரிமலை அய்யப்பன்.

ஆண்கடவுள் பெருமாள் எடுத்த மோகினி ரூபத்தினால் ஏற்பட்ட பரமசிவனின் அடங்கா காமத்தின் விளைவுதான் சபரிமலை ஐயப்பனாம். ஆக இரு ஆண் கடவுள்களின் புணர்ச்சியால் பிறந்தவர் ஐயப்பன்.

தன் வரமே தன்னை அழிக்க வருவதை நினைத்துப் பயந்து திருமாலிடம் ஓடின பரமசிவன்

சபரிமலைப்பகுதியின் அய்யனார்... பிராமணர்களால் மணிகண்டானாகவும், அய்யப்பனாகவும் மாறினார்

**82- 2.** யப்பப்பா என்ன வேகம்... கொள்ளு தின்ன குதிரைகளா? குதிரையைத் தின்ற குதிரைகளா? இவ்வளவு வேகமாக, முரட்டுத்தனமாக, ஆஹா... சூறைக்காற்று வேகத்தில் சுழற்றியடிக்கின்றார்களே? யார் இவர்கள்...? அந்த மலைக் கிராமத்து மக்கள் பதறினார்கள்.

குதிரையில் உட்கார்ந்து கொண்டு லகானை ஒரு கையிலும், சாட்டையை இன்னொரு கையிலும் கொண்டிருந்த அந்த சிப்பாய்க் கொள்ளையர்கள் சாட்டையால் நர்த்தனம் ஆடினார்கள். ஸ்த்ரிகள் சிதறினார்கள். சின்னச் சின்ன குழந்தைகள் தெறித்தார்கள். ஆண்களில் சிலர் எதிர்த்து நின்றார்கள். ஆனால்... சாட்டைகளின் சமர் தாங்க முடியாமல் அப்படியே உதிர்ந்து போனார்கள். யார் அவர்கள்? அந்தக் கிராமம் எங்கிருக்கிறது? ஏன் அடிக்கிறார்கள்?

மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதியில் இன்றைய மலையாள தேசத்தில் இருக்கும் மலைக்கிராமம் தான் அது. வந்தவர்கள்... அங்கே கொள்ளையடிக்க வந்த மிலேச்ச சிப்பாய்கள். ஒரு காலத்தில் பாண்டிய ராஜாவிடமிருந்த அந்த மலைதேசம்... அப்போதும் அதற்குப் பின்னரும் வளங்கொழித்துக் கிடந்தது. சுற்றிலும் கொள்ளையடித்துக் களித்த அந்தச் சிப்பாய்கள் சற்றே நிமிர்ந்தனர். 5 குன்றுகள் அழகழகாய் இருந்தன. இயற்கை சௌந்தர்யமாக காட்சியளித்தாள்.

மேலே ஏதாவது வைத்திருப்பார்களோ? சிப்பாய்களில் ஒருவன் கேட்டான். 'ம்... இருக்கலாம்' கஷ்டப்பட்டு மேலே ஏறினார்கள்.அங்கே... அவர்கள் கண்ட காட்சி பற்றி தான் இருவேறு கருத்துகள் எதிரொலிக்கின்றன. காந்தமலை என்ற அந்த குன்றை அடைந்த அந்த சிப்பாய்களின் கண்கள் கூசின. சற்றே நெருங்க நெருங்க அவர்களின் இந்த்ரியங்கள் எல்லாம் பிரகாசம்.

அப்படியென்ன அங்கே இருந்தது? தங்கச்சிலை தகதகவென மின்னிய தங்கச் சிலை



மலைவாழ் மக்களின் செழிப்பை உணர்த்தியது அந்தச் சிலை. அடித்தார்கள் கொள்ளை. இது செவி வழிச்செய்தி. இன்னொன்று அச்சிலையை உடைத்து நொறுக்கிவிட்டார்கள் என்ற செய்தி.

இதற்குப் பிறகு, தாங்கள் வழிபட்ட சிலை களவாடப்பட்டதைக் கண்ட மலைமக்கள் இங்கிருந்து காந்த மலையிலிருந்து சற்றே இறங்கி வந்தனர். 5 குன்றுகளுக்கும் நடுப்பட்ட அந்த ஸ்தலத்தில் இன்னொரு சிலையை உருவாக்கினார்கள்.

இயற்கையை வழிபட்டு பின் விலங்கு உருவங்களை வழிபட்ட பின் மனித உருவுக்கு மாறிய மக்களின் கிராமத்து தெய்வமாக விளங்கியது அய்யனார். பெண் காவல் தெய்வம் போல் இது ஆண் காவல் தெய்வம்.

இதேபோலத்தான் அந்த மலைமக்கள் தங்கள் காவல் தெய்வமாக அய்யனாரை அமர வைத்து வழிபட்டுக் கொண்டிருந்தனர். இந்தச் சிலையும் சிலநூறு ஆண்டுகளுக்கு முன்பு மிலேச்ச சிப்பாய்களால் கொள்ளையடிக்கப்பட்டது.

முதலில் பொன் விக்ரகம் இருந்த இடம்தான் பொன்னம்பலம் என அழைக்கப்படுகிறது. பொன்... தங்கம். அம்பலம்-என்றால் கோயில் என்ற அர்த்தத்துடன். அந்த சிலை கொள்ளைபோன பிற்பாடு...வேறொரு சிலையை மலைக்கு நடுவே பாதுகாப்பாய் வைக்கலாம் என்றால்... அதுவும் கொள்ளையடிக்கப்பட்டது. இங்கே இன்னொரு தகவல்...

இரண்டாவதாக நடந்த சம்பவத்தில் சிலை கொள்ளையடிக்கப்படவில்லை. உடைத்து நொறுக்கப்பட்டது என்றும் தகவல்கள்.

இப்படியாக எதிரிகளால் உடைத்து நொறுக்கப்பட்ட அல்லது கொள்ளையடிக்கப்பட்ட அந்த மலைமக்களின் சிலைதான் இன்று ஜோராக ஜொலித்துக் கொண்டிருக்கிறது. தினம் தினம்பூக்களால் பூஜை செய்து... திருவிழாக்களுடன் கொண்டாடப்பட்ட அந்த மலைமக்களின் சிலையை மையமாக வைத்து... இன்று சிலர் வருஷத்துக்கு சில நாட்கள் மட்டுமே அந்தச் சிலையை திறந்து தங்கள் வசம் வழிபாட்டு லகானை வைத்திருக்கிறார்கள். இப்போது அந்தச் சிலை...?
**83.** உடைக்கப்பட்டு கொள்ளையடிக்கப்பட்டு மிலேச்ச சிப்பாய்களால் துஷ்பிரயோகம் பண்ணப்பட்ட அந்தச் சிலை மலை மக்களால் மறுபடியும் செதுக்கி உட்கார்த்தி வைக்கப்பட்டது . சுத்தமாக ஓடிவருகின்ற மலை ஜலத்தை எடுத்துக் குளிப்பாட்டி... சில்லென்று அன்று பூத்த மலை மலர்கள் அன்றே பறித்து தங்கள் அய்யனாருக்கு கட்டி... மென்மை வழிபாடு செய்தனர்.

இன்னொரு பக்கம்... கூர்முனை அஸ்திரங்களால் குத்திக் கிழிக்கப்பட்ட வன விலங்குகளின் மாம்ஸத்தைக் கொண்டு வந்து தங்களது அய்யனாரின் காலடியில் சமர்ப்பித்து வன்மை வழிபாடும் செய்தனர்.இப்படி மென்மை வழிபாடு, வன்மை வழிபாடு இரண்டும் தொடர்ந்து கொண்டிருந்த நிலையில்தான்..

அந்த மலைதேசத்துக்கு இப்போது ஆந்திரப்பிரதேசமாக இருக்கிறதே... அந்தப்பக்கத்திலிருந்து ஒரு கூட்டம் பிழைப்புக்காக தனியாய் நடந்து வந்தது. அப்போதுதான் அந்த அய்யனாரையும் மலை மக்களையும் பார்த்தார்கள்.

அது ராத்திரி நேரம். மலைமக்கள் இரு கையில் தீப்பந்தத்தையும் மறுகையில் மாம்ஸத்தையம் வைத்திருந்தனர். அய்யனாருக்கு எதிரே தீப்பந்தத்தை கொளுத்தி



வைத்துவிட்டு... வேட்டையாடி வந்த உடல்களை அய்யனாருக்கு படைக்க ஆரம்பித்தனர். இன்றைய ஆந்திரப்பிரதேசத்திலிருந்து வந்தேறிய நம்பூதிரிகள் (பிராமணர்கள்) தங்கள் பூணூலை முறுக்கிக்கொண்டு இக்காட்சியைப் பார்த்தனர்.

தீவிர வைதீகர்களான நம்பூதிரிகள்... இந்த அய்யனார் வழிபாட்டை கொஞ்சநாள் கவனித்தபடியே இருந்தவர்கள்... திடீரென ஒருநாள்... புது ஐதீகத்தை கிளப்பினார்கள். யப்பப்பா... இது என்ன அபச்சாரம்?

நெய்யும் தேங்காயும் படைக்கப்பட வேண்டிய இவனுக்கு கொழுப்பு வடியும் மாம்ஸத்தை படைக்கிறீர்களே...? இவன் யார் தெரியுமா உங்களுக்கு? மலைமக்கள் சிலிர்த்துப் போனார்கள். ஆஜானுபாகுவான நம்பூதிரிகளை பார்த்ததுமே இவர்கள் மேல் மலைமக்களுக்கு ஒரு புது மரியாதை பிறந்தது.என்ன சாமி சொல்றீங்க? இது உங்க அய்யனார் இல்லப்பா... எங்க அய்யப்பன். இவன் இங்க வந்த கதை உங்களுக்குத் தெரியாதா?

" தெரியுமே! ரெண்டு மூணு தடவ உடைச்சிட்டாங்க. அப்புறம் நாங்களே கஷ்டப்பட்டு இந்தச்சிலையை செஞ்சோம். காவலுக்கு வச்சிருக்கோம்" -இதுதான் மலைமக்களின் பதில். நம்பூதிரிகளாக வந்த பிராமணர்கள் பதில் சொன்னார்கள். "தப்பு...தப்பு... இவன் எப்படி அங்கே வந்தான்னு பெரிய ஏதீகமே இருக்கு...' என்றபடி ஆரம்பித்தார்கள்.

சிவபெருமான் இருக்கிறாரே... தன்னை நினைத்து யார் தவம் செய்தாலும் அதில் மெச்சி மயங்கி அவர்களுக்கு வரம் கொடுத்துவிடுவார்.

அப்படித்தான் பத்மாசுரன் என்ற ஒர் அசுரன் சிவனை நினைத்து கடுந்தவம் இயற்றினான். வெயில், மழை, பரி, பாம்பு, புலி எதற்கும் பயப்படாமல் அசையாமல் சிவனது நாமத்தையே அசை போட்டான்.வந்தார் சிவன். என்னப்பா வரம் வேண்டும்? "தேவா... நான் யார் தலையில் கை வைத்தாலும் அவர்கள் பஸ்பமாய் எரிந்து இறந்துவிடவேண்டும்...'- கேட்ட வரத்தைப் பற்றி யோசிக்காமல் "தந்தேன் பத்மாசுரா' என சேங்ஷன் பண்ணிவிட்டார் சிவன்.

அன்றிலிருந்து அசுரனுக்கு கை அரித்தது. தன் எதிரிகள், மானிடர்கள் என பிடிக்காதவர்கள் தலை மேலே கை வைத்தான். உடனே அவர்கள் பஸ்பமாகி கருகிக் கிடந்தார்கள். பத்மாசுரனுக்கு விபரீத எண்ணம் உதித்தது. எல்லார் தலையிலும் கை வைத்தாகிவிட்டது. வரம் கொடுத்த சிவன்தான் பாக்கி...அவரிடம் போனான். "என்னப்பா?' என்றார் சிவன்.

"உங்கள் வரத்தின் வலிமையை சோதிக்க வேண்டும் போல இருக்கிறது. அதனால் உங்கள் தலையில் ஒரே ஒரு தடவை கை வைத்து...' சிவனுக்கு புரிந்துவிட்டது. தன் வரமே தன்னை அழிக்க வருவதை நினைத்துப் பயந்து திருமாலிடம் ஓடினார்.

புரிந்துகொண்டார் பெருமாள். இந்த அசுரனை திசை திருப்ப வேண்டுமென்றால் "தசை' யால் தான் முடியும் என்று நினைத்த பெருமாள்... அடுத்த கணமே மோகினியானார். மோகினி...? ஆமாம்... மோகம் முற்றிய நிலையில் சுவைக்க அழைக்கும் கனிகள் போன்ற அழகுடையவள் தான் மோகினி. வாலிப்பான தேகம், வளமையான பாகம், சின்ன இடுப்பு, வண்ண ஆபரணம், கண்டவரை கதிகலங்கச் செய்து காமுற வைக்கும் அழகுப் பதுமையாய் மோகினி நின்றாள்.

பார்த்தான் பத்மாசுரன். பாதத்திலிருந்து கேசம் வரை பாகம் பாகமாய் மோகினியைப்



பார்த்தவன் தன்னை மறந்தான். தன்னையே மறந்துவிட்டபோது... சிவன், தசை, வரம் எல்லாம் அவனுக்கு எப்படி ஞாபகம் வரும்? மோகினிக்குள் மூழ்கிய பத்மாசுரனின் ஞாபகத்திலிருந்து எல்லாம் மறந்து போயின. பார்த்தார் பெருமாள். அதாவது மோகினி, பத்மாசுரனை இன்னும் கவனம் சிதறச் செய்வதற்காக தொடங்கினாள் நாட்டியத்தை.

அடடா... மோகினி சும்மா நின்றாலே சொக்கும் அழகு. இதில் அவள் ஆட அரம்பித்தால்...? கேட்க வேண்டுமா? "பத்மாசுரா என்னைப் போல் நீயும் அடினால் என்னை அடையலாம்? தயாரா?' -

மோகினியின் வார்த்தைகள் பத்மாசுரனை சொர்க்கத்தில் கொண்டு வந்து போட்ட மாதிரி குஷிப்படுத்தின. தான் ஆடிய ஆட்டத்தையெல்லாம் மறந்து மோகினிக்கு எதிராக நின்று ஆடத்தொடங்கினான். மோகினி இடுப்பை வளைத்தாள். அசுரனும் தன் இடுப்பை வளைத்தான். மோகினி தன் வளைக்கரங்களால் அபிநயம் பிடித்தாள். விடவில்லை அசுரனும் அதே அசைவைச் செய்தான். குனிந்து நிமிர்ந்து சிரித்தாள் மோகினி.

தன் காலைத்தூக்கி பட்டுப் பாதங்களைக் காட்டினாள். பத்மாசுரனும் முயன்றான். சுற்றினாள். பின்னல் காற்றில் பறந்தது. மறுபடியும் மோகினி தன் இடுப்பில் கை வைத்தாள். நெஞ்சில் கை வைத்தாள். பின் முகத்தைக் கைகளால் பொத்தி புன்னகைத்தாள். அசுரனும் ஆனந்தத்தில் அப்படியே செய்தான். கடைசியில்... முகத்தில் வைத்திருந்த கையை தலையில் வைத்தாள் மோகினி.எந்தத் தாமதமும் இல்லாமல் பத்மாசுரனும் தன் கைகளை தன் தலையில் எடுத்து வைத்தான்...? -- அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார்

**84.** மோகினியாக வந்த பெருமாளின் சவுந்தர்ய ரூபத்தால் எல்லாவற்றையும் மறந்துபோன பத்மாசரன்... மோகினி போலவே தானும் தன் தலைமேல் கை வைத்தான். அவ்வளவுதான்!

அவன் வாங்கிய வரம் அவனுக்கே ஆபத்தாக முடிந்தது. நான் யார் தலையில் கைவைத்தாலும் அவர்கள் எரிந்து இறந்துவிட வேண்டும் என அவன் வாங்கிய வரத்தின்படி... தன்னைத் தானே எரித்துக் கொண்டான். இதையடுத்து... சிவபெருமான் நிம்மதியடைந்தார்.

மோகினி... தன் அவதாரம் எடுத்தற்கான காரியம் நிறைவேறி விட்டதை கண்டு... முகம் மலர்ச்சியடைந்தாள். இனிமேல்... இந்த பத்மாசுரன் தொல்லை இல்லை... ஆமாம்... அசுரனை சம்ஹாரம் செய்துவிட்டு மோகினியாகவே இருந்த பெருமாளின் அழகு சிவனுக்குள் பிரேமத் தீயை மூட்டியது. மோகினியை மெல்ல நெருங்கினார். 'அந்த அசுரனை சம்ஹாரம் செய்து விட்டீர்கள். ஆனால்... எனக்குள் பிரேமம் எனும் இன்னொரு அசுரன் முளைத்தெழுந்து விஸ்வரூபம் செய்கிறான். அவனை சம்ஹாரம் செய்யவும் உங்கள் தாட்சண்யம் தேவை' சிவனும் மோகினியும் மோகித்தார்கள், பிரேமித்தார்கள்.

இந்த சம்பவத்தால் மோகினி ஒரு தெய்வக் குழந்தை பெற்றெடுக்க... அதுதான் அந்தக் குழந்தைதான்... அந்த தெய்வக் குழந்தை தான்... அய்யப்பன்.

சிவனுக்கும் மோகினிக்கும் (பெருமாளுக்கும்) பிறந்தவன் பிறக்கும் போதே கழுத்தில் மணியுடன் பிறந்ததால்... அவனுக்கு மணிகண்டன் என்றும் பெயர் உண்டு... ... என அய்யப்பன் பிறந்த கதையை நம்பூதிரிகள் மலைவாசிகளிடம் சொல்ல... மலைமக்கள் திகைத்து விட்டார்கள்.

இங்கே சுருக்கமாக நாம் பார்த்ததே இவ்வளவு சுவராஸ்யமாக இருக்கிறதென்றால்...



அன்று... மலைவாசிகளிடம் கதை கதையாய் சொல்லப்பட்ட போது... அவர்கள் எவ்வளவு ஆர்வமாய் கேட்டிருப்பார்கள்.

அப்படியா?... எங்கள் அய்யனார் இப்படியா பிறந்தார்?... என்றார்கள். 'ஆமாம்'... அவர் இன்னும் பல அரிய செயல்கள் செய்திருக்கிறார்.இரண்டு மூர்த்திகளால் அவதரித்தவரான அய்யப்பனை இதுபோல நீங்கள் வழிபடக் கூடாது... அய்யப்பனை வழிபடும் வேலையை எங்களிடம் விட்டு விடுங்கள்.

'நம்பூதிரிகள் சொன்ன புராணக் கதைகளை மெல்ல மெல்ல நம்ப ஆரம்பித்தார்கள் மலைமக்கள் மலைப் பகுதியில் இருந்த தங்கள் அய்யனாரை அருகே சென்று பூக்கள் போட... சில படிகளைக் கட்டி வைத்திருந்தார்கள் மலைவாசிகள்.

இதைப் பார்த்த நம்பூதிரிகள்... 'ஆஹா... இந்த படிகளைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா?' எனக் கேட்க... 'ஏன் தெரியாது... ஏறி வழிபாடு செய்ய வசதியாக இருக்கட்டுமே என நாங்கள் தான் செதுக்கி வைத்தோம்' என்றார்கள் மலைமக்கள்.

அபச்சாரம்... அபச்சாரம்... இவை சாதாரண படிகள் அல்ல... ஒவ்வொரு படியும் ஒவ்வொரு தெய்வ அம்சம் கொண்டவை. 6 திருப்படிகள் சிவாம்சம் வாய்ந்தவை. 7 திருப்படிகள் பெருமாள் அம்சம் கொண்டவை. 5 திருப்படிகள் மணிகண்டனான அய்யப்பன் அம்சங்கள். இந்த 18 படிகளில்... நீங்கள் இனிமேல் சாதாரணமாக ஏறமுடியாது. விரதம் இருந்து... சும்மா இல்லை.

1 மண்டலம் விரதம் இருந்து... மாம்ஸம் விலக்கி... சுத்தமாக... இருந்தால்தான் இங்கே ஏறமுடியும். என்ன புரிகிறதா?... ...அவர்களின் தொனி உயரத்தில் இருந்தது. இப்படியாக கொஞ்சம் கொஞ்சமாய்...நாளடைவில் அந்த மலைப்பகுதியின் அய்யனார்... நம்பூதிரிகளால் மணிகண்டானாகவும், அய்யப்பனாகவும் மாறினார்.

மலைமக்கள் படிகளின் கீழே நின்றனர். பிராமணர்கள் மேலே சென்றனர். மேலே சென்றவர்களின் கண்களில்... ' 'வென ஒரு ஜோதிப் பிரகாசம் ஜொலித்தது. என்ன அது?... ...ஆச்சர்யமாய் கேட்டனர்.

மலைமக்களோ அதைப் பார்த்துச் சிரித்தனர். "நாங்கள் ஆச்சர்யப்படுகிறோம். பயப்படுகிறோம். பெரிதாக எரிகிறதே என்று, நீங்கள் எவ்வித முகபாவமும் காட்டாமல் இருக்கிறீர்களே?..." மறுபடியும் கேட்டார்கள் பிராமண நம்பூதிரிகள். ஓ... அதுவா?... நீங்கள் எங்களை பார்த்த ராத்திரி நேரம்... நாங்கள் தீப்பந்தம் கொளுத்திவைத்திருந்தோமே... கவனித்தீர்களா...?'ஆமாம்...' 'இன்று எங்கள் திருவிழா.

நாங்கள் தீப்பந்தத்தை கொளுத்தி திருவிழா கொண்டாடுகிறோம். அதுதான் அந்த காந்த மலைமேல் ஜொலிக்கிறது' என்றார்கள் மலைவாசிகள். கொஞ்சநாள் ஆனது... மலைமக்களின் தீப்பந்தத் திருவிழாவை தங்களது திருவிழாவாக பயன்படுத்திக் கொள்ள முடிவெடுத்தனர்.

அட அசடுகளே... அது உங்களின் திருவிழா அல்ல... அய்யப்பனுக்கு சபரி என்னும் காட்டுவாசி பக்தை இருந்தாள். அவளுக்கு மோட்சம் தந்தார் அய்யப்பன்... புஷ்ப மரங்கள் பூக்களை இறைக்க... தேவர்கள் எல்லாம் வந்திருந்து வாழ்த்த... ஒரு ஜோதி பெரிய அளவில் தோன்றியது. அதிலே சபரி கலந்து மோட்சம் அடைந்தாள். அந்த மோட்ச ஜோதி அது. நீங்கள் அதன் பிறகு திருவிழாவை ஆரம்பித்திருக்கிறீர்கள். புரிகிறதா?... இந்த மலைப்



பகுதிக்குக் கூட சபரிமலை என்று பெயர்.

இப்படித்தான் பெயர் வந்தது. இப்போது தெரிந்துகொண்டீர்களா?.

பிராமணர்கள் தீப்பந்தத் திருவிழாவுக்கு புது ‘வெளிச்சத்தை’ கொடுத்தார்கள். தை மாதம் மகர நட்சத்திரத்தில்... இன்றும் அந்த காந்த மலைமேலே ஒரு ஜோதி தெரிகிறது. திடுதிப்பென மறைகிறது.இப்போதும் மலைமக்கள் தீப்பந்த திருவிழா கொண்டாடுகிறார்களா?... இல்லையே?... பிறகெப்படி?...

நம்பூதிரிகள் ரகஸ்ய ஏற்பாடு. அங்கே தீமூட்டி வருவார்கள். இதுபற்றி பிரபல்யமான கேரளத் தலைவர்கள் பலருமே சொல்லியிருக்கிறார்கள். மகரஜோதி என்பது மலைமக்கள் ஜோதி. அதை இப்போது நம்பூதிரிகள் தான் ஏற்றிக் கொண்டாடிக் கொண்டிருக்கிறார்கள்.

**85 – 87.காமத்துக்கு அடிபணிந்த முனிவர்கள்.**
காமத்துக்கு முனிவர்கள் விலக்கல்ல.

ரிஷிகள் காமத்தை ஓர் அவஸ்யத்துக்காக அனுபவிக்கிறார்களாம். அதாவது... தங்கள் ஞானத்தின் இன்னொரு பயனுக்காக.. ?

பிராமணன் யுத்தத்துக்குப் போவதில்லை.

பரலோகம் யாருக்குத் தெரியும்?.... அதைப் பார்த்தவர்கள் யார்?... இருந்தால் வரச்சொல்?... அது எப்படியிருக்கும்?...

**85.** தெய்வ வழிபாடுகளைப் பற்றி நிறைய பார்த்தோம். இப்போது தெய்வம் யார் என்ற இன்னொரு தத்துவத்தைப் பற்றியும், தத்துவக்காரர்களையும் பார்க்கப்போகிறோம். தத்துவம் என்றதும் குழம்பிவிடாதீர்கள். இதைப் பார்க்க... கொஞ்சம் பின்னோக்கிச் செல்வோம். வேதம் வகுத்துத் தந்த கர்மாக்கள் பற்றி நிறைய பார்த்தாகிவிட்டது.

வேதத்தை அடுத்து வந்த உபநிஷத்துக்காரர்கள். “நகர்மனா நப்ரஜா தனேனாதியாகேன ஏகேஅமிர்தத்வம் ஆனஸோ... ”கர்மாக்களை தியாகம் செய்துவிடுங்கள். அதாவது விட்டு விடுங்கள் அதுதான் மோட்சம் என்கிறது. இப்படி... வேத, உபநிஷத்துகாக்ரர்களின் கடவுளைப் பற்றிய சிந்தனைகள் வேறு வேறாய் இருக்க... இதன்அடிப்படையில் 6 தத்துவக்காரர்கள் தோன்றி... தத்தமது கொள்கைகளை தத்துவங்களை நிறுவினார்கள்.

அவர்கள் யார்? அவர்கள் சொன்னது என்ன?அதற்கு முன்...வேத சனாதன மதத்தின் பெரிய அதிர்ஷ்டம் அறிவுக்கு முக்கியத்துவம் கொடுத்தது தான். வேதங்களும் வேத வழி விளக்கங்களும் இன்றுவரை நிலைபெற்றிருப்பதற்கு அதன் அடிப்படையில் எடுத்த வியாக்யானங்களும் விளக்க புஸ்தகங்களும்தான்.

இங்கே இன்னொரு விஷயத்தைச் சொல்லியாக வேண்டும். பிராமணன் யுத்தத்துக்குப் போவதில்லை. அவனுக்கு அப்போதிலிருந்தே சிந்திப்பது மட்டும்தான் வேலை. அதனால் தான் இப்படி நிறைய புஸ்தகங்களை எழுதித் தள்ளிக் கொண்டிருந்தான்.

மதத்தை அன்று முதல் இன்றுவரை பிராமணனே கைக் கொண்டிருப்பதால் அவனே Leading பண்ணிக் கொண்டிருப்பதால்.பழையதை வைத்துக்கொண்டு புதியதை கற்பிப்பதில்



பிராமணனுக்கு தனி சிரத்தை. எப்படி என்று கேட்டால் Vedic Prayer முழுக்க 'எனக்கு அறிவைக் கொடு' என்றே நிறைய இடங்களில் கேட்கிறான்.

சரி... அந்த 6 பேர் யாரென்று பார்க்கலாமா? கனாதர், அக்ஷபாதர், வ்யாஸர், கபிலர், பதஞ்சலி, ஜெய்மினி ஆகிய ஆறுபேர் உபதேசித்தவை தர்ஸனங்கள் என அழைக்கப்படுகின்றன. அதாவது தத்துவங்கள். இவர்களில் கனாதர், அக்ஷபாதர் ஆகியோர் உபதேசித்தது நியாயம், வைஷேஷிகம்.

அதாவது தர்க்கம் பண்ணுவது, வாதம் பண்ணுவது, கடவுளைப் பற்றி வாதம் பண்ணுவது, தர்க்கிகம் என்று பெயர் இதற்கு.கபிலர் சாங்க்யம் செய்தார். இதுவும் கடவுளைப் பற்றி கேள்வி கேட்கிறதுதான். பதஞ்சலி, 'யோகம்' என்ற தத்துவம் சொன்னார். நாம் இவர்களில் வ்யாஸரைப் பற்றியும், ஜெய்மினியைப் பற்றியும் தான் விஸ்தாரமாகப் பார்க்கப் போகிறோம்.

அதற்கு முன்...கங்கைக்கரை... பழைய காலத்தின் கங்கைக்கரை... அடர்ந்த காடு... அப்போதெல்லாம் நிறைய முனிவர்கள் அங்கே திரிந்து கொண்டிருப்பார்கள். தவம் செய்வார்கள். இதற்கு முனிவர்கள் மட்டுமன்றி காட்டு வாசம் செய்யும் துண்களும், அதாவது விறகு வெட்டுபவர்கள்... மூலிகை எடுப்பவர்கள். கங்கைக்கரையாதலால் மீன் பிடிக்கும் மீனவர் குலப் பெண்கள் உள்பட மக்கள் வசித்தார்கள். இவர்களுக்கிடையிலே தான் முனிவர்களும் தவம் இயற்றிக் கொண்டிருந்தார்கள்.

'புத்ரேனே... பார்யேனே...' என்ற சொல்லுக்கிணங்க மனையாள் வேண்டாம், மகனும் வேண்டாம் என்று வாழவேண்டும் முனிவர்கள். ஆனால்... அந்தக்கால வாழ்க்கை முறையில் எப்படியென்றால்... தவம் பண்ணிக் கொண்டிருக்கும்போதே பல பெண்கள் கண்ணில் தென்படுவார்கள். காம ஆசையை தூண்டுவார்கள்.

.முனிவர்கள் அவற்றை மறுதலித்து ஆசையை அடக்க வேண்டும். ஆனாலும்... தவத்துக்கு இடையூறாக அந்த ஸ்திரிகள் தேகம் தொந்தரவு செய்து கொண்டிருந்தால் சட்டென அவர்களை நெருங்கித் தொட்டுத் தங்களது காம ஆசையை தீர்த்துக் கொண்டு விடுவார்கள் முனிவர்கள்.அந்த ஸ்திரீகளும் முனிவர்கள் இஷ்டப்பட்டால் மறுக்க முடியாத நிலைமையில் இருப்பவர்கள்.

இப்படிப்பட்ட கங்கைக்கரையிலே தான் பராசரர் எனும் முனிவர் தவம் இயற்றிக்கொண்டிருந்தார். கங்கைக்கரையிலே ஒரு சவுந்தர்ய பொழுதிலே அவர் நடந்து கொண்டிருந்த போதுதான்...

ஈர ஆடைகளுடன் நின்ற ஒரு தேகவனப்பு மிக்க அழகியைப் பார்க்கிறார். இவரது மனம் சட்டென அவள்மேல் தொற்றிக் கொள்கிறது. அவளை நெருங்கினார். பெண்ணே நீ யார்? "மகரிஷி... என் திருநாமம் மச்சகந்தி என்கிற சத்யவதி. நானொரு செம்படவப் பெண். என் அப்பா வலை வீசுவார். மீன் பிடிப்பார். நான் அவற்றைச் சேகரித்து எடுத்துச் செல்வேன்.

அவள் சொல்லிக் கொண்டிருக்கும் போதே பராசரர் அவளை இன்னும் அருகே நெருங்கினார். மச்சகந்தியின் உடலிலிருந்து மீன்வாசம் 'கப்'பென அடித்தது. ஆனால் அவருக்கு அது பெரிதாக தெரியவில்லை. பெண் வாசம் தான் அவருக்கு அதிகமாய் வீசியது. மச்சகந்தியின் தோளைத் தொட்டார் முனிவர்.

'மகரிஷி...' என உடல் சிலிர்த்து இழுத்தாள் மச்சகந்தி. பெண்ணே...! எனக்கு கங்கையைக் கடக்க உதவி செய்வாயா? சம்மதித்தாள் மச்சகந்தி.



ஆற்றைக் கடந்த முனிவரால் ஆசையைக் கடக்க முடியவில்லை. மச்சகந்தியை நெருக்கமாக அணைத்தார். “இது பகவத் முகூர்த்தம். இந்த அருமையான தருணத்தில் என்னோடு நீ சம்மதித்து இணைந்துவிடு. ஒரு மாமுனிவனை எனக்குப் பெற்றெடுத்துக் கொடு.

இது யாருக்கும் தெரியப்போவதில்லை. என்ன?”மச்சகந்தி சம்மதித்தாள். அவளது மேனியில் மீன்வாசம் போய் ஆண்வாசம் வந்தது.

**86.** மீனவப் பெண்ணான மச்சகந்தியின் மேனியில் மேவினார் பராசர். அந்த காட்டுப்பகுதிக்குள் அப்பொழுது ஒரு விசேஷ சிருஷ்டிக்கான விஷயம் நடந்தது. புதர்களுக்கிடையே ஒரு புதிய பூ பூப்பதற்கான பிராக்ரமத்தை (உடலுறவு கொண்டார்) செய்தார் பராசரர்.

“மச்சகந்தி... என் ஆசைக்கு ஒத்தாசை செய்தாய் நன்றி இனி நீ என் புத்ரனை பெற்றெடுத்துக் கொடுத்து விட்டு உன் அப்பாவிடம் செல்லலாம். அவருக்கு எதுவும் தெரியாது... நீ கன்னியாகவே இருப்பாய்.”

மச்சகந்தி அடுத்த கொஞ்ச நேரத்திலே ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். நீங்கள் ஆச்சரியப்படலாம். என்னடா இது...? மழை பெய்தவுடன் மரம் எழுந்து வந்துவிடுகிற மாதிரி இருக்கிறதே பராசரரோடு தேகசம்பந்தம் கொண்டவள் திடீரென பிள்ளை பெறுகிறாளா? அப்படியும் கன்னியாகவே இருக்கிறாளா?

ஆமாம்... ‘ரிஷி கர்ப்பம் ராத்தங்காது’ என்பார்கள். அதாவது ரிஷிகள் தங்கள் காமத்தை ஓர் அவஸ்யத்துக்காக அனுபவிக்கிறார்கள். அதாவது... தங்கள் ஞானத்தின் இன்னொரு பயனுக்காக. பராசரரும் மச்சகந்தியும் இணைந்த பிறகு பிறந்தது ஒரு குழந்தை. அவன் வளர்ந்தான்.

குழந்தை பிறந்தது யாருக்கும் தெரியாது என்று பராசர் சொன்னார் இல்லையா? ஆனால்... இந்தப் பையன் ஒரு வலையச்சிக்கு பிறந்தவன் என்பது அந்த காட்டில் உள்ள மற்றவர்களுக்கெல்லாம் தெரிந்து விட்டது. மச்சகந்தி குழந்தையை கொடுத் போய்விட்டாள். ஆனால் அப்பகுயில் உள்ள மற்ற ரிஷிகள், பிராமணர்கள் எல்லாரும்...

‘ ... ஒரு மீனவத்தி பெற்றெடுத்த பிள்ளையை நாங்கள் ஏற்றுக் கொள்ளமாட்டோம். இவனை அவளிடமே கொண்டு விட்டுவிடுங்கள். இவனுக்கு சாத்திரம் சொல்லித் தரக்கூடாது. சம்ப்ரதாயம் சொல்லித் தரக்கூடாது” கிட்டத்தட்ட அந்தப் பையனை பிராமணர்கள் பகிஷ்காரமே செய்துவிட்டார்கள். அதாவது புறக்கணித்து விட்டார்கள்.

ஆனால் அந்தப் பையன் வளர்ந்தான். சாஸ்திரம் கற்றான். சம்ப்ரதாயம் கற்றான். தனக்கு எதையெல்லாம் கற்றுக் கொடுக்கக்கூடாது என பிராமணர்கள் மறுத்தார்களோ அதையெல்லாம் கற்றான் அப்பையன். வளர்ந்தான் ஞானம் வளர்ந்தது. தாடி வளர்ந்தது. ரிஷியானார். இன்றைக்கும் பிராமணர்கள் கொண்டாடுகிறார்களே வேதம் அதை வகைப்படுத்தி தொகுத்தார். இன்றைக்கும் ஆயிரமாயிரம் தெய்வக் கதைகளை அள்ளிவிட்டுக் கொண்டிருக்கிறதே அந்த 18 புராணங்களைத் தொகுத்தார்.

இன்றைக்கும் பிராமணர்களில் முதுபெரும் புனித நூலாக முழங்கப்படுகிறதே ‘ப்ரம்மசூத்ரம்’ அதை எழுதினார். அவர்தான் வ்யாஸர் வேதவ்யாஸர். வ்யாஸர் பிறந்த



சம்பவங்கள் கதை என நாம் கருதிக்கொள்ளலாம்.

ஆனால், அந்தக் கதையில் ஒரு செய்தியைப் பாருங்கள். மீனவத்திக்குப் பிறந்தான் என்பதற்காக அவரை ஒதுக்கி வைத்த பிராமணர்கள்... பிறகு தங்கள் சமயத்துக்கே வ்யாஸரை பெரும் வரமாக ஏற்றுக் கொண்டார்கள். இந்த இடத்தில் ஓர் சின்ன சம்பவம் ஞாபகம் வருகிறது. கங்கை நதிக்கரையில் காட்டுப்பகுதியிலிருந்து அப்படியே காரைக்குடி பக்கம் வாருங்களேன்.

காரைக்குடியில் சனாதானிகள் கூட்டம். நாம் பேசிக் கொண்டிருந்தேன் நிறைய கூட்டம் கூடியிருந்து. அப்போது வியாஸரைப் பற்றியும் பேசினேன். அந்த வேளையில்... அங்கே வந்தார் ராமசாமி நாயக்கர். நான் வ்யாஸரைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்ட ராமசாமி நாயக்கர், 'அய்யா..வ்யாஸர் மீனவப் பெண்ணுக்கு பிறந்தவரா? என்றார்.

'ஆமாம்' என்றேன்' அவர் பிறந்த போது அவரை பிராமணர்களெல்லாம் ஒதுக்கி வச்சாங்களாமே?...'ஆமாம்' அப்புறம் அவர் படைச்ச விஷயங்களையும் ஒதுக்கி வைக்கலாமே...? கூட்டம் நாயக்கர் பக்கம் திருப்பிப் பார்த்தது.

சரி... மறுபடியும் கங்கைக்கரையின் காட்டுப் பகுதிக்கே திரும்பபோவோம். வ்யாஸர் தனது ப்ரம்ம சூத்திரத்தில் கடவுளைப் பற்றி நான் முன்பு கூறிய தத்துவக்காரர்களை கண்டித்திருக்கிறார்.

சரி... வ்யாஸர் வ்யாக்யானம் என்ன? "நீங்களெல்லாம் ப்ரம்மத்தை, அதாவது கடவுளை காரணத்தின் அடிப்படையில் அணுகுகிறீர்கள் (based on reason) ஆனால் அவர் அறிவுக்கு அப்பாற்பட்டவர் தர்க்கங்களைத் தாண்டியவர்.
உலகத்தைக் கடவுள்தான் படைத்தார். அவர்தான் காப்பாற்றுகிறார். அவரை அறிவு, காரணம், தாக்கம் போன்றவற்றின் அடிப்படையில் அணுகாதீர்கள்.

கடவுள் காரணங்களை கடந்தவன். God is above logic..."...இதுதான் வ்யாஸரின் வ்யாக்யானத்தின் எளிய வடிவம். வ்யாஸர் புராணங்களைத் தொகுத்தவர். வேதத்தை புராண வடிவத்தின் அடிப்படையில் கதைகளாக சொல்பவர். அதனால் வேதம் சொன்னபடி கடவுளை 'Poetic' ஆக அணுகினார்.

அதாவது கவித்துவமான கதாம்சமாக.சரி... இப்படிப்பட்ட வ்யாஸருக்கு ஒரு சிஷ்யர் இருந்தார். அவரை ...Naturalist என்று சொல்லலாம். அதாவது இயற்கைவாதி. அவர்தான் ஜெய்மினி, வ்யாஸரின் சிஷ்யரான ஜெய்மினி, வ்யாஸரோடு நிகழ்த்திய வாதங்கள் சுவராஸ்யமானவை சிந்தனாசக்தியைத் தூண்டுபவை.

ஒருமுறை... காட்டில் வ்யாஸர் ஜெய்மினியோடு பேசிக் கொண்டிருக்கும்போது தனது வழக்கமான அறிவுரையை வழங்கினார். 'சிஷ்யா இந்த செடியை, மரத்தை...மண்ணை, உன்னை, என்னைப் படைத்தது கடவுள் அவர்தான் நம்மை படைத்துக் காத்து பரிபாலித்துக் கொண்டிருக்கிறார் என வ்யாஸர் தொடர்ந்து பேசிக்கொண்டிருக்க...

ஜெய்மினி... ஒரு செடியைக் கையில் பிடித்தவாறே...'ஸ்வாமி கூப்பிடுங்கள் அவனை' என்றார். 'யாரையப்பா?' அதுதான் நீங்கள் சொன்ன கடவுளை' ஜெய்மினியின் வினா வ்யாஸரை...

**87.** "ஸ்வாமி அவனை இங்கே கூட்டி வாருங்களேன்...? யாரையப்பா?...அவன் தான்



உலகத்தையெல்லாம் ஒருத்தனே பொசுக்கென படைத்து முடித்து விட்டான் என்கிறீர்களே?... அந்த கடவுளைத்தான். ஜெய்மினியின் வினா வ்யாஸரை துளைத்துக் கொண்டு சென்றது.

விழிகளை சுருக்கி இமைத்த வ்யாஸர் 'அவன் பரலோகத்தில் இருக்கிறானப்பா... அவனை இங்கே இருந்து பார்க்க முடியாது...' என்கிறார் வ்யாஸர் ஜெய்மினி சிரிக்கிறார் "அது எப்படி இருக்கும்?"

இங்கே யாகத்தில் புகை அதிகமாக வந்தால் புகைமூட்டமாக இருக்குமே... அதுபோல இருக்கும்..."நீங்கள் பார்த்திருக்கிறீர்கள்... பரலோகம் உங்களுக்குத் தெரியுமா?... அப்படி தெரிந்தால் காட்டுங்கள் இல்லையென்றால் தெரிந்தவர்களை கூப்பிடுங்கள். அடியேன் பார்த்து பரவசப்பட்டுக் கொள்கிறேன்...?

"வ்யாஸர் பதிலின்றி மௌனித்தபோது...ஜெய்மினி சொன்னார். "கோஹி தஸ்வேத யத்ய முஷ்பின் லோகஅஸ்தீ வாரவேதீ..."யஜுர் வேதத்தில் வருகிற மந்த்ரம் இது.

பரலோகம் யாருக்குத் தெரியும்?.... அதைப் பார்த்தவர்கள் யார்?... இருந்தால் வரச்சொல்?... அது எப்படியிருக்கும்?...என கேள்விகளைச் சொடுக்குகிறது அந்த யஜுர் வேத மந்த்ரம். இந்த வேதக் கேள்விகளுக்காவது விடை வைத்திருக்கிறீர்களா?.......ஜெய்மினி கேட்டார்.

வ்யாஸரோ... "அவன் பரலோகத்தில் தான் இருக்கிறான்... உனக்கும் எனக்கும் இந்த செடிக்கும் கொடிக்கும் உயிர் கொடுத்தவன்... "ஜெய்மினி... இதைக் கேட்டதும் டக்கென ஒரு கொடியை பிடித்தார்.

இந்தக் கொடிக்கும் பிராணன் உள்ளது வளர்கிறது அசைகிறது. பூக்கிறது, காய் கொடுக்கிறது, கனி கொடுக்கிறது. இதற்கு இத்தனையும்.. கொடுப்பது தண்ணீர். அந்த தண்ணீர் தான் கொடிக்கு சோறு....

இப்போது... இந்த கொடியை வாழவைப்பது கடவுள் என்றால்... தண்ணீர் தான் கடவுளா?... அல்லது கடவுள் தண்ணீர் தானா?...அந்தக் கொடிக்கு உள்சக்தி ஒன்று உண்டு.... அதற்கொரு வளரும் சக்தி உண்டு. அது தண்ணீரால் கிடைக்கிறது. அதை ஏன் கடவுள் என்கிறாய்? "இது தான் ஜெய்மினியின் மீமாம்ஸ அதாவது கடவுளைப் பற்றிய விசாரணை.

ஜெய்மினி இப்படி செடிகொடிகளை காட்டி விளக்கம் கொடுத்ததற்கு பலப் பலப் பல யுகங்கள் கழித்து தான் தாவரங்களுக்கு உயிர் உண்டு என்று விஞ்ஞான ரீதியாக கருத்தும் உறுதிப்பட்டது.

ஜெய்மினி சொல்லும் சோறென்றால் வயிறு முட்ட சாப்பிட்டு விட்டு வெற்றிலை பாக்கு போட்டுக் கொண்டு ஏப்பம் விடுவதல்ல... "ஏதோ வானஸ்ய மஹிமாயத அன்னேனு அதிலோகதீ..."உயிர் சக்தியை கொடுக்கும் உணவுப் பொருள்தான் கடவுள். காலையில் நாம் சாப்பிடுகிறோம். மதியம் கடக்கும் வேளையிலே வயிறு பசிக்கிறதே... ஏன்?... அந்த உணவு கொடுத்த சக்தி தீர்ந்து போய் விடுகிறது. அடுத்தபடி... உயிரும் உடலும் இயக்குவதற்கு சக்தி இல்லை. அதற்கு அன்னம்தான் கடவுள். The food is God

ஜெய்மினி இப்படியாக இயற்கையை முதன்மைப்படுத்தினார். நம் கர்மாக்களை நாம் செய்து கொண்டிருந்தால்... கடவுளுக்கு என்ன அவஸ்யம்...? என்பது தான் ஜெய்மினியின் கேள்வி. இதுதான் வ்யாஸர்...ஜெய்மினி இடையே நடந்த உரையாடல்.



வ்யாஸர் பிரம்மசூத்திரம் எனும் நூலை இயற்றினார் என்று பார்த்தோம். அதற்கு உத்தர மீமாம்ஸா என்று பெயர். இதனை ராமானுஜர் சங்கரர் போன்றோர் பாஷ்யப் படுத்தியுள்ளார்கள். அதாவது உரையிட்டுள்ளார்கள்.

ஆனால்... ஜெய்மினி பூர்வ மீமாம்ஸ எனும் சித்தாந்த்தை கொடுத்தார். மீமாம்ஸா என்றால் **enquiry** விசராணை என்று பாத்தோம். வ்யாஸரின் மீமாம்ஸாவை தொட்ட சிலர் ஜெய்மினியின் 'மீமாமம்ஸா' வை தொடவில்லை.

ஏனென்றால் ஜெய்மினியை நாஸ்திகர் என்று அழைத்தவர்கள் கூட அன்று உண்டு. இங்கே ஒரு வேடிக்கை என்னவென்று கேட்டால்... அதுவும் வேதனையான வேடிக்கை.... கடவுளை பற்றிய **enquiry** விசாரணையில் ஈடுபட்ட ஜெய்மினியை பின்பற்றுவதாகச் சொல்லிக் கொண்டு... இன்னும் ஜெய்மினி கோத்ரம் என்று இருக்கிறார்கள்.

அவர்களோ... ஜெய்மினிக்கு எதிர்மாறாக இருக்கிறார்கள்.சரி... வ்யாஸரை பார்த்தோம். ஜெய்மினியைப் பார்த்தோம்.

இப்போது இன்னொரு புதிய தரிசனம் தலை முழுவதும் கிளி மாதிரி இருக்கிறது. உடல் முழுவதும் மனுஷன் மாதிரி இருக்கிறது. இந்த வித்தியாசமான பிறவி யார்...?அவர் எப்படி இப்படிப் பிறந்தார்.?...அவர் அந்த ராஜாவோடு அப்படி என்னதான் பேசிக் கொண்டிருக்கிறார்?... கேட்போமா?... இவருக்கும் வ்யாஸருக்கும் சம்பந்தம் உண்டு...

**88.கர்ப்பமாகி குட்டிபோட்ட கிளி ? நம்புங்கள்.‼**

கிளி கர்ப்பமானால் முட்டை போட்டுகுஞ்சு பொரிக்கும். அது இன்னொரு அழகான கிளியாகும். ஆனால்... இந்த கிளி அப்படி அல்ல..
குட்டிபோட்டது. புராணம் அப்படித்தான் சொல்கிறது.

ரிஷிகள் காம சுகத்தை அவஸ்யத்துக்காக அனுபவிக்கிறார்கள் அப்படி காம சுகத்தை அனுபவிக்காத சந்தர்ப்பங்களில் அவர்களது 'உயிர்த் திரவியம்' வெளியாவது இயற்கைத்தானே.

என்னடா இவ்வளவு வயதானவர் இப்படி கதை சொல்கிறாரே என வருத்தப்பட வேண்டாம். புராணங்களை புரட்டிப் போட்டு ஆராய்ந்து பார்த்தால் இப்படிப்பட்ட காட்சிகள் சர்வ சாதாரணமாக இருக்கின்றன.
இந்து மதம் எங்கே போகிறது ?

**88.** யாரது?... கிளி போன்ற தலை உடம்பெல்லாம் மனிதன் போன்ற தோற்றம். அதுவும் நாம் பார்த்த வ்யாஸருக்கு சம்பந்தம் உள்ளவரா?... வ்யாஸர் பிறந்த வரலாற்றை பார்த்தோம். வித்தியாசமாக இருந்தது. அதாவது... பராசரர் மச்சகந்தி என்னும் மீனவப் பெண்ணோடு கூடிக் குலவ... திடுதிப்பென பிறந்தவர் தான் வ்யாஸர்.

சரி... வ்யாஸருக்குப் பிறந்த ஒருவர் எப்படி பிறந்தார்?... இதையும் புராணங்கள் சொல்லுகின்றன?... என்னடா இவ்வளவு வயதானவர் இப்படி கதை சொல்கிறாரே என வருத்தப்பட வேண்டாம். புராணங்களை புரட்டிப் போட்டு ஆராய்ந்து பார்த்தால் இப்படிப்பட்ட காட்சிகள் சர்வ சாதாரணமாக இருக்கின்றன. சரி... Come to the subject வ்யாஸருக்கு ஒருவர் பிறந்தார். அவர் எப்படிப் பிறந்தார்.



நான் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். ரிஷிகள் காம்ய சுகத்தை அவஸ்யத்துக்காக அனுபவிக்கிறார்கள் என்று. அப்படி காம்ய சுகத்தை அனுபவிக்காத சந்தர்ப்பங்களில் அவர்களது ரேதஸ்... அதாவது ‘உயிர்த் திரவியம்’ வெளியாவது இயற்கைத்தானே.

அப்படியோர் பொழுது வ்யாஸரிடமிருந்து வெளிப்பட்டு விட்டது ரேதஸ். சிந்தி கிடந்த அந்த ‘ரேதஸ்’ஸை ஒரு கிளி என்ன பண்ணியது. கொத்தித் தின்றுவிட்டது.

கிளியாக வந்த அழகியுடன் கூடினார் என்றும் சொல்வார்கள். அதை கொத்தித் தின்ற கிளி சும்மாயிருக்குமா?... அந்தக் கிளி கர்ப்பமாகி விட்டதாம். கிளி கர்ப்பமானால் என்ன செய்யும்? முட்டை போடும். குஞ்சு பொரிக்கும். அது இன்னொரு அழகான கிளியாகும். ஆனால்... இந்த கிளி அப்படி அல்ல. வ்யாஸரின் வீர்யம் சாப்பிட்ட கிளியல்லவா. அதனா கர்ப்பமான கிளி... ஒரு குட்டியைப் போட்டது. கிளி குட்டி போட்டதா?... புராணம் அப்படித்தான் சொல்கிறது.

அந்த கிளிக்குட்டி(!) எப்படி இருந்ததாம்?... தலையெல்லாம் கிளிபோல இருந்ததாம். உடல் மட்டும் மனுஷ்ய பாவணையாய் அமைந்ததாம். என்னடா இது புதுக் கொடுமையாக இருக்கிறதே என்கிறீர்களா?... இது பழம்பெரும் ‘கொடுமை’.

இருங்கள். கதை இன்னும் இருக்கிறது. அந்த ‘கிளிக்குட்டி’ வ்யாஸருக்கும் கிளிக்கும் பிறந்தது. இந்தத் தகவல் வ்யாஸருக்கு தெரிந்தது. உடனே அவர்... ‘டேய் பயலே’ என தன் குடிலுக்கு வெளியே வந்து குரல் கொடுக்க... அதற்குள் அந்த கிளிப்பயல் பறந்து விட்டான்.

வ்யாஸர் குரல் கேட்டு மரங்களெல்லாம் திரும்பிப் பார்த்ததாம். சரி... அந்த கிளிப் பிள்ளைக்கு என்ன பெயர்?...சுகஹா... என்றால் வடமொழியில் கிளி என்று பெயர். அதனால்... அவருக்கு ‘சுகர்’ என்று பெயர். சுகப்பிரம்மம் என்றும் சொல்லுவார்கள். ஏனென்றால்... வ்யாஸருக்கு வேதங்களை பிரித்து வகைப்படுத்தி தொகுத்த பின்பும், உபநிஷத்துக்கு வ்யாக்யானமாக ப்ரம்ம சூத்திரம் பண்ணியபோதும்... 18 புராணங்களை தொகுத்தபோதும் திருப்தி இல்லை.

அதனால்தான் ‘பாகவதம்’ என்று மகா காவ்யத்தை படைத்தார்.
பாகவதம் என்றால் கிருஷ்ண பரமாத்மாவின் முழு வாழ்க்கை வரலாற்று தகவல்கள் உள்பட பல பகவத் விஷயங்களை சொல்வது. இதைக் கேட்டாலோ, உபதேசம் பெற்றாலோ அவர்கள் மோட்சம் பெற்று பகவான் நாராயணனின் வைகுண்டத்தை அடைந்து விடலாம் என்பது நம்பிக்கை.

இந்தக் கிளிக் கதையை...“எம்ப்ரவ் விஷந்தம்அனுபேதம் உபதே ஹிருத்யம்தனவ பாயஹைவிரக காதரஹ ஆஹிஜாகாதேதீ தன்மயேதய தரவோ...” என்கிற பாகவத பாராயண ஸ்லோகமே சொல்கிறது.

சரி... வ்யாஸர் இயற்றிய இந்த பாகவதத்தை அவரை விட அறிவாளியான ஞானத்தில் சிறந்தவரான சுகர்... பரீட்சித்து என்னும் ராஜாவுக்கு உபதேசிக்கின்றார்.

அதுவும் ஒரே வாரத்தில் பரீட்சித்து ராஜா பாகவத உபதேசம் பெற்றால்தான் அவன் மோட்சம் பெறமுடியும் என்ற நிலைமை. அடித்துப் பிடித்து... உருட்டி விரட்டி... இன்று பரிட்சைக்கு ‘போர்ஷன்’ முடிக்கிறார்களே அதுபோல பரீட்சித்து ராஜாவுக்கு பாகவதக் உபதேசித்து முடித்தாயிற்று. அவன் சாபம் நீங்கி மோட்சம் பெற்றான்.



இங்கேதான் ஜெய்மினி கேட்ட கேள்விக்கு நாம் விடை தேடப் போகிறோம். அதற்காகத்தான் இந்த சுகர் கதையை உங்களுக்குச் சொன்னேன்.

மோட்சம், பெற்று வைகுண்டம் செல்கிறான் என்று சொல்கிறார்களே?... மோட்சம் என்றால் என்ன?... வைகுண்ட லோகம் எப்படி இருக்கும்?...இதற்கான விடையை நாம் உபநிஷத்துகளில் பார்க்கலாம். இங்கு போல் அங்கும் ஸகல போகங்களும் உண்டு என்கிறது உபநிஷது.

அப்படியென்றால்... வைகுண்ட லோகத்தில் வீடுகள் உண்டா?... மாடுகள், கிளிகள், மான்கள் உண்டா?... அங்கு வஸிப்பவர்கள் மனைவியுடன் இருக்கிறார்களா?... இங்கு போல் அங் காம ஸுகத்தை அனுபவிக்கிறார்களா?... மகப்பேறுகளைப் பெறுகிறார்களா? ... அங்கேயும் திருடர்கள் இருப்பார்களா?... ஸந்யாஸிகள் இருப்பார்களா?... ஒரு புருஷன் மற்றொருவர் மனைவியை அங்கும் விரும்புவானா?... இந்தக் கேள்விகளை நான் கேட்கவில்லை. பின்?.

**89உடலுறவுக்கு தட்டுபாடில்லாத சுவர்க்கம். பகுதி 89.**

உனக்கு இப்போது ஒரு தேவடியாள் வேண்டுமா? குடும்பஸ்திரீ வேண்டுமா? அதாவது இந்த லோகத்தில் நீ விரும்பிய பெண்கள் அல்லது அந்த லோகத்தில் நீ விரும்புகிற பெண்கள் யார் வேண்டும் உனக்கு..? எவள் கூட வேண்டுமானாலும் சுற்றலாம்.

இங்கு பெண்களின் இன்பம் சிற்றின்பம். பரலோகத்தில் பேரின்பமாக மாறும்

விரஜா என்னும் நதி மிக சன்னமாக சீராக ஜலஜலவென ஓடிக் கொண்டிருக்கிறது. இந்த நதியைத் தாண்டி அபராஜிதை என்னும் ஒரு பட்டணம் இருக்கிறதாம். பட்டணம் என்றால் அப்பேர்ப்பட்ட பட்டணம் அதாவது எங்கு பார்த்தாலும் ஆண்கள், பெண்கள் ரொம்ப சந்தோஷமா கூடிக் குலவி களித்துக் கொண்டிருக்கிறார்கள்.

மாட மாளிகைகள், கூட கோபுரங்கள் நிறைந்த இங்கே.. ஆயிரங்கால் மண்டபம் ஒன்று உள்ளதாம் அந்த மண்டபத்திலும் ஒரே ஆனந்த மயம்தான். அந்த ஆயிரங்கால் மண்டபத்தில் திவ்யபர்யங்கம் என்னும் உயர்ந்த கட்டில் ஒன்று இருக்கிறது அதிலேதான்.. பாம்புப் படுக்கையிலே பெருமாள் இருக்கிறார்.

பக்கத்திலே அங்குள்ளவன் தனது விருப்பத்துக்கு தக்கபடி பித்ரு லோகம், ஸ்த்ரி லோகம் முதலியவற்றை படைத்துக் கொள்கிறான் சுகத்தையும் அனுபவித்துக் கொள்கிறான். இதெல்லாம் என்ன? இதுதான் மோட்சமாம்.மோட்ச லோகத்தில் குடும்பம் குட்டிகள் உண்டா? சன்னியாசிகள் உண்டா? ஒருவனுடைய பத்னியை இன்னொருவன் அபகரிப்பானா?



என்றெல்லாம் கேள்விகளைப் போன அத்தியாயத்தில் பார்த்திருப்பீர்கள்.

இதெல்லாம் நான் எழுப்பிய கேள்விகள் இல்லை.. மும்மதஸாரம் என்னும் புத்தகத்தில் சக்கரவர்த்தி ஆச்சாரியார் எழுப்பிய கேள்விகள். பின் அவரே விளக்குகிறார் பாருங்கள்.மோட்ச ஸ்வருபம் என்ற தலைப்பில் அவர் எழுதியிருக்கிறார்.

இவர்கள் இணைந்துள்ள மோட்சம் எல்லோராலும் போற்றத் தகுந்தது ஜாதி, வர்ணம், மதம், பாகுபாடு இதில் கிடையாது எல்லாரும் ஏக ஜாதியைச் சேர்ந்தவர்கள் அங்கு போகத்திலும் வேற்றுமை இல்லைஅனைவருக்கும் சமமான போகம் இதைத்தான் ஸாயுஜ்யம் என்பர் எல்லா வகைகளும் எல்லாருக்கும் சமமாகப் பரிமாறப்படுகின்றன என்றிருந்தால் தான் அது ஸாயுஜ்யம்.

குயில், கிளி, கருடன், கஜானன் (யானை) செடி, கொடி, மரம் முதலியவைகளும் அங்கு வைகுண்ட லோகத்தில் உள்ளனவே.. இவர்களும் ஜீவராசியை சேர்ந்தவர்கள்தானே, இதைக் கொண்டு வேற்றுமை ஏற்பட்டுவிடாதா என்கிற அய்யம் சிலருக்கு வரலாம்.

இதற்குப் பதில்.. இவர்கள் அனைவரும் அங்குள்ள நித்ய ஸ்திரீகள் ஆண், பெண் என்கிற வேறுபாடு அங்கிருந்தாலும்.. எவ்வகையிலும் அவர்க குறைவில்லை. கிளி, குயில் முதலியவைகளும் தத்தம் விருப்பப்படி பல உடல்களை எடுத்துக்கொண்டு பணிவிடை செய்யலாம்.

ஒரு முக்தாத்மா பல உடல்களை எடுக்கும்போது ஆண், பெண், குழந்தை முதலிய உடல்களை எடுத்துக்கொண்டு குடும்பமாக அடிமை செய்யலாம் அல்லது மற்றொரு முக்தாத்மாவை உதவியாக வைத்துக்கொண்டு அதற்குத் தக்கபடி இரு முக்தர்களும் பல உடல்களை எடுத்து குடும்ப தாஸ்யம் செய்யலாம்.

இவ்வாறு குடும்ப தாஸ்யம் செய்யும் போது.. ஆண் உருவமும், பெண் உருவமும் உடையவர்களாக இருந்து கொண்டு விளையாடினால் காமம் என்கிற இன்பம் இவர்களுக்கு வரும். ஆகையால், அது மோட்ச சொரூபத்துக்கு விரோதமா என்று சந்தேகப்பட வேண்டாம். இவர்களது எல்லா ரமணமும் அதாவது விளையாட்டும் பகவானுடையதே..

கிருஷ்ணன் கோபி ஸ்திரிகளுடன் ஏன் காம போகத்தை அனுபவிக்க வேண்டும்?

சிறீரங்கநாதன் தனது ஆனந்த நாடிகளைக் கொண்டு சிறீ ரங்கநாயகியுடன்



ஆனந்தமாகக் கலவியை அனுபவிக்கிறான் என பாரசரபட்டர் சிறீகுணாத்ர கோசத்தில் எப்படி சாதித்தார்?

*(**படிக்க** பகுதி 51. நள்ளிரவிலும் நாயகியை சேரவேண்டும் என்ற ஆசை கடவுள் ரங்கநாதனுக்கு வந்தது. உடனே தன் ஆண்குறியை மட்டும் ரங்கநாயகி சன்னதிக்குள் அனுப்பி இச்சையை தீர்த்துக்கொண்டு விடுகிறார் )*

இவையெல்லாம் நாம் யோசித்துப் பார்த்தால்.. இங்கு போல் அங்கும் சகல போகங்களும் உள்ளன. அங்குள்ளவர்கள் நித்ய சுத்தர்களாக இருந்தாலும் லீலையாக ஜலக்ரீடை முதலியவைகளை செய்கிறார்கள்'எல்லாம் பகவான் செயல்' என விளக்கமாக சொல்லிக் கொண்டே போகிறார் சக்கரவர்த்தி ஆச்சாரியார்.

இன்னும் நாம் உபநிஷது வாக்கியங்களின் மூலமாகவே அங்கே என்ன நடக்கிறது என்பதைப் பார்ப்போமா? "சஹ யதீ பிதுர் லோககாமோ பவதீ...சங்கல்பா தேவாஸ்யபிதர உபதிஷ்ட ந்தே..."

உனக்கு என்ன வேண்டும்? உன் அம்மாவை பார்க்கவேண்டுமா? படைத்துக் கொள் உன் அப்பாவைப் பார்க்கவேண்டுமா? படைத்துக் கொள் உன் புத்திரனை பார்க்கவேண்டுமா? படைத்துக் கொள்!

சரி.. குடும்ப உறவுகள் வெறுத்துப் போய் விட்டது உனக்கு இப்போது ஒரு பரஸ்த்ரீ வேண்டுமா? அதாவது இந்த லோகத்தில் நீ விரும்பிய பெண்கள் அல்லது அந்த லோகத்தில் நீ விரும்புகிற பெண்கள் யார் வேண்டும் உனக்கு.. நீ நினைத்தால் உன் முன்னே வந்து நிற்பாள் உன்னைப் பார்த்து சிரிப்பாள் நெருங்குவாள் அணைப்பாள் ஆனந்தம் தருவாள். இங்கு பெண்களின் இன்பம் சிற்றின்பம் அங்கே பேரின்பமாக மாறும். இந்த லோகத்தின் ஆனந்தங்கள் அல்பம் அங்கே பகவத் ஆனந்தம்.

இது Nature அது Super Nature. "யஷனன்னே க்ரீடன்னேரமமானாஹா ஸ்த்ரீபிர்வாயானிர்வா..."
என்று போகிற உபநிஷது.

இங்கு நீ மோட்டாரில் சுற்றுவது போல அங்கேயும் ஜாலியாக சுற்றலாம் அதுவும் எவள் கூட வேண்டுமானாலும் சுற்றலாம்.. அவளை நீயே படைத்துக் கொண்டு என்கிறது. அப்படியென்றால், அங்கே பகவானின் வேலை என்ன?

**90. 91-1பெண்களுக்கு மோட்சம் கிடையாது. கடவுளுக்கு வேலை என்ன?.**



மோட்சம் பெறுவது எப்படி? கடவுளுக்கு வேலை மகாலட்சுமியுடன் இருந்து சந்தோஷிப்பதுதான்.

பெண்களுக்கு மோட்சம் கிடையாது அப்படி வேண்டுமென்றால் அவள் இன்னொரு பிறவியெடுத்து ஆணாய்ப் பிறந்தால்தான் மோட்சம்.

உடலுறவுக்கு மோட்சலோகத்தில் ஸ்த்ரிகள் நிறைய பேரை அங்கு போனவன் படைத்துக் கொள்வான்.

**90.** உன்னை இங்கு படைப்பவள் அம்மா - நீ நினைத்தால் உன் அம்மாவையே அங்கு படைக்கலாம் உன்னைப் படைத்தவர் அப்பா நீ நினைத்தால் உன் அப்பாவையே அங்கு படைக்கலாம் இப்படியொரு Super Nature சூத்திரத்தின் படி சொல்லப்பட்டு வரும் மோட்ச உலகத்தைப்பற்றி போன அத்தியாயத்தில் பார்த்தோம்.

இப்படியெல்லாம் இருக்குமா? பசி, பட்டினியற்ற இந்த உலகத்துக்குப் போகவேண்டும் என்றால் எப்படிப் போவது?

இதற்காக சாந்தோக்ய உபநிஷத்தில் பல வித்யையைகள் ஓதப் பெற்றிருக்கின்றன அதாவது இந்த உபநிஷதுவின் மூன்றாம் அத்தியாயம் முதலாக. மதுவித்யை, காயத்ரீ ப்ரம்ம வித்யை, சாண்டில்ய வித்யை, ஸம்வர்க வித்யை, ஷோட சகல ப்ரம்ம வித்யை உபகோஸல வித்யை, ப்ராண வித்யை, பஞ்சாக்னி வித்யை இப்படியாக பல வித்யைகள் போய்க் கொண்டே இருக்கின்றன.

இந்த வித்யைகளை ப்ரம்மன் ப்ராஜபதிக்கும் ப்ராஜபதி மநுவுக்கும், மநு பிரஜைகளுக்கும் உபதேசித்தாராம்.

அப்படி என்ன இருக்கின்றன அந்த வித்யைகளில்?

ஆத்மாவை அறிபவன் மோட்சம் பெறுகிறான் இதுதான் இந்த ONE LINE உபநிஷது.

இந்த ப்ராஜபதிக்கு தேவர்களும், அசுரர்களும் பிள்ளைகள் ஆத்மாவை அதன் எட்டு குணங்களோடு அறிந்தவனுக்கே மோட்சம் என வாக்கியமொன்றை உலகமெங்கும் பரவவிட்டார்.

உடனே. தேவர்களின் தலைவன் இந்திரனும், அசுரர்களின் பிரதிநிதியாக விரோசனனும் தங்கள் அப்பாவான ப்ராஜபதியிடம் 'மோட்சம் பெறுவது எப்படி? என கற்பதற்காக 32 வருஷம் ப்ரம்மச்சர்யம் இருந்து வந்தார்கள் அப்போது அப்பா சொன்னார்

ஒரு மடக்கில் ஜலம் வார்த்து நன்றாகப் பாருங்கள் நல்ல அலங்காரங்களை செய்துகொண்டு பாருங்கள் ஏதும் தெரியாமல் இருந்தால் கேளுங்கள் என்றார்.

அசுரர் தலைவர் விரோசனன் பார்த்தான் அவன் ரூபமே மடக்கு தண்ணீரில் தெரிந்தது ஓ இதுதான் ஆத்மா என தீர்மானித்து தன் அசுரர்களுக்கு இதையே உபதேசித்தான் இதனால் அசுர குலமே தேஹாத்மவாதிகளாகி விட்டார்கள் அதாவது தேகத்தை தான் ஆத்மா என தப்பாக நினைத்தவர்களாகி விட்டார்கள்

ஆனால், தேவர் தலைவர் இந்திரன் இது நமது முகம் மாதிரியே இருக்கிறதே என



யோசித்து மறுபடியும் தன் அப்பாவிடமே வந்தான். அவர் மறுபடியும் இந்திரனை 101 வருஷங்கள் காக்க வைத்து உபதேசம் செய்து மோட்சத்துக்கு அனுப்பினாராம்.

அதாவது அசுராளுக்கு மோட்சம் இல்லை தேவர்களுக்கு தான் மோட்சம் என்ற பாகுபாட்டை நிரூபிப்பதற்காக இந்தக் கதை நினைத்திருந்தால் அன்றே அந்த ப்ராஜபதி அசுராளுக்கும், ஆத்மாவைப்பற்றி சரியாக உபதேசித்திருக்க முடியுமல்லவா?

இதை உபநிஷது பண்ணிய ரிஷிகள் நினைக்கவில்லை அவ்வளவு தான்.

அதே உபநிஷதுகளில் இன்னொரு வித்யை.

அருணமகரிஷியின் பிள்ளை உத்தாலகர் உத்தாலகரின் மகன் ச்வேதகேது அந்த ச்வேதகேது வேதம், சம்பிரதாயம் எதுவும் கற்க விருப்பமில்லாமல் சுதந்திரமாய் திரிந்தான்.

இதைக் கண்ட அவன் அப்பா உத்தாலகர் 'டேய் இதுமாதிரி வேத அத்யயனம் பண்ணாத பிராம்மணனாய் இருந்து என்ன பயன்? வெளியே போய் குருகுல வாசம் செய்து கற்றுக்கொண்டு வாடான்னு அனுப்பி வைத்தார்.

அப்பா பேச்சால் உணர்ச்சி வசப்பட்ட ச்வேதகேது வெளியே போனான் எல்லா வேதங்களையும் ஸாங்கோபாங்கமாகக் கற்று இனி நாம் கற்க எதுவும் இல்லையென்று வீட்டுக்கு வந்துவிட்டான்.

அப்பா உத்தாலகர், 'என்னடா திரும்பி வந்துவிட்டாய்? என்றார்.

'12 ஆண்டுகளாகப் படித்து விட்டேன் இனிமேல் நான் படிக்க ஒன்றுமில்லை. என்றான் அந்த 24 வயது இளைஞன். 'எதைக் கேட்டு சிந்தித்தால் உலகத்தில் எல்லாம் கேட்டு சிந்தித்த பயன் வருமோ அது என்னவென்று உன் ஆச்சார்யனிடம் கேட்டாயா? என்றார் அப்பா.

'என்னப்பா சொல்கிறீர் உலகம் எவ்வளவு பெரியது ஒன்றையறிந்தால் உலகெல்லாம் அறிய முடியுமா?. அப்படியொரு வஸ்துவெல்லாம் இல்லையப்பா.'

அப்பா உத்தாலகர் அவனுக்கு என்னென்னவோ உபதேசம் செய்தார்

இன்னொரு காட்சி ச்வேதகேது பாஞ்சால தேசத்திலே ஸதஸ்க்கு சென்றான். ஸதஸ் என்றால் மன்றம் பல அறிஞர்கள் விவாதிக்கும் இடம் அங்கே ப்ரவாஹணன் என்ற ராஜரிஷியை சந்தித்தான்.

ராஜரிஷி கேட்டார் 'பிள்ளாய் உனக்கு தகப்பனார் உபதேசங்களை செய்தருளினாரா? ''ஆம்.''. அப்படியானால் ப்ரஜைகள் மரணமடைந்த பின்னால் போகும் இடம் எது தெரியுமா?'தெரியாது'. திரும்பி வரும்போதுள்ள வழி தெரியுமா? ''தெரியாது'' சரி மேலுலகம் போய்ச் சேர்ந்த ப்ராணிகளாவது யார் தெரியுமா? ''தெரியாது '' சரி தேவயாந மார்க்கம், பித்ருயாண மார்க்கம் என்றவையின் வேறுபாடு தெரியுமா? ''தெரியாது''

அப்படியென்றால் நீ உபதேசம் பெற்றது என்ன? இவைகளை அறியவில்லையென்றால், உபதேசம் பெற்றதாக எங்கனம் கூறுவது?

'ச்வேதகேது தன் தகப்பனார் இருக்கும் இடத்துக்கு ஓடிவந்து தான் பட்ட மானபங்கத்தைச்



சொல்லி வருத்தப்பட்டான் பின்னர் தன் அப்பாவிடம் அந்தக் கேள்விகளுக்கெல்லாம் என்னப்பா பதில்? என கேட்டான்.

அதற்குத் தகப்பனார் உத்தாலகர். 'குமாரனே எனக்குத் தெரிந்திருந்தால் சொல்லாமல் இருப்பேனா? என்கிறார். இப்படித்தான் இருக்கின்றன மோட்சம் பற்றிய விசாரணைகள்.

**91- 1.** மோட்சம் பற்றிய விசாரணைகளை விரிவாகவே பார்த்தோம். வ்யாஸர் - ஜெய்மினி உரையாடல், உத்தாலகர் - ச்வேதகேது - வ்ராஷ்ணன் உரையாடல் என உதாரணங்களும் பார்த்தோம்.

என்ன விளங்கினோம் அதாவது இந்த உலகத்தில் நீ நல்லவனாக வாழவேண்டும் வாழ்ந்தால் இதைவிட இன்பம் மிகுந்த உலகம் உனக்கென இருக்கிறது என ஆசை காட்டும் வேலை தான் மோட்சம்.

பெண்களுக்கு மோட்சம் கிடையாது அப்படி வேண்டுமென்றால் அவள் இன்னொரு பிறவியெடுத்து ஆணாய்ப் பிறந்தால்தான் மோட்சம் என முன்னர் நாம் பார்த்திருக்கிறோம்.

அப்படியென்றால்.. மோட்சலோகத்தில் ஸ்த்ரிகள் நிறைய பேரை அங்கு போனவன் படைத்துக் கொள்வான் என்றும் பார்த்தோம். அப்படியென்றால் அங்கு கடவுளுக்கு வேலை என்ன என்று கேள்வி வருகிறது.

அங்கே கடவுளுக்கு வேலை மகாலட்சுமியுடன் இருந்து சந்தோஷிப்பதுதான் அதாவது மோட்சலோகம் என்பது இதே போன்றதொரு இன்னொரு ஆனந்த மயமான லோகம்தான் அதை அடைவதற்குப் பல கடுமையான நிபந்தனைகள் இருக்கிறது என்பது நம்மை நெறிப்படுத்த நிர்ணயிக்கப்பட்ட விஷயம் வேறொன்றும் அல்ல.

சரி.. 'குழந்தாய் இந்தா பால் இதைக் குடித்து நன்றாக வளர்வாயாக என பிறந்த சிறு குழந்தைகளுக்கு வேதம் சொன்னதிலிருந்து இறப்புக்குப் பிறகான மோட்சம்பற்றி உபநிஷது சொல்லியவரை அனேக விஷயங்களை அலசி விட்டோம்

### 91 to 96.எது இந்து மதம்?

நம் தேசத்தில் இருந்த 450 மதங்களில் எது இந்து மதம்? ‘ஹிந்து’ என்ற பெயரின் வரலாறு.

சர்டிபிகேட்களில் ‘ஹிந்து’ என்று எழுதுகிறார்களே... ஏன்?

நமது புஸ்தகங்களில் வேதங்களில் ஆயிரம் இடங்களில் ‘சிந்து’ என்ற வார்த்தைதான் உள்ளதே தவிர... ஹிந்து என்றோ இந்து என்றோ ஒரு இடத்தில் கூட இல்லவே இல்லை. கிடையவே கிடையாது.

‘ஹிந்து’ என்ற பெயர் நாம் சூட்டிக் கொண்டதல்ல. நமக்கு அந்நியன் சூட்டிய பெயர். அதைத்தான் நாம் இன்று சூட்டிக் கொண்டிருக்கிறோம்.

**91 - 2.** இவ்வளவு விஷயங்களைப் பார்த்த நாம்.. எங்கேயாவது ஒரு இடத்திலாவது 'ஹிந்து என்ற வார்த்தையைப் பயன்படுத்தியிருக்கிறோமா? முதல் அத்தியாயத்தின் முடிவில்...பிராமணர்கள் இங்கு (இந்தியாவிற்கு) வரும்போது 450 மதங்கள் இருந்தனவாம் இதில் எது இந்து மதம்? என கேள்வி எழுப்பியிருந்தேன்.



அந்தப் பிரயோகத்திற்குப் பிறகு வேறு எந்த இடத்திலாவது நாம் இந்து or ஹிந்து என்கிற வார்த்தையைப் பிரயோகப்படுத்தி யிருக்கிறோமா? யோசித்துப் பாருங்கள் தலைப்பே இந்து மதம் எங்கே போகிறது? என்பது தான் ஆனால், இதுவரை இந்து என்கிற பெயரையே உங்களுக்கு நான் அறிமுகப்படுத்த வில்லையே?

நமது மதத்தைப்பற்றி இவ்வளவு விஷயங்களை, நமது கலாச்சார மதத்தைப்பற்றி எத்தனை மேற்கோள்கள், சம்பவங்கள், கதைகள் பார்த்துவிட்டோம் ஆனால்...? இந்து or ஹிந்து என்கிற பதத்தை எடுத்து பயன்படுத்தவில்லையே?

இந்தக் கேள்வி வரும்போதுதான் இந்தப் பதம் எப்படி வந்தது என சொல்ல வேண்டியுள்ளது அதற்குமுன்.. உலகத்தில் பொதுவாக மனித இனங்களைப் பார்த்தோமென்றால்.. அய்ந்தாகப் பிரிக்கிறார்கள் Artho biological அறிஞர்கள்.

என்னென்ன இனம்? Semetic - யூதர்கள், அரேபியர்கள் Hemetic - இவர்கள் இன்று இல்லை என்கிறார்கள். Negroes - ஆப்பிரிக்கா மக்கள். Mongols - சீனா தேசத்தவர். Aryans - அய்ரோப்பியர்கள், இந்திய பிராமணர்கள் போன்றோர்..

இந்த இனப் பாகுபாட்டை அப்படியே பார்த்துவிட்டு பாபிலோனியாவுக்கு (IRAQ) வாருங்கள். பாபிலோனியா?
ஆமாம் உலக வரலாற்றாசிரியர்கள் ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப் பிறகு.. அவர்கள் வெளியிட்ட ஒரு சொற்றொடரை இங்கே தருகிறேன் அப்போது பாபிலோனியா என்றால் என்ன என்று உங்களுக்கு விளங்கும்.

"In the dark past of ancient countries.. Bobylonia and Egypt are only lights with fine culture' உலகின் மிக இருட்டான பழைய காலத்தைப் புரட்டிப் பார்க்கிறபோது அங்கே இரண்டு இடங்களில் தான் நாகரிக கலாச்சார வெளிச்சம் கண்ணைப் பறிக்கிறது ஒன்று பாபிலோனியா (IRAQ) , மற்றொன்று எகிப்து.

இதில் ஒரு வெளிச்ச ஸ்தலமான பாபிலோனியாவைப் பற்றித்தான் இப்போது நாம் பார்க்கப் போகிறோம் அங்கே வாழ்ந்த மக்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாகரிகப் புரட்சி செய்தவர்கள், நாடமைத்து, நகரம் அமைத்து கட்டியாண்டவர்கள் அவர்களது மதமும், நாகரிகமும் பொருந்தியதாகத்தான் இருந்திருக்கிறது. இதற்கான ஆதாரங்கள் 'The Encyclopedia of world religions and Ethics' என்ற களஞ்சியத்தில் நமக்குக் காணக் கிடைக்கிறது.

பாபிலோனியர்கள் எப்படி இருப்பார்கள்? அவர்கள் வணங்கிய தெய்வங்கள் என்ன? பழைமை வாய்ந்த பாபிலோனியாவில் Fatamism worship அதாவது விலங்கு உருக்களை வழிபடும் வழக்கமும் இருந்தது.எப்படி? அவர்கள் அந்த விலங்குக் கடவுளுக்கு விழா எடுத்தார்கள் அதுவும் நம்மூரில் பல்லாக்கு தூக்குகிறோமே அதேபோல மரத்தாலான பல்லாக்கு செய்து அதை பூக்களால் அலங்கரித்து தங்கள் தெய்வத்தை அதற்குள் வைத்து தூக்கிக்கொண்டு சென்று உற்சவமே நடத்தியிருக்கிறார்கள். இதையெல்லாம் தாண்டி... இன்னது இன்னதுதான் தர்மங்கள், இவைகளைச் செய்யக்கூடாது என நீதிக் கருத்துக்களை நிர்ணயிக்கும் அளவுக்கு அவர்கள் வளர்ந்திருந்தனர்.

குட்டைப் பாவாடை போல கட்டிக்கொண்டு கரடு முரடான கட்டுமஸ்தான உடலில் இடுப்பில் வாளை சொருகிக் கொண்டு அவர்கள் பார்க்கப் பயங்கரமாக இருப்பார்கள்.



ஆனால், முற்றிய நாகரிகத்திலிருந்து முளைவிட்டுப் பூத்திருந்தது அவர்களின் வாழ்க்கை.சரி.. பாபிலோனியாவில் கலாச்சார வெள்ளம் கரைபுரண்டு ஓடட்டும் அதற்கும், 'இந்து பேருக்கும் என்ன சம்பந்தம் என்று தானே கேட்க வருகிறீர்கள். பொறுங்கள்.. பாபிலோனியாவைப் பற்றி இன்னும் கொஞ்சம் பார்த்து விடுவோம்.

**92.** பாபிலோனியர்களைப் பற்றி பார்த்து வருகிறோம். நமது விஷயத்துக்கு வரும் முன்னர் பாபிலோனியர்களின் நாகரிக கலாச்சாரம் பற்றி இன்னும் கொஞ்சம் பார்க்கலாம். என்ன பண்பாடு. அப்படியே ஆச்சரியம் பொத்துக் கொண்டு பாபிலோனியா மீது வழிகிறது. அப்பேர்ப்பட்ட வாழ்க்கை வாழ்ந்திருக்கிறார்கள் பாபிலோனியர்கள்.

சுமேரிய நாகரிகத்தின் சுவடுகளைக் கொஞ்சம் எடுத்துக் கொண்ட பாபிலோனியர்கள் தங்களுக்கென்று தனிச்சிறப்பு மிக்க வாழ்க்கையை வாழ்ந்துவிட்டுப் போயிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் அவர்கள் வாழ்ந்த வாழ்க்கைக்கு பாபிலோனிய மண்ணுக்கு கொஞ்சம் செல்லலாமா?

பச்சைப் பசேலென பூத்துக் கிடக்கும் பச்சை மரங்கள். அந்தப் பக்கமாய் ஓர் இனிய இசை காற்றில் சலசலவென பரவுகிறது. அது என்ன நாதம்? பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாசிக்கப்பட்ட அந்த கீதத்தை, இசையை எப்படி வார்த்தைகளில் கொண்டுவர முடியும்?

அதோ அந்த இசை வரும் திசை நோக்கிச் சென்றால், ஒரு சிறிய கூட்டம் நடுவிலே மொட்டைத் தலையோடு நீண்ட சிவப்பு நிற முழு அங்கியோடு காட்சி தருகிறார் ஒருவர். யார் இவர்? அவர்தான் பாபிலோனியர்களின் மதகுரு.

பாபிலோனியர்களின் மதம் என்ன? இயற்கையான சூரியனையும் சந்திரனையும் வழிபட்டவர்கள். பிறகு விலங்குகளை வழிபட்டு பிற தங்களுக்கென கடவுள்களை தங்கள் மொழியின் பெயரில் உருவாக்கிக் கொண்டார்கள். அந்தக் கூட்டத்தில், டமாரம் இருக்கிறது. புல்லாங்குழல் இருக்கிறது. சிலர் இவற்றை வாசிக்க இன்னும் சிலர் பாடுகிறார்கள். “In the assembly of the elders may my speech he heardOh God.. daily walk with me thy prise I would sing...”பாபிலோனியர்களின் பலதரப்பட்ட பக்தி கீதங்களில் ஒரு சிறு துளி இது.

Encyclopedia of World Religions and ethics என்ற புத்தகத்தில் . . . Babytlonian’s Prayer என்ற தலைப்பின் கீழ் இந்த பாட்டை நாம் படிக்க முடிகிறது. என்ன அர்த்தம்?

“மாபெரும் சபைகளில் நான் நடந்தால் எனக்கு மாலைகள் விழவேண்டும். கடவுளே என்னை அந்த அளவுக்கு என்னை அறிவுள்ளவனாக மாற்று. தினமும் என்னோடு எனக்குத் துணையாக நடந்து வா. அதற்காகத்தான் உன்னைப் போற்றிப் பாடுகிறேன்..” கடவுளிடம் அறிவைக் கேட்டார்கள் பாபிலோனியர்கள்.

இங்கே மதகுருமார்களைப் பற்றி நிறைய விஷயங்கள் இருக்கின்றன. மதகுருக்களில் நிறைய வகைகள் பிரித்து வைத்திருக்கிறார்கள். பொதுவான மத குருவுக்கு சேங்கு என்று பெயர். இதற்கு தலைவர் என்று அர்த்தம். இதற்கு அடுத்தவர் ‘சேங்கு ரேபு’ என்றால் High Preist. அவரைவிட இவர் உயர்ந்தவர். அதற்கு அடுத்தவர் ‘சேங்கு டேனு’ இவருக்கு Mighty Preist என பெயர். இவரையும் விட உயர்ந்தவர்தான் ‘சேங்கு மேஹ’’. அதாவது Supreme Preist.

இவ்வாறு மதகுருக்களில் இத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் வழிபாடுகளில் அதாவது



Public Prayer களில், மன்னனிலிருந்து பாமரர்கள் வரை அங்கே அனுமதிக்கப் பட்டிருக்கிறார்கள். பாமரர்களும் ஏன் அடிமைகள் கூட அங்கே கூட்டு வழிபாடு நடத்த அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால் வழிபாட்டில் கலந்துகொள்ள ஒரு தகுதி வேண்டும்.

அதாவது பத்தில் ஒரு பங்கு வரி கட்டுபவன். வழிபாட்டில் வந்து கலந்துகொள்ளலாம். அப்படி வரிகட்ட இயலாதவன் அதாவது நிலமற்ற ஏழைகளும் வழிபாட்டில் கலந்து கொள்ளலாம். அதற்கு பதிலாக கோயில் காரியங்கள் சிலவற்றைச் செய்யவேண்டும். அதாவது உடல் உழைப்பை அர்ப்பணிக்கவேண்டும்.

வழிபாட்டில் பெண்கள்? ஏன் கிடையாது? இதே போல அவர்களுக்கும் வரி தகுதிதான். ஏனென்றால் பாபிலோனியர்கள் பெண் தெய்வங்களையும் வழிபட்டவர்களாயிற்றே.

இங்கேயொரு காட்சி. ஒரு கோயிலில் பொது வழிபாடு நடந்து கொண்டிருக்கிறது. அப்போது அங்கே வந்த ஒரு பெண்ணை சில அதிகாரிகள் வழிபாட்டுக்குள் அனுமதிக்க மறுத்து விடுகின்றனர்.

'ஏய். நான் யார் தெரியும்? ''யாராக இருந்தால் என்ன?'' என் பெயர் நின்குயயா (Ninaqaya). நான் இந்நாட்டு அரசனுடைய அம்மாவின் பணிப்பெண். அரண்மனையிலிருந்து வருகிற எனக்கே அனுமதி இல்லையா? ''வரியைக் கட்டு பெண்ணே. அதுவரை நீ ராஜாவின் அம்மாவாக இருந்தால் கூட உனக்குக் கவலையில்லை.' பிறகென்ன? தாதிப்பெண் தன் பங்கான வரியைக் கட்டினாள். பிறகுதான் வழிபாட்டுக்குள் அனுமதிக்கப்பட்டாள்.

ஏன் இதைச் சொல்கிறேன் என்றால், மதகுருமார்கள் பக்தி, ஆன்மிகம், வழிபாடு இவற்றில் மட்டுமல்ல, பல்வேறு நிர்வாகப் பணிகளையும் இதன் மூலம் செய்து வருகிறார்கள்.

இப்படி மதவிஷயத்தி லும் நிர்வாக விஷயத்திலும் கட்டுப்பாடு, வரி நிர்ணயம், அதன் மூலம் பொதுச்சேவை, அரசன் முதல் பாமரன் வரைக்கும் வரையறுக்கப்பட்ட நீதி என்றும் பொது வழிபாடு என்றும் நாகரிகமான வாழ்க்கை நடத்தி யிருக்கிறார்கள். இவர்களின் இந்த நகர நாகரிக வாழ்க்கை அடுத்த நாட்டு அரசர்களை உறுத்துவது வாடிக்கை தானே. பாபிலோனியா மீது ஆசை சொண்டான் அந்த நாட்டு மன்னன்

**93.** உச்சகட்டமான பாபிலோனிய கலாச்சார வாழ்க்கை முறையைப் பார்த்தோம். இப்படிப்பட்ட பூமியை ஆள... யாருக்குதான் ஆசை வராது? வந்தது அந்த மன்னனுக்கு. எந்த மன்னனுக்கு? இன்றைக்கு இரண்டாயிரத்து 600 ஆண்டுகள் முன்பாக என்றொரு வரலாற்றுக் கணிப்பு -

பாபிலோனியாவுக்குப் பக்கத்து பூமியான பாரசீக நாட்டின் மன்னன் முதலாம் கேம்பசிஸ் (Cambysis I) என்பவனுக்கு ஒரு மகன் பிறந்தான். பிறக்கும் போதே ஒருவித ஆக்ரோசத்துடன் தான் அவதரிக்கிறான் அந்தப் பயல். எல்லாரும் யோசிக்கிறார்கள். 'அடிமைகளின் தேசத்தில்... பிறந்த உடனேயே இப்படி ஆக்ரோசத்துடன் துடிக்கிறானே... சரியான வால்தான்' என்று.

ஆமாம்... அப்போது பாரசீகர்கள் மிடீய நாட்டு அரசனான ஆஸ்ட்யாகஸ் (Astyages) அடிமைகளாகவே (Vassals) வாழ்க்கை நடத்தி வந்தனர். மிடீயன் மன்னனுக்கு அடிமைகளாக இருந்தபோதும், பாரசீக நாடும் ஒரு அமைப்பாகத்தான் இயங்கிக் கொண்டிருந்தது. The Persian nation contains a number of tribes என்கிறார்



வரலாற்றறிஞர் ஹெராடடஸ்.

அதாவது பல பழங்குடி மக்களின் தொகுப்பு தான் பாரசீகம்.

பாஸரகேட், மராஃபி, மாஸ்பி போன்ற பல பழங்குடியினத்தவர். இப்படி கொத்துக் கொத்தாக வாழ்ந்து வந்த இந்தப் பழங்குடியின மக்களைத் தான் ஆதிக்கம் செலுத்தி வந்தான் மிடீயன் நாட்டு மன்னன். இந்த சமயங்களில் சைரஸ் (க்யூரஸ் என்றும் அழைப்பார்கள்) சின்னப் பிள்ளை. தன் அப்பாவின் வளர்ப்பில் எல்லா கலைகளையும் கற்றுக் கொண்டு வந்த சைரஸ்... இளமை துடிக்கும்... முறுக்கேறிய வயதில் தன் நாட்டின் அரசன் ஆனான்.

அப்போதெல்லாம் பாரசீகர்களின் நாட்டுக்கு அன்சன் என்று பெயர். சைரஸ், அன்சனின் அரசானானதும்... தன் தந்தை கட்டி மேய்த்துக் கொண்டிருந்த பழங்குடி நாடோடி மக்களை தன் கட்டுக்குள் கொண்டு வந்தான். தன் தந்தையைவிட சைரஸ் அவர்களின் மேல் ஆதிக்கம் செலுத்த... அதாவது இவனே மிடீயன் அரசனுக்கு கட்டுப்பட்டு வந்தவன். ஆனால்... இவன் தனக்கு கீழே சில பழங்குடியினரை உதைத்து கப்பம் வாங்கிக் கொண்டிருந்தால்... அவர்கள் என்ன செய்வார்கள்?

கத்தி, கற்களைத் தூக்கிக் கொண்டு சைரஸ்க்கு எதிராகப் போராட ஆரம்பித்து விட்டார்கள். பார்த்தான் மிடீயன் அரசன். “இந்த சைரஸே நமது கட்டுப்பாட்டில் இருக்கிறான். இவன் எப்படி அந்தப் பழங்குடியினரை மேய்க்கலாம்?” என கோபப்பட்டு... தன்னுடைய ஒரு படையை சைரஸ் நாட்டுக்கு அனுப்பி விட்டான். மிடீயன் நாட்டுப்படை ஹார்பகஸ் (Harpogus) என்ற தளபதியின் தலைமையில் சைரஸ் நாட்டுக்கு விரைந்தது.

“வாடா... வா... நான் என்ன என் அப்பனைப் போல கிழவன் என்று நினைத்தாயா? யாரை அடிக்கலாம்... அதுவும் இவ்வளவு காலமாக எங்களை அடிமையாக வைத்திருந்த உன்னை எப்போது அடிக்கலாம் என காத்திருந்தேன்...” என தொடை தட்டிய சைரஸ்... தன்னை நோக்கி வந்த மிடீயன் நாட்டுப் படையை... ஓட ஓட விரட்டினான்.

தளபதி ஹார்பகஸ் என்பவனை அடித்து நொறுக்கிய சைரஸ் அடுத்த கட்டமாய்... மிடீயா நாட்டையும் பிடித்தான். அது முதற்கொண்டு... மிடீயா மற்றும் பார்ஸியா பேரரசின் தலைவனான் சைரஸ். தன் அப்பன் காலத்தில் தன்னை யார் அடிமையாக்கினார்களோ, அவர்களை தன் சுட்டு விரலுக்குக் கட்டுப்பட்டவர்களாக மாற்றினான்.

இந்த இடத்தில்தான் ஒரு ‘ராஜ ரகசியம்’ பதுங்கிக் கிடக்கிறது. இந்த ரகசியத்தை வரலாற்றாசிரியர் ஹெரடடஸ்ஸே பகிரங்கப்படுத்துகிறார். என்ன ரகசியம்?

சைரஸின் அப்பா இருக்கிறானே... அவன் தன்னை அடிமையாக வைத்திருந்த மிடீயா நாட்டு மன்னனின் மகள் மண்டனே (mandane) வை எப்படியோ வளைத்துப் பிடித்துக் கல்யாணம் செய்து கொண்டு விட்டான். அதாவது பல மனைவியரில் அவளையும் ஒருத்தியாக தன் அந்தப்புரத்து சுந்தரியாகக் கொண்டான்.

சரி... இதில் என்ன ராஜ ரகசியம்... இதுதான் அரச குலங்களிலே நடக்கும் அன்றாடச் செயலாயிற்றே? என நீங்கள் கேட்கலாம்.

ரகசியம் இனிமேல் தான் இருக்கிறது. சைரஸின் அப்பா மிடீயா நாட்டு மன்னனின் ஒரு மகளை கட்டிக் கொண்டானா? இதைத் தொடர்ந்து “Ctesias of Cnidus” என்ற கிரேக்க



வரலாற்றாளன் எழுதுகிறார். “மிடீயா நாட்டு மன்னனின் இன்னொரு மகளை சைரஸ் கல்யாணம் பண்ணிக் கொண்டான்”

என்னடா இது? ஒரு மகளை அப்பா கல்யாணம் பண்ணிக் கொண்டான். இன்னொரு பெண்ணை பையன் கல்யாணம் பண்ணிக் கொள்கிறான். அதுவும் அப்பா கல்யாணம் பண்ணிக் கொண்ட பின்! அப்படியென்றால் சைரஸ் தன் சித்தியையே கல்யாணம் செய்து கொண்டிருக்கிறான்.

அதனால் மிடீயா ராஜாங்கத்துக்கு சைரஸ் சொந்தக்காரனாகி விட்டான். அதனால் தன் மாமனாரின் இன்னும் சொல்லப் போனால்... தன் தாத்தாவின் மிடீயா நாட்டு ராஜாங்கத்தையும், பெர்ஸியன் ராஜாங்கத்தையும் இரட்டை குடியாட்சி செய்தான் சைரஸ்.

இந்த சைரஸ்தான் பாபிலோனியா மீது ஆசைப்பட்டவன். ஆனால்...? பாபிலோனியப் படையை சமாளிக்க சைரஸ்க்கு இன்னும் கொஞ்சம் தேவை ராணுவம். அதற்காக என்ன செய்தான்? யாரை கேட்டான்... அடுத்து சொல்கிறேன்.

**94.** என்ன பார்த்தோம்? பாரசீக மன்னன் சைரஸ் பாபிலோனியா மீது மண்ணாசை கொண்டதை பார்த்தோம்.

பாபிலோனியாவை வீழ்த்த ‘இந்த படை போதாது. இன்னும் கொஞ்சம் வேண்டும்’ என்ற நிலையில்... அவனுக்கு சிலர் அறிவுரைகள் வழங்கினர். கொஞ்ச தூரம் தள்ளிச் செல்...

அங்கே The king of Sindhu Desh இருக்கிறான். அவனிடம் நீ உதவி கேள். கண்டிப்பாக கொடுப்பான் என்றனர். சைரசோ... அவனது ஆட்களோ சிந்து தேசத்தை அடைந்தனர். சிந்து தேசம் என்றால்... இன்றைய சிந்து நதியின் கரைப் பகுதியை உள்ளடக்கிய பிரம்மாண்ட தேசம்.

சிந்து... இன்றைய திபெத்தில் உள்ள மானசரோவரில் பிறந்து... ஓடி... ஓடி... ஓடி... பாகிஸ்தானின் கராச்சியில் கடலில் போய் கலக்கிறது. சிந்து நதியின் கரைகளிலும், கரைப் பகுதியைச் சுற்றிலும் சிந்து தேசம் வியாபித்து இருந்திருக்கக் கூடும். வலிமையான ராஜாங்கம் செய்து வந்த அந்த சிந்து தேசத்திடம் தான் சைரஸ், படை உதவிக்காக அணுகுகிறான்.

வரலாற்றாசிரியர் Arrian தன் குறிப்பில்... சைரஸ் சிந்து பகுதிக்கு வந்திருக்கிறான். ஆனால்.... அதை அவன் படையெடுத்து வென்றதாக கல்வெட்டுகளோ, ஆதாரங்களோ இல்லை என்று சொல்லியிருக்கிறார்.

சிந்து நதியின் ராஜாங்கத்தைப் போலவே சிந்து தேச ராஜாவும், சைரஸுக்காக தசை பலம் பொருந்திய யானைப் படை, குதிரைப்படையை கொடுத்தான். இந்தப் படையின் உதவி மூலம் தான் பாபிலோனியாவை சைரஸ் ஜெயித்துக் கைப்பற்றினான்.

இது.... வரலாற்றறிஞர் டால்மீயின் குறிப்புகளில் உள்ளது. திருவல்லிக்கேணியில் உள்ள (பி.டி. பாணி என நினைக்கிறேன்) ஒரு பப்ளிஷர்ஸ் வெளியிட்ட Age of Shankara என்ற புத்தகத்தில் டால்மீயின் மேற்கோள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

சரி... சிந்து தேச ராஜா, சைரஸுக்கு உதவிவிட்டுப் போகட்டும் என்கிறீர்களா?



இப்போதுதான் நமது விஷயத்துக்கு வருகிறோம். ஹிந்து என்ற பெயர் எப்படி வந்தது என கேட்டிருந்தேன் இல்லையா? இப்போது கேளுங்கள். இந்த சைரஸ்... சிந்து தேச ராஜா நட்பின் மூலம் சிற்சில வார்த்தைகளாவது பரிமாறப்பட்டிருக்காதா?

ஏனென்றால்... உலக ஃபிலாலஜி, அதாவது மொழியியல் வல்லுநர்களின் முடிவுப்படி... சமஸ்கிருத பாஷைக்கும், பாரசீக பாஷைக்கும் இடையிலான சில ஒற்றுமை வேற்றுமைகள் உள்ளன.

அதாவது இங்கே க்ஷ என்பதை அவர்கள் 'ஹ' என உச்சரித்தார்கள். அதாவது சரஸ்வதியை ஹரக்வதி என்றார்கள். நாம் 'அசுரஹா' என்று சொல்வதைப்போல அவர்கள்... அஹீரமஸ்தா என்ற கடவுளை வணங்கினார்கள்.

அந்த வகையில்தான் சிந்து தேசம் என்பதை ஹிந்து தேசம் என உச்சரித்தார்கள். தப்பாக உச்சரித்தார்கள் பாரசீகர்கள்.

ஆனால்... நமது புஸ்தகங்களில் வேதங்களில் ஆயிரம் இடங்களில் 'சிந்து' என்ற வார்த்தைதான் உள்ளதே தவிர... ஹிந்து என்றோ இந்து என்றோ ஒரு இடத்தில் கூட இல்லவே இல்லை. கிடையவே கிடையாது.

சரி... சிந்து என்ற வார்த்தை எப்படி பயன்படுத்தப்பட்டது?

'சிந்தோஹா... அபர பாதே ஆசன்ன..." இந்த வரியைத் தொடர்ந்து வரும் வேத வாக்கியங்கள் ஒரு நதியைப்போல சலசலவென ஓடுகின்றன.

இவற்றுக்கு என்ன அர்த்தம்? சிந்து நதி இப்போதுள்ள அகலத்தைவிட பல மடங்கு அதிகமான அகலத்துடன் ஜீவநதியாக ஓடிக் கொண்டிருக்கிறது. அலைகள் அழகழகாய் அசைந்து கொண்டிருக்கின்றன.

அந்த ஜீவ நதியாம் சிந்துவிலே ஒரு தோணியிலே சிலர் ஏறி அக்கரையிலிருந்து இக்கரை நோக்கி வந்து கொண்டிருக்கிறார்கள் என்பது தான் இந்த வேதவரியின் விளக்கம்.

இந்த சிந்து நதிக்கரையிலே தான் வாதம் வருத்த பல்வேறு கர்மாக்கள். அதாவது அங்கு வாழ்ந்த மக்கள் தங்கள் பிள்ளைகளை ஆச்சார்யர்களிடம் படிக்க அனுப்பினார்கள். இதை உபநயனம் என்றார்கள். அதாவது... பள்ளிக்கு அனுப்புவதை இப்போது பூணூல் போட பயன்படுத்தி வருகிறார்கள்.

அடுத்து, கல்யாணம் பண்ணுவது, குழந்தை பிறப்பது, குழந்தைக்குப் பேர் வைப்பது, குழந்தைக்கு சோறூட்டுவது என்றெல்லாம் மக்கள் அன்றாடம் செய்யும் காரியங்களை மந்திரப்படுத்தினார்கள்.

இதன்படி... வேதத்தை அடிப்படையாகக் கொண்டு இந்தக் கர்மாக்கள் மட்டுமன்றி, அதாவது பூர்வ பிரயோகம், அபர பிரயோகம்.

அதாவது... இருக்கும் வரை செய்யும் கர்மா மற்றும் இறந்தபின் செய்யும் கர்மா போன்றவற்றை... ஆபஸ்தம்பர் என்ற ரிஷி விளக்கியுள்ளார். இதற்கு ஆபஸ்தம்ப சூத்ரம் என்று பெயர். "நதேவாஹா நகந்தர்வாஹாநபிதஇதீ ஆஜக்ஷதே அயந்தர்மோ ஆயந்தர்மேதீயந்தா ஆர்யா க்ருமாணம் சம்சந்தி நதர்மஹா"- அதாவது மக்கள்



செய்யவேண்டிய இந்த மந்த்ர கர்மாக்களுக்கு தேஸாச்சாரம் என்று பெயர்.

இந்த ஆச்சாரத்தை ஆர்ய மதம் என்று அழைக்க வேண்டும் என்கிறார் ஆபஸ்தம்பர்.

அதாவது சிந்து நதிக்கரை மக்களின் பழக்கத்துக்கு சிந்து மதம் என்று கூட அவர் பெயர் வைக்கவில்லை. ஆர்ய மதம் என்று தான் பெயர் வைத்தார்.

அப்படியென்றால்... சிந்து நதிக்கரையிலிருந்து நாலாயிரம் மைல்கள் கடந்து வாழும் நம்மூர் பையனின் பள்ளி சர்டிபிகேட்களில் 'ஹிந்து' என்று எழுதுகிறார்களே... ஏன்?

**95.** ஸிந்துவைப் பற்றியும் ஸ என்ற எழுத்து, உச்சரிப்பு ஹ என்று மருவி மாறியதைப் பற்றியும் பார்த்தோம். அதாவது ஸி என்பது ஹி என்று ஆனதைப் பார்த்தோம்.

ஹிந்து தேசம் என்று பாரசீகன் சொன்னானே தவிர... அந்த தேசத்தை வேதக்காரன் பாரதம் என்றுதான் அழைத்தான்.

ரிக் வேதத்தில் விஸ்வாமித்ரர் என்ற பிரபலமான முனிவர் பெயர் அடங்கிய ஒரு மந்த்ரம் எழுந்து வருகிறது பாருங்கள்.

"விஸ்வாமித்ரஸ்ய ரக்ஷதீப்ரம்மே இதம்பாரதஞ்ஜனம்..."...

இதற்கு என்ன அர்த்தம்? விஸ்வாமித்ரர் சொல்கிறார்.. ."என்னுடைய ஞான தேஜஸ்-ஸினால்... நான் கற்ற சாஸ்திரங்களின் பலனால்.... நான் உபதேஸிக்கும் மந்த்ரங்கள் இந்த பாரத தேசத்தின் ஜனங்களை யெல்லாம் வாழவைக்கும்... பாதுகாக்கும்..." என்று வீரமாக, நம்பிக்கையாக சொல்கிறார் விஸ்வாமித்ரர்.

'என்னுடைய மந்த்ரம், இந்த ஹிந்து தேசத்தை பாதுகாக்கும்' என்று விஸ்வாமித்ரர் சொல்லவில்லை என்னுடைய மந்த்ரங்கள் ஸிந்து தேசத்தை பாதுகாக்கும்; என்று சொல்லவில்லை, பாரத தேசம் என்றுதான் அழைத்திருக்கிறார்.

அடுத்ததாக...நான் முன்பு மேற்கோள் காட்டியிருந்தேனே... 'சிந்தோ அபராபாதே ஆஸன்ன...' என்று ஞாபகம் இருக்கிறதா?

அதற்கு முன்னே 'பாரதாஸி ஏனா...' என்றொரு சொற்றொடர் வருகிறது. அதாவது பாரத தேசத்தவர்கள் சிந்து நதியைக் கடக்கிறார்கள்... என்ற வகையிலே தான் இதற்கு அர்த்தம். சிந்து நதியின் பெயர் குறிப்பிடப்படும் இடத்தில் கூட பாரதம் என்றுதான் இந்த தேஸத்தை வேதக்காரன் விளித்திருக்கிறான்.

இதேபோல் இன்னொரு உதாரணம் பாருங்கள். ப்ராமணர்களிடம் ஒரு பழக்கம் இருக்கிறது. அதாவது சங்கல்பம். சங்கல்பம் என்றால்... ஒவ்வொரு கர்மாக்கள் செய்யும் போதும் 'இதை இந்த கர்மாவை சிறப்பாக, சிரத்தையுடன் பூர்த்தி செய்வேன்' என்ற சபதம் எடுத்துக் கொள்ளும் மந்த்ரம்தான் இது. சங்கல்பம் என்றால் உறுதியான எண்ணம் அதாவது சபதம்.

சரி... அந்த சங்கல்பம் என்ன? "விஷ்ணோ...ஆக்ஞாய...... ...... ...பாரத வர்ஷே பரத கண்டே சகாப்தே..." இந்த சங்கல்ப மந்த்ரத்தில் அந்த இடையில் வரும் வரிக்காகத் தான் இதைச் சொன்னேன்.



பாரத வர்ஷே என்றால்...பாரத தேஸத்தில் வாழும் என்று அர்த்தம். பரத கண்டே.... என்றால்... பரதன் ஆண்ட தேசம் என்றும் வைத்துக் கொள்ளலாம்.

விஷ்ணு புராணம், பாகவதம் போன்ற பழம்பெரும் பக்தி இலக்கியங்களில் இந்த ‘சங்கல்பம்’ பிரகாசிக்கிறது. அதாவது... இதை பாரத தேசம் என்று தான் அப்போதும் சொல்லி யிருக்கிறார்கள். அதாவது சிந்து சேதம் என்று கூட அவர்கள் தங்களை அழை கொள்ளவில்லை.

பிறகு... ‘ஹிந்து...’ என்ற பெயர் வந்தது எப்படி? நான் மேலே சொன்ன விஷயங்களெல்லாம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு! இப்போது சொல்லப்போவது சிற்சில நூறு ஆண்டுகளுக்கு முன்பு.

ஆமாம்... எண்ணி சுமார் நானூறு வருடங்களுக்கு முன்னால் தான் அய்ரோப்பியர், அதாவது வெள்ளைக்காரர்கள் நமது தேசத்தில் அடியெடுத்து வைத்தனர். அப்போது நமது தேஸத்தில் ஆங்காங்கே மொகலாய சாம்ராஜ்யம் ராஜாங்கம் செய்து கொண்டிருந்தது. அதாவது முகம்மதிய சுல்தான்கள் ஆட்சி செய்து வந்தனர். அப்போது வெறும் வியாபார நோக்கத்தில் இங்கே வந்தார்கள் வெள்ளைக்காரர்கள்.

அப்போது நமது பூமியில் எல்லா வளங்களும் கொழித்துக் கிடந்தன. ஆனால் ‘ஒற்றுமை’ என்னும் வளம் மட்டும் வறண்டு கிடந்தது. அதாவது... மொகலாயர்களுக்கு அடிமைப்பட்டுக் கிடந்தவர்கள்... தங்களுக்குள்ளும் அடித்துக் கொண்டனர். சிற்றரசர்கள் என்ற ரீதியில் ராஜாக்கள் ஒருத்தரை ஒருத்தர் அடித்துக் கொண்டனர்.

மக்களோ... ப்ராம்மண, சூத்ர, பஞ்சமர் பிளவுகளில் ஈடுபாட்டோடு இருந்தனர்.

பார்த்தான் வெள்ளைக்காரன், ‘என்னடா இது?’ என கேட்டான்.‘இதுதான் எங்கள் ஜாதி தத்வம்; இதை கேட்க நீ யார்?’ என குரல் எழுந்தது.

சரி... இவர்களிடையே இவ்வளவு பிளவுகள் இருக்கிறது. இந்த தேஸத்தில் இவ்வளவு வளங்கள் இருக்கிறது... என யோசித்த வெள்ளைக்காரன் தன் குடும்பம், குட்டிகளோடு இங்கே வந்தான். அங்கிருந்து பாதிரிகளும் இங்கே வந்தனர்.

நமது தேஸத்தில் புரையோடிப் போயிருந்த ‘ஜாதிதத்வ’ நடைமுறை...

அதாவது ‘ப்ராம்மணனே தெய்வம்’ நசூத்ரா மதிந்தத்யாது... (சூத்திரனை அடி உதை. அவனுக்கு எந்த உபதேசமும் கிடையாது) என்ற நிலைமைகளைப் பார்த்து...

ஒரு அணா, ரெண்டு அணாவுக்கு புஸ்தகங்களைப் போட்டான். அவற்றை சூத்ரர்களிடையே விநியோகித்தான். உங்கள் நிலைமை எப்படியிருக்கிறது பாருங்கள்... என அந்த புஸ்தகங்களைக் காட்டினான். **‘Don’t follow, religion of brhamin, we give you alternative’** என்பதுதான் அவர்களின் முழக்கமாக இருந்தது.

இப்படியாக சில பல வருடங்கள் ஓடிக் கொண்டிருக்க... இந்தஒட்டுமொத்த மக்களை எப்படி அழைப்பது? என யோசித்தான் வெள்ளைக்காரன்.

அப்போதுதான் இவர்கள் சிந்துநதிக்கரை மக்கள், அப்படி யென்றால் இவர்களை ‘சிந்தூ’



எனக் கூப்பிடுவோம் என முடிவுக்கு வந்தான். அதாவது... பிரிட்டிஷ் டாக்குமெண்ட்களில் நம்மை அவன் முதன் முதலில் எப்படிக் குறிப்பிட்டான் என்றால் '**Zindoo...**'

**பகுதி – 96 .** நமது மதத்துக்குப் பெயராக வேதக்காரர் சொன்னது முதல் வெள்ளைக்காரன் சொல்ல வந்தது வரை பார்த்தோம். சிந்து நதிக்கரைக்காரன் என்ற அடிப்படையிலேதான் நம்மை Zindoo என எழுதினான் வெள்ளைக்காரன். இது உமக்கு எப்படித் தெரியும் என்று நீர் கேட்கலாம்.

நான் அந்த பிரிட்டிஷ் டாக்குமென்ட்டை பார்த்திருக்கிறேன், படித்திருக்கிறேன். கும்பகோணத்தில் காவிரிக்கரையோரத்தில் எல்லாம் விளையும். அங்கே காவிரியின் மடியில் அறிவு விளையும், ஞானம் விளையும் ஓர் இடம் இருந்தது. அதுதான் என் ஆசான் ரகுநாதராவ் என்பவருக்குச் சொந்தமான Library.

ரகுநாதராவ், என்னை விட வயதில் மூத்தவர். அந்தக் காலத்தில் பரோடா சமஸ்தானத்தில் திவானாக இருந்தவர். அவர் பதவிக் காலத்தில் பிரிட்டிஷ் ராஜாங்கத்தோடு தொடர்பு கொண்டிருந்தவர். அந்த ரகுநாதராவ் திவான் பதவியிலிருந்து ஓய்வு பெற்றவுடன்...

கும்பகோணத்தில் காவிரிக் கரையோரத்தில் ஒரு லைப்ரரியை ஆரம்பித்தார். அங்கே தான் பிரிட்டிஷாரின் டாக்குமென்ட்களையும் பார்த்தேன். முதலில் நம்மைப்பற்றி Zindoo என்று எழுதி வைத்திருந்தவன், காலப் போக்கில் இந்த உச்சரிப்பை மாற்றி Hindu என்று உச்சரித்தான்.

அவன் உச்சரித்ததையெல்லாம் படிப்படியாக அவனது டாக்குமென்ட்களில் பதிவும் செய் வைத்தான்.

இப்போது Zindoo என்பது Hindu ஆகிவிட்டது.

ஆக... இப்போது நாம் நம்மை அழைத்துக் கொள்ளும் நமது மதத்தின் பெயரான 'ஹிந்து' என்ற பெயர் நாம் சூட்டிக் கொண்டதல்ல. நமக்கு அந்நியன் சூட்டிய பெயர். அதைத்தான் நாம் இன்று சூட்டிக் கொண்டிருக்கிறோம்.

இன்னும் சொல்லப்போனால்... இது Christian சூட்டிய பெயர்

நம்மையெல்லாம் என்ன சொல்லி அழைப்பது என்று தெரியாமல் வெள்ளைக்கார Christian கண்டுபிடித்த... கண்டுகூட பிடிக்கவில்லை.

தன் வாய்க்கு வசதியாக வந்ததை உச்சரித்ததைத் தான் நாம் இன்று நமக்கான அடையாளமாக சுமந்து கொண்டிருக்கிறோம்.

ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய வேதம், மநு, ஸ்மிருதி, சாஸ்திரம், புராணம், சுண்டைக்காய்... எல்லாவற்றையும் பின்பற்றுவதாக சொல்லிக் கொண்டு நாம் அவற்றிலிருந்து ஒரு பொதுப் பெயரை எடுத்து சூட்டிக் கொள்ளவில்லை. சூட்டிக் கொள்ள முடியாது.

ஏனென்றால்...நம் தேசத்தில் எக்கச்சக்க மதங்கள். நான் சொன்னேனே....ஆரியர்களான



பிராமணர்கள் இங்கு வரும்போதே! நம் தேசத்தில் சுமார் 450 மதங்கள் இருந்தன. இதில் எது ஹிந்து மதம் என்று கேட்டிருந்தேன் அல்லவா?

இப்போது நீங்களே சொல்லுங்கள்.

எது ஹிந்து மதம்...? வேத மதம், ஆரிய மதம், ப்ராமண மதம் இங்கே வந்தது. அதை எதிர்த்து புத்த மதம் உண்டானது. மத்வ மதம் பிறந்தது. த்வைதம் கிளைத்தது. விசிஷ்டாத்வைதம் வளர்ந்தது. சைவம், வைஷ்ணவம் பெரிதாகப் பேசப்பட்டது. இடையிலே சமணம் தோன்றியது.

வைணவத்தில் கூட தென் கலை, வடகலை, என கோர்ட் வரை கூட பிளவு படியேறியது.

இவையெல்லாம் தவிர்த்து... நம் தேசத்தின் அகண்ட நிலப்பரப்பில் ஆங்காங்கே சிறுதெய்வ வழிபாடுகள் எக்கச்சக்கம், காளியம்மன், மாரியம்மன், துர்க்கையம்மன், அய்யனார், முனியப்பன், கருப்பசாமி, தூண்டிக்காரன் சாமி என.. சொல்லிக் கொண்டே போகலாம்.

அதாவது இவ்வளவு... வழிபாடுகளையும் பார்த்து திக்குமுக்காடிய வெள்ளைக்காரன் தான் எல்லாவற்றுக்கும் மொத்தமாகச் சேர்த்து இந்த தேசத்தில் வாழ்பவர்களை யெல்லாம் மொத்தமாக 'இந்து' என்று அழைத்தான்.

நம் வீட்டில் ஒரு குழந்தை பிறக்கிறது. என்ன செய்வோம்? பையனாக இருந்தால் தாத்தா பேர் வைப்போம். பெண்ணாக இருந்தால் பாட்டி பேர் வைப்போம். அல்லது குல தெய்வத்தின் பேரை சூட்டுவோம்.
ஆனால்... நமக்கு முன்பின் தெரியாத இதுவரை நம்மைப்பற்றி எதுவுமே அறியாத... எவனோ ஒருத்தன்... நம் பாஷையும் தெரியாத அவன் தன் வாயில் நுழையும் பெயரை வைத்துக் கூப்பிட்டதால்.... அந்த 'சத்தத்தையே' உங்கள் குழந்தைக்குப் பெயராக வைப்பீர்களா?... அப்படித்தான் வைத்திருக்கிறோம். நம் மதம் என்னும் குழந்தைக்கு! சரி... 'ஹிந்து' என்ற சொல்லின் வரலாற்றைப் பார்த்துவிட்டோம்.இதுதான் உங்கள் பள்ளி சர்டிபிகேட்களிலும்.... வாழ்க்கையிலும் உங்களைப்பற்றி நீங்கள் அடையாளப்படுத்திக் கொள்ளும் 'ஹிந்து' என்ற பெயரின் வரலாறு.

வெள்ளைக்காரன் நமக்குக் கொடுத்த இந்த அடையாளத்தை அப்படியே நாம் பின்பற்றி வருகிறோம்.

**97.பெண்களுக்கு 8 வயதுக்குள் கல்யாணம்.**
பெண்களுக்கு எட்டு வயதுக்குள் திருமணம் செய்து விடு - வேதம்.

பெண்களுக்கு 8 வயதுக்குள் கல்யாணம் பண்ண வேண்டும். இல்லை யென்றால்... அதாவது ருதுவானபின் கல்யாணம் செய்தால்... அவளுடைய 'பஹிஷ்டை'யில்
(மாதவிலக்கில்) வெளிப்படுவதை அவளுடைய அப்பனே சாப்பிட வேண்டும்.

"குழந்தைகளுக்குக் கல்யாணம் செய்து வைக்கக்கூடாது." - உத்தரவிட்ட இந்தியாவின் ஆங்கிலேய அரசாங்கம்.

இப்போது இன்னொரு விஷயம். நம் நாட்டுக்கு சுயராஜ்யம் (சுதந்திரம்) கொடுக்கலாம் என ஆலோசித்தபோது... தஞ்சாவூர் ஜில்லா ஆடுதுறைப் பக்கமுள்ள ஒரு சின்ன கிராமத்தில்...ஒரு ரகஸ்ய கூட்டம் எப்போதென்றால் ராத்திரி 10 மணிக்கும்மேல்.



அர்த்தஜாமத்தை நோக்கி அடியெடுத்து வைத்துக் கொண்டிருந்தாள் ராத்திரி தேவதை.

இந்தக் காலத்திலேயே கிராமங்கள் ராத்திரியில் அடர்த்தியான அமைதியில் கிடக்கும். சுமார் 60 வருடங்களுக்கு முன்?காடா விளக்குகள்... தீப்பந்தங்கள் ஏற்றப்பட்ட அந்த மீட்டிங்கிற்கு தலைமை வகித்தவர் மகாப் பெரியவர். ஏன்? எதற்கு?

ஆடுதுறை பக்கமுள்ள அந்த கிராமத்தில் ராத்திரி நேரத்தில் மகா பெரியவர் சங்கராச்சாரியார் ஒரு கூட்டம் ஏற்பாடு செய்திருந்தார் என்பதாக சொன்னேனல்லவா?

அவர்கள் என்ன விவாதிக்கப் போகிறார்கள் என்று எனக்குத் தெரியும். அதனால் நான் உள்ளே செல்லவில்லை.

எனக்குத் தெரிந்த விஷயம் உங்களுக்கு தெரிய வேண்டாமா?... 'ஹிந்து' என்ற பெயர் வந்த காரணம் பற்றி விளக்கினேன் இல்லையா?... அந்த சனாதன தர்மத்தை... வர்ணாஸ்ரம மநு தர்மத்தை... காப்பாற்றியாக வேண்டும் என்பதற்காகத்தான் அந்தக் கூட்டம்.

ஏன் அப்படி என்ன ஆபத்து வந்தது?....அதாவது... பெண்களுக்கு 8 வயதுக்குள் கல்யாணம் பண்ண வேண்டும். இல்லை யென்றால்... அதாவது ருதுவானபின் கல்யாணம் செய்தால்... அவளுடைய 'பஹிஷ்டை'யில் வெளிப்படுவதை அவளுடைய அப்பனே சாப்பிட வேண்டும் என்ற அருவருக்கத்தக்க கட்டளையை மநு போட்டிருப்பதை

<u>அத்தியாயம் 45.மகளை எட்டு வயதுக்குள் திருமணம் செய்து கொடுத்துவிடு. அவள் ருதுவாகித்தான் கல்யாணம் பண்ணி வைக்கிறான் என்றால் தகப்பனுக்கு மிக அசிங்கமான குமட்டுகின்ற தண்டனை -மநு</u>

<u>அத்தியாயம் 46.மகளுடைய மாதவிடாயை அருந்து????. எட்டு வயதுக்குள் உன் மகளை திருமணம் செய்து கொடுக்காவிட்டால் ருதுவாகி கல்யாணமாகாமல் இருக்கும் காலம் வரை..மகளுடைய மாதவிடாயை அப்பாவாகிய நீ வீணாக்காமல் அருந்த வேண்டும்</u>

45,46ஆவது அத்தியாயங்களில் விளக்கமாகப் பார்த்தோம்

'அஷ்டா வருஷா பலேத் கன்யா...' 8 வயதுக்குள் பெண்ணுக்கு கல்யாணம் நடத்த வேண்டும்... என்ற இந்த ஸ்மிருதி விதி, இந்த நூற்றாண்டின் நடுப்பகுதிவரை நம் தேசத்தில் ரொம்ப சிரத்தையாக நடைமுறைப்படுத்தப் பட்டு வந்தது. அதாவது என்னுடைய இளம்பிராயங்களில் நான் இப்படிப்பட்ட பால்ய விவாஹங்களை நிறைய பார்த்திருக்கிறேன்.

இப்போதெல்லாம் கல்யாண மஹால்களில் பார்த்தால்... சின்னக் குழந்தைகள் ஓடியாடி விளையாடிக் கொண்டிருப்பார்கள். அந்தக் காலத்திலும் குழந்தைகள் விளையாடிக் கொண்டுதான் இருப்பார்கள். என்ன?... ஒரே ஒரு வித்தியாசம்.

அந்த குழந்தைகளைப் போலவே உள்ள இரண்டு குழந்தைகள் தான் மண மேடையிலும் உட்கார்ந்திருப்பார்கள். இதுபோல எக்கச்சக்க பால்ய விவாஹங்கள் நடந்து கொண்டிருந்தன. அப்போது தான்... இந்த பால்ய விவாஹத்தையெல்லாம் எதிர்த்து நிறைய



போராட்டங்கள் கிளம்பின.

நம் தேசத்தைச் சேர்ந்த சீர்திருத்தவாதிகளே... இந்த பால்ய விவாஹ முறையை கடுமையாக எதிர்த்தனர். ஏனென்றால்... பால்யத்திலேயே விவாஹம் செய்து வைத்து... சிலநேரம் அந்தப் பையன் மரணித்து விட்டால்... வாழ்க்கை முழுதும் அந்த சிறுமி விதவையாகவே வாழ வேண்டிய நிர்பந்தத்தை மநு ஸ்மிருதி ஏற்பாடு செய்து வைத்திருந்தது.

இந்தக் கொடுமையையும்... இதன் கொடுமையான விளைவுகளையும் புரிந்து கொண்ட பிரிட்டிஷ்காரர்கள் 1929-ல் சட்டம் கொண்டு வந்தார்கள். அதாவது... குழந்தைகளுக்குக் கல்யாணம் செய்து வைக்கக்கூடாது. அப்படி செய்து வைத்தால்... தண்டனைதான், ஜெயில் தண்டனைதான்.

இப்போது மகாபெரியவரின் மீட்டிங்குக்கு வருவோம். இப்படியாக ஏற்கெனவே பிரிட்டிஷ் ஆட்சியில் மநு, வர்ணாஸ்ரம தர்மங்களை சற்று தலை தட்டி வைப்பது போன்ற சட்டங்கள் போடப்பட்டிருந்தன.

நம் தேசம் ஸ்வராஜ்யம் (சுதந்திரம்) அடைய இருந்த நேரத்தில்... பிரிட்டிஷ் நாட்டிலிருந்து Parliamentary deligation ஒன்று நமது தேசத்துக்கு வந்தது.

அதாவது... நமது தேஸத்துக்கு சுதந்திரம் வழங்குவதற்கு முன்பு அது பற்றிய விவாதங்கள் நடத்துவதற்காக... எப்படி கொடுக்கலாம் என்று முடிவு பண்ணுவதற்காக... பிரிட்டிஷ் பார்லிமெண்ட் உறுப்பினர்கள் அடங்கிய குழு ஒன்று இங்கே வந்தது. அதுதான் Parliamentary deligation இந்த குழு வந்த காலகட்டத்தில்தான் அந்த ஆடுதுறை கூட்டம்.

“ஏற்கெனவே பால்ய விவாஹத்துக்கு தடை பண்ணிட்டா... இன்னும் என்னெல்லாம் நம்ம சம்ப்ரதாயத்து மேல அட்டாக் பண்ணப் போறாளோ... அதனால... இப்ப வந்திருக்குற அந்த டெலிகேஷன்கிட்ட... சனாதன வர்ணாஸ்ரம தர்மத்துக்கு எந்த பாதிப்பும் வரக்கூடாதுன்னு நாம சொல்லியாகணும்... என்ன சொல்றேள்?....”-என மகாபெரியவர் கேட்க...

சிஷ்யாளோ... ‘ஸ்வாமி... இப்படியெல்லாம் அவாளை கேட்கறது எங்களுக்கு என்னமோ உசிதமா படல. அவா செய்தா செய்யட்டும்... சில விஷயங்களை மாத்தறது நல்லதுதானே...’ என்றனர்.

ஆனால்... சங்கராச்சாரியார் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் வெளியே வந்தார். உட்கார்ந்திருந்த என்னிடம்... ‘தாத்தாச்சாரீ... நீரும் நானும் தான் மிச்சம்’ என்றார்.என்ன ஸ்வாமீ?... என்றேன்.

“நான் சொன்னதை யாரும் ஏத்துக்கல. ஆனா இதை விடக்கூடாது. நம் சம்ப்ரதாயத்தை காப்பாத்தணும். இதுக்காக அந்த பிரிட்டிஷ் டெலிகேஷனுக்கு மெமோரண்டம் கொடுக்கப் போறோம். அதுக்காக உம்மைதான் செலக்ட் பண்ணியிருக்கேன்...” என்றார்.

எனக்கு ஒன்றுமே புரியவில்லை... ‘நீர் இதுக்காக டெல்லிவரை போக வேண்டியிருக்கும்...’ அதுக்கு முன்னால... டெலிகேஷனுக்கு நம் அபிப்பிராயத்தை தந்தி அடிக்கணும். அந்த ராத்திரி 11 மணிப்பொழுதில் தந்தி வாசகங்களை தயார் பண்ணினோம். ஒன்றா... இரண்டா?

**98.மடாதிபதிகள் ராஜபோகம் அனுபவிக்கிறார்கள்.**



வர்ணாஸ்ரமம் பின்பற்ற தடை.

ஹரிஜனங்களுடைய முன்னேற்றத் திட்டத்தில் மதமும், மடாதிபதிகளும் முக்கியத்துவம் காட்டவே இல்லை

மடாதிபதிகள் தங்களுடைய ஸ்தாபனத்தின் கீழ் ராஜபோகத்தை அனுபவிக்கிறார்கள்,

மடாதிபதிகளை திருத்த முடியாது. தந்தி போராட்டம்.

ஒன்றா? இரண்டா? நூறு தந்திகள். அந்தக் காலத்தில் ஒரு தந்தி அடிக்க வேண்டுமென்றால், ரொம்ப கஷ்டம். ஏனென்றால், பெரிய பெரிய நகரங்களில் தான் தந்தி ஆபீஸ் இருக்கும்.

ஒரு தந்தி என்றால் அடித்து விடலாம். நூறு தந்திகள். ஒரே இடத்திலிருந்து கொடுத்ததாக இருக்கக் கூடாது. தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் அனுப்பவேண்டும்.

'பாரத தேசத்தின் மதாச்சார கர்மானுஷ்டாங்களுக்கு பாதுகாப்பு வேண்டும். புது அரசியல் மூலம் எங்கள் மத ஸ்வதந்த்ரம் பாதிக்கப்படக் கூடாது' என்பதுதான் தந்தி வாசகம்.

இதை தேசத்தின் பல இடங்களிலிருந்தும் டெல்லிக்கு அனுப்பினோம். 100 தந்திகள்… அதுவும் வெவ்வேறு இடத்திலிருந்து. செலவை மகாபெரியவரே ஏற்றுக் கொண்டார். நான் உதவி செய்தேன்.

தந்தியடித்த பிறகு, மறுபடியும் என்னை அழைத்த மகாபெரியவர், 'நாம அவாளை நேர்ல பார்த்து நம்ம மத சம்ப்ரதாயத்தை பத்தி பிரஸ்தாபிச்சு சனாதன மதத்துக்கு ஸ்வதந்த்ரம் கேக்கணும்… அதை நீர்தான் பண்ணணும்' என்றார்.

அப்போது… 'பார்லிமெண்ட் டெலிகேஷன்' மெம்பர்கள் பத்திரிகைக் கார்யாலயங்களுக்கெல்லாம் விஜயம் செய்து… ஸ்வராஜ்யம் பற்றி தேசம் என்ன நினைக்கிறது என்றெல்லாம் கேட்டுத் தெரிந்துகொள்வார்கள். ஏனென்றால், நம் தேசத்தின் சுதந்திர எழுச்சியைப் பல பத்திரிகைகள் தட்டி எழுப்பியபடி இருந்தன.

அந்த வகையில்… சென்னைக்கு வந்தது பார்லிமெண்ட் டெலிகேஷன். அன்று தேஸத்தின் மிக முக்கிய பத்திரிகையான 'தி ஹிண்டு' ஆங்கிலப் பத்திரிகை ஆபீசுக்கு டெலிகேஷன் வந்திருந்தது.இதையறிந்த மகாபெரியவர்… உடனே என்னை அழைத்து அவர்களைப் போய் பார்க்கச் சொன்னார்.

நானும் 'ஹிண்டு' பத்திரிகை ஆபீசுக்குப் போனேன்.அப்போது… 'ஹிண்டு'வின் எடிட்டராக இருந்த சிரீ.கே. சீனிவாஸன் என்னை பார்லிமெண்டரி டெலிகேஷனிடம் அறிமுகப்படுத்தி வைத்தார். எப்படியென்றால் 'இவர் மதாச்சாரியார்களின் பிரதிநிதி' என்று.

டெலிகேஷனில் இருந்த சோரன்சன் என்ற பாதிரியாரும் நானும் பரஸ்பர வணக்கத்தைப் பரிமாறிக் கொண்டோம்.

நான் முதலில் 100 தந்தி விடயத்தை அவரிடம் ஞாபகப்படுத்தினேன். 'oh' என



ஞாபகப்படுத்திக் கொண்ட சோரன்சன்... ‘We meet tonight’ என்றார்.

அன்று ராத்திரி பிரபல அட்வகேட் ஒருவரின் வீட்டில் இருந்த சோரன்சன்னை சந்தித்தேன். பத்து மணி ராத்திரிப் பொழுதில் எனக்கும், சோரன்சன்னுக்கும் நடந்த ஆங்கில உரையாடலை இங்கே தருகிறேன்.

சோரன்சன்: Welcome. What do you want?
நான்: We lives in India. But havings not any rights to follow our religion. We must need freedom to follow our “Dharma”. சோரன்சன்: Oh... it is very serious matter... give me a memorandam and meet me in Delhi என்றார்.

நான் உடனே கும்பகோணம் விரைந்து மகாபெரியவாளிடம் விஷயத்தைச் சொன்னேன். சில அட்வகேட்கள் சம்ப்ரதாயஸ்தர்கள் ஆகியோரை வைத்துக்கொண்டு... ‘வர்ணாஸ்ரம தர்மத்துக்கு முழு சுதந்திரம் வேண்டும்’’ என்ற மெமோரண்டத்தைத் தயார் பண்ணினோம். டெல்லிக்கு போய் நேரில் கொடுக்க இருந்தோம். அதற்குள் அந்த டெலிகேஷன் மெம்பர் அஸ்ஸாம் போய் அங்கே தேஸ நிலைமையை ஆராய்ந்து கொண்டிருந்தார்.

இந்த விஷயம் கேள்விப்பட்டவுடன்... மெமோரண்டத்தை அஸ்ஸாமுக்கே ஒரு காப்பி முதலில் அனுப்பி வைத்து விட்டோம். பிறகு டெல்லி போனேன். அங்கே வக்கீல் சிவராவின் வீடு, பகல் 11 மணிக்கு காங்கிரஸ் தலைவர்களான அச்சுத பட்டவர்தன், ஜெயப்பிரகாஷ் நாராயண் ஆகியோர் டெலிகேஷனை சந்திக்கக் காத்திருந்தார்கள். அவர்கள் பார்த்துவிட்டுப் போனவுடன், நான் சில அட்வகேட்களுடன் டெலிகேஷனை சந்தித்தேன்.

‘வர்ணாசிரம மதாச்சாரத்தைப் பின்பற்ற ஜீவாதார உரிமை வேண்டும்’என்ற மெமோரண்டத்தைப் பார்லிமெண்ட்ரி டெலிகேஷனிடம் நேரடியாகவே கொடுத்தோம். வாங்கிக் கொண்டு போய்விட்டார்கள். இதன் பிறகு... பிரிட்டிஷ் நாட்டிலிருந்து Cabinet deligation வந்தது. அந்த குழுவினருக்கும் தந்தியடித்தோம். மெமோரண்டம் கொடுத்தோம்.

அவர்களோ ‘உங்கள் அரசியல் சாசனத்தை உங்கள் தலைவர்கள்தான் உருவாக்கப் போகிறார்கள். அதனால் உங்கள் தேசத் தலைவர்களையே பாருங்கள்’’ என சொல்லி விட்டார்கள்.

சரி... என சொல்லிவிட்டு நம் தேஸத் தலைவரான சர்தார் வல்லபாய் பட்டேலை பார்க்கச் சென்றோம். அவர்... மெமோரண்டத்தைப் பார்த்துவிட்டு... ‘ சனாதன மதத்தைப்பற்றியும் மடங்களைப்பற்றியும் நீங்கள் சொல்வது வாஸ்தவம்தான். ஆனால், மடாதிபதிகள் தங்களுடைய ஸ்தாபனத்தின் கீழ் ராஜபோகத்தை அனுபவிக்கிறார்கள். அவரவர்களுக்கும் அவரவர்களுடைய சிஷ்யர்களோடுதான் பழக்கம். வெளி உலகத்தோடு மக்களோடு உறவே இல்லை. மக்களின் பொதுவான பணிக்கோ, மதப் பணிக்கோ அவர்கள் முன்வரவில்லை.

முக்கியமாக ஹரிஜனங்களுடைய முன்னேற்றத் திட்டத்தில் மதமும், மடாதிபதிகளும் முக்கியத்துவம் காட்டவே இல்லை. முதலில் மக்களின் தேவையை உணர்ந்து அவர்களுக்குப் பணி செய்ய மதாச்சாரியார்களை வரச் சொல்லுங்கள்...’’ என்று கண்டிப்பாக என்னிடம் கூறினார் பட்டேல்.

நான்... ‘பழைய காலத்தில் அப்படி இருக்கலாம். புது பாரத தேசம் உருவாவதால் அவர்கள் பொதுப் பணிகளை நிறைவேற்றுவார்கள்’ என சொல்லிப் பார்த்தேன். ம்ஹூம்... பட்டேல் ஒப்புக் கொள்ளவில்லை.



இதை மகாபெரியவரிடம் சொன்னபோது... 'ஆமாம் இது முழுவதும் உண்மைதான்' என்றார். அடுத்து பண்டிட் நேருஜியை பார்த்தேன்.

## **99. to 100-1** நேருவின் கோபம்.

இந்து மதத்திற்கு தனி உரிமையோ சிறப்புரிமையோ இந்தியாவில் கிடையாது, நீங்கள் மதத்தின் தனியுரிமை சிறப்புரிமை குறித்து பேசவிரும்பினால்... இந்த நாட்டுக்கு வெளியே எங்கே வேண்டுமானாலும் சொல்லலாம்' என கடுமையாகச் சொல்லிவிட்டார் நேரு.

மடங்களுக்காவது தனியுரிமை கிடைக்குமா?

**99.** சனாதன மதானுஷ்டானங்களுக்கு இம்மிளவும் பாதிப்பு வரக்கூடாது. வர்ணாஸ்ரம வரையறைகள் மாறக்கூடாது என பட்டேலிடம் சங்கராச்சாரியாரின் விண்ணப்பத்தை கேட்கப்போய்...

'மடாதிபதிகளை திருத்த முடியாது. அவர்களை நம்பி நீங்கள் வராதீர்கள்' என கடுமையாகவே சொல்லி என்னை அனுப்பிவிட்டதைச் சொன்னேன். இதை சங்கராச்சாரியாரிடம் சொன்னபோது... 'இதுவும் உண்மைதான்'என ஒத்துக் கொண்டதையும் குறிப்பிட்டேன்.

இதன் பிறகுதான் பண்டிட் நேருஜியை இதே விண்ணப்பத்துடன் பார்க்கப் போனேன்.

அதற்கு முன்னதாக பல ஆச்சாரியார்களிடம் ஆலோசனை பண்ணி... லௌகீகர்கள் சிலரையும் சேர்த்துக் கொண்டு பிறகு பண்டிட் நேருஜியை பார்க்கப் போனேன்.

என்ன விஷயம்? என்றார் நேருஜி. நாங்கள் மெமோரண்டத்தின் சாரத்தை எடுத்துச் சொல்ல ஆரம்பித்ததுமே... கொஞ்ச நேரம் கேட்டு விட்டுப் பிறகு மெமோரண்டத்தையும் பார்த்தார்.

உடனே... நிமிர்ந்தவர் என்னைப் பார்த்து **"If you want to talk about religion, You should go to outside from this nation. We don't allow speciality to any religion. Here all are equal...Dont' talk me about religion... understand?"** என்றார் ரோஜாவின் ராஜா. நான் அதிர்ந்து விட்டேன். அவர் என்ன சொன்னார் என்று புரிகிறதா?

"நீங்கள் மதத்தைப் பற்றி மதத்தின் தனியுரிமையைப் பற்றி பேச வேண்டுமென்றால் இங்கு... பேசாதீர்கள். இங்கு எந்த மதத்திற்கும் தனிப்பட்ட உரிமையோ, ஸ்பெஷாலிட்டியோ கிடையாது. எல்லா மதங்களும் சமம்தான். All are equal.

மீண்டும் நீங்கள் மதத்தின் தனியுரிமை சிறப்புரிமை குறித்து பேசவிரும்பினால்... இந்த நாட்டுக்கு வெளியே எங்கே வேண்டுமானாலும் சொல்லலாம்' என கடுமையாகச் சொல்லிவிட்டார் நேரு.

இவ்வளவு நடந்தும் சங்கராச்சாரியார் அலட்டிக் கொள்ளவில்லை. மதத்துக்குத்தான் தனியுரிமை சிறப்புரிமை கிடைக்கவில்லை.மடங்களுக்காவது தனியுரிமை



கிடைக்குமா என்று பார்ப்போம் என சொல்லி களத்தில் இறங்கிவிட்டார்.

'பட்டேல் சொன்ன மாதிரி மதங்களின் பிரதிநிதிகளான மடங்கள் மக்கள் சேவைக்கு வரவேண்டும். மடாதிபதிகள் ராஜபோகங்களில் துயில்கிறார்கள், மிதக்கிறார்கள் என்ற தத்துவத்தை தகர்க்க வேண்டும். அதனால் தேஸத்தின் எல்லா மடங்களையும் இதற்காக நாம் வலியுறுத்த வேண்டும். எனவே பாரதிய மடங்களின் சபையை நாம் கூட்ட வேண்டும்.

பாரதிய மடங்களின் சபையை கூட்டுவதற்கு முன்... அவரவர்கள் மடத்துக்குப் போய் ' அரசியல் மூலம் ஸ்வதந்திர தேசமாகப் போகிறோம். இதுவரை இருந்த நிலை வேறு. இனிமேல் நான் இருக்கப் போகும் நிலை வேறு. ஆகவே நம் மடங்களுக்கும் ஜீவாதார உரிமை பெற முயற்சிக்க வேண்டும்' என்று சொல்லச் சொன்னார். அதன்படி அகில பாரதிய மடங்கள் மாநாட்டை டெல்லியில் கூட்டச் சொன்னார்.

அதற்குப் பட்டபாடு அப்பப்பா...! இந்த மாநாட்டைக் கூட்ட குளித்தலை அண்ணாதுரை அய்யங்கார் என்ற உத்தமமான புருஷன் முன் வந்தார். இவர் சங்கராச்சாரியாரிடம் அபார பக்தி கொண்டவர். மடங்களைப் பார்த்து பேசுவதற்காக மோட்டார் காரில் திருச்சியில் இருந்து புறப்பட்டு உடுப்பி, அதைத் தொடர்ந்துள்ள சிருங்கேரி மடம் ஆகிய மடங்களை நேருக்கு நேராய் போய்ப் பார்த்து விஷயங்களை விக்ஞாபித்தோம். உடுப்பியில் மாத்வ சம்ப்ரதாயத்தைச் சேர்ந்த 8 மடங்கள் உள்ளன. இவை தவிர உத்தராதி மடம், சோதன மடம். சுமுதிர்த்த மடம். மந்த்ராலய மடம் எல்லாரையும் சந்தித்தோம்

மேற்குத் தொடர்ச்சி மலையின் கடைசியில் உள்ள 'சுப்ரமண்யம்' என்ற மடத்துக்குப் போனோம். இந்த இடத்தில் ஒரு முக்கியமான விஷயத்தை குறிப்பிட்டாக வேண்டும். சிருங்கேரி மடத்துக்குப் போன போது, மடாதிபதி நவராத்திரி உற்சவத்துக்கு வெளியே எழுந்தருளியிருந்தார். மாஜி ஜில்லா ஜட்ஜ் ஒருத்தர், இன்னொரு ஹைகோர்ட் ஜட்ஜ் ஒருத்தர் என முக்கியஸ்தர்களுடன் சிருங்கேரி மடாதிபதியை பார்த்தபோது..." பெரியவர் சுத்தமான தமிழில் பேசினார். பெரியவாளின் கர்மானுஷ்டத்துக்கு நேருக்கு நேராக உதவி செய்ய முடியாதே என்று சொல்லிவிட்டார்.

பின், அங்கிருந்து பாலேஹி என்னும் மடத்தின் மடாதிபதியை கடும் மழைக்கிடையே பார்த்து, மடங்களின் மாநாட்டுக்கு அழைத்தோம். சகடபுரம், அரிஹரப்பூர் மடங்களுக்கு அலைந்துவிட்டு ஷிமோகா வந்து சங்கமேஸ்வர மடாதிபதியையும் பார்த்தாச்சு. அப்படியே மைசூர் போய் வைஷ்ணவ மடமான பரக்கால மடத்தைப் பார்த்து விஷயத்தை விளக்கிவிட்டு கிழக்கு கர்நாடகாவில் வீர சைவ மடங்கள், வடக்கு கர்நாடகாவில் கோதே, இப்படியாக பாரதம் முழுதும் சுற்றி பூரிஜெகன்னாத் போனோம்.

அங்குள்ள பல வைஷ்ணவ மடங்களின் பிரதான மடத்தின் தலைவரான கிரிதாரிதாஸ் ராமானுஜர், அவரது வித்வான் துர்பலாச்சாரி மூலம் பல மடங்களை பார்த்தோம் பின் அயோத்திக்குப் போனேன்.

அங்குள்ள மடங்களைப் பார்த்து புது அரசியல் சாசனத்தில் மடங்களுக்கு சுதந்திரம் வேண்டி மகா பெரியவர் எடுத்து வரும் முயற்சிகளை விளக்கினோம்.

பின்... இன்றைய பாகிஸ்தான் கராச்சியில் உள்ள சிந்து நகரத்தின் மடத்தையும் சென்றடைந்தோம். செட்டி நாட்டு குன்னக்குடி மடம், திருநெல்வேலி செங்கோல் மடம் முதல் சிந்து நகர மடம்வரை... எல்லோரும் நாங்கள் பார்த்தபோது எங்களுக்கு ஆட்சேபணையே தெரிவிக்கவில்லை சரி...டெல்லியில் மட மாநாடு நடந்ததா



**100 – 1.** மத உரிமைகளுக்காக.. அவற்றை நிறைவேற்றுவதற்காக கன்னியாகுமரி முதல் கராச்சி வரை, அலைந்து… பல்வேறு மடங்களையும் நேரில் அடைந்து, மடாதிபதிகளையும் மாநாட்டுக்கு அழைத்த கஷ்டமான காரியத்தை விளக்கினேன். டெல்லியில் இந்துமகாசபை என்ற இடத்தில் மாநாடு நடந்தது. யார் யார் கலந்து கொண்டனர்?

கல், காடு, மலை, வெயில் என கடந்துபோய் நாங்கள் சந்தித்த பாரதத்தின் நூற்றுக்கணக்கான மடங்களிலிருந்து எவரும் கலந்து கொள்ளவில்லை. கராச்சி சிந்துநகர மடப்ரதிநிதியை தவிர.

சின்ன வருத்தம்தான் அதற்காக என்ன செய்வது? பேருக்குக் கூடிய அந்த மாநாட்டில்.'Freedom of religion and maintaining religious institutions…' வேண்டும் என ஒரு தீர்மானத்தை நிறைவேற்றிவிட்டு கலைந்தோம் எங்கே?

கலைவதற்குக்கூட ஆட்கள் இல்லை. இதன் பிறகும் சளைக்காமல் மடங்களுக்கான தனியுரிமை குறித்து… Parliament Bill கொண்டுவர ஏற்பாடு செய்தோம். புது பார்லிமென்ட் வந்த பிறகு அந்த பில்லை யாரும் கண்டு கொள்ளவில்லை.

ஸ்வதந்த்ரம் பெற்று பாகிஸ்தான் - இந்தியா என தேசம் இரண்டாகப் பிரிக்கப்பட்டது. இந்தியாவான நமது தேசத்தில் 'All are equal… All religions are equal…' என்று பிரகடனப்படுத்தப் பட்டது. அதாவது Secular State என அரசமைப்பு சாசனம் அறிவித்தது.அதாவது எத்தனை மதங்கள் எத்தனை தர்மங்களை பின்பற்றினாலும் இந்த தேசத்தின் பொதுதர்மம் All are equal என்பதுதான்.

நமது மதாசாரப்படி… தர்மம் எல்லார்க்கும் ஒன்றுதான் அரசனும் தர்மத்துக்கு கட்டுப்பட வேண்டும். ஏன் பகவானே கூட தர்மத்துக்கு, தர்ம நெறிமுறைகளுக்கு எதிராக நடந்தால் பகவானையே தண்டிக்கவும் நமது மதக்கலாச்சாரம் கற்றுத்தருகிறது. இதனைத்தான் 'தர்மவிகிக்ரமம்' என்கிறோம்.

**100 – 2.பக்தையை சூறையாடிய விஷ்ணு.**
பக்தையை சூறையாடிய கடவுள்..

பார்வதியை கட்டிப்பிடித்த பக்தன்.

கடவுளை கற்சிலையாக்கிய பக்தை.

இதனை விஸ்தாரமாக விவரிக்கும் ஒரு புராணக் காட்சியைப் பார்க்கலாமா?

அதாவது தர்மம் எல்லார்க்கும் ஒன்றுதான். யார் தவறு செய்தாலும் அவர்களுக்கு தண்டனை உண்டு. இதனை விஸ்தாரமாக விவரிக்கும் ஒரு புராணக் காட்சியைப் பார்க்கலாமா?

இந்த காட்சி நிகழும் இடம் இன்றைய பஞ்சாப் மாநிலத்தில் **Jalandhar, Punjab** ஜலந்தர் ஓர் இடம் கதையைப் படிக்கும் போதே அந்த ஊரின் பெயர்க்காரணம் உங்களுக்கு விளங்கும்.

அந்த ஊரில் ஜலந்தர்-பிருந்தா என்ற தம்பதி வாழ்ந்து வந்தனர். நல்ல கணவன் மனைவியாக



வாழ்ந்து வந்த இவர்களுடையே ஒரேயொரு விஷயத்தில் மட்டும் கருத்து வேறுபாடு என்ன விஷயத்தில் என்றால் கடவுள் விஷயத்தில்.

அப்படி என்ன கருத்து வேறுபாடு? பிருந்தா விஷ்ணுவை தவிர வேறு கடவுளே இல்லை என்னும் அளவுக்கு விஷ்ணு பக்தை. அவளது ஆம்படையான் ஜலந்தருக்கோ சிவன் மீது அபார நாட்டம்.

இந்த விசித்திரமான விஷயத்தை கேள்விப்பட்ட நாரதர், அந்த குடும்பத்தில் சிறிது விளையாடிப் பார்க்க நினைத்தார். ஒருநாள் ஜலந்தர் தனியாக இருக்கும் போது அவனை சந்தித்தார்.

என்ன ஜலந்தர்?... நீயோ சிவனை வழிபாடு செய்கிறாய். உன் மனைவியோ விஷ்ணுவை வழிபடுகிறாள். நீ பின்பற்றும் சிவபக்தியால் சிவனுடைய மனைவி பார்வதி தேவியையே நீ அடையலாமே... எதற்கு இந்த பிருந்தாவுடன் போராடிக் கொண்டிருக்கிறாய். இந்த பிருந்தாவை விட அந்த பார்வதி எவ்வளவு அழகு தெரியுமோ?... என ஜலந்தரின் மனதில் பற்றவைத்து விடுகிறார் நாரதர்.

உடனே ஜலந்தரும்... 'நான் பார்வதி தேவியை அடைய முடியுமா?'...எப்படி? என கேட்கிறான். அதற்கு நாரதரே யோசனையும் கொடுக்கிறார். "சிவனுக்கு சாமவேதம் என்றால் உயிர். எங்கே சாமவேதம் ஒலித்தாலும் மயங்கி அந்தப் பக்கம் போய்விடுவார். என்ன பண்ணு... சாமவேதம் பாராயணம் செய்பவர்களை பிடித்து நல்ல சத்தமாக சாமவேதம் ஒலிக்கச் செய்.

அதனைக் கேட்டு சிவபெருமான் மயங்கியிருக்கும் வேளையில் கைலாயத்துக்கு சென்று காரியத்தை முடித் " சிந்திக்கத் தெரியாத ஜடமாகிவிட்ட ஜலந்தரும் நாரதரின் கலக யோசனையை காது கொடுத்து கேட்ட பின், அப்படியே... சாமகானம் பாட ஏற்பாடு பண்ணினான்.

இதைக் கேட்டு சிவன் லயித்திருக்க... அவர் இல்லாத நேரமாய்ப் பார்த்து கைலாயத்துக்குள் காலடி எடுத்து வைத்தான். அங்கே பார்வதி தேவி தனிமை அழகில் தத்தளித்துக் கொண்டிருக்க, நாரதர் கொடுத்த யோசனைப்படி பார்வதியை போய் கட்டிப்பிடித்து விட்டான் ஜலந்தர்,

பார்வதி... தன் மேல் சிவன் அல்லாத ஒருவன் சில்மிஷம் செய்கிறான் என்பதை அறிந்து 'ஸ்வாமீ' என ஏழுகடல் கொந்தளிக்க கத்துகிறாள். கைலாயத்தில் இப்படி...

ஜலந்தரின் வீட்டுத்தோட்டத்தில்?... கணவனைக் காணாது மனைவி பிருந்தா தனித்துத் தவித்திருக்கிறாள். தனது பரம தெய்வமான விஷ்ணுவிடம் தன் கணவன் எங்கே என வேண்டுகிறாள்.

இதைப் பார்த்த விஷ்ணு... 'நமது பக்தைக்கு நாம் ஏன் சந்தோஷம் தரக்கூடாது? தன் கணவனை காணோமே என பாவம் தேடிக்கொண்டிருக்கிறாள். நாமே ஜலந்தராக உருவெடுத்து அவளை மகிழ்ச்சிப்படுத்துவோம் என முடிவெடுத்து... கணவன் ஜலந்தர் போலவே உருவம் எடுத்து பிருந்தாவை நெருங்கினார் விஷ்ணு.

'ஆஹா... என் கணவர் வந்துவிட்டார்' என சந்தோஷம் பொங்கிய பிருந்தா... தன் கணவர் ரூபத்தில் வந்திருந்த விஷ்ணுவை கட்டிப்பிடித்துக் கொண்டாடினாள் இருவரும்



தோட்டத்தில் ரொம்ப இஷ்டமாக இழைந்து கொண்டிருக்கும் நேரத்தில்...'நெருக்கமாக இருக்கும் அவர்களுக்கு நெருக்கமாக வந்து பொத்'தென வந்து விழுந்தது ஒரு தலை. ரத்தம் கொட்ட கழுத்திலிருந்து வெட்டியெடுக்கப்பட்ட அந்தத்தலை, ஜலந்தரின் தலை.

ஆமாம்... சாமவேதத்தில் சிவனை மயக்கிய ஜலந்தர்... பார்வதியை கட்டிப் பிடிக்க இதனால் பார்வதி ஏழுகடல் அதிர சத்தம் போட்டாள் இல்லையா?

வேதத்தின் மயக்கத்தை... பார்வதியின் கூக்குரல் கலைக்க, ஓடிப்போய் பார்த்தார் சிவன். தன் மனைவியை இன்னொருவன் பலாத்காரப்படுத்துவதா?... என ஜலந்தரின் தலையை சீவியெறிந்தார்.

அந்த ஜலந்தரின் தலைதான்... பிருந்தாவும் ஜலந்தர் போல் ரூபம் எடுத்து வந்த விஷ்ணுவும் இழைந்து கொண்டிருந்தபோது இடையில் வந்து விழுந்தது.

பார்த்தாள் பிருந்தா... உடலோடு விழுந்தவன் கணவனா? இல்லை தலைமட்டும் விழுந்தவன் கணவனா? சந்தேகம் அதிகரிக்க...அப்போது திடுக்கென உடலோடு கூடிய ஜலந்தர் மறைந்து விஷ்ணுவாகிறார். 'நான்தான் பக்தையே...' என அறிமுகம் கொடுக்கிறார்.

இதைக்கேட்டு பொங்கியெழுந்த பிருந்தா...'அடப்பாவி... பக்தையை இப்படி பண்ணிவிட்டாயே? என் கணவன் ரூபத்தில் வர நீ யார்? தவறு செய்துவிட்டாய். பகவானாக இருந்தாலும் தவறு தவறுதான். உனக்கு சாபமிடுகிறேன்.

கடவுளாக இருந்தாலும் நீ கல்லாய் போவாயாக' பிருந்தாவின் சாபம்தான் பகவானை சாலக்ராமம் என்ற சிலையாக்கிவிட்டது என்பது புராணம்

அதாவது கடவுளே தர்மத்தை மீறி தவறு செய்திருந்தாலும் தண்டனை உண்டு என்பதுதான் இக்கதை சொல்லும் நீதி.

**100 – 3 பிராமணிசம் தேசதர்மத்துக்கு புறம்பானது. இந்து மதம் எங்கே போகிறது ?**

ப்ராமண்யத்தின்படி பிராமணன்தான் தெய்வம். இது இப்போதைய நமது தேச தர்மத்துக்கு முரணானது.

மதமென்ற பெயரால் அழியாதே.

மதம் என்ற பெயரில் அனுமதித்து தன்னைத்தானே பாழ்படுத்திக் கொண்டிருக்கிற மூளையிடம் நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

பிராமணத்துவத்தை (இந்துதுவம்) பின்பற்றினால் அதில் சூத்திரர் , பஞ்சமர் என இனபிரிப்புகளை அடக்கியுள்ளது. ஆகையால் தேசிய அமைப்பு சட்டத்தின் பிரகாரம் பிராமணத்துவம் தேசிய அமைப்பு சட்டத்திற்கு முரணாணது.

இப்போது நம் தேசத்தில் சட்ட பூர்வமாக தீண்டாமை ஒழிக்கப்பட்டு விட்டது. ஆனால் ஆகமரீதியாக இன்னமும் இது உயிர் வாழ்ந்து வருகிறது.

ப்ராமண்யத்தின்படி பிராமணன்தான் தெய்வம். இது இப்போதைய நமது தேச தர்மத்துக்கு



முரணானது.

**If you follow Bhraminism, there is Sutra and Punchamas. So, according to constituion Bhraminism is antilaw.** பிராமணிசத்தை பின்பற்றினால் அதில் சூத்திரர், பஞ்சமர் என இனபிரிப்புகளை அடக்கியுள்ளது. ஆகையால் தேசிய அமைப்பு சட்டத்தின் பிரகாரம் பிராமணிசம் தேசிய அமைப்பு சட்டத்திற்கு முரணாணது.

அதனால்... மநுதர்மத்தை பின் தொடர்ந்து செல்லும் பிராமணீயம் (நன்றாக புரிந்து கொள்ளவேண்டும்.நான் சொல்வது கொள்கை தத்துவத்தை ) என்பது நமது அரசியல் தர்மத்துக்கு மட்டும் அப்பாற்பட்டது.

அதனால் **All are equal** என்ற தர்மம்தான் இப்போது நம் மதத்தை காப்பாற்ற ஒரே வழி.

விவேகானந்தர் சிகாகோ மாநாட்டில் ஹிந்து தர்மத்தைப் பற்றி பேசிப் புகழ் சேர்த்துவிட்டு... சென்னை வந்தபோது அவர் ஆற்றிய உரையில் சிலவற்றை உங்களுக்குத் தருகிறேன்.

“இளைஞர்களே... இதை நினைவில் கொள்ளுமாறு தனிப்பட்ட முறையில் உங்களை கேட்டுக் கொள்கிறேன். இந்திய ஆன்மிகச் சிந்தனைகளால் உலகத்தை நாம் வெல்லவேண்டும். ஆன்மிகச் சிந்தனைகள் என்று நான் கூறியது... உயிருணர்வு அளிக்கக்கூடிய கோட்பாடுகளையே தவிர...நாம் நெஞ்சோடு நெஞ்சாக இறுகப்பிடித்துக் கொண்டிருக்கிற மூட நம்பிக்கைகளை அல்ல.

கண்ட கண்ட மூடநம்பிக்கைகளை எல்லாம் மதம் என்ற பெயரில் அனுமதித்து தன்னைத்தானே பாழ்படுத்திக் கொண்டிருக்கிற மூளையிடம் நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

இந்த மூடநம்பிக்கைகளின் பின்னால் ஓடாதீர்கள். அதைவிட நீங்கள் உறுதியான நாஸ்திகர்கள் ஆகிவிடுங்கள் இது உங்களுக்கும் நல்லது. உங்கள் இன நல்லது...’ என்று மதராஸ் ராஜதானியில் பேசினார் விவேகானந்தர்.

இது ‘இளையபாரதமே எழுக’ என்று ராமகிருஷ்ணா மடம் விவேகானந்தரின் சென்னை சொற்பொழிவுகளை வெளியிட்டுள்ள புஸ்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

வேதம் வகுத்த இயற்கை வழிபாட்டு நெறிமுறைகள் லோகசேமத்துக்கே

‘இந்தா பால் இதைக் குடித்து வளமோடு வாழு...’ என்கிறது வேதம். மதம் என்னும் கோப்பையில் நல்லபாலை ஊற்றி அருந்துங்கள்... லோக சேமம் பெறுங்கள்!.

**உண்மையைத் தேடும் தமிழ் அறிவுலகத்துக்கு**
**சமர்ப்பணம்.** - -
அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார் .

(இந்து மதம் எங்கே போகிறது? நிறைவு)